த. பா. நி. (க.வெ.) வரிசை எண்—655

# பொதுப்பயன் தொழில் நிறுவனங்கள்

(பட்டப்படிப்பிற்குரியது)

(திருத்தப்பட்ட பாடத்திட்டத்தின்படி வெளியிடப்படுகின்றது)

ஆசிரியர்
**இரா. தினகர பாபு**, எம்.காம்.,
வணிகவியல் பேராசிரியர்,
ஆர். வி. அரசினர் கலைக்கல்லூரி,
செங்கற்பட்டு.



தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

First Edition—October, 1975

T.N.T.B.S. (C.P.) No. 655



# PUBLIC UTILITY UNDERTAKINGS

R. DINAKARA BABU

Price Rs. 10-75

Published by the Tamilnadu Textbook Society under the Centrally sponsored scheme of production of books and literature in regional languages at the University level, of the Government of India in the Ministry of Education and Social Welfare (Department of Culture), New Delhi.

*Printed by*
GANESA PRINTING WORKS,
55, Muthumari Chetty Street,
Madras-1.

# அணிந்துரை

**திரு. இரா. நெடுஞ்செழியன்**
(தமிழகக் கல்வி அமைச்சர்)

தமிழைக் கல்லூரிக் கல்வி மொழியாக ஆக்கிப் பதினைந் தாண்டுகள் ஆகிவிட்டன. குறிப்பிட்ட சில கல்லூரிகளில் பட்டப் படிப்பு வகுப்புவரை மாணவர்கள் தங்கள் பாடங்கள் அனைத்தை யும் தமிழிலேயே கற்றுவருகின்றனர். 1969ஆம் ஆண்டிலிருந்து அறிவியல் பாடங்களையும் தமிழிலேயே கற்பிக்க ஏற்பாடு செய் துள்ளோம். 'தமிழிலேயே கற்பிப்போம்' என முன்வந்துள்ள கல்லூரி ஆசிரியர்களின் ஊக்கம், பிற பல துறைகளில் தொண்டு செய்வோர் இதற்கெனத் தந்த உழைப்பு, தங்கள் சிறப்புத் துறைகளில் நூல்கள் எழுதித் தர முன்வந்த நூலாசிரி யர்கள் தொண்டுணர்ச்சி இவற்றின் காரணமாக இத் திட்டம் நம் மிடையே மகிழ்ச்சியும் மனநிறைவும் தரத்தக்க வகையில் நடை பெற்றுவருகிறது. இவ் வகையில் கல்லூரிப் பேராசிரியர்கள் கலை, அறிவியல் பாடங்களை மாணவர்களுக்குத் தமிழிலேயே பயிற்றுவிப்பதற்குத் தேவையான பயிற்சியைப் பெறுவதற்கு மதுரைப் பல்கலைக் கழகமும், சென்னைப் பல்கலைக் கழகமும் ஆண்டுதோறும் எடுத்துவரும் பெருமுயற்சியைக் குறிப்பிட்டுச் சொல்லவேண்டும்.

வரலாறு, அரசியல், உளவியல், பொருளாதாரம், மெய்ப் பொருளியல், புவியியல், புவியமைப்பியல், மனையியல், கணிதம், இயற்பியல், வேதியியல், உயிரியல், வானியல், புள்ளியியல், விலங்கியல், தாவரவியல், பொறியியல், சட்டம் ஆகிய எல்லாத் துறைகளிலும் மூல நூல்கள், மொழிபெயர்ப்பு நூல்கள் என்ற இரு வகையிலும் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம் வெளியிட்டு வருகிறது.

இவற்றுள் ஒன்றுன '**பொதுப்பயன் தொழில் நிறுவனங்கள்**' என்ற இந் நூல் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனத்தின் **655**ஆவது வெளியீடாகும். கல்லூரித் தமிழ்க் குழுவின் சார்பில் வெளியான **35** நூல்களையும் சேர்த்து இதுவரை **690** நூல்கள் வெளிவந்துள்ளன. இந் நூல் மைய அரசு, கல்வி, சமூக நல அமைச்சகத்தின் மாநில மொழியில் பல்கலைக் கழக நூல்கள் வெளியிடும் திட்டத்தின்கீழ் வெளியிடப்படுகிறது.

தமிழில் பயிலும் மாணவர்கள் உலக மாணவர்களிடையே சிறந்த இடம் பெறவேண்டும் என்பதே நம் குறிக்கோளாகும். கல்லூரிகளிலும் பல்கலைக் கழகங்களிலும், கலையியற் பாடங் களையும், அறிவியற் பாடங்களையும், தொழில்நுட்ப அறிவுப் பாடங்களையும் பயிலுகின்ற மாணவர்கள், அவற்றைத் தமிழில் பயில வேண்டும் என்பதை வலியுறுத்தி வருவதற்குக் காரணம் தமிழறிவு வளரவேண்டும் என்பதைவிட, தமிழ் மக்களின் அறிவு ஆற்றல் எளிதாக, விரைவாக வளர வேண்டும் என்பதுதான். 'எதிலும் தமிழ், எங்கும் தமிழ்' என்ற குறிக்கோளை நிறைவேற்ற வேண்டிய கடப்பாடு, தமிழகத்து ஆசிரியப் பெருமக்களையும் மாணவர்களையும் சார்ந்ததாகும். தமிழ்நாட்டுப் பல்கலைக்கழகங் களின் பல்வகை உதவிகளுக்கும் ஒத்துழைப்புக்கும் நம் மனம்கலந்த நன்றி உரியதாகுக.

**இரா. நெடுஞ்செழியன்**

# வழக்குச் சான்றுகள்
## (Table of Cases)

**Chapter III**

1. The Oklahoma case of England of 1926.
2. Davis Warehouse Co. *vs.* Brown 137 F. 2d. 201 (1943).
3. Davis Warehouse Company *vs.* Bowles 231 U. S. 144 (1944).
4. Gaineswille *vs.* Gainswille Gas and Electric Power Co. (1913).
5. Gribbs *vs.* Consolidated Gas Co. (1889).
6. Wolverton *vs.* Mountain's States Telephone and Telegraphic Co., 142 p. 165 (1914).
7. Omha Water Company *vs.* Omha 162 F. 225 (1908).
8. German Alliance Insurance Co. *vs.* Lewis, 233 U.S. 389 (1914).
9. Platt *vs.* Sanfransisco, 110 p. 304 (1910).
10. Nebbia *vs.* Newyork, 291 U.S. 502.

**Chapter VII**

11. Owensboro *vs.* Cumberland Telephone and Telegraph Co. (1913).
12. Public Utilities of Rhode Island *vs.* Attelboro-Steam and Electric Co. (1927).

**Chapter VIII**

13. Central Maine Power Company *vs.* Maine Public Utility Commission (1957).
14. *Re:* Consumers' Power Company, 15 PUR.
15. *Re:* Pacific Gas Electric Co. 21 PUR.
16. *Re:* Cascade Town Co., 41 PUR. 3d. 256 (Colu 1961)

17. *Re:* Orange and Rockland Electric Co. 49 PUR.; (N.S.).
18. *Re:* Detroit Edison Co., 16 PUR. (N.S.) (Mich. 1936)
19. *Re:* General Telephone Co. of Florida and New England Telephone and Telegraph Co. (1960).
20. Southern California Gas Co. PUR (Calif. 1960).
21. Illinois Commerce Commission *vs.* People's Gas Light Coke Co. (1953).
22. *Re:* West Ohio Gas Company *vs.* Public Utility Committee of Ohio (1935).
23. *Re*: Nevada Powder Company, 43 PUR., 1962.
24. *Re:* Arkansas Power and Light Co., 13 PUR, 1956.
25. Lindheimer *vs.* Illinois Bell Tele. Co.
26. *Re*: Exter and Hampton Electric Co. 94 PUR (NS.) 124 (1952).
27. Chicago and Grand Trunk Railway Co. *vs.* Wellman, 143, US. 339, 345-346 (1892).
28. Konxville *vs.* Knoxville Water Co. (1909).
29. Denver *vs.* Denver Union Water Co. (1918).
30. Galvaston Electric Co. *vs.* Galvaston.
31. Driscoll *vs.* Edison Light and Power Co.
32. Federal Power Commission *vs.* Hope Natural Gas Co. 320 U.S. 591 (1944).
33. *Re:* Mountain States Tele. and Telegraph Co. 99. PUR (N.S.).
34. *Re*: Gulf Power Co. 10, PUR. 3d. 273 (Fla.) 1956.

**Chapter IX**

35. Smith *vs.* Ames (1898).
36. Judgement on Hope's case.
37. Bluefield Water Works and Improvement Co. *vs.* Public Service Commission, 262 U.S. (1923).
38. Minnesota Commission Report.

39. *Re:* Proposed Advances in Fright Race 9 i cc. 382, 404 (1908).

40. Willcox *vs.* Consolidated Gas Co.

42. San Diego Land and Town Co. *vs.* National City.

43. Los Angels Gas and Electric Corporation *vs.* Railroad Commission of California.

44. Colorado Interstate Gas Co. *vs.* FPC., 324 U.S. 581, 609 (1945).

45. Trunk line Gas Co. *vs.* Federal Power Commission.

46. *Re:* Kentucky Utilities Company 22, PUR. 3d. 113 (1958).

47. Middlesex and Baston Rate Case.

48. Waukeshia Gas and Electric Co. *vs.* Railroad Commission.

49. Farmers' Education and Co-operative Union *vs.* Circuit Court, 85 PUR. (N.S.) 362, 364 (1950)

50. *Re:* Alabama Gas Corporation 25, PUR. 3d. 257, 1958.

51. State of New Jersey *vs.* New Jersey Bell Tele. Co. 152. A. 2d. 35 (1959).

52. *Re:* Ajax Pipeline Corporation Case.

53. Minneapolis Gas Company *vs.* FPC. 278, F. 2d. 870 (1960).

54. *Re.* Boise Water Company PUR. 1926 d. 321.

55. Munn *vs.* Illinois.

56. Stone *vs.* Farmers' Loan and Trust Company.

57. Reagan *vs.* Farmers' Loan and Trust Company.

58. Driscoll *vs.* Edison.

59. West *vs.* Chesapeak and Potomac Telephone Co. *op. cit.*

60. New England Telephone and Telegraph Company *vs.* Mass Department of Public Utilities. 6 PUR. 3d 65, 78 (Mass 1954).

61. Board of Public Utilities *vs.* New York Company.

62. Cities of Cleveland and Akron *vs.* Hope Natural Gas Co. 44 PUR. (N.S.) 1, 17 (1942).

63. Cedar Rapids Gas Company *vs.* Cedar Rapids.

Chapter X

64. Excess Income of Richmond, Fredericksburg and Potomac R. R. Co. (1931).

65. Board of Public Utility Commission *vs.* New York Tele. Co. (1956).

66. Knoxville Water Company case of 1909.

67. Ohio Edison and Company *vs.* City of Mansfield, 1961.

68. Minnesota Rate Cases, *op. cit.* p. 451.

69. *Re:* St. Croix Falls Minnesota Improvement Co. et al. 3 FPC. 148 (1942).

70. *Re:* Pacific Power and Light 3 FPC., 329 (1942).

Chapter XI

71. Knoxville decision in 1909.

72. United Railways Electric Company *vs.* West.

73. Hope case, 1944.

74. *Re:* General Order No. 38A, 62 PUR. (N.S.) 129, (1945).

75. *Re:* Safe Harbor Water Power Corporation, 66, PUR. (N.S.) 2, 12, 244 (1946).

76. Iowa : Illinois Gas and Electric Company *vs.* Fort Dodge 85, NW. 2d. 22 (1957).

77. Texas Commission *vs.* Houston Natural Gas Corporation.

Chapter XII

78. Chessapeak and Potomac Tele. Co. of Virginia.

79. Natural Pipeline Gas Company *vs.* Hope Natural Gas Co.

80. Chicago, M and ST, P. Railway Company *vs.* Minnesota, 1889.

81. The Willcox *vs.* The Consolidated Gas Company of 1909.

82. Bluefield Water Works and Improvement Company *vs.* Public Service of West Virginia.

83. Judgement of Mr. Justice Brandis in South Western Bell Case.

84. Alabama *vs.* Southern Bell Tele. and Telephone Co. 47, PUR. 1962.

85. Consolidated Gas Company of New York *vs.* Newton 267, FED. 231, 237 (1920).

86. *Re:* American Louisiana Pipeline Company.

87. *Re:* Hartford Gas Company, 44, PUR, 3d. 401, 405 (Con.) 1962.

88. Minnelusa Oil Corporation *vs.* Continental Pipeline Company.

**Chapter XIII**

89. *Re:* Milwaukee Gasline Company et al. 51 PUR, (N.S.) 299, 306 and 307 (1943).

90. Smith *vs.* Ames.

91. Baston Edison Company case.

92. Groesbck *vs.* Diluth, S. S. and A. Railway Company.

93. Colorado Interstate Gas Company *vs.* Federal Power Commission 324, U.S.

94. Michigan Bell Tele. Company *vs.* Odu.

95. New York Tel. Co. *vs.* Prendergust.

# பொருளடக்கம்

# 1. பொதுப் பயன் தொழில்கள்

## தோற்றுவாய்

'ஒரு சமுதாயத்தினை மாற்றி அமைத்திடும்போது, பழைய முறைகள் நீங்கிப் புதிய பாணிகள் தோன்றவேண்டும்.'

—ஜே. எஸ். மில் (J. S. Mill)

தன் சிந்தையின் திறத்தால் விந்தைகள் பல புரிகின்ற மனித இனத்தின் தோற்றம் பழமையானது. இருப்பினும், தான் வாழ்கின்ற இப் பரந்த பூமியின் தோற்ற வரலாற்றினை மனிதனால் சரிவரக் கணக்கிட இயலவில்லை. விஞ்ஞானிகளின் ஒருமித்த கருத்துப்படி கணக்கிட்டுப் பார்த்தால் இவ்வுலகம் தோன்றி ஏறத்தாழ ஒரு கோடி வருடங்களுக்கு மேலிருக்கும் என்பது புலப்படும். ஆனால், மனித சமுதாயத்தின் வரலாற்றை எவ்வளவு அதிகமாகக் கணக்கிட்டபோதிலும், சுமார் 50,000 வருடங்களுக்கு உட்பட்டே தொடங்குகின்றது எனலாம். இவ்வாறு குறுகிய கால அளவிலே தோன்றிய மனித சமுதாயத்தின் முன்னேற்றம் இன்று வியக்கத்தக்க அளவிலே மேம்பட்டிருக்கிறதென்றால் மிகையாகாது.

காடுகளிலும், மலைகளிலும், சமவெளிப் பிரதேசங்களிலும் அலைந்து, திரிந்து, குகைகளில் தங்கி, மக்களையும், மாக்களையும் வேட்டையாடிய மனிதனின் வாழ்க்கை ஆதவன் உதித்த பின்னர் துவங்கி, மாலையில் ஆதவன் மறைந்த பின்னர் முடிவடைவதாக இருந்தது. அவனது தேவைகள் மிகச் சொற்பமானவை. உணவு ஒன்றே அவனது குறிக்கோளாக இருந்தது என்றும் கூறலாம். ஆனால், காலச் சக்கரத்தின் துரிதமான சுழற்சியில் மனிதனின் வாழ்க்கைச் சக்கரமும் சுழன்றது. அவனது நாகரிகம் மென்மையானதாக, மேம்பாடுடையதாக, காலத்திற்கேற்றதாக விரிவடையத் தொடங்கியது. அதன் விளைவால் அவனது தேவைகளும்

விருப்பங்களும் பெருகத் தொடங்கின. இரண்டேயிரண்டு சிக்கி முக்கிக் கற்கள் அவனது வாழ்க்கையின் தேவையை, அதாவது, உணவு சமைத்து உண்பதை நிறைவேற்றின. தீயின் உபயோகத்தினை எண்ணற்ற முறைகளில் பெற இன்றைய மனிதனுக்குத் தேவைப்படும் கருவிகள்தான் எத்தனை! தற்காப்புக்கெனக் கூர்மையான கல்லினாலான ஆயுதத்தினைக் கையாண்டதுபோய், வில், வாள், கைத்துப்பாக்கி, பீரங்கி, அணுக்குண்டு போன்ற பல ஆயுதங்கள் வந்துவிட்டன. காலத்தினை கணக்கிடக் கவலைப்படாத ஆதிமனிதனும், கணக்கிடத் தெரியாத அவனது பின்னோரும் இன்று நம் கைகளை, நம் வீட்டுச் சுவர்களை அலங்கரித்துக்கொண்டிருக்கும் கடிகாரங்களைக் கண்டு வியப்படையமாட்டாரோ? பசி வந்ததும் காய், கனி போன்றவற்றைப் பறித்துத் தின்ற அன்றைய மனிதனால் இன்று நம்மிடையே வசிக்க இயலாது. வேட்கை எடுத்ததும் ஆற்றோரங்களையும், சுனைகளையும் நாடிச் செல்வதே அவனது இயல்பு. ஆனால், இன்றைய மனிதனைத் தேடி நல்ல குடிநீர் வரவேண்டிய கட்டாயநிலை ஏற்பட்டுள்ளது. அரபுநாடுகள் நல்ல விலைகொடுத்துப் பிறநாடுகளிலிருந்து குடிநீரை விலைக்கு வாங்குதல் இங்குக் குறிப்பிடத் தக்கதாகும். இவற்றையெல்லாம் நோக்குங்கால் ஆதிமனிதனின் வாழ்க்கை முறையிலேயே இன்றைய மனிதனும் வாழ இயலாதென்பதும், இக் காலத் தனிநபரின் தேவைகள் எண்ணற்றவை என்பதும் விளங்கும். உண்ண உணவு, உடுக்க உடை, இருக்க இடம் இவற்றோடு அன்றாட வாழ்க்கையை நடாத்தத் தொழில் செய்யும் கருவிகளும், எழுது பொருள்களும், அறிவு வளர்ச்சிக்கு நல்ல நூல்களும், போக்குவரத்துச் சாதனங்களும், மனித மகிழ்ச்சிக்கு ஏற்ற சாதனங்களும் சமுதாயத்தில் ஒருவரோடு மற்றொருவர் தொடர்புகொள்ளும் பொருட்டுத் தொலைபேசிக் கருவிகளும், அஞ்சல், தந்தி வசதிகளும் தேவைப்படுகின்றன. இச் சாதனங்கள் அன்றாட வாழ்க்கையோடு இணைந்த இன்றியமையாத தேவைகளாகக் கருதப்படுகின்றன.

## தனிநபர் தேவையும் சமுதாயத் தேவையும்

மனிதனின் நாகரிகம் வளர்வளர அவனது தேவைகளும் பல்கிப் பெருக ஆரம்பித்துவிட்டன. பொருளாதார வல்லுநர்களின் கூற்றுப்படி இத் தேவைகளை (1) தனிமனிதனின் தேவைகள், (2) சமுதாயத் தேவைகள் என இருவகைகளாகப் பிரிக்கலாம்.

தனிப்பட்ட நபர் ஒருவருக்கு வேண்டிய பொருள்கள் தனி மனிதனின் தேவைகளாகக் கருதப்படும். இதனை மேலும் இரு வகைகளாகப் பிரிக்கலாம். அவை : (1) பொருளாதாரத் தேவை

கள் (Economic wants), (2) தகுதித் தேவைகள் (Merit wants) என்பனவாகும்.




அன்றாட வாழ்க்கைக்கு ஆதாரமாக விளங்கும் பொருள்களை அவற்றின் மதிப்பினைக் கொடுத்து, தனக்குரியதாக்கி, அவற்றினைத் துய்ப்பதும் பொருளாதாரத் தேவைகளில் இடம்பெறும். சான்றாக, குடிநீர், மின்திறன், இருக்க இடம் போன்ற பெரிய பொருள்களும் முகப்பொலிவு காட்டும் ஆடி, எழுதுகோல் போன்ற எளிய பொருள்களும் பொருளாதாரத் தேவைகளே. இவற்றினைக் குறைந்த விலை கொடுத்தோ, மிகுந்த விலை கொடுத்தோ (தனக்குள்ள சக்திக்கேற்றபடி) சந்தையில் வாங்கி அவற்றினைத் துய்க்கமுடியும்.

தனிநபர் தேவையிலிருந்து சற்று மாறுபட்டதாகச் சமுதாயத் தேவை விளங்குகின்றது. பல தனிநபர்களின் ஒருமித்த கூட்டமே சமுதாயம் என்பது உண்மை எனினும் அவர்களின் தேவைகள் ஒருமித்ததாக இருந்தபோதிலும் அவற்றை நிறைவேற்றிக்கொள்வதில்' வேறுபாடு புலப்படுகின்றது. இன்றியமையாப் பொருளாயினும், ஆடம்பரப் பொருளாயினும், வசதி படைத்த செல்வர் வாங்கமுடியும். ஆனால், எளியோன் ஒருவனுக்கு அவை எட்டாக் கனிகளாகவே இருக்கும். செல்வந்தர் வீட்டுக் குழந்தை பகலிலும், இரவிலும் வேலைக்கொன்றாகப் பட்டாடை உடுத்தமுடியும். இதனை அதன் பெற்றோர் எவ் விலை கொடுத்தும் அக் குழந்தைக்கு வாங்கித்தர முடியும். ஆயின், வசதி குறைந்த வறியோன் ஒருவன் செல்வரோடு போட்டியிட்டுக்கொண்டு அதிக விலைகொடுத்து அப் பட்டாடையை வாங்கித் தன் அன்புக் குழந்தைக்குத் தர இயலுமா? இவ்வாறாக, தனிநபர் தேவைகள் அவரவரின் வசதிக்கேற்ப நிறைவேற்றிக்கொள்ளப்படுகின்றன.

'சமுதாயத் தேவையான சில இன்றியமையாப் பொருள்களும் வசதிகளும் அனைவருக்கும் கிடைத்தாகவேண்டும். இவற்றினை நிறைவேற்றிக்கொள்வதில் வேறுபாடு தோன்றுதல் தவிர்க்கப் படவேண்டும். சான்றாக, சமுதாய முன்னேற்றத்திற்குத் தேவை யான கல்வி, மருத்துவ வசதிகள், போக்குவரத்துச் சாதனங்கள், நல்ல குடிநீர், வாயு, மின்திறன் போன்றவை அனைவருக்கும் கிட்ட வேண்டும். குறைந்த விலையில் விற்பனை செய்யப்பட்டாலன்றி அனைவரும் இவற்றினைப்பெற்றுத் துய்க்க இயலாது. தனி வணிகர்கள் நேரடிச் சந்தையில் இவற்றினை விற்க முடியுமென்றா லும், இதனை இலாபம்பெறும் நோக்குடன்தான் விற்க முயல்வர். இத்தகைய இலாபம் ஈட்டும் கருத்தினைத் தவிர்த்துச் சமுதாயத் தின் தேவைகளைத் தொண்டு மனப்பான்மையுடன் பெற்றுத் தருகின்ற கடமையை எவரேனும் ஏற்றுக்கொள்ள வேண்டும்.

**நலமுடைச் சமுதாயம்**

தனிநபர்களின் கூட்டமே சமுதாயமெனப்பட்டால் சமுதாயத் தின் பதிலாளே அரசு எனப்படலாம். சமுதாயத்திற்கான இத் தேவைகளை அரசு நிறைவேற்றவில்லையெனில் ஏற்படும் அல்லல்கள் எண்ணிலடங்கா. கிடைத்தற்கரிதாகிய சில பொருள்களுக்கும் அதிக அளவில் உற்பத்தி செய்யமுடியாத அல்லது வழங்கமுடியாத பொருள்களுக்கும் மக்களிடையே அதிக அளவில் தேவை இருக்கும். இதனைப் பெறும் பொருட்டு ஒருவருக்கொருவர் போட்டியிடுவர். இதன் முடிவில் சிலர் பல பொருள்களைப் பெற்றும், பலர் ஒன்றும் பெறாமலும் இருக்கக் கூடும். இந் நிலை இழிவானது; வருந்தத்தக்கது. காட்டிலே வாழு கின்ற கொடிய விலங்குகள் பல போட்டியிட்டுக்கொண்டு, கிடைத்த இறைச்சியைத் தாங்கள்மட்டும் கவ்விக்கொண்டு ஓடுவதற்கொப்பான இச் செயலை, நாட்டிலே நயத்தக்க நாகரிகம் படைத்து வாழுவோர் எண்ணியும் பார்க்கலாமா? இருப்பினும், மனிதனது சுயநலம், பொருளாதாரச் சிக்கல்கள் இவற்றிற்கு முன்னே மற்றவை எதுவும் நிற்பதில்லை.

இத் துயரினைத் துடைக்கப் பொருளாதார வல்லுநர்கள் வகுத்த வழியே 'நலமுடைச் சமுதாயம்' (Welfare State). இச் சமுதாயத்தின் கண்ணோட்டத்தில் எல்லோரும் எல்லாமும் பெற வேண்டும். இரப்போர் சிலர் இருக்க, இல்லையென்போர் பலர் இருக்கும் நிலையை மாற்றி, வாழ்க்கைக்குத் தேவையான பொருள் களும், பணிகளும் அனைவருக்கும் கிடைத்திடவேண்டும். இன்றைய தினம் பெரிதும் பேசப்பட்டும் போற்றப்பட்டும் வருகின்ற சமத்துவப் பொருளாதாரத்தினை (Economy of Equality) உட்

கருத்தாகக்கொண்டே இந்த 'நலமுடைச் சமுதாயம்' உருவாக்கப்பட்டது.* குறிப்பாக, முதலாவது உலகப்போரினை அடுத்து வந்த சில வருடங்களில் சமுதாயத்தின் பொருளாதார நிலை உலகெங்கும் சீர்குலைந்த நேரத்தில், பண்டங்கள் பதுக்கப்பட்டதையும், விலைகள் விஷம்போல் உயர்த்தப்பட்டதையும், கறுப்புச்சந்தை நடவடிக்கை தீவிரமடைந்ததையும் தவிர்க்கும் பொருட்டு இந்த 'நலமுடைச் சமுதாயக்' கொள்கையானது உலகெங்கும் வெகுவேகமாகப் பரவத் தொடங்கியது. பேராசிரியர் பிகு (Pigou) போன்றோரின் கருத்துகளும் இவற்றினையே வற்புறுத்தின. இதன் விளைவாக, விலைக்கட்டுப்பாடு, கொள்ளை இலாபத்தினைத் தடுத்தல், பகிர்வு முறைகள் ஆகியவை பல்வேறு நாடுகளின் அரசுகளால் செயலாக்கப்பெற்றன. இருப்பினும், சில இன்றியமையாப் பொருள்களை அரசுகளே உற்பத்திசெய்து வழங்கவேண்டுமென்று பெரிதும் உணரப்பட்டது. பேராசிரியர் ஹால் (Hall) அவர்களின் கூற்றுப்படி 'அரசைக் காக்கும் பணியில் ஈடுபட்டு, நாட்டின் பகைவர்களோடு போரிடத் தன் உயிரையும் பணயமாக வைக்கத் தயாராக இருக்கின்ற தனிமனிதனுக்கு வேண்டிய உணவு, உடை, இடம் இவைமட்டுமன்றி, கல்வி, மருத்துவ வசதி, குழந்தைகளின் பராமரிப்பு, நல்ல குடிநீர் போன்றவற்றை அரசே அளிக்கக் கடமைப்பட்டுள்ளது.' காலப்போக்கில் இக் கருத்துகள் ஏற்றுக்கொள்ளப்பட்டு அரசு நேரிடையாகவோ மாநில அரசுகள் மூலமாகவோ இந்த அடிப்படைத் தேவைகளை அளிக்க முன்வந்தன. இவையே பொதுப்பயன் தொழில்கள் எனப் பெயர் பெற்றன. 1873 முதல் 1875 வரை பர்மிங்காம் (Birmingham) நகர மேயராக இருந்த சாம்பர்லின் (Chamberlain) என்பவர் இதற்கு வழிவகுத்தவர் எனலாம். இவரது நிருவாகத்தில், வாயு உற்பத்திச் சாலையையும், நீர்வழங்கும் தொழிலையும், கழிநீர் வெளிப்படுத்தும் வேலையையும், குடிசைகளை மாற்றி உறுதியான கட்டடங்கள் அமைக்கும் பணியையும் நகர மன்றமே ஏற்றுக்கொண்டது. மேலும், நகராட்சி நிருவாகமே நடத்தும் வங்கி ஒன்றும், இலவச நூல்நிலையங்களும், நுண்கலைக் கூடங்களும், குழந்தைகள் கல்வி வசதிபெற இலவசக் கல்விச்சாலைகளும் அமைக்கப்பெற்றன.

ஏறத்தாழ இதே சமயத்தில் அமெரிக்கா, பிரான்சு மற்றும் இங்கிலாந்து முழுவதிலும் விழிப்புணர்ச்சி ஏற்பட்டது. தனிநபரின் மகிழ்ச்சி, சமுதாயத்தின் மகிழ்ச்சி ஆகாது. ஆனால்,

* Robson William, A,

சமுதாயத்தின் மகிழ்ச்சியே தனிநபரின் மகிழ்ச்சியாகும் என்ற கருத்து மக்களிடையே பரவத் தொடங்கியது. பெந்தம் (Bentham), மில் (Mill), சிட்விக் (Chidwik), மார்ஷல் (Marshall) போன்றோர் ஓரளவும், பிகு (Pigou), கீன்ஸ் (Keynes), காப் (Calf) போன்றோர் பெரிதும் இக் கொள்கையினை ஏற்றுக்கொண்டனர். இராபர்ட் ஓவன் (Robert Owen), ஹென்றி ஜார்ஜ் (Henry George) போன்றோர் இக் கொள்கைக்கு வலிவூட்டினர். இத் தகைய அறிஞர்களின் கூற்றுப்படி, அரசு சில துறைகளில் தலையிட்டு வர்த்தகப் பொறுப்பினை ஏற்றுக்கொள்ள வேண்டும். அன்றாட வாழ்க்கைக்கு வேண்டிய பொருள்களைத் தட்டின்றி அனைவருக்கும் அளிக்கவேண்டும். இப் பொருள்களை அரசே உற்பத்தி செய்தோ கொள்முதல் செய்தோ, மக்களுக்குக் குறைந்த விலையில் பகிர்ந்தளிக்க வேண்டுமென்றும் வலியுறுத்தப்பட்டது. இதுவே, பொதுப்பயன் தொழில்களின் தோற்றுவாய் எனலாம்.

## கருத்துக்கோப்பு

மனிதனின் நாகரிகம் வளர வளர, அவனது தேவைகள் பெருகின—தனிமனிதனின் தேவையும், சமுதாயத் தேவையும்—தகுதித் தேவை, பொருளாதாரத் தேவை—பொருள்களைப் பெறுவதில் போட்டி—அவற்றின் தீமைகள்—நலமுடைச் சமுதாயம்—அறிஞர்கள் கருத்து—அரசின் பொறுப்பு.

# 2. அரசும் வாணிகமும்

'முழு வளர்ச்சியடைந்த மனிதனை எவ்வாறு பச்சிளம் குழந்தை உறங்கும் தொட்டிலிலிட்டுத் தாலாட்ட இயலாதோ, அவ்வாறே, வளர்ந்துவரும் எக் கொள்கையினையும் அதனுடைய ஆரம்ப நிலையோடு ஒப்பிட இயலாது'

—எர்னஸ்ட் டேவிஸ் (Earnest Davis)

## மாறிவரும் பொருளாதாரக் கொள்கைகளும் அரசு தலையீடும்

வாணிகம் செய்வதென்பது எந் நாட்டுக்கும் உரிய ஒரு தொழிலாகும். நாட்டின் உற்பத்தியைப் பன்மடங்காக்கி, உள் நாட்டில் நுகர்தல் மட்டுமன்றி வெளிநாட்டிற்கும் பெருமளவில் ஏற்றுமதி செய்து வருவாயைப் பெருக்குவதே சிறந்த வாணிகக் கொள்கையாக, அன்று முதல் இன்றுவரை ஏற்றுக்கொள்ளப்படு கின்றது. இத்தகைய வாணிகத்தில் எண்ணற்றோர் ஈடுபட் டிருப்பது இயல்பு. ஒரு நாட்டின் பல்வேறு பகுதிகளிலிருப்போர் வாணிகத் தொடர்பு கொள்ளும்போது அவர்களிடையே மொழி, நாணயச் செலாவணி போன்றவற்றில் சிக்கல்கள் தோன்றுவ தில்லை. மாறாக, ஒரு நாட்டினைச் சார்ந்த வணிகர் மற்றொரு நாட்டினைச் சார்ந்த வணிகரோடு தொடர்புகொள்ளும்போது இச் சிக்கல்கள் எழுதல் இயல்பு. இவற்றை எளிதில் தீர்க்கும் பொருட்டு அரசன் அல்லது அரசியின் உதவியை நாடுவது அன்றைய முறையாக இருந்தது. அரசரோ அவரது அமைச் சரோ நியாய உணர்வோடு இச் சிக்கல்களுக்குத் தீர்ப்பு வழங்கி வந்தனர். இவை சட்டங்களாக ஏற்றுக்கொள்ளப் பட்டன. பின்னர், காலப்போக்கில் வாணிகத் துறையில் ஏற்பட்ட மாறுதல்களையொட்டி வாணிகம் செய்வோரே தங்களுக்குள் ஓர் உடன்பாட்டினை ஏற்படுத்திக்கொள்ள ஆரம்பித்தனர். மேலும் குறிப்பிடத்தக்க எந்த ஒரு சிக்கலுக்கும் அளிக்கவேண்டிய தீர்ப்

பினையும் முன்னதாகவே முடிவுசெய்து வைத்தனர். இவையே 'வாணிகச் சட்டங்கள்' (Mercantile Law) எனப் பின்னல் பெயரிடப்பட்டன. இவற்றின் தொடர்ச்சியாகவே 'தொழிற்சாலைச் சட்டங்கள்' (Factories Act), 'தொழிலாளர் நட்டஈட்டுச் சட்டம்' (Workmen's Compensation Act), 'தொழிலாளர் கூலிச் சட்டம்' (Workmen's Wages Act) போன்றவை இன்றைய பல்வேறு நாட்டு அரசுகளினல் இயற்றப்பட்டு அமலாக்கப் பட்டுள்ளன. இவற்றை நோக்குங்கால் வணிகத்துறையோடு அன்றுமுதல் இன்றுவரை அரசு நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தது எனலாம்.

ஆனல், அரசின் இத்தொடர்பினை மறுத்தும், கண்டித்தும் பல கருத்துகள் வெளியிடப்பட்டன. 17, 18ஆம் நூற்ருண்டுக் காலத்தில் வாழ்ந்துவந்த 'வர்த்தக சமூகம்' (Mercantilists) அன்றைய அரசின் நேரடிக் கண்காணிப்பினை விரும்பவில்லை. ஏனெனில், அளவுமுறை, பொருள்களின் தரம் போன்ற சிறு செய்திகளிலும் அரசு கட்டுப்பாடுகளை விதித்திருந்தது. இதன் நோக்கம் தனியார் துறையினர் பெருத்த இலாபம் ஈட்டுவதைத் தவிர்ப்பதும், அரசின் வருவாயினைப் பெருக்குவதுமாகும். ஆனல், அரசின் வருவாயினைப் பெருக்க இம் முறையினைக் கையாளுவதைப் பொருளாதாரப் பேரறிஞர் ஆதம் ஸ்மித் (Adam Smith) ஏற்கவில்லை.

அவரது கருத்துப்படி ஓர் அரசு வாணிகஞ்செய்யும் தனிநபர்களின் அலுவல்களில் எந்த அளவு தலையிடாதிருக்க முடியுமோ அந்த அளவுக்கு அதன் வருவாயும் அதிகரிக்கும் என்பதாகும். தனிநபர்களின் மொத்த வருவாயே அரசின் வருவாயென்பது உண்மையானல் தனிநபரின் இலாபமீட்டும் 'சுயநல மனப்பான்மைக்கு' இடமளிக்கவேண்டும் என்பதும் ஆதம் ஸ்மித்தின் கோட்பாடு ஆகும். பேராசிரியர் ஆதம் ஸ்மித்தோடு ஒத்த கருத்தினையுடைய மற்றையோரும் ஓர் அரசின் கடமைகளாகப் பின்வருவனவற்றை மட்டுமே குறிப்பிடுகின்றனர்:

(1) உள்நாட்டிலிருந்தும், வெளிநாட்டிலிருந்தும் ஏற்படும் ஆபத்துகளிலிருந்து பாதுகாப்பளித்தல்.

(2) வியாபார மோசடிகளிலிருந்து பாதுகாப்பளித்தல்.

(3) பொருளாதாரச் சொத்துகளை வரையறுத்தல், ஒப்பந்தங்களை உறுதிசெய்த பின்னர் அமலாக்குவதில் உதவி, சொத்துரிமையைக் காத்தல்,

இவை மட்டுமே அரசு தலையிடக்கூடிய துறைகள் என்பது அவர்கள் கருத்தாகும்.

மேலும் தனிநபர் ஒருவரை அவரிச்சைப்படி வர்த்தகம் செய்ய அனுமதித்தால், அவரது திறமை நன்கு வெளிப்படக் கூடும். இலாபம் ஈட்டுவதில் அதிக ஆர்வம்காட்ட முற்படும் அதே நபர், தம்மோடு போட்டியிடும் ஏனைய வணிகரையும் வென்றாக வேண்டும். இந் நிலையில் பொருள்களின் தரம் உயர்த் தப்பட்டும், விலை குறைக்கப்பட்டும் நுகர்வோருக்கு அளிக்கப்பட லாம். வாங்குதல் அதிகரிக்க, விற்பனை அதிகரிக்கும். இதனால் வணிகரின் வருவாயும் அதிகரிக்கும் என்பது இவர்களின் முடிந்த கருத்து. இக் கருத்தினை ஓரளவு ஏற்றுக்கொள்ளலாமெனினும் இதிலுள்ள பேராபத்தினையும் நன்கு சிந்திக்கவேண்டும்.

தொழிற்புரட்சியின் காரணமாக வர்த்தக உலகில் ஏற்பட்ட விழிப்புணர்ச்சி பன்னாடுகளின் மறுமலர்ச்சிக்கு வித்திட்டது. தொழிற்சாலை முறைகள் (Factory systems), வர்த்தகக் கூட்டுருக் கள் (Business Corporations), வர்த்தகச் சேர்க்கை அமைப்புகள் (Business Combinations) போன்றவை தோன்றியதன்மூலம் வணிகரிடையே ஏற்படும் சிக்கல்கள் எளிதாகத் தீர்க்கப்பட்டன. ஆயினும், இலாபமீட்டுவதையே ஒருமித்த கருத்தாகக்கொண்ட வணிகருக்கு இவ்வமைப்புகள் அரணை அமைந்தன. அதிகநேர உழைப்பு, குறைந்த கூலி இவற்றினைத் தொழிலாளரும் தரக் குறைவு, விலைஉயர்வு இவற்றினை நுகர்வோரும் ஏற்றுக்கொள்ள இவ்வமைப்புகள் உதவின. இதன் விளைவாகப் பொதுநலன் பெரிதும் பாதிக்கப்பட்டது. நுகர்வோர் மட்டுமன்றித் தொழி லாளர் நலனையும் கருத்தில்கொண்டு பன்னாட்டு அரசுகளும் தங்களது 'தலையிடாக் கொள்கையினை'க் (laissez-faire) கைவிட்டு வணிகத்துறையின்மீது தீவிரமான கட்டுப்பாடுகளையும், ஒழுங்கு முறைகளையும் கொண்டுவர ஆரம்பித்தன.

1917ஆம் ஆண்டு நடந்த பெரும் புரட்சியின் விளைவாக, இரஷ்யநாடு 'தலையிடாக் கொள்கைக்கு' விடை கொடுத்தது. அதேநேரத்தில் மேலைநாடுகள் பலவற்றிலும், வருவாய் வரி, சொத்து வரி, இறப்பு வரி போன்ற பல வரிகள் விதிக்கப்படு வதன்மூலம் அந் நாட்டு அரசுகள் வாணிகத்துறையில் ஆர்வம் காட்டத் தொடங்கின. மேலும், வருவாய் மிகுந்தோரிடமிருந்து வரிகளின் மூலம் செல்வத்தினைப் பெற்று வறியோருக்கு அதனைப் பகிர்ந்தளிப்பதுவும் அரசின் கொள்கையாக ஏற்றுக்கொள்ளப் பட்டது. கீன்ஸ் பிரபு (Lord Keynes) இதனை வலியுறுத்தும்

பொருட்டு 1924ஆம் வருடம் 'தலையிடாக் கொள்கை'க்கு இறுதி விடை கொடுத்தார். லஸ்கி (Lusky) என்பாரும் முதல் உலகப் போருக்குப்பின் இக் கொள்கைக்கு ஏற்ற சூழ்நிலை இல்லையென்று சொல்லித் தீர்ப்பு வழங்கினர்.

சுயேச்சையான வாணிகக் கொள்கையினைத் தீவிரமாகக் கடைப்பிடிக்கும் அமெரிக்க ஐக்கிய நாடுகளும் சமுதாயத்தின் பொதுநலம் கருதி, அரசின் கட்டுப்பாடுகளையும், மேற் பார்வைகளையும் ஏற்றுக்கொண்டன. மோரீஸ் ஹர்லி (Moris Harly) என்பாரின் கூற்றுப்படி அனைத்து நாடுகளிலும் சுதந்திரப் பொருளாதாரக் கோட்பாடு உயிர்த்தெழுந்தது. இவ்வாறாக, வாணிகம் பெருகப்பெருக, வருவாய் வளரவளர மக்களின் வாழ்க்கையையும் நெறிப்படுத்த வேண்டிய பொறுப்பினை அரசுகள் ஏற்றுக்கொண்டன.

**கட்டுப்பாடுகள்**

பொதுவாக, தனிநபரோ தனிநபரின் குழுக்களோ செய்யும் செயல்களில் அரசின் தலையீடே 'கட்டுப்பாடுகள்' எனப் பட்டது. சமுதாயத்தின்மீது இக் கட்டுப்பாட்டினைச் செய்யும் பொழுது, அது 'பொருளாதாரத்தின் மீது சமுதாயக் கட்டுப் பாடு' (Social Control of Economic Activity) எனப்படு கிறது. அரசின் இக் கட்டுப்பாடுகளை அமலாக்குவதில் பல அதிகாரிகள் ஈடுபட்டுள்ளனர். இவர்களது அறிவுத்திறனும், செயல்திறனுமே இக் கட்டுப்பாடுகளின் வெற்றியினை அளிப் பவை. ஆகவே, இந்த அதிகாரிகள் எண்ணச்செறிவு பெற்றவர் களாகவும் நடைமுறைத்திறன் பெற்றவர்களாகவும் இருத்தல் இன்றியமையாததாகும்.

## கட்டுப்பாடுகளும் அவற்றின் வகைகளும்

பொருளாதார அலுவல்களில் அரசு (குறிப்பாக இந்திய அரசு) விதிக்கும் எட்டுவகைக் கட்டுப்பாடுகளும் அவற்றின் இன்றியமையாமையும் பின்வருவனவாம்:

**1. சீரியமுறையில் அமைக்கப்பட்ட அனைத்துப் பொருளாதார அமைப்பிற்கும் தேவையான கட்டுப்பாடு**

தற்போது முதலாளித்துவத்தைக் கொள்கையாகக்கொண்ட அமெரிக்க ஐக்கிய நாடுகளும், சமுதாயச் சமத்துவத்தைத் தீவிர மாகப் பின்பற்றிவரும் கம்யூனிச நாடுகளும், இவற்றோடு

குடியாட்சியினையும் சேர்த்துச் சமுதாய சமத்துவப் பாணியினைப் பின்பற்றுகின்ற இந்தியா போன்ற நாடுகளும், திட்டமிட்ட பொருளாதாரக் கொள்கையினை அமைத்துள்ளன. இந்த ஐந்து அல்லது ஆறாண்டுக்காலத் திட்டங்களின் வெற்றி, நாட்டின் வாணிகத்துறையின் வெற்றியினைப் பொறுத்தே அமைகிறது. இதற்கு இன்றியமையாதது இவற்றின் மீதான கட்டுப்பாடுகளே ஆகும்.

## 2. இயற்கை வளங்கள்மீது கட்டுப்பாடு

பல்வேறு தொழில்களுக்கும் வேண்டிய கனிவளங்களும், இரும்பு, எஃகு, நிலக்கரி போன்ற தாதுப்பொருள்களும் மற்றுமுள்ள இயற்கை வளங்களும் எப்போதும் எல்லா நாடுகளிலும் கிடைப்பதில்லை. கிடைத்தற்கரிதான இவற்றைச் சீரிய முறையில் சிக்கனமாக உபயோகிக்க வேண்டும். ஆகவே, இதனை உபயோகிப்போர்மீது அரசு சில கட்டுப்பாடுகளை விதிப்பது நல்லது.

## 3. உடல்நலம், பண்பாடு இவற்றிற்கான கட்டுப்பாடு

நல்ல உடல்நலம் நிறைந்த மனிதர்களே முழு ஆற்றலுடன் பல்வேறு துறைகளிலும் பணியாற்ற முடியும். உடல்நலம் குறைந்த வயோதிகர்களும், பச்சிளம் குழந்தைகளும் மற்றும் நோய்வாய்ப்பட்டோரும் மருத்துவ வசதியினைப் பெரிதும் நாட வேண்டியுள்ளது. இவர்களுக்கு அளிக்கப்படவேண்டிய மருந்துகளும், மாத்திரைகளும் இன்று உலகெங்கும் எண்ணற்ற வணிக நிலையங்களால் தயாரிக்கப்படுகின்றன. ஆனால், போலி நிறுவனங்கள் தயாரிக்கும் குழந்தை உணவுகளும், மருந்துகளும் எண்ணற்ற உயிரைக் குடிக்கும் கொடிய நிலை இன்று நிலவுகின்றது. இதைத் தவிர உணவுப்பொருள்களிலும் கலப்படம் செய்வது கைவந்த கலையாகக் கருதப்படுகின்றது. ஊறுசெய்யும் நச்சுப் பொருள்கள் கலந்த கடுகு எண்ணெயை உபயோகித்த ஆயிரக்கணக்கான பம்பாய் நகர மக்களில் பலர் கண்பார்வை இழந்தும், கைகால்கள் முடமாகவும் அல்லலுற்றதைச் செய்தித் தாள்களில் கண்ணுறும்போது அரசு இச் செயலில் ஈடுபட்டிருக்கும் வணிக நிறுவனங்களின்மீது கட்டுப்பாடு விதிப்பது மிக இன்றியமையாதது என்பதை உணரலாம்.

## 4. முற்றுரிமை (Monopoly), மற்றும் மோசடியான வாணிகச் செயல்களுக்கெதிரான கட்டுப்பாடுகள்

குறிப்பிட்ட ஒரு சில வாணிக நிலையங்கள் மட்டுமே சந்தை முழுவதையும் வசப்படுத்திக்கொள்ளும் நிலை இன்று உருவாகி

புள்ளது. அதிலும், உணவுப்பண்டங்கள், அன்றாடப்பொருள்கள் இவற்றைத் தயாரிக்கும் சில வணிகநிலையங்கள் சந்தையின் முற்றுரிமையைப் பெற்றதாகத் திகழ்கின்றன. இவை தங்களின் விருப்பத்திற்கேற்றவாறு பொருள்களின் தரத்தைப் பற்றி யோசியாமல் விலையை மட்டும் அதிகப்படுத்திப் பெருமளவு இலாபம் ஈட்டுகின்றன. மக்களின் தேவைக்கேற்றவாறு பொருள் களின் அளிப்பு இருப்பதில்லை. இதுவே கள்ளச்சந்தை உருவாகக் காரணமாகத் திகழ்கின்றது. இந்த நிலையை மாற்ற முற்றுரிமைத் தடுப்புச்சட்டங்கள் (Monopoly & Restrictive Trade Practices Act) இயற்றப்பட்டுள்ளன.

### 5. சிலவகைப் பொருளாதாரச் சிறப்புச் சலுகைகளை அளிக்கும் கட்டுப்பாடு

சுங்க வரிகளில் சலுகை, நிதியுதவி, ஏற்றுமதி இறக்குமதி களில் தனிச்சலுகை இவற்றை ஒரு சில குறிப்பிட்ட வணிக நிறுவனங்களுக்கு மட்டும் அரசு அளிக்கக்கூடும். இதன் குறிக்கோள், அந்தப் பொருள்களின் உற்பத்தியை அதிகரித்து ஏற்றுமதி செய்வதன்மூலம் வெளிநாட்டுச் செலாவணியை ஈட்டுவதேயாகும்.

### 6. நாட்டின் அவசரநிலைக்கான கட்டுப்பாடு

ஒரு நாடு மற்றொரு நாட்டுடன் போரில் ஈடுபட்டிருக்கும் போதோ, மிகக் கொடூரமான வெள்ளம், நிலநடுக்கம் இவை ஏற்பட்டாலோ அந் நாட்டின் பொருளாதாரம் மிகவும் பாதிக்கப்படும். இதனைச் சரிக்கட்டும் வகையில் அரசு சில கட்டுப்பாடுகளை விதிக்கும். சான்றாக, போர் நிகழும் போதோ, அதன்பின்னரோ பல பொருள்களுக்கான தேவை மிக அதிகமாகவும், அவற்றின் அளிப்புக் குறைவாகவும் இருக்கும். பங்கீட்டு நிறுவனங்கள் மூலமாகவும், நியாயவிலைக் கடைகள் மூலமாகவும் உச்சவிலையை நிருணயிப்பதன்மூலம் இப் பொருள் களைப் பங்கிட்டு வழங்குவதில் அரசு தன் கடமையை ஆற்ற முடியும்.

### 7. நிறைவளவு வேலைவாய்ப்புக்கான கட்டுப்பாடு

ஒரு நாட்டிலுள்ள உடலாரோக்கியம் படைத்த ஒவ்வொரு வருக்கும் வேலைசெய்யும்வாய்ப்புக் கிடைத்தால்தான் அவர்களது வருமானம் பெருகும். தனிநபர் வருமானம் பெருக நாட்டின் மொத்த வருமானமும் பெருகும். மேலும், தனிநபர் வருவாய் உயர அவரது வாழ்க்கைத்தரமும் உயர்கின்றது. இறுதியில்

நாட்டின் வாழ்க்கைத்தரமும் உயர்ந்தநிலையை அடைகிறது. இதுவே நிறைவளவு வேலைவாய்ப்பின் நன்மையாகும். இதனை யடைய அரசே சில கட்டுப்பாடுகளை விதிக்கின்றது.

8. **அரசே உற்பத்திசெய்து பொருள்களை வழங்கும் தொழில்களை ஏற்றுக்கொள்வதற்கு வகைசெய்யும் கட்டுப்பாடு**

நன்கு நடைபெறாத தனியார்துறை நிறுவனங்களை அரசே ஏற்று நடத்துவது இயற்கை (சான்றாக, பருத்தி ஆலைகள்). இவை தவிர அரசே பொதுத்துறையின்கீழ் சில தொழிற் சாலைகளை ஆரம்பித்து நடத்தவும் சிலவகைக் கட்டுப்பாடுகள் விதிக்கப்படும்.

இவற்றைத் தவிர தனியார் துறையினை நெறிப்படுத்தவும் பலவிதக் கட்டுப்பாடுகள் விதிக்கப்பட்டுள்ளன.

## அரசு உதவிகள்

வணிகத்துறைக்கு அரசு அளிக்கும் உதவிகள் பல. அவை :—

(1) பாதுகாப்புச் சுங்க வரிகள் (Defence Tariffs), (2) நேரடியான அல்லது மறைமுகமான நிதிஉதவி, (3) பொருள்களின் மதிப்பு, நிறை, அளவு முறை, தரம் இவற்றினைத் தரப்படுத்துதல், (4) பொதுவாக அளிக்கப்படாத சில விசேடச் சலுகைகள், (சான்றாக, வியாபாரக்குறிகள், பதிப்புரிமை போன்றவை), (5) ஏற்றுமதியை அதிகரிக்க வசதிகள் போன்றவை,

இவை தவிர வேளாண்மைத் தொழிலுக்கும், தொழிலாளர் நலனுக்கும் அரசு பல சலுகைகளை அளித்து வருகின்றது.

**நுகர்வோருக்கு உதவிகள்**

எந்த ஒரு பொருளும் அதனை நுகர்வோருக்காகவே தயாரிக்கப்படுகின்றது. ஆகவே, வணிகத்துறையில் ஈடுபாடு கொண்ட எந்த ஓர் அரசும் நுகர்வோருக்குச் சில வசதிகளைச் செய்து தருகின்றது. அவை :

(1) வியாபாரிகள் மோசடி செய்வதையும், ஏமாற்றுவதையும் தடுத்தல்,

(2) நேரடியாக இவை நடைபெறுவிடில் மறைமுகமாக நடைபெற அனுமதியளிக்காதிருத்தல் (சான்றாக, போலி விளம்பரங்கள்).

(3) உடல்நலத்திற்கு ஊறு விளைவிக்கும் பொருள்களை விற்க அனுமதி மறுத்தல்.

(4) பொருள்களின் அளவு, எடைமுறைகளை நிருணயித்தல்.

(5) விலை ஏற்றத்தினைத் தடுத்து, நியாயவிலைக் கடைகள் பங்கீட்டுக் கடைகள் ஆகியவைமூலம் பொருள்களைப் பகிர்ந்தளித்தல்.

மேற்கண்ட பல்வேறு சலுகைகளையும், வசதிகளையும், உதவிகளையும் வணிகருக்கும், பல்வேறு துறையினருக்கும், மற்றும் நுகர்வோருக்கும் பெற்றுத்தருவதன் மூலமும் அரசானது 'நலம் பெறு சமுதாயத்தினை' அமைக்க முயற்சி செய்யும். தற்சமயம் நிலவுகின்ற கருத்துப்படி, சமுதாயத்திற்குத் தொண்டு செய்கின்ற அல்லது நன்மை பயக்கின்ற ஒரு சில தனியார் தொழில்களே வாணிகஞ்செய்ய அனுமதிக்கப்படவேண்டும். சில துறைகளை அரசும், சில துறைகளைத் தனியாரும் எடுத்து நடத்தும் 'கலப்புப் பொருளாதாரம்' (Mixed Economy) இன்று பெருமளவில் போற்றப்படுகின்றது. இருப்பினும், வளர்ந்து வருகின்ற நாடுகளில் அரசுதுறை தொழில்களே பெரிதும் வேண்டப்படுகின்றன.

### அரசுதுறைத் தொழில்கள்

இவை பொதுத்துறைத் தொழில்கள் (Public Sector Enterprises) எனவும் குறிக்கப்படும். தனியார் துறையினைச் சார்ந்த மாபெருந் தொழில்களிடமிருந்து எதிர்பார்க்கப்பட்ட மிகச்சிறந்த நன்மைகள் ஏதும் சமுதாயத்திற்கு முற்றிலும் கிடைக்காததால், இத்தகைய தொழில்களை அரசே ஏற்று நடத்தும் நிலை உலகெங்கும் ஏற்பட்டது. கம்யூனிச நாடுகள் எல்லாத் தொழில்களையும் பொதுவுடைமையாக ஏற்றுக்கொண்டன. இதன்படி தனிநபர் எவரும் தனிப்பட்ட முறையில் வாணிகம் செய்து இலாபத்தினை ஈட்டித் தனக்கு மட்டுமே உரியதாக்கிக்கொள்ள முடியாது. அரசின் ஆணைக்கேற்றவாறே பொருள்களின் உற்பத்தி, இடமாற்றம், உரிமை மாற்றம் இவை செய்யப்படும். இரஷ்யா போன்ற நாடுகள் இக் கொள்கையினைப் பின்பற்றுகின்றன. இதற்கு முற்றிலும் மாறான முதலாளித்துவக் கொள்கையை ஏற்றுக்கொண்டிருக்கும் அமெரிக்கா போன்ற நாடுகளிலும் தற்போது, சில இன்றியமையாத் தொழில்கள் அரசுடைமையில் உள்ளன. இவற்றைத் தவிர, இந்தியா, இங்கிலாந்துபோன்ற நாடுகள் கலப்புப் பொருளாதாரத்தினை அடிப்படையாகக் கொண்டிருந்தாலும், அரசுதுறை தொழில்களைப் பெரிதும்

ஆதரித்து வருகின்றன. வளர்ந்துவரும் நாடுகள், தங்களது பொருளாதார மேம்பாட்டிற்குப் பொதுத்துறைத் தொழில் களையே பெரிதும் நம்பியிருக்கின்றன.

## நாட்டுடைமையாக்கல் அல்லது பொதுவுடைமையாக்கல்

தனியார் துறையினைச் சார்ந்த ஒரு சில தொழில்களைப் பல்வேறு காரணங்களுக்காக, நாட்டுமக்களின் நலனைக்கருதி அரசே தனக்குரியதாக்கி, இயக்குதற்கு 'நாட்டுடைமை யாக்கல்' என்று பெயர். அரசு என்பது பொதுமக்களால் அமைக்கப்பட்ட ஓர் அமைப்பு என்பதாலும், இதனால் வருகின்ற இலாப நட்டங்களைப் பொதுமக்களே ஏற்கிறார்கள் என்பதாலும் இதனைப் பொதுவுடைமையாக்கல் எனவும் கூறலாம். இச் செயலுக்கு ஆதரவாகவும், மறுத்தும் பல கருத்துகள் நிலவு கின்றன. அவை வருமாறு :

### சார்பான கருத்துகள்

**1. தனியாரின் முற்றுரிமையை அறவே நீக்குதல்** (Abolition of Private Monopoly)

முற்றுரிமையினைப்பெற்று இயங்குகின்ற சில தனியார்துறை நிறுவனங்கள் மக்களின் நலனுக்குப் பெரிதும் தீங்கு விளைவிப்ப தால், இவற்றின் முற்றுரிமையை நீக்குதல் அவசியமாகிறது. இத் தொழில்களை நாட்டுடைமையாக்குவதன்மூலம் இதனைச் செய்ய இயலும். ஒரு சில நபர்களின் வசம் ஒரு நாட்டின் பொரு ளாதாரமே இருக்கக்கூடாது என்பது இந் நடவடிக்கையின் சிறப்பு நோக்கமாகும்.

**2. நுகரும்பொருட்டே உற்பத்தி செய்தல்** (Production, only for consumption)

சமுதாயத்திற்கு எவ்வகையிலும் கட்டுப்படாத தனிநபர் தொழில்கள் இலாபம் ஈட்டுவதற்காகவே உறபத்தி செய்கின்றன. விரும்பத்தகாத, மேலும் முறையற்ற சிலவழிகளிலும் ஈடுபட்டுச் சந்தை முழுவதையும் தங்களுக்குரியவையாக ஆக்கிக்கொள்ள இவை எண்ணுகின்றன. ஆனால், பொருள்களின் உற்பத்தி நுகர்வோரின் மகிழ்ச்சியின் பொருட்டே. நுகர்வோருக்காகவே இப் பொருள்களை உற்பத்திசெய்யும் பணியினைச் செய்ய நாட்டுடைமையாக்கல் இன்றியமையாததாகிறது.

### 3. சமநிலை உற்பத்தியும் சமநிலைப் பங்கீடும் (Equality in Production & Equal Distribution)

இலாப நோக்கோடு இயங்கும் தனியார்துறைத் தொழில்கள் தேவைக்குமேல் உற்பத்தியைப் பெருக்கிக் குவித்து வைத்துக் கொள்ளக்கூடும். ஆனல், ஒரே நிருவாகத்தின்கீழ் இயங்குகின்ற அரசு துறை தொழில்கள் மக்களின் தேவைக்கு ஏற்றவாறு உற்பத்தியைச் சமநிலைப்படுத்திக் கொள்ளுகின்றன. மேலும், இருப்போர், இல்லாதோர் என்ற வேறுபாடற்றுப் போகுமாறு சமநிலைப் பங்கீட்டு முறையினை இவை கடைப்பிடிக்கின்றன.

### 4. வட்டாரங்களின் சமநிலை வளர்ச்சி (Balanced Regional Development)

தனிநபர் ஒருவர் தமக்குத் தெரிந்த மனிதர்கள் வசிக்கும் இடத்திலோ, சொந்த மாநிலத்திலோ அதிக இலாபம் கிடைக்கும் இடத்திலோதான் எந்தத் தொழிலையும் ஆரம்பித்து நடத்த விரும்புவார். இவ்வாறே பலரும் எண்ணுவாரே யானல், நாட்டின் சில பகுதிகளில் தொழில்கள் மிகுந்தும், மற்றும் பல பகுதிகளில் தொழில்கள் குறைந்தும் காணப் பெறும். இதனல் ஒரு நாட்டிலுள்ள சில வட்டாரங்கள் மிகுதியான பொருளாதார வளர்ச்சியுற்றும், மற்றும் சில வளர்ச்சியற்றும், ஏற்றத்தாழ்வுடன் அமைந்துவிடும். இந் நிலையை மாற்றி வட்டாரங்களின் சமநிலை வளர்ச்சியை ஏற்படுத்தப் பின்தங்கிய வட்டாரங்களில் அவற்றிற்கேற்ற துறைகளில் அரசே முதலீடுசெய்து தொழில்களை ஆரம்பிக்கவேண்டும்.

### 5. நீண்டகால முதலீடுகள்

வாணிகச் சுழல்களினல் (Trade cycles) ஏற்படும் மாறுதல்களுக்கு ஏற்றவாறே ஒரு தொழிலின் முதலீடு அமைகின்றது. வணிக உலகில் மந்தநிலை ஏற்படும்பொழுது ஒரு தொழிலில் போடப்படும் முதலீடு குறைந்தும், தீவிரநிலை ஏற்படும்பொழுது முதலீடு மிகுந்தும் அமையும். மேலும் மந்தநிலையின்போது ஏற்படும் நட்டத்தினைத் தவிர்ப்பதற்காகப் பொருள்களின் உற்பத்தி குறைக்கப்படும். இதனல் தேவைக்கு ஏற்றவாறு பொருள்கள் கிடைக்காமல், நுகருவோர் பெரிதும் இன்னலுறுவர். இத் துயரினைத் துடைத்து நுகருவோருக்கு எப்பொழுதும் இப் பொருள்கள் தட்டுப்பாடின்றிக் கிடைக்கும்வண்ணம் உற்பத்தியைப் பெருக்கவும், அதற்கான முதலீட்டினைச் செய்யவும் அரசு துறைத் தொழில்களால் மட்டுமே முடியும்.

**6. தொழில்களின் சீரமைப்பு (Rationalisation of Industries):**

ஒரு தொழில் நன்கு இயங்க, காலத்திற்கேற்ற வழிமுறைகளைக் கையாளவேண்டும். இதுவே 'தொழில்களின் சீரமைப்பு' எனப்படும். இச் சீரமைப்பினை ஏற்காமலும், திறமையான நிருவாகத்தினைப் பெறாமலும் இருக்கக்கூடிய தொழில்களை அரசுடைமையாக்கல் நன்மை பயக்கும்.

**7. நிறையளவு வேலைவாய்ப்பு (Full Employment Opportunities):**

பேராசிரியர் கே. டி. ஷா (K. D. Shah) அவர்களின் கூற்றுப்படி "பொதுவுடைமைப் பொருளாதாரத்தின் கீழ்தான் நிறையளவு வேலைவாய்ப்பினைக் காணமுடியும்." அரசு தொடங்கும் எந்த ஒரு தொழில் நிறுவனத்திலும், அந் நாட்டிலுள்ள அனைவருக்கும், அவர்களின் தகுதிக்கும் திறமைக்கும் ஏற்றவாறு வேலைவாய்ப்புக் கிடைக்கும். பெருமளவில் இயங்குகின்ற இந் நிறுவனங்கள் நாட்டின் வேலை இல்லாத் திண்டாட்டத்தினைப் பெருமளவு குறைக்கின்றன. சான்றாக, இந்துஸ்தான் மெஷின் டூல்ஸ், ஹெவி எலக்டிரிகல்ஸ் போன்ற நிறுவனங்கள் ஒவ்வொன்றும் சுமார் ஏழாயிரம் பேர்களுக்கு வேலைவாய்ப்பினை அளிக்கின்றன. இந் நன்மையினைத் தனியார்துறை நிறுவனங்களிடம் எதிர்பார்க்க இயலுமா?

**8. தொழிலாளர் நலனில் நியாய உணர்வு (Justice in Labour Welfare):**

உழைப்பிற்கேற்ற ஊதியம் தொழிலாளர்களுக்குக் கிடைக்க வேண்டும். தனிநபர்களால் நடத்தப்படும் தொழில்நிறுவனங்கள் உழைப்போரின் நலனில் சிறிதளவே அக்கறை காட்டுகின்றன. நியாயமான ஊதியம், வேலைநேரம், மருத்துவ வசதிகள் அனைத்தும் கிடைக்க நாட்டுடைமை ஒன்றே சிறந்த வழியாகும்.

**9. நடைமுறை உற்பத்திச் செலவுகளில் சிக்கனம் (Economy in Operating, Productive Costs)**

அரசுத்துறை தொழில்கள் யாவும் மிகப் பெரும் அளவு முதலீட்டில் நடைபெறுகின்றன. மூலப்பொருள்கள், இயந்திரங்கள் இவற்றை வாங்குவதும், பொருள்களை உற்பத்திசெய்வதும் பெரும் அளவில் நடைபெறுகின்றன. இதன்மூலம் பெரிய அளவில் நடைபெறுகின்ற எத்தொழிலுக்கும் கிடைக்கின்ற நன்மைகள் அரசுத்துறைத் தொழில்களுக்கும் கிடைக்கின்றன.

குறிப்பாக, நிருவாகச்செலவு, உற்பத்திச்செலவு போன்றவற்றில் சிக்கனம் செய்ய முடிகின்றது.

## மறுப்பான கருத்துகள்

பொதுவுடைமைத் தொழில்களின் நன்மையைப் பலரும் உணர்ந்திருந்தபோதிலும் சில மாறுபட்ட கொள்கைகளும் நிலவுகின்றன. அவை வருமாறு;

**1. ஆர்வமும் திறமையும் வேண்டப்படுதல்** (Lack of Earnestness and Efficiency)

பொதுத்துறைத் தொழில்கள் பலவற்றிலும் அவற்றை நன்முறையில் நடத்தத் தேவையான ஆர்வமும், திறமையும் போதிய அளவில் இருப்பதில்லை. ஒரு தொழில் நன்கு நடைபெற வேண்டுமானல், அத் தொழிலை நடத்துவோருக்கு இலாபம் ஈட்டும் குறிக்கோள் இருக்கவேண்டும். பொதுத்துறைத் தொழில்கள் அனைத்தும் இலாபத்தினைக் குறிக்கோளாகக் கொள்ளாமல் தொண்டு மனப்பான்மையைக் கருத்தில்கொண்டு இயங்குவதால் அவற்றை நடத்துவோரிடம் போதிய உற்சாகமும் திறமையும் காணப்படுவதில்லை.

**2. அன்ருட அலுவல்களில் தாமதம்** (Red-tapism)

அன்ருட அலுவல்களில் ஏற்படுகின்ற சிக்கல்களுக்கு உடனுக்குடன் தீர்வு காணவேண்டியது இன்றிமையாதது. ஆனல் விருப்பு, வெறுப்பற்ற நிலையில் பணிபுரிகின்ற அரசு அலுவலர்களே அன்றி அதிகாரிகளோ, உடனுக்குடன் எந்த ஒரு முடிவினையும் எடுக்க முயலுவதில்லை. இதனல் மிகப் பெரும் தாமதம் (Red-tapism) ஏற்படுகின்றது.

**3. நுகர்வதில் கட்டாய நிலை** (Limited Consumers' Choice)

சில பொருள்களை உற்பத்தி செய்வதில் ஏக உரிமை பெற்று இயங்கும் அரசுத் தொழில் நிறுவனங்கள் தயாரித்து அளிக்கின்ற பொருள்களைத்தான் பொதுமக்கள் ஏற்றுக் கொள்ள வேண்டிய கட்டாய நிலை ஏற்படுகின்றது. குறிப்பாக இரஷ்யா போன்ற நாடுகளில் இக் குறைபாடு பெரிதும் உணரப்படுகின்றது. நுகர்வோரின் தனி உரிமை இங்கு இழக்கப்படுகின்றது.

**4. அரசியல் தலையீடு** (Political Interference)

அரசில் இயக்கப்படுகின்ற தொழில்கள் அனைத்திலும் அரசியல்வாதிகளின் தலையீடு தவிர்க்க இயலாததாகிறது. ஒவ்வொரு

தேர்தலுக்குப் பின்னும் அரசை அமைக்கின்ற அரசியல் கட்சிகளின் கொள்கைக்கேற்றவாறு, அரசுத்துறை தொழில்களும் இயங்க வேண்டியுள்ளன. 'எடுப்பார் கைப்பிள்ளை' போன்ற இந்நிலை அவலமானது.

## 5. பொதுமக்களின் விமர்சனம் (Open to Public Criticism)

பொதுமக்களின் பணத்தினைக் கொண்டு இயங்குகின்ற பொதுத்துறைத் தொழில்களின் வெற்றி, தோல்வியினை விமர்சிக்கின்ற உரிமை அனைவருக்கும் உண்டு. பல நேரங்களில் இவை கடுமையாகவும் உண்மைக்குப் புறம்பாகவும் அமையக்கூடும். இதனால் இத் தொழில்களை நிருவகிக்கின்ற அதிகாரிகளிடம் உற்சாகமின்மை, புதிய முயற்சிகளில் தயக்கம் போன்றவை காணப் படுகின்றன.

## 6. கடுமையான பொதுக் கட்டுப்பாடு (Strict Public Accountability)

பொதுத்துறைத் தொழில்களின் நிர்வாகம் பாராளுமன்றத்தின் கடுமையான கட்டுப்பாட்டில் நடைபெறுகின்றது, இவற்றின் நிதிநிலைமை, தணிக்கை போன்றவற்றில் சிறிதளவும் சலுகை காட்டப்படுவதில்லை. சுயேட்சையான நிருவாகம் நடைபெற இங்கு வாய்ப்பில்லை.

நாட்டுடைமையாக்கப்பட்ட அல்லது பொதுத்துறைத் தொழில்களைச் சார்ந்தும், மறுத்தும் கூறப்பட்ட மேற்கண்ட பல் வேறு கருத்துகளை ஆராயும் பொழுது, சமுதாய நலனைக் கருத்தில் கொள்ள வேண்டும். நட்டத்தில் நடப்பதால் வேண்டாமென ஒதுக்குவதும் குறைந்த விலையில் பொருள்களை அளிப்பதால் வேண்டுமென்று இத் தொழில்களை ஏற்றுக் கொள்ளுதலும் சிறந்த முடிவாகாது. அன்றாட அலுவல்களில் தாமதம், அதிகாரிகளிடம் ஆர்வமின்மை போன்றவை அரசுத்துறைத் தொழில்களை மறுப் பதற்கானச் சிறந்த காரணங்களாகா; ஏனெனில் திறமையான பயிற்சியின்மூலம் இக் குறைகளை எளிதில் தவிர்க்கமுடியும். இலாபம் ஈட்டும் மனப்பான்மை இருந்தால்தான் இத் தொழில்கள் சிறந்து விளங்க முடியும் என்பது ஏற்றுக் கொள்ளக்கூடிய ஓர் கருத்து. எல்லாத் தொழில்களையும் ஏற்று நடத்துவதைத் தவிர்த்து, தகுதிவாய்ந்த, அன்றாடத் தேவையான தொழில்களை மட்டுமே ஏற்றுநடத்த முன்வர வேண்டும். அவ்வாறு அரசு நடத்தத் தகுந்த தொழில்கள் பின்வருவனவாம்:—

பேராசிரியர் சார்ஜன்ட் ப்ளோரன்ஸ் (Prof. Sargeant Florence) அவர்களின் கருத்தின்படி கீழ்க்காணும் தொழில்கள் அரசு ஏற்று நடத்தத் தகுந்தவை ஆகும்:—

1. சிக்கல் இல்லாத நிருவாகத்தினை உடையவை.
2. மிகப் பெருமளவு முதலீட்டில் இயங்கக் கூடியவை.
3. தொழில்வல்லுநர்களின் ஆலோசனையோடு இயங்க வேண்டியவை.
4. மிகப் பெருமளவில் ஆயிரக்கணக்கானவர்களுக்கு வேலைவாய்ப்பு அளிக்கக் கூடியவை ;
5. தனியார்த்துறையில் நிருவாகத் திறமையின்றி இயங்கக் கூடிய தொழில்கள் போன்றவை.

இவை தவிர அன்றாட வாழ்க்கைக்கு இன்றியமையாத பொருள்களையும் உற்பத்தி செய்ய வேண்டிய கடமை அரசுக்கு உண்டு. அதனைப் 'பொதுப் பயன் தொழில்கள்' என்ற அமைப்பில் அரசு செய்து வருகின்றது.

## கருத்துக்கோப்பு

பல்வகைச் சமுதாய அமைப்புகளும் பொதுத்துறைத் தொழில்களும்—தொழில்களை நாட்டுடைமை யாக்குதல்—சார்பான, மறுப்பான கருத்துகள் — அரசு நடத்தத்தகுந்த தொழில்கள்.

# 3. பொதுப்பயன் தொழில்கள்

"பொருளாதார விடுதலை பெற்ற நாடே அரசியல் விடுதலை பெற முடியும். இன்றியமையாப் பண்டங்களில் சிலவற்றையேனும் அனைவருக்கும் கொடுக்கமுடிந்தால்தான் நாம் உண்மையான விடுதலையை அடைந்தவர்கள் ஆவோம்..."

—பண்டித ஜவஹர்லால் நேரு.

**பரிணாமமும் வளர்ச்சியும்**

பொருளாதார, சமுதாய மற்றும் தொழில் நுணுக்கங்களில் அவ்வப்போது ஏற்படுகின்ற மாற்றத்தினைச் சட்டத்தின் கண்ணோட்டத்தில் ஆராய்ந்து பார்க்கும்போது ஏற்பட்ட விளைவே பொதுப்பயன் தொழில்களாகும். இங்கிலாந்தில் சட்டத்தின் தீர்ப்பினை அமுலாக்கும் பணியில் கண்ட ஒரு நல்ல முடிவே இது. இங்கிலாந்து நாட்டினைப் பல துறைகளிலும் அமெரிக்கா பின்பற்றியபோது அந் நாட்டின் உள்நாட்டுப் போருக்குப் பின் மெள்ளத் தலையெடுக்கத் தொடங்கிய தொழில்களே பொதுப் பயன் தொழில்கள் எனப் பெயர் பெற்றன.

**பொதுப்பயன் தொழில்களின் வரலாறு**

ஐரோப்பிய நாடுகளின் அமைப்பு உருவாவதற்கு முன்னால், இடைக்காலத்தில் (Middle Ages), பண்ணை முறையில் விவசாயம் நடந்து வந்தது. விவசாயிகள், மற்றும் இதர பொருள்களின் உற்பத்தியாளர்கள் தங்களுக்குள் ஒரு சங்கத்தினை (Guild) அமைத்துக் கொண்டு பொருள்களை உற்பத்தி செய்து வந்தனர். இடைக்காலத்திற்கு முன் வாழ்ந்த மதகுருக்கள் ஏற்படுத்தித் தந்த 'நியாய விலைக் கொள்கையை' இவர்களும், இவர்களுக்குப் பின்வந்தோரும் பின்பற்றினர். இதனால் உற்பத்தி செய்யப்பட்ட எந்தப் பொருளும் நியாய விலைக்கே விற்கப்பட்டது. இந் நியாய விலையென்பது உற்பத்திச் செலவோடு, சிறிதளவு இலாபத்தினையும் அடக்கியதாக இருந்தது. இதனால் கிடைக்கக் கூடிய

இலாபத்தினைக்கொண்டு அன்றைய வாழ்க்கை முறைப்படி எவரா லும் எளிதாக வாழ முடிந்தது என ஜோசப் மேயர் (Joseph Mayer) என்னும் அறிஞர் குறிப்பிடுகிறார்.* இந்த நியாய விலைக் கொள்கைகளை அனைவரும் கடைப்பிடிக்கின்றனரா ? என்று கண் காணிக்கும் பொறுப்பு அந்தந்தச் சிற்றூரின் அதிகாரங்களையும், உற்பத்தி செய்வோரின் சங்கத்தையும், பண்ணையையும் சார்ந்த தாக இருந்தது. இதுவே பின்னாளில் பொதுப்பயன் தொழில்கள் உலகெங்கும் ஏற்படவும் அதனைச் சட்டத்தின்மூலம் பாதுகாக்க வும் முன்னோடியாக அமைந்தது.

இதற்குச் சற்றே பின்னாளில் ஐரோப்பிய நாடுகள் ஒவ்வொன் றாகத் தோன்ற ஆரம்பித்தபோது 'வர்த்தகச் சமூகம்' (Mercanta-lists) என்னும் ஒரு கூட்டம் செல்வாக்குப் பெற்று விளங்கியது. பதினாறும் நூற்றாண்டின் தொடக்கத்தில் அமைக்கப்பட்ட புதிய அரசுகள் யாவும் தங்களின் ஆட்சிக்குட்பட்ட நாட்டின் பொருளா தார நிலையில் பெரிதும் ஆர்வத்தோடு தலையிட்டன. பொருள் களின் உற்பத்தி அவற்றின் அளவை முறைகள், தரம், விலை நிர்ண யிப்பு இவற்றில் இந்தப் புதிய அரசுகள் விதித்த கட்டுப்பாடுகளை அனைவரும் ஏற்றுக் கொண்டனர். மேலும் அவசியம் ஏற்பட்டால் அரசிடமே சில ஏகவுரிமை உரிமைகளைப் பெற்று வாணிகம் செய்யவும் தொழில் நிறுவனங்கள் தயாராக இருந்தன. அவற்றில் தோட்டப்பயிர் செய்வோருக்கும், மற்றும் சில குறிப்பிட்ட வணிகருக்குமே இத்த ஏகவுரிமை அளிக்கப்பட்டது. இச் சிறப்புச் சலுகையினைப் பெற்று இத் தொழில்கள் அரசு நடத்துகின்ற அள விற்கு, திறமையுடன் இயங்கி வந்தன. இதுவே, பொதுநலத் தொழில்கள் அல்லது பொதுப்பயன் தொழில்களின் ஆரம்பநிலை என்று குறிப்பிடுகிறார் மார்ட்டின் ஜி. கிளேசர் (Martin G. Glaeser) என்னும் அறிஞர்.**

இவ்வாறு மக்களின் நலனுக்காக, அவர்களின் தேவையை நிறைவேற்றுவதற்காக அரசினாலோ, அதனுடைய அனு மதியைப் பெற்று ஏக உரிமையோடு இயங்குகின்ற நிறுவனங் களாலோ நடத்தப்பெறுகின்ற தொழிலே பொதுப்பயன் தொழில் எனப்பட்டது. இதற்கான சில விதிமுறைகள் அவ்வப்போது நீதி மன்றங்களால் விதிக்கப்பட்டன. மேலும் இவை காலத்திற் கேற்றவாறு உள்ளனவா என்று கண்டு அவற்றில் மாற்றங்களும் செய்யப்பட்டன. மேற்கு ஐரோப்பா முழுவதும் பரவிய இத்

* Joseph Mayer—Social Science Principles in the light of Scientific Method.

** Martin G. Glaeser—"Outlines of Public Utility Economics."

தகைய புதிய தொழில் முறை பின்னர் அமெரிக்காவிலும் அதன் பின்னர் உலகெங்கும் பரவின.

**இலக்கணமும் வரையறையும்**

'பொதுப்பயன் தொழில்' என்ற சொல் உணர்த்தும் பொருள் யாது? என்ற வினவிற்கு இன்று வரை தெளிவான விடை ஏதும் கிடைக்கவில்லை. பிரித்துணர முடியாத சொல் லாகவே அன்று முதல் இன்று வரை அமைந்துவிட்டதால் குறிப் பிட்டுச் சொல்லுமளவிற்கு இதற்கான இலக்கணம் ஏதுமில்லை என்றே கூறலாம். இருப்பினும் அவ்வப்போது நிலவிய அறிஞர் களின் கருத்துகளை ஒன்றுதிரட்டிப் பார்க்கும்போது இச் சொல்லின் பொருள் எளிதாக விளங்குகின்றது. இரண்டே வரி களில் சுருங்கக்கூறிப் பொதுப்பயன் தொழிலின் இலக்கணத்தை விளக்க இயலாவிடினும் இத்தகைய தொழிலைப்பற்றிய அனைத்து விபரங்களையும் விரிவாகக் கூறினல் அதுவே இச்சொல்லிற்கான இலக்கணமாக அமையும்.

'பொதுப்பயன் தொழில்' என்ற சொல் பத்தொன்பதாம் நூற்றாண்டுக் காலத்தைச் சார்ந்தது என்பது அறிஞர் லாயிட் டி. முசால்ப் (Lloyd D. Musalf) என்பவரின் கருத்து உண்மை யானது என்பதற்குச் சான்ருக, எலி. வின்ஸ்டன் கிளமென்ஸ் (Ele. Winston Clements) என்பவரின் ஆராய்ச்சியும் அமைகின் றது. இதன்படி விஸ்கோன்ஆன் பல்கலைக்கழகத்தைச் சார்ந்த பேராசிரியர் காமன்ஸ் (Prof. Commons) என்பார்தாம் முதன் முதலாக 1907ஆம் ஆண்டு தம்முடைய மாணவர்களிடையே இச் சொல்லை அறிமுகப்படுத்தியதாகத் தெரிகின்றது. இவரது கருத்துப்படி, நாட்டின் அரசியலமைப்பில் ஏற்பட்ட மாற்றங்களே பொதுப்பயன் தொழில்கள் ஏற்படக் காரணமாயின என்பதா கிறது. அதாவது, குடிமக்களிடமிருந்து எல்லாவித ஆதாரங்களை யும் பெற்று அவர்களைத் தன் அதிகாரத்தினைக் கொண்டு அடக்கி ஆண்ட மன்னர்களின் ஆட்சி ஒரு காலத்தில் அமைந்திருந்தது. இதற்கு முற்றிலும் மாருக, குடிமக்களுக்காகவே—அவர்களா லேயே நடத்தப் பெறுகின்ற குடியாட்சி தற்போது அமைந் துள்ளது. இதன்படி மக்களுக்கு வேண்டிய வசதிகளனைத்தையும் அரசிடமே பெற்றுக் கொள்ள அனைவருக்கும் உரிமை உண்டு.

இந்த இரண்டு ஆட்சிகளையும் கலந்து அமைக்கப் பெற்ற ஓர் அமைப்பின் தன்மை என்னவாக இருக்க முடியுமென்று சற்றுச் சிந்தித்தல் வேண்டும். இத்தகைய அமைப்பில் தங்களுக்கு வேண்டிய இன்றியமையாத வசதிகளனைத்தையும் அரசிடமிருந்து

பெற குடிமக்களுக்கு உரிமை உண்டென்றும் அவர்களுக்கு இதனைப் பெற்றுத் தரவேண்டிய கடமை அரசிற்கு உண்டென் பதும் புலனாகின்றது. அதேநேரத்தில் இவ்வசதிகளைப் பெற்றுத் துய்ப்பதற்கு விலையாக, அவற்றின் மதிப்பினைக் குடிமக்கள் அரசுக்குச் செலுத்தத் தயாராக இருத்தல் வேண்டும். இதுவே பொதுப்பயன் தொழில்களின் அடிப்படைக் கருத்தாகும் என்று பேராசிரியர் காமன்ஸ் கருதுகிறார்.

இவரது கருத்தினையொட்டியே ஆர். சி. அகர்வால் (R. C. Agarwal) என்பாரும் 'பொதுமக்களைச் சுரண்ட வாய்ப் பிருக்கும் சிலவகை இன்றியமையாத தொழில்களையும், பணிகளை யும் மக்களின் நலங்கருதி, அரசே ஏற்று நடத்துமாயின் அத் தொழில்களே 'பொதுப்பயன் தொழில்கள்' எனப்படும்" என்று கூறுகிறார்.* அவ்வாறெனில் பொதுப்பயன் தொழில் என்பது அரசுத்துறையில் மட்டுமின்றித் தனியார் துறையிலும் இயங்க முடியுமென்பது புலனாகிறது. எனினும் அரசிற்கும் பொதுப்பயன் தொழில்களுக்குமிடையே உள்ள உறவு நெருக்கமானது என்ப தற்குப் பின்வரும் கருத்துகளைக் கூறலாம் :—

(1) அரசு முழு அதிகாரத்தினையும் பெற்றது.

(2) இந்த அதிகாரத்தினை உபயோகித்துத் தேவையான பொதுப்பயன் தொழில்களை ஆரம்பிக்கவும், முறைப் படுத்தவும் முடியும்.

தனியார் துறையில் ஆரம்பித்தபோதும், அரசின் கட்டுப் பாட்டிற்குக் கீழ்தான் இத் தொழில்கள் இயங்கவேண்டும்.

அமெரிக்க நாட்டின் தலைமை நீதிமன்றத்தின் 1934ஆம் ஆண்டின் தீர்ப்புப்படி "பொது மக்களின் நலனுக்காகவும் அவர் களின் பயனுக்காகவும், கட்டுப்பாட்டுடன் இயங்குகின்ற அனைத்துத் தொழில்களும் பொதுப்பயன் தொழில்களே" என்ற கருத்தும் ஏற்றுக் கொள்ளக் கூடியதாக உள்ளது.

மேற்கண்ட சில கருத்துகளை ஏற்போமாயின் பொதுப்பயன் தொழில்களின் அமைப்பு ஓரளவு விளங்கக்கூடும். அதாவது, "மற்றத் தொழில் நிறுவனங்களினின்றும் தனித்து விளங்கக்கூடிய தன்மை, சிலவகை இன்றியமையாத நிபந்தனைகள், அரசின் கட்டுப்பாடு சிலவகை சிறப்புரிமைகள் இவற்றினைப்பெற்று இன்றியமையாப் பொருள்களைப் பொதுமக்களுக்கு அளிக்கும்

* R. C. Agarwal—State Enterpriser in India.

பணியில் ஈடுபட்டுள்ள தொழில்களைப் பொதுப்பயன் தொழில்கள் எனலாம்'' என்ற தாம்ஸன் மற்றும் ஸ்மித் (Thampson & Smith) என்போரின் கருத்து, இதற்கான சிறந்த இலக்கணமாக விளங்குகின்றது.*

பொதுப்பயன் தொழில்களனைத்தும் பொருளாதாரச் சூழ்நிலையில் ஏற்பட்ட மாறுதல்களினூடே வளர்ந்து வந்துள்ளன. மக்களின் பொருளாதாரத் தேவைகளுக்கேற்றவாறே இத் தொழில்களின் கடமைகளும் அமைந்துள்ளன. ஆகவே, சமுதாயத்தின் கண்ணோட்டத்தின்படி ஆராய்ந்து பார்த்தால் பிற தொழில்களினின்றும் வேறுபட்டு நின்று எளிதில் அறிந்து கொள்ளக்கூடிய தொழில்களே பொதுப்பயன் தொழில்கள் என்றும் அறியலாம்.

**பொதுநல ஈடுபாடும், பொதுப்பயன் தொழில்களும் (Public Interest and Public Utilities)**

சமுதாயம் என்பது தனிநபர்களின் மொத்த அமைப்பாகும். சமுதாயத்தின் தேவைகள் தனிநபர்களின் தேவைகளாகும். தனிநபர்களுக்கான தேவைகள் பல உண்டென்றும் அவற்றுள் பொருளாதாரத் தேவைகள் இன்றியமையாதவை என்பதும் குறிப்பிடத்தக்கது. ஒரு தனிநபர் தம் அன்றாட வாழ்க்கையில் பல்வேறு பொருள்களை உபயோகிக்கின்றார். நல்ல அறுசுவை உணவு, கறிகாய்கள், கனிவகைகள், பால், கோதுமை போன்றவைகளும், சைக்கிள், மோட்டார் வாகனம், விமானம், இரயில், டிராம் போன்ற போக்குவரத்துச் சாதனங்களும், தபால், தந்தி, தொலைபேசித் தொடர்புகளும் அனைவருக்கும் தேவைப்படுகின்றன. இவற்றில் அரிசி, கோதுமை, கனிவகைகள் எளிதில் வாங்க முடிகின்றன. அரிசி இன்றேல் கோதுமையையும், கோதுமை இன்றேல் கனி வகைகளையும் ஒரு மனிதன் உட்கொள்ளமுடியும். திரைப்படம், வானொலி போன்ற மனமகிழ் சாதனங்களின்றி அவனால் தன் வாழ்க்கையை நடத்தமுடியும். எல்லோருடைய வீட்டிலும் தொலைபேசிக் கருவிகள் இருக்க வேண்டுமென்பதில்லை. ஆனால், அன்றாட வாழ்க்கையோடு இணைந்த சில இன்றியமையாப் பொருள்கள் தேவைப்படுகின்றன. சான்றாக, குடிநீர், எரிவாயு, மின்திறன், போக்குவரத்துச் சாதனங்கள் போன்றவையாகும். இவற்றை உற்பத்திசெய்து பொதுமக்களுக்கு வழங்குவதில் தனியார்துறை நிறுவனங்களும், பொதுத்துறை நிறுவனங்களும் ஈடுபடலாம். ஆயினும், எத்

* Thompson and Smith—Public Unility Economics, Page-56.

துறையைச் சார்ந்திருப்பினும் இந் நிறுவனங்கள் பொதுமக்களின் நன்மையில் ஈடுபாடு கொண்டவையாக இருக்கவேண்டும். அவைகளே பொதுப்பயன் தொழில்கள் எனப் பெயர் பெறும் தகுதியுடையனவாம். லாயிட் டி. முஸால்ப் (Lloyd D. Musolf) என்பாரை மீண்டும் குறிப்பிடுவோமாயின் "பொதுநலத்தில் ஈடுபாடுகொண்டு இயங்கும் தொழில் நிறுவனங்களையே பொதுப் பயன் தொழில்கள்'' எனக் குறிப்பிடுதல் வேண்டும். அவ்வா றெனில், பொதுநல ஈடுபாடு என்பதென்ன?

எத்தொழிலைச் செய்தபோதிலும், எப்பொருளை உற்பத்தி செய்து வழங்கியபோதும், சமுதாயத்தின் நன்மையைக் கருத்தில் கொண்டு ஒரு நிறுவனம் இயங்குமாயின் அந் நிறுவனத்திற்குப் 'பொதுநல ஈடுபாடு' உண்டென்று முடிவு செய்யலாம். இப் பொருள்களையே சமுதாயம் முற்றிலும் நம்பியிருக்கவேண்டிய நிலை ஏற்பட்டால், அதுவே 'பொதுநல ஈடுபாடு' என்றும் கூறலாம்.

இதனைச் சான்றுகாட்டி எளிதாக விளக்கலாம். ஒரு நகரத் தில் எல்லோருடைய வீடுகளிலுமோ பெரும்பான்மையோர் வீடுகளிலோ கார் உள்ளதென்று வைத்துக்கொள்வோம். போக்கு வரத்து வசதிக்காக அந் நகர மக்கள் அனைவரும் ஒரேயொரு காரினை நம்பியிருக்க வேண்டுவதில்லை. தன்னுடைய காரில்லை யெனில், பக்கத்துவீட்டு நண்பருடைய கார், இல்லையேல் உறவினருக்குச் சொந்தமானது இப்படி ஏதாவது ஒரு காரினை உபயோகித்துப் போகவேண்டிய இடத்திற்குப் போய்ச்சேர முடியும். ஆனால், அந் நகரத்தில் ஒரே ஒரு நபரிடம் மட்டுமே கார் உள்ளதென்றும், அந் நகர மக்கள் அனைவரும் அக் காரினைத் தான் நம்பியுள்ளனர் என்றும் வைத்துக்கொள்வோம். அப்போது அக் காரின் சொந்தக்காரர் அதனை வாடகைக்குவிடமுடியா தென்று கூறமுடியாது. மேலும், சூழ்நிலையைச் சாதகமாக்கி மிக அதிகமான கட்டணமும் வசூலிக்கக்கூடாது. ஏனெனில், அக் காரின்மீது 'பொதுநல ஈடுபாடு' உள்ளது என்று கருத வேண்டும். பொதுமக்கள் அனைவருக்கும் அக் காரின் நல்ல நிலைமை ஓடுகின்ற தன்மை, இடவசதி போன்றவற்றில் ஈடுபாடு இருக்கும். இதனைத்தான் 'பொதுநல ஈடுபாடு', பொதுநல ஈடுபாட்டுத் தன்மையென்றும் குறிப்பிடுகின்றோம்.

இந்தப் பொதுநல ஈடுபாட்டுத் தன்மை என்னும் கொள்கை யினை உலகிற்கு அறிமுகப்படுத்தியவர், சுமார் இரண்டு நூற்றாண்டு களுக்கு முன்பு இங்கிலாந்து நாட்டின் தலைமை நீதிபதியாக

இருந்த ஹாலே பிரபு (Lord Haley) என்பாரே ஆவார். மிகவும் பிரபலமடைந்த "மன் (எதிர்) இல்லினய்ஸ் (Munn vs Illinois) என்னும் வழக்கில் இவர் அளித்த தீர்ப்பின்படி பொதுநல ஈடுபாடு என்னும் சொல்லிற்கு எளிதான விளக்கம் கிடைக்கின்றது. இதன்படி,

"தனிநபர் ஒருவரின் உடைமை எப்போது சமுதாயம் முழுவதையும் பாதிக்கின்றதோ அப்போதே அப்பொருள் பொதுநல ஈடுபாட்டுத் தன்மையைக் கொண்டதாகிறது. மேலும் அதன் உரிமையாளர் விரும்பியோ, விரும்பாமலோ சமுதாயத்தின் நன்மைக்காக, அதனுடைய கட்டுப்பாட்டின்கீழ் அப்பொருள் இருப்பதற்கான உரிமையை மறைமுகமாகச் சமுதாயத்திற்கு அளிக்கின்றார்." இவ்வாறு அவர் வழங்குகின்ற உரிமை, அவருடைய பொருள் பொதுமக்களின் உபயோகத்திற்கு இருக்கின்ற வரையில்தான் செல்லுபடியாகும். தம்முடைய பொருள் அன்றாட உபயோகத்திற்கு ஏற்றதாக இல்லாமல் போனாலோ, வேறு ஏதாவது காரணங்களால் அப் பொருளை உபயோகிக்காமல் இருந்தாலோ, அதன் உரிமையாளர் சமுதாயத்திற்குத் தாம் வழங்கிய உரிமையைத் திரும்பப் பெற்றுக் கொண்டவராகிறார்.

மேற்கூறிய 'பொதுநல ஈடுபாடு' நம்மிடையே உள்ளதாவெனச் சான்றுகாட்டி விளக்க முயற்சி செய்யலாம். நகரின் சாலையில் தனிநபர் ஒருவருக்குச் சொந்தமான பேருந்துகள் ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்குச் செல்கின்றன. குறிப்பிட்ட காலம், குறிப்பிட்ட கட்டணம் போன்றவற்றில் ஏதும் மாறுதல்களின்றி இப் பேருந்துகள் தினந்தோறும் சென்று வருகின்றன. தம்முடைய நிறுமத்தின் உந்துதானே என நினைத்து ஒருநாள் சாலையில் ஓட்டியும் மற்றொரு நாள் அதனை இயக்காது அதனை நிறுத்தி வைத்தும் தன்னிச்சைப்படி பேருந்து நிறுவனத்தின் உரிமையாளர் இருக்க இயலாது. ஏனெனில், அப் பேருந்தினை எதிர்நோக்கி எண்ணற்றோர் காத்து நிற்பர். அதாவது இப் பேருந்தின்மீது பொதுமக்களுக்கு ஈடுபாடு ஏற்படுகின்றது. பொதுமக்களின் நலங்கருதி பேருந்து நிறுவனத்தின் உரிமையாளர், இதனைச் சீரிய முறையில் வைத்து ஓட்டுகின்றார். இது பழுதடைந்துவிட்டால், மாற்று வண்டியினை ஏற்பாடு செய்து ஓட்டுகின்றார். இப் பேருந்து குறித்த காலத்தில் வந்து, குறித்த காலத்தில் புறப்படாவிடில் எண்ணற்றோர் வினா எழுப்பும் உரிமை படைத்தவர்களாவர். இவ்வினாவிற்குப் பதிலளிக்க உரிமையாளர் கடமைப்பட்டுள்ளார். இதனையே பொதுநல ஈடுபாட்டுநிலை (Public Interest Status) என்கிறோம்.

**பொதுநல ஈடுபாட்டுநிலையைக் கண்டறியும் சோதனைகள்**

"பொதுநல ஈடுபாட்டுநிலை" என்ற சொல்லும் "பொதுப் பயன்" என்ற சொல்லும் எளிதாகப் பிரித்துணர முடியாதவாறு கையாளப்பட்டுள்ளன. இவ்விரண்டு சொற்களுள், முதலாவது ஆழ்ந்த கருத்தினைத் தன்னடக்கியதாக உள்ளது. ஆனால், இரண்டாவது சொல்லே மக்களிடையே கையாளப்பட்டு வந்துள்ளது. ஆகவே, பொதுநல ஈடுபாட்டுத் தன்மையைக் கொண்ட எல்லாத் தொழில்களும் 'பொதுப்பயன் தொழில்கள்' ஆகமாட்டா. இக் கருத்தே "நெபியா (எதிர்) நியூயார்க்" (Nebbia vs Newyork) என்ற அமெரிக்க நாட்டு வழக்கில் வலியுறுத்தப்பட்டது. இவ்வழக்கின் தீர்ப்பின்படி பொதுநல ஈடுபாட்டுத் தன்மையைக் கொண்டதாக இருந்தபோதிலும், பண்ணைத்தொழில்களைப் பொதுப்பயன் தொழில்கள் என்று கருத இயலாது.

பொதுநல ஈடுபாட்டுத்தன்மை ஒரு சமுதாயத்தில் நிலவுகின்ற பொருளாதாரச் சூழ்நிலையினைப் பொறுத்தே ஏற்படுகின்றது. இப் பொருளாதாரச் சூழ்நிலை சரிவர உருவாகியுள்ளதா ? என்பதைக் காணவும் அதன்மூலம் பொதுநல ஈடுபாட்டுத் தன்மையினை அறிந்து கொள்ளவும் பின்வரும் சோதனைகள் பெரிதும் (காரணங்கள்) பெரிதும் உதவுகின்றன.

**பொது உபயோகத்திற்காக ஒரு பொருளை விடுதல் :—**

**1. சோதனைகள்**

ஒரு பொருளை பொதுமக்களின் உபயோகத்திற்காக விடுதல் என்பது பொதுநல ஈடுபாட்டுத் தன்மையோடு மிகவும் இணைக்கும் செயலாகும். ஆயினும் இக் கருத்து 'மன்' வழக்கிற்குப் பின்னரே பெரிதும் ஏற்றுக்கொள்ளப்பட்டது. பொதுநல ஈடுபாட்டுத் தன்மை என்பது புலனாகும் (tangible) பொருள்களுக்கு மட்டுமே உரியதா அன்றி எல்லாத் தொழில்களுக்குமே உரியதா என்ற ஐயப்பாட்டினை ஜஸ்டிஸ் லாமார் (Justice Lamar) என்பவர் "ஜெர்மன் அலையன்ஸ்" என்ற வழக்கில் தாம் அளித்த தீர்ப்பின்வாயிலாக நீக்குகின்றார். இவரது தீர்ப்பின்படி பார்த்து உணரக்கூடிய பொருள்களினால் மக்களுக்கு உதவி செய்கின்ற எல்லா வகைத் தொழில்களுமே பொதுப்பயன் ஈடுபாட்டுத் தன்மையை கொண்டவையாகக் கருதப்படும். ஏனெனில் இத் தொழில்கள் விதிக்கும் கட்டணங்களைத்தாம் எளிதாக ஒழுங்குபடுத்த முடியும்.

முன்னாளில் இங்கிலாந்து நாட்டில், பொதுமக்களின் உபயோகத்தில் இருந்த வழிச்செல்வோர் விடுதிகள், 'நாவாய்கள்' படகுகள் மற்றும் இவைபோன்றவைகளும் பொதுநல ஈடுபாட்டுத் தன்மையினைக் கொண்டவையாகக் கருதப்பட்டன. சட்டப்படி, இத் தொழில்கள் அனைத்திற்கும் பொதுவாக மூன்று கடமைகள் உள்ளன. அவை

1. வேண்டுவோர் அனைவருக்கும் தொண்டு செய்தல்
2. நியாயமான கட்டணத்தை விதித்தல்.
3. மேற்கண்ட கட்டணத்தில் வேறுபாடு இல்லாது இருத்தல்.

இம் மூன்று கருத்துகளுமே இன்றைய பொதுப்பயன் தொழில்களின் தன்மையை உருவாக்குபவை.

ஒரு தொழில் நிறுவனம் விதிக்கின்ற கட்டணத்தை அடிப்படையாகக் கொண்டு, அது பொதுப்பயன் தொழிலைச் சார்ந்ததா, இல்லையா என்பதைக் கண்டுகொள்ளலாம். பொதுவாக ஒரு பேருந்து (பஸ்) தனியாரைச் சார்ந்ததா அல்லது ஒப்பந்த ஊர்தியா அல்லது பொதுப்பயன் ஊர்தியா என்பதனை நீதிமன்றங்கள் தீர்மானிக்கின்றன. தன்னுடைய சொந்த உபயோகத்திற்காக ஒரு நிலக்கரிக் கம்பெனி நடத்தி வந்த புகைவண்டிப் போக்குவரத்துச் பொதுப்பயன் தொழிலாகாது. இவ்வாறே காரினைச் செப்பனிடுகின்ற ஒரு நிறுவனம் (garage) பொதுப்பயன் தொழில் நிறுவனம் ஆகாது. ஏனெனில், இங்கு எப்பொருளும் விற்பனை செய்யப்படுவதில்லை. மேலும், இறைச்சியைப் பதப்படுத்தி வழங்கும் நிறுவனமோ மனமகிழ் விற்கான தனியார் ஒலிபரப்பு நிறுவனமோ பொதுநல ஈடுபாட்டினைக் கொண்டவையாகக் கருதப்படமாட்டா. இச் சான்றுகளை ஆராய்ந்து பார்க்கையில் எவ்விதத் தடையுமின்றி, நியாயமான கட்டணத்தில் அனைவருக்கும் தேவையான பொருள் களையும், பணிகளையும் வழங்கும் நிறுவனங்கள் மட்டுமே பொதுப் பயன் தொழில்களில் ஈடுபட்டுள்ளவையாகக் கருதப்படும்.

**காலச் சோதனை (Test Period)**

காலச்சோதனை என்பது ஒரு தொழிலின் முந்தைய நிலையினைச் சீர்தூக்கி, அதன்மூலம் அத் தொழில் பொதுப்பயன் தொழிலைச் சார்ந்ததா என்பதைக் கண்டறிவதாகும். ஒரு தொழில் முன்னரே அரசால் விதிக்கப்படுகின்ற கட்டு பாடுகளுக்குட்பட்டு இயங்கி வந்திருக்குமேயாயின் அதனை

பொதுப்பயன் தொழிலாக ஏற்றுக் கொள்ளலாம் என்பது மற்றொரு கருத்து. இருப்பினும் பயணியர் விடுதிகள், வாடகை உந்து நிறுவனங்கள், போன்றவை பாராளுமன்றத்தின் கட்டுப் பாட்டில் இயங்கிவந்த போதிலும், இவற்றைப் பொதுப்பயன் தொழில்களாக ஏற்றுக்கொள்வதில்லை.

பொது மக்களின் வாழ்க்கையோடு இணைந்துள்ள வங்கிகள், உடை தயாரிக்கும் நிறுவனங்கள், மாவு அரைக்கும் இயந்திர நிலையங்கள் இவைகள் பொதுப்பயன் தொழில்களாக எப் போதும் ஏற்றுக் கொள்ளப்படவில்லை. இவற்றை நோக்கும் போது காலப்போக்கில் ஒரு தொழிலின்மீது விதிக்கப்படுகின்ற அல்லது நீக்கப்படுகின்ற கட்டுப்பாட்டினைக் கொண்டு அதனை பொதுநலப்பயன் தொழிலாக முடிவு செய்தல் வேண்டும் என்பது புலனாகிறது.

### 3. சிறப்புரிமைச் சோதனை

பொதுப்பயன் தொழிலில் ஈடுபட்டுள்ள நிறுவனங்கள் அனைத்திற்கும் அரசால் சில சிறப்புரிமைகள் வழங்கப்படும். ஆனால், இவ்வுரிமைகள் எல்லா நிறுவனங்களுக்கும் வழங் கப்படுமேயாயின் இவற்றின் சிறப்புத்தன்மை குறைவது மட்டு மின்றி இவ்வுரிமைகள் பொதுநலனுக்கு ஊறு விளைவிக்கவும் கூடும். ஆகவே, பொதுப்பயன் தொழில் நிறுவனங்களுக்கு இவ்வுரிமைகளை வழங்குமுன்னர், அரசு சிறிது கவனத்தோடு இருத்தல் நல்லது.

பொதுப்பயன் தொழில்கள் இச்சிறப்புரிமையைப் பெறு வதன்மூலம் சமுதாயத்தில் ஒரு தனியிடத்தையும், மதிப்பையும் பெறுகின்றன. ஒரே ஒரு நிறுவனத்திற்கு மட்டுமே இச் சிறப் புரிமைகள் அளிக்கப்படுமாயின் அந் நிறுவனம் ஏகவுரிமை அல்லது முற்றுரிமை (Monopoly) பெற்றதாகக் கருதப்படும். மேலும், இச் சிறப்புரிமைகள் பெறுவதால் ஒரு தொழில் பொதுப் பயன் தொழிலாகக் கருதப்படமாட்டாது. ஆனால், பொதுப் பயன் தொழிலில் ஈடுபட்டுள்ள நிறுவனங்களுக்கு மட்டுமே இவ்வுரிமைகள் அளிக்கப்படும் என்ற கருத்து இங்குக் குறிப்பிடத் தக்கது.

### 4. இன்றியமையாத் தேவைச் சோதனை (Test of Importance)

ஒரு சமுதாயம் முழுவதுமே குறிப்பிட்ட ஒரு பொருளை நம்பியிருக்கும் நிலை சிலவேளைகளில் ஏற்படலாம். பொதுமக்கள்

அனைவரும், அக் குறிப்பிட்ட பொருளின்றி அன்றாட வாழ்க்கையை நடத்த இயலாதென உணரத் தலைப்பட்டால், அச் சமயம் அப் பொருளின் தேவை மிகவும் அதிகரித்து விடுகின்றது. இந் நிலை உருவாவதே, பொதுநல ஈடுபாட்டின் தோற்றத்திற்கு முதற்படி ஆகும்.

ஒரு பொருள் கிடைப்பது அரிதாகிவிட்டாலோ, அதனுடைய அளிப்பு (supply) குறைந்துவிட்டாலோ, அப் பொருளின் தேவை அதிகரிக்க வாய்ப்பு உண்டு. காலத்தினாலும், ஒரு பொருளின் இன்றியமையாத் தேவை அதிகரிக்கும். சான்றாக, போர்க்காலங்களில் தலைநகரங்களிலுள்ள வீடுகளுக்கும், கட்டடங்களுக்கும் மிகவும் இன்றியமையாத் தேவை ஏற்படுதல் இயல்பு. ஆகவே, ஒரு தொழில் நிறுவனம் அளிக்கின்ற பொருளோ பணியோ மிகவும் இன்றியமையாததென உணரப்பட்டால் அத் தொழில் பொதுப்பயன் தொழிலாகக் கருதப்படலாம் என்பது முடிந்த கருத்து.

**5. முற்றுரிமை பெற்றிருக்கும் சோதனை**

குறிப்பிட்ட ஒரு பொருளுக்கு எப்போது பொதுமக்களின் தேவை அதிகரிக்கின்றதோ, அப்போது அப் பொருளின் விலை அதிகரிக்க வாய்ப்புள்ளது. அதிக விலையில் இப் பொருளினை விற்றுப் பெருமளவில் இலாபம் ஈட்டும் எண்ணத்தோடு பலரும் இத் தொழிலில் ஈடுபட முன்வரலாம். இந் நிலை சமுதாயத்திற்குத் தீங்கு விளைவிக்கும் என்பதில் ஐயமில்லை. ஆகவே, எல்லோருமே இத்தகைய இன்றியமையாத் தொழில்களில் ஈடுபடுவதைத் தவிர்த்து, ஒருவருக்கோ ஒரு சிலருக்கு மட்டுமோ, இதற்கான அனுமதி வழங்கிடவேண்டும். இவ்விசேட அனுமதியைப்பெற்றுத் தனித்து இயங்கும் நிலை முற்றுரிமைநிலை எனப்படுகின்றது. இந் நிலை வேறு சில காரணங்களாலும் ஏற்படலாம். அவை வருமாறு :—

**அ. இடத்தட்டுப்பாடு**

இட நெருக்கடி காரணமாகவும் சர்வாதீனநிலை ஏற்பட வாய்ப்புள்ளது: சான்றாக, ஒரே நகரில் பல புகைவண்டிப் போக்குவரத்து நிறுவனங்கள் இயங்குமேயாயின், ஒவ்வொரு தெருவிலும், பல இருப்புப்பாதைகள் போடவேண்டியிருக்கும். இதேபோல ஒரு நகரில் இரண்டு அல்லது மூன்று தொலைபேசி நிறுவனங்கள் இருக்குமேயாயின், நகரின் சாலைகளில் இந் நிறுவனங்கள் தனித்தனியே தங்களுக்கெனத் தொலைபேசி அல்லது தந்திக்கம்பங்களை அமைக்க வேண்டியிருக்கும். குடிநீர்

வழங்கும் நிறுவனங்கள் இரண்டு, மூன்று இருக்குமேயாயின், ஒவ்வொரு நிறுவனமும், தனக்கெனச் சாலைகளை அகழ்ந்து குடிநீர்க் குழாய்களை அமைத்திட வேண்டும். இருக்கின்ற இடவசதியினை நோக்கும்போது இச் செயல்கள் ஏற்புடையதாகா என்றே புலனாகின்றது. ஆகவே, இரண்டு, மூன்று நிறுவனங்கள் இத் தொழிலைச் செய்வதைத் தவிர்த்து, திறமையுள்ள ஒரே ஒரு நிறுவனத்திற்கு இதற்கான அனுமதியை வழங்குதல் வேண்டும். இத்தகைய அனுமதியைப் பெறுவதன்மூலம் முற்றுரிமை பெற்ற பொதுப்பயன் தொழில் உருவாகின்றது.

## ஆ. பெருமளவு முதலீடு

பொதுப்பயன் தொழில்கள் நடத்த பெருமளவு முதலீடு தேவைப்படும். மின்திறன், குடிநீர் போன்றவற்றைச் சிறிய அளவு கைமுதல் போட்டு நடத்த இயலுமா? ஆகவே, இரண்டு மூன்று நிறுவனங்களைச் சிறிய அளவு முதலீட்டுடன் இத் தொழிலில் ஈடுபடுவதைத் தவிர்த்துப் பெருமளவு முதலீட்டுடன் ஒரே ஒரு நிறுவனத்திற்குப் பொதுப்பயன் தொழிலை நடத்த அனுமதி வழங்கிட வேண்டும். அவ்வாறு செய்வதன்மூலம், முற்றுரிமை பெற்ற ஒரு நிறுவனம் உருவாக்கப்படுகிறது என்பதை உணர்தல் வேண்டும்.

## இ. பெருமளவு உற்பத்திச் செலவு

பொதுப்பயன் தொழில்களில் போடப்படுகின்ற முதலீடு அதிக அளவில் இருப்பதோடு மட்டுமின்றி, இத் தொழில்களில் ஏற்படுகின்ற உற்பத்திச் செலவும் மிகுந்து காணப்படும். பொதுவாக, மிகுதியான உற்பத்திச் செலவைச் சரிக்கட்ட, பொதுப்பயன் நிறுவனங்கள் இவ்வாறு செய்தல் இயலாது. ஆகவே பெருமளவு உற்பத்திச் செலவினை ஏற்று நடத்தக்கூடிய நிறுவனத்திற்கு மட்டுமே தனிஉரிமைநிலை வழங்கப்படும்.

## ஈ. சிறப்புரிமைகள்

பொதுப்பயன்தொழில்களுக்கு அரசு சில சிறப்புரிமைகள் வழங்கும் என ஏற்கனவே கூறப்பட்டது. இச் சிறப்புரிமைகள் அனைவருக்கும் வாரிவழங்குதல் கூடாதென்றும், இதனால், சமுதாயத்திற்குத் தீங்கு நேரிடலாமென்றும் அனைவரும் அறிவர். ஆகவே, தகுதியுள்ள ஒரு சில நிறுவனங்களுக்கு மட்டுமே இச் சிறப்புரிமைகளை அளிப்பதன்மூலம் முற்றுரிமைநிலை ஏற்படுகின்றது.

உ. கடுமையான போட்டி

தொழில் நிறுவனங்கள் மிகுந்து காணப்படுமேயாயின், அவற்றிற்கிடையே கடுமையான போட்டி ஏற்படுவதைத் தவிர்க்க இயலாது. ஒரு வணிக நிறுவனம் மற்றொன்றினை அழித்திடும் வழிமுறைகளை எப்போதும் எண்ணிக்கொண்டிருக்குமானால், அது மிகையாகாது. இந் நிலையில் வணிக நிறுவனங்கள் பல ஒன்று சேர்ந்து தங்களுக்குள் ஒரு சேர்க்கையமைப்பினை (Combination) ஏற்படுத்திக் கொள்ளும். இவ்வமைப்பின்மூலம், பொருள்களின் தரம், விலை, அளவு போன்றவை நிருணயிக்கப்படும். பல நேரங்களில், இவை நுகர்வோருக்குத் தீங்கு விளைவிப்பதாகவே இருக்கும். நுகர்வோரின் துயரினைப் போக்கும் வகையில், போட்டி நிறுவனங்களைத் தடைசெய்து ஒரே ஒரு நிறுவனத்திற்கோ, ஒரு சில நிறுவனங்களுக்கோ, அனுமதி வழங்குவதன் மூலம் அரசு முற்றுரிமை நிலையை ஏற்படுத்துகின்றது.

ஊ. நாட்டின் அவசர நிலைமை (State of Emergency)

நிலநடுக்கம், வெள்ளம், புயல் போன்ற இயற்கையின் கோரத்தாண்டவத்திலிருந்தும், உள்நாட்டு, வெளிநாட்டுப்போர் சமயங்களிலும் மக்களைக் காப்பாற்றும் கடமை அரசுக்கு ஏற்படுகின்றது. இந் நிலையில் இன்றியமையாப் பொருள்களின் மீதும், பணிகளின்மீதும் கட்டுப்பாடு விதித்து, அவற்றை வழங்குவதற்காக ஒரு சில நிறுவனங்களுக்குமட்டுமே அனுமதி வழங்குதல் இயல்பு. இவ்வாறு ஒரு நாட்டின் அவசர நிலையும் முற்றுரிமை நிலையை ஏற்படுத்தக் காரணமாகின்றது.

எ. நெறி செய்யப்பட்ட தொழில்களுடன் போட்டி

பொதுநல ஈடுபாடு கொண்ட அனைத்துத் தொழில்களையும், பொதுப்பயன் தொழில்களாகப் பெற்றுக்கொண்ட பின்னர், அவற்றை அரசு நெறிப்படுத்துகின்றது. இத்தகைய பொதுப் பயன் தொழில் நிறுவனங்களுடன், ஏனைய தொழில் நிறுவனங்கள் போட்டியிடும் வாய்ப்பு உருவாவது இயல்பே. சான்றாக, புகைவண்டிப் போக்குவரத்து, வாடகை மோட்டார் வண்டிச் சொந்தக்காரர்களிடமிருந்து கடுமையான போட்டியை எதிர்பார்க்க நேரிடலாம். இவ்வாறு பொதுப்பயன் தொழில் நிறுவனங்களுக்கு ஒரு சில தனியுரிமைகளை வழங்குவதற்கு இத்தகைய போட்டியே ஒரு காரணமாக அமைகின்றது.

ஏ. இயற்கை வளங்களைப் பாதுகாத்தல்

ஒரு நாட்டின் வளம், அந் நாட்டில் கிடைக்கின்ற கனிப் பொருள்களைப் பொறுத்து அமையும். இயற்கையன்னை தந்த

இரும்பு, எஃகு, தங்கம் போன்ற தாதுப்பொருள்களும், தேயிலை, காபி, ரப்பர் போன்ற விவசாயப் பொருள்களும், குடிநீர், வாயு, பெட்ரோல் போன்றவையும் சிக்கனமான முறையில் செலவழிக்கப்பட வேண்டும். இன்றேல், தொழிலுற்பத்தி பெரிதும் பாதிக்கப்படும். இப் பொருள்களைப் பாதுகாக்கும் பொருட்டு, ஒரு மாநிலத்திலிருந்து மற்றொரு மாநிலத்திற்கு இதனைக் கொண்டுசெல்லவும், தடை விதிக்கப்படவேண்டியிருக்கும்.* மேலும், இவற்றை மூலப்பொருள்களாகப் பயன்படுத்திப் பல பொருள்களை உற்பத்தி செய்யும் தொழில்கள் பலவற்றையும் ஓரளவு கட்டுப்பாடுசெய்தல் அவசியமாகிறது. அப்போதுதான் பொதுமக்களுக்கு இன்றியமையாத பொருள்களை உற்பத்தி செய்யமட்டும் இம் மூலப் பொருள்களைச் செலவிட்டு மற்றத் தேவைகளுக்கு இவற்றைப் பயன்படுத்தி வீணடிக்காமல் இருக்க இயலும். ஆனால், மற்றத் தொழில் நிறுவனங்களை எவ்வாறு கட்டுப்படுத்த இயலும்? இதற்கான ஒரேவழி, குறிப்பிட்ட ஒரு சில தொழில் நிறுவனங்களுக்கு மட்டுமே சில தனியுரிமைகளை வழங்குவது ஆகும். ஆகவே, ஒரு நாட்டின் மூலப்பொருள்களைப் பாதுகாக்கும் எண்ணத்தாலும் பொதுநல ஈடுபாட்டுத் தன்மை உருவாகிறது என்பது தெளிவு.

### ஐ. தொழில் வளர்ச்சியில் நாட்டின் ஈடுபாடு

தனிப்பட்ட தொழில் நிறுவனங்கள் எத்துணைத் திறமையோடு இயங்கியபோதிலும், சில நேரங்களில் அவற்றையும் அரசு கட்டுப்பாட்டிற்குள் கொண்டுவர நேரிடலாம். அதாவது ஒரு நாட்டின் வளர்ச்சி, அந் நாட்டின் பொருளாதார வளர்ச்சியில் அடங்கியுள்ளது. பொருளாதார வளர்ச்சி எனப்படுவது, அந் நாட்டிலுள்ள பலவித தொழில்களின் வளர்ச்சியைக் குறிக்கும். ஆகவே, சில குறிப்பிட்ட தொழில்களை அரசு தனது கட்டுப்பாட்டின்கீழ்க் கொண்டுவர விரும்புவது இயற்கையே. தனி மனிதரின் ஈடுபாட்டினின்றும் வேறுபட்டதாக, நாட்டின் ஈடுபாடு அமைகின்றது. இவ்வாறே பொதுநல ஈடுபாடு உருவாகின்றது.

### ஒ. சட்டமன்றங்களின் தீர்ப்புகள்

வரலாற்றின் கண்கொண்டு பார்ப்போமாயின், பொதுப் பயன் தொழில் என்ற சொல்லிற்குச் சட்டமன்றங்கள் அளித்துள்ள விளக்கம் பலதரப்பட்டுள்ளதாக அமைந்திருப்பதைக் காணலாம். பொதுப்பயன் தொழிலின் இலக்கணத்தையும், வரையறையும், பல வழக்குகளில் பலவிதமாக நீதிமன்றங்கள்

* The Okahoma case of Engl and of 1926.

முடிவு செய்தபோதிலும், இறுதியில் சட்டமன்றங்களின் கருத்தே முடிவானதாக ஏற்றுக்கொள்ளப்பட்டது. ஆகவே, பொது மக்களின் நலனுக்காக, அவர்களால் அமைக்கப்படுகின்ற சட்ட மன்றங்களின் எண்ணப்படியும் பொதுப்பயன் தொழில்கள் ஏற்பட வாய்ப்புள்ளது என்பது புலனாகிறது.

மேற்கண்ட சோதனைகளை நன்கு சிந்தித்துப் பார்ப்போமாயின், "பொதுநல ஈடுபாட்டுத் தன்மையென்பது" என்ன என்று விளங்கும். மேலும், இப் பொதுநல ஈடுபாடு உருவாகக் கூடிய சூழ்நிலையும் எளிதில் விளங்கும். இத்தகைய பொது நல ஈடுபாட்டினைக் கொண்ட தொழில்களே பொதுப்பயன் தொழில்கள் என்ற முடிவிற்கு இப்போது நாம் வர முடிகின்ற தல்லவா?

ஆகவே, இதுகாறும் கூறப்பட்ட கருத்துகளை ஒன்று திரட்டிப் பார்ப்போமாயின் "பொதுப்பயன் தொழில்கள் என்ற சொல்லின் பொருள் ஒருவாறு விளங்கும். அதன்படி, மக்களின் அன்றாட வாழ்விற்குத் தேவையான சில இன்றியமையாத பொருள்களை வழங்குவதில், மற்ற நிறுவனங்களிளின்றும் தனித்து நின்று அரசால் அளிக்கப்படுகின்ற சில விசேட உரிமைகளைப் பெற்று, ஆனால், அதே நேரத்தில் அரசின் கடுமையான நிபந்தனைகளுக்கும், கட்டுப்பாடுகளுக்கும் உட்பட்டுப் பொதுநல ஈடுபாடு ஒன்றினையே தனது இலக்காகக் கருதிச் செயற்படும் நிறுவனங்களே (அல்லது தொழில்களே) பொதுப் பயன் நிறுவனங்கள் (அல்லது தொழில்கள்) எனப்படும்.''

## கருத்துக்கோப்பு

பொதுப்பயன் தொழில்களின் பரிணாமமும் வளர்ச்சியும்—அவற்றின் இலக்கணமும் வரையறையும்—பொதுநல ஈடுபாடும் பொதுப்பயன் தொழில்களும்—பொதுநல ஈடுபாட்டினைக் கண்டறியும் சோதனைகள்—தொழில் வளர்ச்சியில் நாட்டின் ஈடுபாடு.

# 4. சமுதாயத்தின் கண்ணோட்டத்தில் பொதுப்பயன் தொழில்கள்

"மக்களின் இன்னல்களைக் களைய முன்வராத ஜனநாயக அரசை விட கொடுங்கோல் மன்னன் ஒருவனின் அரசே மேலானது"...

—எட்மண்ட்பர்க் (Edmund Burke)

தொழில்துறையில் ஏற்பட்ட எண்ணற்ற மாறுதல்களால், உலகெங்கும், ஒரு மறுமலர்ச்சி ஏற்பட்டதென்றும், இதன் விளைவாகப் பன்னாடுகளின் பொருளாதாரக் கொள்கைகளும் விரைவாக மாற்றி அமைக்கப்பட்டனவென்றும் ஏற்கனவே கூறப்பட்டது. எவ்விதத்திலும், அரசின் தலையீடின்றித் தன்னிச்சையாய் வாணிகம் செய்யும் கொள்கை மெல்லமெல்ல மாறத் தொடங்கி, அரசே சில தொழில்களை ஏற்றும் பல தொழில்களைக் கட்டுப்படுத்தியும், வணிக உலகில் பெரும்புரட்சியை உண்டாக்கவேண்டிய நிலை ஏற்பட்டது. கட்டுப்பாட்டிற்குள்ளாகாத வணிக நிறுவனங்களே இல்லாத இரஷ்யா, மேற்கு ஜெர்மனி போன்ற நாடுகளும், தன்னிச்சையாய் வாணிகம் செய்யும் உரிமையை அளித்துள்ள அமெரிக்காநாடு போன்றவையும் அரசு தலையீட்டினை வரவேற்கவே செய்தன. மக்களின் அன்றாட வாழ்க்கைக்குத் தேவையான பொருள்களையும், வசதிகளையும் அளிப்பதில் அரசின் கடமை தலையாயது, என்பதை உணர்ந்த பன்னாடுகளும், பொதுப்பயன் தொழில்களை அரசின் சார்பில் துவங்கின. இதற்கெனச் சில கட்டுப்பாடுகளும் விதிக்கப் பெற்றன. சுருங்கக் கூறின் பொதுப்பயன் தொழில்களை அரசுத் துறையினின்றும் பிரித்துப் பார்க்க இயலாத நிலை ஏற்பட்டு விட்டது எனலாம்.

பொதுப்பயன் தொழில்களை ஏற்று நடத்துவது என அரசு முடிவுசெய்த பின்னர் இவற்றிற்கும் அரசிற்குமிடையே உள்ள தொடர்பு எத்தகையது என்பதை அறிந்துகொள்ளுதல் நன்மை

பயக்கும். இத் தொடர்பினை பொதுப்பயன் தொழில்களுக்கான சட்டம் (The Law Governing Public Utilities) என்ற தொடரின் மூலம் விளக்க முடியும்,

பேராசிரியர் ப்ரூஸ் வைமன் (Prof. Bruce Wyman) என்பவர் தமது நூலில், பொதுப்பயன் தொழில்களுக்கெனச் சட்டத்தினைப் பற்றி முதன்முதலாகக் குறிப்பிடுகையில் இச் சட்டம் சமுதாயத்தின் அங்கத்தினர்களாகிய பொதுமக்களை இரண்டு வகையாகப் பிரிக்கிறதென்று கூறுகின்றார்.* அதாவது, பொதுமக்களை,

(1) தனப்பட்ட நபர்கள்என ஒரு பிரிவாகவும்

(2) தனிப்பட்ட நபர்களைக் கொண்ட சமுதாயக் குழுக்களை, இரண்டாவது பிரிவாகவும் பிரிக்கலாம்.

தனிப்பட்டநபர் ஒருவருக்குப் பலதரப்பட்ட தேவைகள் இருக்கலாம். இவை நிறைவேற்றப்பட வேண்டியவைதாம். எனினும், சமுதாயக் குழுக்களின் (Social groups) தேவைகளே உடனடியாக நிறைவேற்றப்பட வேண்டியவை. ஏனெனில் தனி நபரின் தேவை நிறைவேற்றப்படாவிடில் ஒரே ஒரு நபரோ அவரது குடும்பம்மட்டுமோ பாதிக்கப்படலாம். ஆனால், பல தனிநபர்களைக் கொண்ட சமுதாயத்தின் தேவைகளைப் புறக்கணித்தால், அந் நாட்டின் சமுதாய வளர்ச்சியே பாதிக்கப்பெறும், என்பது உண்மை. ஆகவே, எந்த ஓர் அரசும், சமுதாயத் தேவைகளை உடனடியாகக் கவனித்து நிறைவேற்ற வேண்டும். இந் நோக்கம் நிறைவேறவே பொதுப் பயன் தொழில்கள் இயங்குகின்றன என்பது பேராசிரியர் வைமனின் கருத்து.

இனி, டீன் பௌண்ட் (Dean Pound) என்னும் அறிஞரின் கருத்தினை ஆராய்வோம். இவரது, கருத்துப்படி, பொதுப் பயன் தொழிலை நடத்துகின்ற அரசுக்கும், பொதுமக்களுக்குமிடையே உள்ள உறவு ஒரு வீட்டின் உரிமையாளருக்கும், அவ் வீட்டில் குடிக்கூலிக்குவசிப்போருக்குமிடையே உள்ள உறவினைப் போன்றது. அதாவது, வாடகை வீட்டில் வசிக்கும் ஒருவர், அவ்வீட்டிற்காக நிருணயிக்கப்பட்ட வாடகையைக் கொடுக்க ஒப்புக்கொள்கிறார். மேலும், அவ்வீட்டிற்குத் தம்மால் பழுது ஏதும் வாராது பார்த்துக் கொள்ள இசைகிறார். இதுமட்டுமன்றி, அவ்வீட்டின் உரிமையாளர் நியாயமான முறையில் விதிக்கின்ற நிபந்தனைகளுக்கு உட்படுகின்றார். அதேபோன்று,

* "Lectures on the Spirit of the Common Law", by Prof. Bruce Wyman.

அவ்வீட்டின் உரிமையாளருக்கென்றும் சில கடமைகள் உள்ளன, அல்லவா? குடியிருப்போர், தம்முடன் அன்றாடம் சொற்போர் தொடுப்பதைத் தவிர்ப்பதற்காக, அவ்வீட்டின் குறைபாடுகளை நீக்கக் கடமைப்பட்டுள்ளார். மேலும், தாம் விதிக்கின்ற வாடகை நியாயமானதா என்பதை அவர் எண்ணிப்பார்க்க வேண்டும். இதே போன்றுதான், பொதுப்பயன் தொழில்களை நடத்துகின்ற அரசும், பொதுமக்களுக்குமிடையேயுள்ள உறவும் அமைய வேண்டும் என்பது கருத்து.

**தன்னிச்சையும் வற்புறுத்தலும் (Volition and Compulsion)**

பொதுப்பயன் தொழில்களனைத்தும் தனித்தன்மை பெற்று விளங்குகின்றன என்பது அனைவரும் அறிந்ததே. இத் தனித் தன்மை எதனால் ஏற்பட்டது.*

தன்னிச்சை (Volition), வற்புறுத்தல் (Compulsion) ஆகிய இரண்டும் பொதுப்பயன் தொழில்களின் தனித்தன்மையை இரண்டு வழிகளில் உருவாக்குகின்றன. முதலாவதாக, பொதுப் பயன் தொழில்களில் ஈடுபட விரும்புவோரை எடுத்துக் கொள் வோம். பெரும்பாலும், அரசே இத் தொழில்களை ஏற்று நடத்தினு லும், சிலவகைத் தொழில்களைத் தனி நபர்களும் நடத்த அனுமதி வழங்கப்படுதலுண்டு. இத்தகைய அனுமதியைப் பெற்ற தனிநபர் யாருடைய தூண்டுதலுமின்றித் தாமே முன்சென்று அரசின் அனுமதியை நாடுகின்றார். பொதுப்பயன் தொழிலை நடத்த அனுமதி கிடைத்ததும், அவருக்கெனச் சில கடமைகள் வந்துவிடு கின்றன. அதாவது, அவர் அரசின் சில கட்டுப்பாடுகளுக்கு உட் பட்டே இத் தொழில்களை நடத்த வேண்டியுள்ளது. விருப்பு, வெறுப்பின்றி இக் கட்டுப்பாடுகளை ஏற்றுக்கொண்ட நபரோ நிறுவனமோதான் இத் தொழில்களை நடத்த இயலும். இந் நிலை வற்புறுத்தப்படுகின்றது. இவ்வாறு தன்னிச்சை, வற் புறுத்தல் எனப்படும் கூட்டால் உருவாக்கப் பெறும் தனித்தன் மையைப் பொதுப்பயன் தொழில்கள் தமதாக்கித் கொள்கின்றன.

இனி, இரண்டாவது வழியில் இத் தனித்தன்மை எவ்வாறு உண்டாகிறதென்று பார்க்கும் பொருட்டு, பொதுப்பயன் தொழில் நிறுவனங்களுக்கும், அவை அளிக்கும் பொருள்களை (அல்லது பணிகளை) நுகர்வோருக்குமிடையே உள்ள உறவினைப் பார்ப்போம்.

தமக்கு வேண்டிய, அன்றாட வாழ்க்கைக்குரிய பொருள்களை, அவற்றைத் தயாரிக்கும் தொழில் நிறுவனத்திடமிருந்து பெறு

* Mr. Dean Pound—"The Laws of Public Utilities"

தற்கு நுகர்வோர் ஒருவருக்கு உரிமையுண்டு. முற்றுரிமை பெற்ற ஏதேனும் ஒரு நிறுவனமோ ஒரு சில நிறுவனங்களோ இப் பொருள்களை அல்லது பணிகளை உற்பத்தி செய்து அளிக்க முன் வருமேயாயின், நுகர்வோர் தம் இச்சைப்படி இவர்களிட மிருந்து இப் பொருள்களைப் பெற விரும்பலாம். சான்றாக, மின் திறனைப் பெற விண்ணப்பிக்கவும், அதனைப் பெறவும் நுகர்வோர் ஒருவருக்கு உரிமையுண்டு. அவர் யாருடைய தூண்டுதலுமின்றித் தாமாகவே (தன்னிச்சையாக) விண்ணப்பிக்கலாம். இவரது விண்ணப்பத்தினை ஏற்றுக் கொண்ட அப் பொதுப்பயன் தொழில் நிறுவனம், மின் திறனை அளிக்க இசைகின்றதெனக் கொள்வோம். இதற்கான, சில நிபந்தனைகளை விதிக்க அந் நிறுவனம் முற்படும். இந் நிபந்தனைகளை விதிக்க, அவற்றிற்கு அரசு ஏற்கனவே அனுமதி அளித்திருக்கும். குறிப்பிட்ட இந் நிபந்தனைகளை ஏற்றுக் கொள்ளும் நபரே, நுகர்வோராகக் கருதப்படுவார். அவருக்கு மட்டுமே இந் நிறுவனத்தின் பணி கிட்டுகின்றது. சான்றாக, மின் திறன் குறைவாக உற்பத்தி செய்யப்படும் நாள்களில், அதிக அளவில் 'மின்வெட்டு' அமுலாக்கப்படலாம். இந் நாள்களில், மின் திறனைக் குறைந்த அளவில் உபயோகிக்க வேண்டுமென்றும் குறிப்பிட்ட அளவிற்குமேல் உபயோகிப்போருக்குத் தண்டனை வழங்கும் வகையில் அதிக கட்டணம் விதிக்கவோ, மின் திறன் வழங்க மறுக்கவோ, அந் நிறுவனத்திற்கு உரிமையுண்டு. இக் கட்டுப் பாடுகளை நுகர்வோர் ஏற்றுக்கொள்ளத்தான் வேண்டும். இவ் வாறு, நுகர்வோருக்கும், நிறுவனத்திற்குமிடையே தன்னிச்சை வற்புறுத்தல் என்ற இரண்டு தன்மைகள் உருவாகின்றன. இதுவே பொதுப்பயன் தொழில்களுக்கென நடைமுறைச் சட்டம் ஏற்படக் காரணமாகிறது எனலாம்.

நடைமுறைச் 'சட்டம்' என்று கூறுவதால், நீதிமன்றங்களில் அமுலாக்கப்படும் சட்டத்தின் துணை கொண்டே, பொதுப்பயன் தொழில்களின் நடைமுறைச் சட்டத்தினைப் பற்றி ஆராய்வோம். 'ஒப்பந்தச் சட்டத்தின்படி'(Contract Act) இருநபர்களுக்கிடையே ஓர் ஒப்பந்தம் ஏற்பட வேண்டுமாயின், அவ்விரண்டு நபர்களும், யாருடைய வற்புறுத்தலுமின்றி, தன்னிச்சையான, தங்களது சம்மதத்தைத் தெரிவிக்கவேண்டும். இவ்விரண்டு நபர்களின் சம்மதத்தைப் பெற்றதும், எந்த ஒரு செயலுக்காக ஒப்பந்தம் ஏற்பட்டதோ, அந்தச் செயலுக்காக விதிக்கப்பட்ட அல்லது வழக் கத்திலிருக்கும் நிபந்தனைகள் ஏதுமிருந்தால் அவற்றைக் குறிப் பிட்ட நபர், செயற்படுத்த வேண்டும். அவ்வாறு செயற்படுத்தத் தவறுவாரேயானால் ஒப்பந்தம் செல்லாததாகிறது. ஆகவே, ஒப்பந்தச் சட்டத்தின்படி, ஓர் ஒப்பந்தத்தினை ஏற்படுத்த முன்

வருகின்ற இரண்டு நபர்களும், தன்னிச்சை, வற்புறுத்தல் என்ற இரண்டு தன்மைகளுக்கும் உடன்பட்டே ஆகின்றனர். இதுவே, ஒப்பந்தத்தின் தனித்தன்மையானல், இத் தனித்தன்மையே பொதுப்பயன் தொழில்களுக்கும் ஏற்புடையதாக அமைகிறது.

இவ்வாறு, தனிப்பட்ட நபர் ஒருவரின் தேவையினைச் சமுதாயத்தின் தேவையாகக் கருதி அதனை நிறைவேற்றும் வண்ணம் பொதுப்பயன் தொழில்கள் செயற்படுகின்றன. இத் தொழில்களைக் குறிப்பிட்ட ஒரு துறையினைச் சார்ந்ததாக வேறுபடுத்திக் காண இயலாது. இவையனைத்தும், சமுதாயத்தின் நண்பர்களாகத் திகழ்பவை. இப் பொதுப்பயன் தொழில் நிறுவனங்கள் அனைத்தின் உதவியும் அன்றாட வாழ்க்கைத் தேவையாக இருப்பதால் இவற்றை ஒரு நிறுவனமாகவே காண்பது இயல்பு.

சமுதாயத்தின் கண்ணோட்டத்தில் இப் பொதுப்பயன் தொழில்களைக் காண வேண்டுமாயின், இவற்றிற்கான, உரிமைகளையும் கடமைகளையும், முதலில் கண்டறிய வேண்டும். பின்னர் பொதுநல ஈடுபாட்டுத் தன்மை இவற்றிற்கு இருக்கின்றனவா என்று சோதித்துப் பார்க்க வேண்டும். சிறப்புரிமைகளையும் தலையாய கடமைகளையும் பெற்று, பொதுநல ஈடுபாட்டுத் தன்மையும் பெற்ற நிறுவனம் சமுதாயத்தில் மலர்ச்சியை உண்டாக்க விழைகின்றதாவெனப் பார்க்க வேண்டும். இப் பணியை முழு வெற்றியுடன் செய்யப் போதிய உதவிகளும், அதிகாரங்களும் அரசினல் இவற்றிற்கு அளிக்கப்பட்டுள்ளனவா என்று கண்டறிய வேண்டும். இவையனைத்தும், குறிப்பிட்ட ஒரு தொழில் நிறுவனத்திற்கு ஏற்புடையதாக இருக்குமாயின், ஐயமின்றி, அதனைச் சமுதாயத்தின் கண்ணோட்டத்தில், 'பொதுப்பயன் தொழில்' என்ற பெயர் சூட்டி ஏற்றுக் கொள்ளலாம்.

இக் கருத்துகளை ஏற்றுக்கொண்டு பார்க்கையில் தற்கால அரசுகள் பலவற்றையும், பொதுப்பயன் தொழில் நிறுவனங்களாகவே கருத வேண்டும் என்று பிரெஞ்சு எழுத்தாளர்கள் பலரும் கருதுகின்றனர்.*

**பொதுப்பயன் தொழில்கள்—சில சான்றுகள்**

மக்களுக்குத் தேவையான பொருள்களைத் தயாரித்து அளிக்கின்ற எல்லாத் தொழில்களையுமே பொதுப்பயன் தொழில்களாகக் கருதலாம். இருப்பினும், உலகெங்கும், அரசினலும்,

* Martin G. Glaeser—"Journal of Hand and Public utility".

மக்களாலும் பொதுவாக ஏற்றுக் கொள்ளப்பட்ட பொதுப்பயன் தொழில்களைக் கீழ்க்கண்டவாறு பிரிக்கலாம் :




I. எடுத்துச் செல்லும் தொழில்கள் (போக்குவரத்துத் தொழில்கள்) (Transportation Enterprises)

II. மாற்றியனுப்பும் தொழில்கள் (Transmission Enterprises)

III. நகராட்சிமன்றங்கள் பணியேற்றுப் பங்கீடு செய்யும் தொழில்கள் (Municipal Service Distribution and Enterprises)

**எடுத்துச் செல்லும் தொழில்கள்**

இவை ஓரிடத்திலிருந்து, மற்றோரிடத்திற்குப் பொருள்களையோ மனிதர்களையோ எடுத்துச் செல்லும் பணியில் ஈடுபட்டுள்ளன. சான்று,

**1. புகைவண்டிப் போக்குவரத்து**

நீராவியினாலோ, மின்விசையினாலோ இயக்கப்பட்டு ஒரு நகரத்திற்குள்ளோ பல நகரங்களுக்கிடையிலோ ஒரு நாட்டின் பல்வேறு பாகத்திலோ ஓடுகின்ற புகைவண்டித் தொடர்கள் அனைத்தும், பொதுப்பயன் தொழில்களே.

**2. குழாய்வழித்தொடர்கள் (Pipe Lines)**

எரிவாயு, எண்ணெய் போன்றவற்றை ஓரிடத்திலிருந்து, மற்றோரிடத்திற்கு எடுத்துச் செல்லும் பணியில் இவை ஈடுபட்டுள்ளன. இப்போது பெட்ரோல், பால் போன்றவற்றையும் நகரங்களில் விநியோகிக்க இவை பயன்படுத்தப்படுகின்றன.

**3. பஸ், வாடகை மோட்டார் வாகனங்கள்**

நாகரிக உலகில் மனிதர்கள் ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்குச் செல்ல பஸ், வாடகை மோட்டார் போன்ற வாகனங்களையே பெரிதும் உபயோகிக்கின்றனர். தனியார் துறையிலும், அரசு துறையிலும், போக்குவரத்து நிறுவனங்கள் பல அமைக்கப்பட்டு மக்களுக்குப் பெருந்தொண்டாற்றி வருகின்றன.

**4. கால்வாய் ஆற்றுவழிப் போக்குவரத்து**

சற்றுப் பளுவான பொருள்களை ஏற்றிச் செல்லவும், மற்றும் சாலை, இருப்புப்பாதைத் தொடர்பில்லாத இடங்களுக்குச் செல்லவும் 'படகு' நாவாய் போன்றவை பயன்படுத்தப்படுகின்றன. இவற்றைப் பெரும்பாலும் தனியார் நிறுவனங்களும், சிலவற்றை அரசுத்துறை நிறுவனங்களும் நடத்துகின்றன.

**5. தபால்துறை**

ஒரு நாட்டின் பல்வேறு பாகங்களுக்கும், பொதுமக்களின் பதிலாளாக அவர்களது செய்திகளைத் தாங்கிச் செல்லும் கடிதங்களைப் பட்டுவாடா செய்யும் பணியினை இத் துறை செய்கின்றது. தனிநபர் எவருக்கும் இத் துறையில் இடமளிக்கப்படவில்லை. காரணம், இத் துறையின் இன்றியமையாமையை உணர்ந்து தனிநபர் நிறுவனங்கள் அதிக இலாபம் ஈட்டவே விரும்பும். இவ்வாறன்றி மிகக் குறைவான கட்டணத்தில், பொதுமக்களின் நலனைக் கருதி, குறைவான கட்டணத்தினைப் பெற்றுக்கொண்டு இப் பணியினைச் செய்துவரும் தபால் துறையின் பணி மிகவும் போற்றத்தக்கதே.

**6. சுரங்கப்பாலங்களும், சாலைகளும்**

குறிப்பிட்ட சில இடங்களில் காணப்படும் சாலைகளும், பாலங்களும் பெரும்பாலும் தனிநபர்களால் அமைக்கப்பட்டிருக்கலாம். இப் பணியில் செலவிடப்பட்ட தொகைக்குஈடாக, அவர்களுக்கு ஒரு சிறப்புச் சலுகை வழங்கப்படும். இச் சலுகையைப் பயன்படுத்தி, குறிப்பிட்ட இப் பாலங்களையும், சாலைகளையும் கடந்து செல்லும் வாகனங்களிடமிருந்து இவர்கள் ஒரு சிறு தொகையைக் கட்டணமாகப் பெற்றுக் கொள்ளலாம்.

**II. மாற்றியனுப்பும் தொழில்கள்**

சில வகைப் பொருள்களை ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்கு அப்படியே எடுத்துச் செல்ல முடியாது. ஆகவே, இவற்றின் உருவினை அல்லது தன்மையினை மாற்றி எடுத்துச் செல்ல வேண்டியிருக்கும். சான்றாக, தந்திச் செய்திகளை எடுத்துக் கொள்வோம். ஒருவர் ஓரிடத்திலிருந்து கொடுக்கும் செய்தியினை அப்படியே எடுத்துச் செல்ல முடியாது, இதனைத் தந்தி மொழி (மோர்ஸ்கோட்) மூலம் வேறொரிடத்திற்கு மாற்றித்தான் அனுப்புகின்றனர். செய்தியினைப் பெற்றுக் கொள்ளும் இடத்தில் மீண்டும் இதனைத் தந்திமொழியிலிருந்து பேசும்மொழிக்கு மாற்றம் செய்து தருகின்றனர். இதேபோன்று, தொலைபேசிச் செய்திகளும் ஒலி அலைகளால் மாற்றம் செய்யப்பட்டு மீண்டும் செய்தி

களாக மாற்றம் செய்யப்பட்டுச் சேர்ப்பிக்கப்படுகின்றன. இத்தகைய பணியில் ஈடுபட்டிருக்கும் நிறுவனங்களில் அதிகஅளவில் விலையுயர்ந்த இயந்திரசாதனங்கள் பயன்படுத்தப் பெறுமாகையால் இதற்கானமுதலீட்டுத் தொகையும் அதிக அளவில் தேவைப்படும். இவற்றைப் பொதுப்பயன் தொழில்களாக நடத்த அரசினால் மட்டுமே இயலும்.

**III. நகராட்சி மன்றங்கள் பணியேற்றுப் பங்கீடு செய்யும் தொழில்கள்**

அன்றாட வாழ்க்கைக்குத் தேவையான மின்திறன், எரிவாயு, போன்றவற்றைத் தனியார்துறை நிறுவனங்கள் உற்பத்தி செய்து அளிக்கமுடியும். நகராட்சி மன்றங்கள் உற்பத்தி செய்து பங்கீட்டு முறையில் அளிக்க முன்வருமேயாயின் குறைந்த கட்டணத்தில் தட்டுப்பாடின்றி பொருளாதார வேறுபாடின்றி அனைவரும் பெறமுடியும். இப் பொருள்களைவிட மிகவும் இன்றியமையாதது குடிநீர். இது கிடைக்காவிடில் அல்லது சீரிய முறையில் பங்கீடு செய்யப்படாவிடில், மக்களது அன்றாட வாழ்க்கை தடைப்பட்டு நின்றுவிடும். ஆகவே, பெரும்பாலும் நகராட்சி மன்றங்களே இப் பொருள்களைப் பங்கீடு செய்யும் பணியினை ஏற்றுக் கொள்ளும் வழக்கம் உள்ளது.

மேற்கண்ட மூன்றுவகைத் தொழில்களையும் பொதுப்பயன் தொழில்களென்று கூறக்காரணம், அவை மக்களது அன்றாட வாழ்க்கையோடு இணைந்திருப்பதுதாம். இவற்றைப் பற்றிய நடைமுறை விதிகள் போன்ற விரிவான செய்திகளை வேறொரு பகுதியில் காணலாம்.

## கருத்துக்கோப்பு

சமுதாயத்தின் கண்ணோட்டத்தில் பொதுப்பயன் தொழில்கள்—தன்னிச்சையும் வற்புறுத்தலும்—பொதுப்பயன் தொழில்களுக்கான சில சான்றுகள்—எடுத்துச் செல்லும் தொழில்கள்—மாற்றியனுப்பும் தொழில்கள்—நகராட்சிமன்றங்கள் பணியேற்றுப் பங்கீடு செய்யும் பணிகள்.

# 5. பொதுப்பயன் தொழில்களின் பொருளாதாரச் சிறப்பியல்புகள்

"ஒரு தொழிலின் செலவுத் தொகையினை ஈடுகட்டும் வகையில் அதனுடைய வருவாயும், இவ்விரண்டினைப் பொறுத்தே அதன் இலாப நிலையும் அமைகின்றது"—

—ஹென்றி போர்ட் (Henry Ford.)

எந்த ஒரு தொழிலையும் அதன் பொருளாதாரச் சிறப்பியல்புகளைக் கொண்டே மதிப்பிடுதல் மரபு. ஒரு தொழிலின் நிலை, அது சந்தையில் பெற்றிருக்கும் இடம், அத் தொழிலின் தேவை, அளிப்பு விதிகள் (Laws of Demand and Supply), அத் தொழிலை நடத்தத் தேவைப்படும் மூலதனம், உற்பத்திச் செலவுகள், போன்றவை பொருளாதாரச் சிறப்பியல்புகளாகக் கருதப்படும். இவை பொதுப்பயன் தொழில்களில் எங்ஙனம் தனித்தன்மை பெற்றுள்ளன என்பதை ஈண்டு ஆராய்வோம்.

## 1. இயற்கையான முற்றுரிமை (Natural Monopoly)

பொதுப்பயன் தொழில்களின் மற்ற எல்லா வகைப் பொருளாதாரச் சிறப்பியல்புகளிலும் மேம்பட்டதாக அவற்றின் இயற்கையான முற்றுரிமை நிலை கருதப்படுகின்றது. ஏனெனில் இத் தொழில்கள் அனைத்துமே முற்றுரிமை பெற்ற நிலையில்தான் மிகவும் திறமையாகப் பணிபுரிந்துள்ளன. ஒரு குறிப்பிட்ட சந்தைக்கு, குறிப்பிட்ட சில பொருள்களையும் பணிகளையும் அளிக்கும் உரிமையை ஒரே ஒரு வணிக நிறுவனத்திற்கு மட்டுமே அளிக்கவேண்டுமென்ற கருத்து வெகுநாள்களாகவே வலியுறுத்தப்படுகின்றது. பொதுப்பயன்பாட்டினை உடைய பொருள்களை வழங்கும் நிறுவனங்கள் அனைத்தும் முற்றுரிமை பெற்ற பொதுப்பயன் தொழில்களாகவே கருதப்படுகின்றன. ஆகவே, இவற்றை 'இயற்கையான முற்றுரிமை பெற்றவை'

என்றழைக்கலாம். கடுமையான போட்டி நிலவுகின்ற வழக்கமான சந்தையினின்றும் இவை வேறுபட்டு நிற்கின்றன.

இயற்கையான முற்றுரிமை என்னும் கொள்கையை முதன் முதலில் உலகிற்கு அறிமுகப்படுத்திய பெருமை பேராசிரியர் ஜான் ஸ்டுவர்ட் மில் (John Stuart Mill) என்பாரைச் சாரும், 1948ஆம் ஆண்டு உலகின் முதலாவது பொதுப்பயன் தொழிலை (எரிவாயு) இலண்டன் மாநகரின் நகராட்சி மன்றம் துவக்கியது. அவ்வமயம், இயற்கையான முற்றுரிமையைப்பற்றி விளக்க முயல்கையில் இப் பேராசிரியர் இரண்டு கருத்துகளைக் கூறு கிறார். அதன்படி 1. இலண்டன் நகரில் எரிவாயு, குடிநீர் இவற்றினைப் பங்கீடு செய்யும் பணியில் ஈடுபட்டுள்ள பல்வேறு திறமையற்ற நிறுவனங்களைத் தடை செய்வதன்மூலம், குறைந்த கட்டணத்தில், இப் பொருள்களை அளிக்க இயலும் என்றும், (2) இவ்வாறு செய்வதன் மூலம், திறமை வாய்ந்த ஒரு நிறுவனம் மட்டுமே தனித்து இயங்கும் நிலை ஏற்படுமென்றும், இதனையே இயற்கையான முற்றுரிமைநிலை என்றும் குறிப்பிடலாம்.

பேராசிரியர் மில் அவர்களின் இக் கருத்து பின்னாளில் உண்மையெனப் பிற நாடுகளிலும் ஏற்றுக்கொள்ளப்பட்டது. ஐரோப்பிய, அமெரிக்க நாடுகளில் இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் குறிப்பிட்ட சில பொருள்களை வழங்கும் உரிமை பல நிறுவனங்களுக்கும் வழங்கப்பட்டது. இதன் விளைவாக இந் நிறுவனங்களுக்கிடையே 'விலைப்போர்கள்' (Price wars) அடிக்கடி நிகழ்ந்தன. பெருமளவு நுகர்வோரினைப் பெறும் எண்ணத்தில், பொருள்களின் விலை மிக அதிகமாக விதிக்கப் பட்டது. அதற்கேற்றாற்போல், அவற்றின் தரமும் தாழ்ந்து காணப்பட்டது. மேலும் நுகர்வோரைத் தங்கள்பால் ஈர்க்கும் பொருட்டு, சிலவகை விசேட சலுகைகளும், இந் நிறுவனங் களால் அளிக்கப்பட்டன. இறுதியில், பல நிறுவனங்கள் ஒன்றுசேர்ந்து, தங்களுக்கிடையேயுள்ள விலைப்போரினை விட்டொழிக்கவும், நுகர்வோருக்கெதிராகத் தங்களது ஆற்றலை அதிகரிக்கவும், சேர்க்கையமைப்புகளை (Combination) ஏற் படுத்தத் தொடங்கின. இவ்வாறு பல நிறுவனங்கள் ஒன்றுகூடி, ஒரே ஒரு நிறுவனத்தை ஏற்படுத்துவதன்மூலம் முற்றுரிமையை உருவாக்கின. இதன் விளைவாகப் பொருள்களின் விலை, அவற் றின் உற்பத்திச்செலவு இவற்றைக் கட்டுப்படுத்த முடிந்தது. ஆயினும், பொதுப்பயன் தொழில்களில் ஈடுபடும் வணிக நிறுவனங்களிடையே போட்டி ஏற்படவே வாய்ப்பில்லை.

* J.S. Mill—"Principles of Political Philosophy"

ஏனெனில், இவையனைத்தும் மிகக் குறைவான விலையைத்தான் தங்களது பொருள்களுக்கு விதிக்க முடியும். ஆனல் பொருள் களின் உற்பத்திச் செலவோ மிகுந்து காணப்படும். இதன் காரணமாக இவற்றின் இலாபமீட்டும் தகுதி மிகவும் குறை வாகவே இருக்குமாகையால், பெரும்பாலான நிறுவனங்கள் பொதுப்பயன் தொழிலில் ஈடுபட விரும்புவதில்லை, எனவே பொதுப்பயன் தொழிலைப் பொறுத்தமட்டில், திறமையான வசதியான நிறுவனமே நிலைத்து நிற்க இயலும். இதுவே இயற்கையான முற்றுரிமை எனப்படும்.

இயற்கையான முற்றுரிமை பெற்று விளங்கும் பொதுப்பயன் தொழில்களைப் பற்றிய பொதுவான ஐயப்பாடு ஒன்றினை இங்குப் குறிப்பிடுதல் அவசியமாகிறது. அதாவது ஒரு குறிப்பிட்ட சந்தை எல்லைக்குள் குறிப்பிட்ட ஒரு பொருளையோ பணி யினையோ விற்கும் (வழங்கும்) தனி உரிமையைப் பெற்ற ஒரு நிறுவனம் தன்னிச்சைப்படியே பொருள்களுக்கான விலையை நிருணயம் செய்துகொள்ள வாய்ப்பு ஏற்படுகிறதல்லவா? இவ் வாய்ப்பினைப் பயன்படுத்திக் கொண்டு மக்களைச் சுரண்ட நேரிட்டால் என்ன ஆகும் என்ற ஐயம் எழுவது இயற்கையே. இதற்கு விடை கூறுமுகத்தான் மன் (எதிர்) இல்லினாய்ஸ் (Munn vs Illinois) என்ற வழக்கின் தீர்ப்பு அமைகின்றது. இத் தீர்ப்பின்படி பொதுப் பயன் தொழில்களை தனியாரின் நிருவாகத்தில் விட்டுவைக்க முடியுமென்றாலும், பொதுமக்னின் கட்டுப்பாட்டில் வைத்திருத்தலே நன்மை பயக்கும். இந் நிறுவனங்களில் உற்பத்திச் செலவு, கட்டண விகிதங்கள் போன்ற வற்றைப் பொதுமக்களின் சக்திக்கேற்றவாறே நிருணயிக்கிறார் கள். இந் நிலையில் நியாயமற்ற கட்டணத்தை வசூலிக்கவோ, அளவுக்கதிகமான இலாபமீட்டவோ வாய்ப்பில்லை.

இனி ஒரு குறிப்பிட்ட பொருளை வழங்கும் பொதுப்பயன் தொழில்கள் ஒன்றிற்கு மேலிருந்தால் எத்தகைய சங்கடங்கள் நேரிடும் என்பதைப் பார்ப்போம். சான்றாக, மின்சாரத் துறையும், தொலைபேசித்துறையும் தெரு ஓரங்களில் கம்பங்களை நடவேண்டியிருக்கும். ஒரு நகரில் மின்சக்தி வழங்கும் நிறுவனம் மூன்றும், தொலைபேசி நிறுவனங்கள் மூன்றும் இருக்குமேயானல் ஒவ்வொன்றும் தங்களுக்கான கம்பங்களை நடுவதற்காகத் தெருக் களைத் தோண்ட ஆரம்பிக்கும். பூமியினுள் புதைத்து வைத்துக் கம்பியின் வழியே இதனைச் செலுத்தலாமென்றாலும் ஆறு நிறுவ னங்களும் தங்களுக்குத் தேவையானபோது குறிப்பிட்ட தெருக் களை அகழ்ந்து கொண்டிருந்தால் என்னவாகும் என்பதைச் சிந்தித்தல் வேண்டும்.

இதேபோன்று, குடிநீர் வழங்கும் நிறுவனங்கள் இரண்டு மூன்றிருந்தால் எத்தகைய இன்னல்கள் விளையும் என்பதும் சொல்லாமலே விளங்கும். ஆகவே, எந்த ஒரு பொருளையும் பொதுமக்களுக்கு வழங்கும் பணிக்காக ஒரேயொரு நிறுவனத்திற்கு மட்டுமே அனுமதி வழங்கப்பட வேண்டும் என்பது தெளிவாகிறது.

மேற்கூறிய கருத்துகளிலிருந்து பொதுப்பயன் தொழில்கள் முற்றுரிமை பெற்று விளங்குகின்றன என்ற கருத்து நம் மனதில் உருவான போதிலும் நடைமுறையில் அவ்வாறு இல்லை என்பதே உண்மை. ஒரு தொழிலைச் செய்யும் நிறுவனத்திடமிருந்து போட்டி ஏற்பட்டால், இவ்விரண்டு நிறுவனங்களுமே முற்றுரிமையை இழந்து விடுகின்றன. சான்றாக, போக்குவரத்து வசதியை அளிக்கும் பணியை எடுத்துக் கொள்வோம். மக்கள் ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்குச் செல்லப் புகைவண்டியை மட்டும் உபயோகிப்பார்களேயானால், முற்றுரிமைநிலை உருவாகியுள்ளது என்று ஏற்றுக் கொள்ளலாம். ஆனால், நடைமுறையில் இது சாத்தியமாவதில்லை. புகைவண்டி நிறுவனத்தோடு, வாடகை மோட்டார், பஸ், நீராவிப் படகுகள் போன்றவையும் போக்குவரத்துப் பணியில் ஈடுபட்டுள்ளன.

இதேபோன்று மின்திறனை வழங்கும் நிறுவனமும், எரிவாயு வழங்கும் நிறுவனமும், எரிவாயுநிறுவனத்தோடு நிலக்கரி மற்றும் எரியெண்ணெய் வழங்கும் நிறுவனங்களும், தபால்துறையோடு தந்தி நிறுவனமும், இவை இரண்டினோடும் தொலைபேசி நிறுவனமும், போட்டியிடுகின்றன.

இத்தகைய நிலையில், எந்த ஒரு நிறுவனமும் முற்றுரிமை பெற்றதாகக் கருத முடியாது என்பது பேராசிரியர் எல். ஆர். நாஷ் அவர்களின் கருத்து.* ஆனால் குடிநீர் வழங்கும் நிறுவனத்தோடு, பிற நிறுவனங்கள் போட்டியிட முடியாது. காரணம், தண்ணீருக்கான மாற்றுப்பொருளை அவற்றால் அளிக்க இயலாது. ஆகவே, குடிநீரைப் பகிர்ந்தளிக்கும் பணியினைப் பெரும்பாலும் நகராட்சி மன்றங்களே ஏற்றுக்கொள்கின்றன.

**முற்றுரிமையின் தன்மைகள்**

பொதுப்பயன் தொழில்கள் போட்டியின்றிச் சந்தையில் தனித்து இயங்கும் முற்றுரிமையால் ஏற்படும் நன்மைகள் இரண்டு. அவை :

* Prof. L.R. Nash—"The Economics of Public Utilities"

1. நிருவாகச் செலவுகள் பன்மடங்காவது தவிர்க்கப் படுகின்றது. இதேபோன்று உற்பத்திச் செலவும் வெகுவாகக் குறைக்கப்படுகின்றது.

2. இரண்டு மூன்று நிறுவனங்களிருப்பின், அவற்றிற்குத் தேவையான கருவிகளும், தளவாடங்களும் பன்மடங்காக இருக்கும். ஆனால், ஒரே ஒரு நிறுவனம் மட்டுமே இயங்குமாயின் இதற்கான செலவைத் தவிர்க்கலாம்.

**இயற்கையான முற்றுரிமையில் அளிப்பு விதிகள்**
**(The Economics of Supply under Natural Monopoly)**

அண்மையில் தோன்றியுள்ள பொதுப்பயன் தொழில்கள் பலவற்றின் பொருளாதார அமைப்புகள் குறிப்பிடத்தக்க அளவில் மாறியுள்ளன. போட்டி நிலவுகின்ற சந்தையில் தங்களது பொருள்களை விற்கும் நிலையில் இவை இப்போதில்லை. இதற்கு முற்றிலும் மாறாக, போட்டியற்ற சந்தையில், குறிப்பிட்ட ஏதேனும் ஒரு பொருளையோ சில பொருள்களையோ விற்கும் தனி உரிமையை இவை பெற்றுள்ளன. சுருங்கக்கூறின், பொருள்களை விற்கும் (அளிக்கும்) பணியில் இவை தனிஉரிமை பெற்றவையாகத் திகழ்கின்றன எனலாம்.

முற்றுரிமை நிலையில் பொருள்களை அளிக்கும் செலவு மிகவும் குறைவாகவே காணப்படுகின்றது. இச் செலவு போட்டி நிலவுகின்ற சந்தையில் விதிக்கப்படுகின்ற விலையைவிடக் குறைவானதாக இருப்பதால், பல்வேறு வணிக நிறுவனங்கள் பொதுப்பயன் தொழில்களில் ஈடுபட விரும்புவதில்லை. இதுமட்டுமின்றி, வணிக நிறுவனங்களுக்கிடையே நிலவுகின்ற விலைப்போர் போன்ற கடுமையான போட்டிகள் நிலையற்றதாகையால் பல நிறுவனங்கள் ஒன்று சேர்ந்து ஒரு கூட்டமைப்பை ஏற்படுத்திக் கொள்ளவே விரும்பும். ஆகவே, சந்தையில் காணப்படும் போட்டிக்கு ஈடு கொடுக்க இயலாமலும், குறைவான விலையில் பொருள்களை அளிக்க இயலாமலும், பல நிறுவனங்கள் பொதுப்பயன் தொழிலினின்று ஒதுங்கி விடுகின்றன. நுகர்வோருக்குப் பொருள்களை அளிப்பதில் போட்டி ஏற்படாமலிருக்க இதுவே காரணமாக அமைகிறது.

**விலையில் வேறுபாடு**

போட்டியுள்ள சந்தை விலையைக் காட்டிலும் முற்றுரிமைச் சந்தை விலை குறைந்து காணக் காரணமென்ன? இவ்வினவிற்கு கீழ்க்காணும் இரண்டு காரணங்களைக் கூறலாம்:

1. முதலாவதாக, ஒரு சந்தையில் பல்வேறு நிறுவனங்கள் போட்டியிடுமேயானல், ஒவ்வொன்றும் தங்களுக்காகச் செய்யும் செலவுத்தொகை மிகவும் அதிகமாக இருக்கும். நிருவாக, நடைமுறை, உற்பத்திச் செலவுகள் ஒவ்வொன்றிற்கும் தனித்தனியே அமைகின்றன. ஆனல், முற்றுரிமைச் சந்தையில் ஒரே ஒரு நிறுவனம் மட்டுமே செயற்படுவதால் அதற்கென ஏற்படும் செலவும் குறைவாகவே அமையும்.

2. இரண்டாவது காரணம் மிகவும் சிறப்பு வாய்ந்தது. அதாவது, பொதுப்பயன் தொழில்கள் தங்களது உற்பத்தியை அதிகரிக்க, அதிகரிக்க, ஒரு பொருளை உற்பத்திசெய்யும் நிகரச் செலவு குறைந்துசெல்வதாகக் கணக்கிடப்படுகின்றது. சந்தை முழுவதையும் தன் வயப்படுத்திக்கொண்டு இவை பணிபுரிகையில் இந் நன்மை அதிகரிக்கின்றது. இச் சந்தை முழுவதற்கும் குறிப்பிட்ட ஒரு பொருளை விற்க வேண்டுமாயின், அதற்கான உற்பத்தியும் பெருகவேண்டும். தன்னுடைய வாடிக்கையாளர்களின் தேவைக்கேற்ப, இத் தொழில் நிறுவனம் முழு அளவு உற்பத்தி நிலையை அடையும்வரை, பொருள்களை உற்பத்தி செய்து கொண்டே போகலாம். ஆயினும், இந் நிகரச் செலவு முழு அளவு உற்பத்திநிலை வரையிலும் குறைவாகவே இருக்கும் என்பதில்லை.

மேலும், இந் நன்மை பொதுப்பயன் தொழிலில் ஏற்படக் காரணம், இத் தொழிலில் போடப்படும் முதலீட்டின் தன்மையைப் பொறுத்தமைகின்றது. பொதுவாகவே, இத்தகைய நிறுவனங்களில், அதிக அளவு முதலீடு இயந்திரச் சாதனங்களிலும் மற்றும் ஏனைய உபகரணங்களிலும் செய்யப்பட்டிருக்கும். சான்ருக, ஓர் இலட்சம் ரூபாய்க்கான விற்பனையைச் செய்யும் ஒரு பொதுப் பயன்தொழில் நிறுவனம், பல்வகைப்பட்ட வணிக நிறுவனங்களை விட இயந்திரச் சாதனங்களுக்காகப் பலமடங்கு முதலீட்டினைச் செய்யவேண்டியிருக்கிறது. மற்றத் தொழில்களில் ஒரு பொருளின் உற்பத்திச் செலவு, அத் தொழிலின் மொத்த உற்பத்தியைப் பொறுத்து அமைகின்றது. ஆனல், பொதுப்பயன் தொழில்களில் அவ்வாறில்லை. இங்கு ஒரு பொருளின் உற்பத்திச் செலவு, அவற்றின் இயந்திரச் சாதனங்களில் போடப்பட்டிருக்கும் முதலீட்டைப் பொறுத்தே அமைகின்றது. மேலும், தேய்மானம், கொடுக்கப்படவேண்டிய வட்டிகள், சொத்து வரிகள், ஈட்டுறுதித் தொகை போன்ற செலவுகளும் இத் தொழில்களில் தனித்தன்மை வாய்ந்தவையாக இருக்கின்றன. இச் செலவுகளும் இத் தொழில்களில் காணப்படும் முதலீட்டினைப் பொறுத்தே மாறுகின்றன.

மேற்கூறிய கருத்துக்களைத் தொகுத்துப் பார்க்கையில்,

(1) ஏனைய தொழில்களைக் காட்டிலும், பொதுப்பயன் தொழில்களில், நிலையான சொத்துகளில் செய்யப்படும் முதலீடு அதிகமென்றும்,

(2) பிற தொழில்களின் நிகர உற்பத்திச் செலவு, அவற்றின் மொத்த உற்பத்தியைப் பொறுத்து மாறுவதுபோலன்றிப் பொதுப்பயன் தொழில்களில் அவற்றின் தொழிலமைப்பைப் பொறுத்தும், நிலையான சொத்துகளில் போடப்பட்டிருக்கும் முதலீட்டினைப் பொறுத்துமே அமைகின்றது என்றும் கூறலாம்.

3. போட்டிச் சந்தை விலையைவிட போட்டியில்லாச் சந்தை விலை குறைவாக இருந்த மூன்றாவது காரணமாக, இச் சந்தையின் அளவைக் குறிப்பிடலாம். முற்றுரிமை பெற்ற ஒரு பொதுப்பயன் தொழில் நிறுவனம், சந்தை முழுவதற்குமே பொருளை அல்லது வசதியினை வழங்கும் உரிமை பெற்றிருப்பதால், முழு ஆற்றலுடன் செயற்பட வேண்டியிருக்கிறது. பரந்தமைந்த சந்தைக்கு மிகப் பெரிய அளவில் பொருளை அளித்திட வேண்டுமாயின், அதற்கேற்றாற்போல், சிக்கனமான முறையில் பெருமளவு உற்பத்தி நடைபெற வேண்டும். பெருமளவில் உற்பத்தி செய்யும்போதுதான் நவீன முறைகளையும், பொறியியல் துறையில் முன்னேற்றங்களையும் செய்ய வாய்ப்புக் கிடைக்கின்றது. இவ்வாறு செய்வதன் மூலம் பொருளின் விலை குறைவாக அமைகின்றது.

4. சிறிய அளவு சந்தையிலுள்ள பலவிதமான நுகர்வோருக்குப் பொருளை வழங்கிட வேண்டுமாயின் ஒரு நிறுவனம் மிகுந்த பொறுப்பினை ஏற்றுக் கொள்ள வேண்டியிருக்கிறது. இதற்கான செலவும் கூடுதலாக உள்ளது. ஆனால், இத்தகைய பலதரப்பட நுகர்வோர், மிகப் பெரும் சந்தை முழுவதும் காணப்பட்டு, இச் சந்தை முழுவதற்கும் பொருளை வழங்கும் அனுமதி ஒரே ஒரு நிறுவனத்திற்கு மட்டுமே வழங்கப்படுமாயின் இந் நிறுவனம் எளிதாகத் தன் பணியினைச் செய்யமுடியும். கூடுதலான பொறுப்போ, சிரமமோ இன்றி, தான் உற்பத்தி செய்யும் பொருளை முழுச் சந்தைக்கும் அளிக்க வாய்ப்புள்ளதால், சராசரிச் செலவு குறைவாகவே அமைகின்றது. இதனால் பொருளின் விலையும் குறைகின்றது,

5. மூலப்பொருள்களைப் பெருமளவில் கொள்முதல் செய்யும் போது, அதிக அளவுத் தள்ளுபடி, தரகு ஆகியவை விற்பனையாளரிடமிருந்து கிடைக்கும். இந் நன்மை பொதுப்பயன் தொழில்களுக்கும் கிடைக்க வாய்ப்புள்ளது. இதனால் உற்பத்திச்

செலவு குறைவதால் பொருளின் விலையும் குறைவாகவே நிருணயிக்கப்படுகின்றது.

இவ்வாறு, நிருவாக உற்பத்திச் செலவுகளில் சிக்கனம், பரந்தமைந்த சந்தை முழுவதற்கும் உரிமை, பொருளின் உற்பத்தியில் நூதன துறைகள், பொறியியல் முன்னேற்றங்கள், மூலப் பொருள்களைப் பெருமளவில் வாங்கும்போது கிடைக்கும் நன்மைகள் போன்ற பலவேறு காரணங்களால், முற்றுரிமை பெற்றுப் பொருள்களை உற்பத்தி செய்து வழங்கும் போட்டியற்ற சந்தையின்விலை, போட்டி நிறைந்த சந்தையின் விலையைவிடக் குறைவாகவே அமைகின்றது,

**பொதுப்பயன் தொழில்களின் 'தேவை' விதிகள்** (The Laws of demand of Public utilities)

தனிநபர் ஒருவர் முற்றுரிமை பெற்று வாணிகம் செய்வதற்கும், பொதுப்பயன் தொழிலொன்று ஏகஉரிமை பெற்று வாணிகம் செய்வதற்கும் வேறுபாடு உண்டு. தனியார் நிறுவனம் விருப்பமுள்ளபோது வாணிகம் செய்வதும், விருப்பம் இல்லாதபோது வாணிகம் செய்யாமலும் இருக்கமுடியும். ஆனால், பொதுப்பயன் தொழில் நிறுவனங்கள் அவ்வாறு இருக்க முடியாது. நுகர்வோரின் தேவைகள் எத்தகையதாயினும் அதனை நிறைவேற்றும் பொறுப்பும், கடமையும் இவைகளுக்கு உண்டு.

மேலும் இவை சந்தையில் அவ்வப்போது ஏற்படுகின்ற, மாற்றங்களுக்கேற்பத் தங்களை மாற்றி அமைத்துக் கொள்கின்றன. இது சரியாக நடைபெற வேண்டுமானால், சந்தையின் மாற்றங்கள் சரிவர கவனிக்கப்பட வேண்டும். இக் கருத்தினை அடிப்படையாகக் கொண்டு, பொதுப்பயன் தொழில்களில் ஏற்படுகின்ற தேவையினைப்பற்றி ஆராய்வோம்.

**தேவைக் காலம்** (Time of Demand)

இத்தொழில்கள் உற்பத்தி செய்யும் பொருள்களையும் அவை அளிக்கின்ற பணிகளையும் பெற நுகர்வோரிடமிருந்து தேவை (Demand) பிறக்கின்றது. இத் தேவையில் பலவிதமான ஏற்றத் தாழ்வுகள் ஏற்பட வாய்ப்புள்ளது. சில நேரங்களில் நுகர்வோரின் தேவை மிகுந்தும் மற்றும் சில நேரங்களில் குறைந்தும் காணப்படலாம். ஆயினும், இத்தகைய மாற்றங்கள் ஏற்படுகின்ற காலத்தினைக் (Time) கணக்கிட்டு அதற்கேற்பத் தங்களின் உற்பத்தியை மாற்றியமைத்துக் கொள்வதில்தான் பொதுப்பயன்

தொழில்களின் நிருவாகத் திறமை உள்ளது. பொதுவாக, நுகர்வோரின் தேவைகள், வாரம் ஒரு முறையோ, மாதம் ஒரு முறையோ அன்றி வருடம் ஒரு முறையோகூட மாறலாம். இதைத் தவிர, குறிப்பிட்ட சில பருவகாலங்களிலும் நுகர்வோரின் தேவை மாறக்கூடும். இத்தகைய 'கால மாற்றங்களை' முன் கூட்டியே சரிவரக் கணக்கிடும் ஆற்றலைப் பொதுப்பயன் தொழில் நிறுவனங்கள் பெற்றிருக்க வேண்டும். பொதுப்பயன் தொழில்கள் அளிக்கின்ற பொருள்களோ வசதிகளோ பெரும்பாலும் சேமித்து வைக்க முடியாதவை. அவ்வப்போது உற்பத்தி செய்தே இவற்றை நுகர்வோருக்கு அளிக்க வேண்டும். ஆனால், இதில் சில சிக்கல்களும் உள்ளன. சான்றாக, மின்திறன் வழங்கும் நிறுவனத்தை எடுத்துக் கொள்வோம். குறிப்பிட்ட எண்ணிக்கையில் அன்றாடம் மின்திறனை வழங்கிவரும் நிறுவனம் சில நேரங்களில் அதிக அளவு மின்திறனை வழங்க வேண்டி யிருக்கும். சான்றாக, தீபாவளி, கிறித்துமஸ் போன்ற பண்டிகை நாள்களிலும் மின்திறன் அதிகமாகச் செலவழிக்கப்படலாம். மற்றும் மின்திறனை நுகர்வோரின் எண்ணிக்கையிலும் மாறுத லேற்படலாம். இக் கூடுதல் தேவையைச் சமாளிக்க அதிக அளவில் மின்திறனை உற்பத்தி செய்யும் திறனை இந் நிறுவனம் பெற்றிருத்தல் இன்றியமையாததாகிறது. இதற்கான இயந்திர சாதனங்களும் ஏனைய பொருள்களும் இந் நிறுவனத்திடம் இருத் தலும் அவசியமாகிறது. அவ்வாறின்றேல், அதிகரிக்கும் தேவையைச் சமாளிக்க இயலாது போய்விடும். பொதுப்பயன் தொழில்கள் எந்நிலையிலும், பொதுமக்களுக்குத் தொண்டு செய்யத் தயாராக இருக்க வேண்டுமாதலால் நுகர்வோரின் தேவையையும், சந்தையின் மாற்றங்களையும் உன்னிப்பாகக் கவனித்து அதற்கேற்ப மாற்றங்களைச் செய்தல் வேண்டும் என்பது நன்கு விளங்குகின்றதல்லவா?

சில வகைப் பொதுப்பயன் தொழில்கள் இயற்கையின் பருவ காலங்களுக்கு ஏற்றவாறும் குறிப்பிட்ட பகுதிகளின் தட்பவெப்ப நிலைகளுக்கு ஏற்றவாறும் தங்களுடைய உற்பத்தியை மாற்றிய மைக்க வேண்டும். சான்றாக, கோடையின் கொடுமையான நாள் களில் காய்கின்ற கதிரவனைப் பயன்படுத்தித் தோட்டம் அமைத்தல், வீட்டிலுள்ள புல்வெளியைச் சரிப்படுத்துதல் போன்ற வேலைகள் அதிகமாக நடைபெறும். இதற்குச் செல வாகும் தண்ணீரின் அளவு ஏனைய நாள்களைவிட அதிகமாக இருக்கும். மேலும் கோடையில் பகற்பொழுது நீண்டதாக இருப்பதால் தண்ணீரைச் செலவழிக்கும் வாய்ப்பும் அதிகமாக உள்ளது. இக் காரணங்களால் தண்ணீருக்கான தேவை அதிக ரிக்கின்றது. இக் கூடுதலான தேவையை இதற்கான நிறுவனம்

சமாளிக்க நேரிடுகிறது. இதைப்போலவே, குளிர்காலங்களில் எரிவாயுவிற்கான தேவை (குறிப்பாக மேனுடுகளில்) அதிகரிக்கின்றது. ஏனெனில் வீட்டின் உட்புறத்தினை வெப்பமுடையதாக மாற்றியமைக்க வேண்டியுள்ளது. எரிவாயு வழங்கும் நிறுவனம் இக் கூடுதலான தேவையை எதிர்நோக்கி அதற்கேற்ப உற்பத்தி செய்து நுகர்வோருக்கு அளிக்க வேண்டும். தொலைபேசி நிறுவனங்கள் பகற்பொழுதில் அதிகமாக உள்ள வர்த்தக அழைப்புகளையும், மாலை மற்றும் இரவு நேரங்களில் அதிகரிக்கும் சமுதாய அழைப்புகளையும் ஒருங்கே சமாளிக்க வேண்டும்.

பொதுப்பயன் தொழில்கள் அளிக்கின்ற பணிகளை நுகர்வோர் ஒரே நேரத்தில் பெற்றுக்கொள்வதில்லை. சில சமயங்களில் இவர்களது தேவை மிகுந்தும் மற்றும் சில நேரங்களில் குறைந்தும் இருக்கலாம். தேவை மிகுதியாயுள்ளபோது மட்டும் திடீரெனப் பொருள்களை உற்பத்தி செய்ய இயலாது. ஆகவே, இந் நிறுவனங்கள், தேவைகுறைவாக இருக்கும் நேரத்தில் உற்பத்தியை அதிகமாக்கி, உபரியைச் சேமித்து வைத்துக் கொள்ள வேண்டும். அப்பொழுதுதான், தேவை மிகும்போது நுகர்வோருக்கு எளிதில் பொருள்களை அளிக்க முடியும். ஆனல், இத்தகைய சேமிக்கும் வாய்ப்பு எல்லாப் பொதுப்பயன் தொழில்களுக்கும் கிட்டுவது இல்லை. ஏனெனில், அவை பலதரப்பட்ட பொருள்களை உற்பத்தி செய்கின்றன. மேலும் குறிப்பிட்ட சில பொருள்களைத் தவிர எல்லாப் பொருள்களையும் சேமித்து வைக்க இயலாது. சான்ருக எரிவாயுவையும், குடிநீரையும் அதிக அளவில் உற்பத்தி செய்து சேமித்துவைக்க முடியும் என்ருலும் நெடுநாள்களுக்கு அவ்வாறு செய்யமுடியாது. மின்திறன் போன்ற பொருள்களை எங்ஙனம் சேமித்து வைக்க முடியும்? ஆகவே, பெரும்பாலான பொதுப்பயன் தொழில்கள் சேமித்து வைக்க முடியாத பொருள்களை உற்பத்தி செய்கின்றன என்றும், அவ்வப்போது மாறுகின்ற தேவைக்கு ஏற்றவாறே இவற்றின் உற்பத்தி அமைகின்றது என்றும் அறியலாம்.

**விலை நெகிழ்ச்சி (Price Elasticity)**

ஒரு பொருளின் விலையில் ஏற்படும் மாறுதலுக்கு ஏற்ப அப் பொருளுக்கான தேவையில் ஏற்படும் மாற்றமே விலை நெகிழ்ச்சி எனப்படும். ஒரு பொருளின் அல்லது பணியின் விலையில் ஏற்படுகின்ற மாறுதலுக்கேற்ப நுகர்வோரின் மொத்தச் செலவுத் தொகையில் ஏற்படும் மாற்றத்தினையும் விலைநெகிழ்ச்சி எனக் கூறலாம். ஒரு குறிப்பிட்ட பொருளின் விலையின் மாறுதலுக்கேற்ப அப் பொருளுக்கான தேவையில் குறைந்த அளவில்

மாறுதல் ஏற்பட்டால் அன்றி மாறுதல் ஏதுமில்லாதிருந்தால் அப் பொருள் 'நெகிழ்ச்சியற்ற தேவையைப்' (inelastic demand) பெற்றுள்ளது எனலாம். இதற்கு மாருக, இப் பொருளின் விலை மாறுதலுக்கேற்றவாறு அதனுடைய தேவையிலும் குறிப்பிடத் தக்க அல்லது அதிக அளவில் அதிக மாறுதலேற்பட்டால் அப் பொருள் நெகிழ்ச்சியுடைய தேவையைப் (elastic demand) பெற்றுள்ளது எனலாம். சுருங்கக்கூறின், ஒருபொருளின் விலைக் கேற்ப அதன் வாங்குவோரின் தேவையில் ஏற்படும் மாற்றமே இப் பொருளின் நெகிழ்ச்சியினை அமைக்கின்றது எனலாம். இத்தகைய வாங்குவோரின் தேவை

(1) இப்பொருளுக்குப் பதிலாகக் கிடைக்கும் பொருளினைப் பொறுத்தும்,

(2) குறிப்பிட்ட இப் பொருளின் இன்றியமையாமையைப் பொறுத்தும்,

(3) இப் பொருளை வாங்குவதற்காக ஒதுக்கீடு செய்யப் பட்ட தொகையைப் பொறுத்தும்

அமைகின்றது.

பொதுப்பயன் தொழில்களைப் பொறுத்தமட்டில் இவை உற்பத்தி செய்து வழங்குகின்ற பொருள்களுக்கும், பணிகளுக்கும் உள்ள தேவை நெகிழ்ச்சியுடையதாக உள்ளது. இப் பொருள் களின் விலைகுறைந்து காணப்படுமேயானல் இவற்றிற்கான தேவை அதிகரிக்கின்றது. இதற்கு மாருக இப் பொருள்களின் விலை அதிகரிக்குமானல், இவற்றின் தேவை குறைந்தும் காண்படுகின்றது. இத்தகைய மாற்றங்கள் பெரும்பாலும் நடைமுறையில் ஏற்படுகின்றன என்ருலும் பொதுப்பயன் தொழில் நிறுவனம் வழங்கும் பொருளுக்கான தேவையினை அவற்றின் விலையோடு இணைத்துப் பார்த்தல் பொருத்தமாகாது. இப்பொருள்கள் தேவையினை இவை விற்பனை செய்யப்படும் சந்தையின் தன்மையோடு ஒப்பிட்டுப் பார்த்தலே முறையானது. சந்தையின் தன்மை எனப்படுவது, நுகர்வோரின் எண்ணிக்கை, இப் பொருள்களுக்கான மாற்று உபயோகங்கள், இப்பொருள்கள் வழங்கப்பெறும், வேண்டப்பெறும் காலம் மற்றும் இவைபோன்ற பலவிதத் தன்மைகளைக் குறிக்கும். பொதுப்பயன் தொழி லொன்று அளிக்கின்ற பொருளின் நெகிழ்ச்சி அதனை வாங்கப் படும் குறிக்கோளைப் பொறுத்தும் அமையலாம். சில நோக்கங் களுக்கு இப் பொருள்கள் வேண்டப்படும்போது அவற்றின் நெகிழ்ச்சி மிகுதியாயும், மற்றும் பல நேரங்களில் நெகிழ்ச்சி குறைந்தும் இருக்கும். சான்ருக, எரிவாயுவை இரண்டு விதங் களில் உபயோகிக்கலாம். சமையல் செய்யும்பொருட்டு, எரி வாயுவை உபயோகிக்கும் ஒருவரின் தேவையில் இப் பொருளின்

விலைமாற்றத்தின் காரணமாக, மாறுதலேதும் ஏற்பட வாய்ப்பில்லை. ஏனெனில், சமையல் செய்வதற்கு இன்றியமையாத பொருளாக எரிவாயு கருதப்படுவதுதான் காரணம். இதற்கு மாறாக, தொழிற்சாலையில் எரிபொருளாக உபயோகிக்கப்படுமேயானால், இப் பொருளுக்கான தேவையில், அதன் விலைக்கேற்றாற் போல் மாறுதலேற்பட வாய்ப்புள்ளது. சான்றாக, எரிவாயுவின் விலை அதிகரிக்குமேயானால், பெரும்பாலான தொழிற்சாலைகள், எரிவாயுவை உபயோகிப்பதை விடுத்து, நிலக்கரி, எண்ணெய் போன்றவற்றை உபயோகிக்க ஆரம்பித்துவிடும். இதனால் எரிவாயுவிற்கான தேவை குறைந்துபோகும். எனவே, பொதுப் பயன் தொழில்கள் அளிக்கின்ற பொருள்கள் குறைந்த அளவில் நுகரப்படுமேயானால், அப் பொருள் விலை நெகிழ்ச்சியற்றதாகவும், இதற்கு மாறாக, அதிக அளவில் நுகரப்படுமேயானால், அதன்விலை நெகிழ்ச்சியுடையதாகவும் கருதப்படும்.

அமைக்கப்பட்டுள்ள 'ஒழுங்காற்றுக்குழு' (Regulatary Commission) இந்த உச்ச அளவினை விதிக்கின்றது. நுகர்வோரிடமிருந்து கட்டணமாகவோ, விலையாகவோ குறிப்பிட்ட ஓர் அளவுமட்டுமே மொத்த வருவாயாக வசூலிக்கப்பட வேண்டும், என்று இக் குழு ஆணையிடும். இதனால் கிடைக்கின்ற மொத்த வருவாயை எளிதில் அறிந்து கொள்ள முடியுமாதலால் அதற்கேற்றவாறு இந் நிறுவனங்கள் பொருள்களுக்கான விலையை எளிதில் கணக்கிடலாம். புதிதாகத் தொடங்கப்படுகின்ற ஒரு தொழில் நிறுவனம் தான் எத்தகைய கட்டணத்தைத் தனது பொருளுக்கு வசூலிக்க எண்ணுகிறது என்பதை இக் குழுவிற்கு அறிக்கைமூலம் முன்கூட்டியே தெரிவிக்கவேண்டும். அறிக்கையை நன்கு ஆராய்ந்த பின்னர், ஏதேனும் மாற்றம் செய்தோ மாற்றம் செய்யாமலோ, 'ஒழுங்காற்றுக் குழு' தனது அனுமதியை வழங்கும். பின்னர், நுகர்வோரிடமிருந்து இதே கட்டணத்தைப் பெறுதல் வேண்டும்.

பொதுவாக, பொதுப்பயன் தொழில்கள் அளிக்கின்ற பொருள்கள் தரநிலைப்படுத்தப்பட்டவை (Standardised) என்று சொன்னாலும், உண்மையில் அவை பொருளாதார நோக்கின்படி, பல்வேறு தரத்தினை உடையதாகவே காணப்படுகின்றன. அதாவது இந் நிறுவனங்கள் உற்பத்தி செய்து அளிக்கின்ற பொருள்களின் தரம் (Quality) ஒன்றாகவே இருப்பினும், இவ்வாறு பொதுப்பயன் தொழில்களின் பொருள்களுக்கான தேவை விதிகள் அப் பொருள்கள் வேண்டப்படுகின்ற காலம், இவற்றின் விலை நெகிழ்ச்சி மற்றும் இவற்றிற்கான மாற்றுப் பொருள்கள் (Substitutes) போன்றவற்றைப் பொறுத்தே அமைகிறது எனலாம்.

**பொதுப்பயன் தொழில்களின் விலைக் கொள்கை**

ஒரு தொழில் நிறுவனம், தான் உற்பத்தி செய்கின்ற பொருளுக்கான விலையைப் பலவிதங்களில் நிருணயிக்கலாம். சான்றாக, குறிப்பிட்ட ஒரு பொருளுக்கான தேவை மிகுந்து இருக்குமேயானால், அப் பொருளின் விலையும் உயர்வாகவே நிருணயிக்கப்படும். தேவை குறைவாக இருப்பின், விலையும் குறைவாகக் காணப்படும். மேலும் அப் பொருளை உற்பத்தி செய்ய ஆகும் மொத்தச் செலவோடு, அப் பொருளை விற்பனை செய்ய ஆகும் செலவு மற்றும் சிறிதளவு இலாபம் போன்றவையும் ஒன்றாகச் சேர்க்கப்பட்டுப் பின்னர் அதற்கான விலை நிருணயிக்கப்படும். ஆனால், பொதுப்பயன் தொழில்கள். உற்பத்தி செய்கின்ற பொருள்களுக்கும், அவை அளிக்கின்ற வசதிகளுக்கும் விலையையோ, கட்டணத்தையோ இவ்வாறு நிருணயிக்க இயலாது. ஒவ்வொரு பொதுப்பயன் தொழில் நிறுவனமும் எவ்வளவு இலாபத்தினை ஈட்டலாம் என்று ஓர் உச்ச அளவு நிருணயிக்கப்படும். இத் தொழில் நிறுவனங்களை முறைப்படுத்த இப் பொருள்கள் வேண்டப்படுகின்ற விதம், காலம் போன்றவற்றை எண்ணும்போது, இவை தரப்படுத்தப் படாதவை என்றே கருத வேண்டியிருக்கின்றது. மேலும்

(1) இப் பொருள்களை நுகர்வோரின் பலதரப்பட்ட தேவைகள்,

(2) இப் பொருள்களும் (வணிகரும்) உபயோகப்படுத்தப் படும் பல்வேறு முறைகள்,

(3) இவை வேண்டப்படும் பல்வேறு காலங்கள் என்ற மூன்று கருத்துகளையும் ஆராய்ந்து பார்க்கையில், பொதுப்பயன் தொழில் நிறுவனங்கள் அளிக்கும் பொருள்கள் வேறுபாடு உடையதாகவே காணப் படுகின்றன. ஆகவே, இப் பொருள்களுக்கான விலையும் ஒன்றாக நிருணயிக்கப்படாமல், வேறுபாடுடையதாகவே காணப்படுகின்றது. இதனையே "வேறுபாடு விலைக் கொள்கை" (Differential Pricing Policy) என்கிறோம். இக் கொள்கையின் படி, பொதுப்பயன் தொழில்கள் அளிக்கின்ற பொருள்களையும் வசதிகளையும் நுகர்வோர் பலவிதப் பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டு, ஒவ்வொரு பிரிவினருக்கும் தனித்தனியே கட்டணம் விதிக்கப் படுகின்றது.

இவ்விதம் செய்வதன்மூலம், ஒவ்வொரு பிரிவினருக்கு மிடையே, அவர்கள் வாங்குகின்ற பொருளின் தரம் ஒன்றாக இருப்பினும், அவர்கள் செலுத்துகின்ற கட்டணத்தில் வேறுபாடு இருக்கின்றது. ஆயினும், ஒரு பிரிவினைச் சார்ந்த எல்லா நுகர் வோருக்குமிடையே வேறுபாடு ஏதும் இல்லை. இதுவே வேறு பாட்டு விலைக்கொள்கை செயற்படுத்தபடும் முறையாகும். இக் கொள்கையின் மூலமாகச் சில நன்மைகள் விளைகின்றன. அவை:—

(1) அனுமதிக்கப்பட்ட உச்ச அளவு வரை இலாபத்தினை ஈட்ட வாய்ப்பு ஏற்படுகின்றது.

(2) நிறுவனத்தின் முழு அளவு உற்பத்தித் திறனும் உபயோகிக்கப்படுகின்றது.

(3) நெருக்கடியான நேரத்திலும் (Peak.hour) தேவையிருப் பினும் இல்லாவிடினும் இப் பொருள்களை வாங்க எண்ணும் நுகர்வோரிடமிருந்து (அபராதம் போன்று) அதிகக் கட்டணத்தைப் பெற முடியும். இதன் மூலம் இவர்களின் தேவையை, நெருக்கடி குறைந்த நேரத்திற்கு மாற்றி அமைக்கலாம்.

வேறுபாட்டு விலைக் கொள்கையின் ஏனைய செய்திகளை இந் நூலில் வேறொரு பகுதியில் விரிவாகக் காணலாம்.

**பெருமளவு மூலதனம்**

அதிக அளவில் நிலை முதல் (Fixed Capital) ஏற்படுத்தி வைத்துக் கொள்வது பொதுப்பயன் தொழில்களின் சிறப்புத் தன்மைகளில் ஒன்றாகும். இத் தன்மையின் விளைவாக இந் நிறு வனங்களின் பொருளாதாரப்போக்கில் ஏற்படுகின்ற மாறுதல்கள் பலவாகும். குறிப்பாக, பொதுப்பயன் தொழில் நிறுவனங்களுக்கு ஏற்படும் நிரந்தரச் செலவுகள் மிகவும் அதிகமாகக் காணப்படும். இந் நிறுவனங்கள் அதிக அளவில் நிலைமுதல் வைத்திருக்க வேண்டுமானால், கணிசமான அளவில் கடன் வாங்க வேண்டியநிலை ஏற்படுகின்றது. அவ்வாறு வாங்கும் கடனுக்கு அதிக வட்டியும் செலுத்த வேண்டியுள்ளது. மேலும், இந் நிறுவனங்கள் கட்டடம், இயந்திரம் போன்ற நிலையான சொத்துகளை மிகுந்த அளவுக்கு வாங்கிவைக்கும் தன்மை படைத்தவையாதலால், இச் சொத்து களின்மீதான வரியும் அதிகமாகவே செலுத்த வேண்டியுள்ளது. இவ்வாறு செலவினங்கள் பெருகிக் கொண்டே போகும் இந் நிறு

வனங்களுக்கான வருவாய், இவற்றின் உற்பத்தியைப் பொறுத்து அமைவதில்லை. மாருக, இந் நிறுவனங்களின் அமைப்பினைப் பொறுத்தே அமைகின்றது. இவை உற்பத்தி செய்கின்ற பொருள்களுக்கு (அல்லது வழங்குகின்ற பணிகளுக்கு) ஆண்டு முழுவதிலும் சராசரியாக அதிக அளவில் இருக்கின்ற தேவையினைப் பொறுத்தே இத் தொழில் நிறுவனங்களின் வருவாயும் ஏற்படுகின்றது என்றும் கூறலாம். இத்தன்மையின் காரணமாகவே, இந் நிறுவனங்கள் உற்பத்தி செய்யும் பொருள்கள் தொழிலாளரின் உழைப்பின் விளைவு என்று கூறுவதைவிட, இவை வைத்திருக்கும் இயந்திரங்கள், தொழிலின் அமைப்பு இவற்ருல் உண்டாக்கப்பட்டவை என்று கூறுவதே பொருத்தமுடையதாகும்.

இனி, தொழில் நிறுவனங்களுக்குத் தேவையான மூலதனம் எவ்வாறு தீர்மானிக்கப்படுகிறது என்பதைப் பார்ப்போம். ஒவ்வொரு வியாபார ஆண்டு முடிவிலும் கிடைக்கின்ற வருவாயைப் பொறுத்தே, ஒரு நிறுவனத்தின் மூலதனத் தொகை அமைகின்றது. ஆகவே, அதிகமான வருவாய் ஈட்டுகின்ற நிறுவனம் அதிகமான அளவில் மூலதனத்தை வைத்திருந்தாலும், குறைவான வருவாயைப் பெறுகின்ற நிறுவனம் குறைந்த அளவில் மூலதனத்தினை வைத்திருத்தலும் வேண்டும் என்பது புலனுகின்றது. இவ்வாறு கிடைக்கின்ற மொத்த வருவாய்க்கும், ஏற்படுத்தப்படுகின்ற மூலதனத் தொகைக்குமிடையே உள்ள தொடர்பினை ஒரு விகிதாசாரமாகக் குறிப்பிட வேண்டுமானுல், அதனை "மூலதன விற்பனை நுட்பவிகிதம்" (Capital Turn over ratio) எனலாம். இவ்விகிதத்தின்படி ஓராண்டுக் காலத்தில் ஒரு வணிக நிறுவனம் செய்கின்ற ஒவ்வொரு ரூபாய் மதிப்புள்ள வியாபாரத்திற்கும் எவ்வளவு முதலீடு செய்ய வேண்டும் என்பதைக் கண்டறியலாம். பொதுவாக, இவ்விகிதத்தின் குறைந்த அளவு 1·0க்குக் குறைவானதாகவும், உச்ச அளவு 2·0-க்கு மேற்பட்டதாகவும் இருக்கும். இவ்விகிதத்தை உபயோகித்து, பொதுப்பயன் தொழில்களுக்கும், பிற தொழில்களுக்கும் தேவையான மூலதனத் தொகையினை ஒப்பிட்டுப் பார்த்தல் எளிதானதாகும்.

எந்த ஒரு தொழில் நிறுவனத்தைக் காட்டிலும் பொதுப் பயன் தொழில் நிறுவனங்களின் மூலதன வருவாய் விகிதம் குறைவானதாகவே இருக்கும். இதனைக் கீழ்க்காணும் அட்டவணையிலிருந்து அறிந்து கொள்ளலாம் :—

அட்டவணை 1

| எண் | தொழில்வகை | தேவையான மூலதன வருவாய் விகிதம் |
|---|---|---|
| 1. | மின்திறன் தொழில்கள் ... | 0·80 |
| 2. | எரிவாயுத் தொழில்கள் ... | 0·60 |
| 3. | தொலைபேசி நிறுவனங்கள் ... | 0·40 |
| 4. | குடிநீர் வழங்கும் நிறுவனங்கள் ... | 0·20 |
| 5. | பெருமளவு மொத்த உற்பத்தி செய்யும் நிறுவனங்கள் ... | 2·00 |

இப் பட்டியலில் காணப்படும் நிறுவனங்கள் அனைத்திலும், குடிநீர் வழங்கும் நிறுவனத்திற்கான மூலதன வருவாய் விகிதம் குறைந்த அளவில் நிருணயிக்கப்பட்டுள்ளதைக் கவனமாக நோக்குதல் வேண்டும். இதனல் குடிநீர் வழங்கும் நிறுவனத்திற்குக் கிடைக்கும் வருவாய் மிகக் குறைவாகவே உள்ளது என்ற உண்மை நன்கு விளங்கும். இதற்கு மாருக, எரிவாயு வழங்கும் நிறுவனம் மற்றத் தொழில்களைவிட அதிக மூலதன வருவாய் விகிதத்தினைப் பெற்றிருக்கின்றபடியால், இதற்கான மூலதனமும் அதிக அளவில் இருக்க வேண்டுமென்பது புலனுகிறது. இவ்வாறு பொதுப்பயன் தொழில்கள் அனைத்திற்கும் குறைந்த அளவிலேயே இம் மூலதன வருவாய் விகிதம் அமைந்திருப்பினும், போக்குவரத்துவசதியினை அளிக்கும் நிறுவனங்கள் மட்டும் விதிவிலக்காகக் கருதப்படுகின்றன. மக்களுக்கு இன்றியமையாது வேண்டிய போக்குவரத்து வசதியை அளிக்கும் இவையும் பொதுப்பயன் தொழில் நிறுவனங்கள் எனினும், இவற்றின் மூலதனம் பெருமளவில் காணப்படுகின்றது. காரணம் தடையற்ற போக்குவரத்து வசதியினை அளிக்க அதிகமான பேருந்துகளும், சக்கரங்கள், டயர்கள், இயந்திரப் பாகங்கள் மற்றும் இவை போன்ற இதர பொருள்களும் கணிசமான அளவில் கைவசம், வைத்திருத்தல் வேண்டும். அப்போதுதான், விபத்து நேரிட்டாலும், இயந்திரக்கோளாறு ஏற்பட்டாலும் கருவிகள் பழுதுபட்டாலும் வேறொரு பேருந்தினை ஏற்பாடு செய்தோ உடனடியாகப் பழுதுபார்த்தோ, தடையின்றிப் பொதுமக்கள் பயணத்தைத் தொடரமுடியும். ஆகவே, இக் கருவிகளையும், உபகரணங்களையும் வாங்கி வைக்கும் செலவும் முதலீட்டுத் தொகையுடன் சேர்த்தே கணக்கிடப்படுகின்றது.

இனி, பொதுப்பயன் அல்லாத பிற தொழில்களில் இம் மூலதன வருவாய் விகிதத்தினை பார்ப்போம். பெரும்பாலான தொழில்களின் விகிதம் 2.0 ஆக (அட்டவணைப்படி) இருப்பினும், சிலவகைத் தொழில்களில் இஃது அதிகமாகவே காணப்படு கின்றது. சான்றாக, உணவுப்பொருள்களையும், தோல் பொருள் களையும் தயாரிக்கும் நிறுவனங்கள் அதிக அளவில் மூலதலத்தினை வைத்திருத்தல் வேண்டும். இவற்றிற்கான மூலதன வருவாய் விகிதம் 4.0 ஆகக் கணக்கிடப்படுகின்றது. இதேபோன்று, இவ்வுற்பத்தியாளர்களைவிட மொத்த விற்பனையாளர்களும், சில்லறை விற்பனையாளர்களும் அதிக அளவில் மூலதனத்தினை வைத்துக்கொள்ள வேண்டியுள்ளது. இவர்கள் தங்கள் வாணிகத்தில் 4.0 முதல் 6.0 வரை விகிதம் கொண்ட தொகையினை மூலதனமாக ஈடுபடுத்துகின்றனர்.

இவ்வாறு ஒவ்வொரு வகைத் தொழிலும் தங்களது தேவைக் கேற்ப மூலதன வருவாய் விகிதத்தினை அமைத்துக் கொள்கின் றன. இத் தொழில்களுக்குக் கிடைக்கும் இலாபம் எத்தகையது என்பதனையும், இவ்விகிதத்தினைக் கொண்டே எளிதாகக் கணக் கிடலாம். சான்றாக (மேற்கண்ட அட்டவணைப்படி) மின்திறன் வழங்கும் நிறுவனங்களுக்கு இவ்விகிதம் 0.30 என அமைந் துள்ளது. இதன் பொருள், தாங்கள் முதலீடு செய்துள்ள தொகையினைப் பெறச் சுமார் மூன்று வருடங்கள் உழைக்க வேண்டும் என்பதாகும். இதே போன்று, மொத்த உற்பத்தியில் ஈடுபட்டிருக்கும் நிறுவனங்களுக்கான விகிதம் 2·0 எனக் காணப் பட்டுள்ளது. இதன் பொருள், இந் நிறுவனங்கள் தங்களது மூலதனத் தொகையினைவிட இரண்டு மடங்கு வருவாயை ஆண்டு தோறும் பெறுகின்றன என்பதாகும்.

இத் தொழில்களுக்கு வேண்டிய மூலதனத் தொகையையும் இவ்விகிதத்தினைக் கொண்டே கணக்கிடலாம். மேலே தரப்பட்ட நிறுவனம் ஓர் எடுத்துக்காட்டின்படி, மின்திறன் வழங்கும் ஒரு நிறுவனம் (விகிதம் 0·3) ஒரு ரூபாய் வருமானம் பெற வேண்டுமா னால், மூன்று ரூபாய் முதலீடு செய்ய வேண்டுமென்று கணக்கிட்டு அறியலாம். இதற்கு முற்றிலும் மாறாக, மொத்த உற்பத்தி செய்யும் நிறுவனங்கள் (விகிதம் 2.0) ஒரு ரூபாய் வருமானம் பெற 0.50 காசு முதலீடு செய்தால் போதுமானது என்றும் அறியலாம். இவ்விரண்டு தொழில் நிறுவனங்களையும் ஒப்பிட்டுப் பார்க்கையில் மொத்த உற்பத்தியாளர்களைவிட மின்திறன் வழங்கும் நிறு வனங்கள் ஆறு மடங்கு மூலதனத்தொகையினை வைத்திருக்க வேண்டுமென்று தெரிய வருகின்றது. ஆகவே, பொதுப்பயன் தொழில் நிறுவனங்கள் அனைத்தும் (போக்குவரத்து நிறுவனங்

களைத் தவிர) பிறவகை நிறுவனங்களைவிட பெருமளவு மூல தனத்தினை வைத்திருக்கின்றன என்பது இவற்றின் பொருளாதாரத் தன்மைகளில் மற்றொன்றாகும்.

**நடைமுறை விகிதம் அல்லது இயக்கச் செலவு விகிதம் (Operating Ratio)**

ஒரு தொழிலை நடத்தப் பலவகைச் செலவுகளைச் செய்ய வேண்டும். அன்றாடச் செலவுகள் மட்டுமின்றித் தேய்மானச் (Depreciation) செலவுகள், வரி அளிப்பு போன்றவற்றையும் ஒரு நிறுவனம் ஏற்கிறது. இவற்றைச் செய்த பின்னர் கிடைக்கும் வருவாயைக் கொண்டு, இந் நிறுவனம் இலாபத்தில் நடந்து கொண்டிருக்கின்றதா அல்லது நட்டத்தில் நடந்துகொண்டிருக்கின்றதா எனத் தீர்மானிக்க முடியும். ஆகவே, ஒரு நிறுவனம் செலவிடுகின்ற தொகைக்கும் அந் நிறுவனத்திற்குக் கிடைக்கின்ற மொத்த வருமானத்திற்கும் இடையே ஒரு தொடர்பு உள்ளது, இத் தொடர்பினை விகிதமுறையில் கணக்கிடலாம். இதுவே "நடைமுறைச் செலவு விகிதம்" அல்லது "நடைமுறை விகிதம்" எனப்படுகின்றது. பெரும்பாலும் இவ்விகிதத்தினை நூற்றியமாகக் (சதவீதமாக) கணக்கிடுதல் மரபு. சுருங்கக்கூறின், "ஒரு தொழிலில் செய்யப்பட்ட முதலீட்டினைத் திரும்பப் பெறும் முன்னர், அத் தொழிலை நடத்தச் செய்யப்பட்ட செலவுகளுக்கும் அத் தொழிலில் கிடைக்கின்ற வருவாய்க்குமிடையே உள்ள விகிதமே நடைமுறைச் செலவு விகிதம் எனலாம்". இந்த நடைமுறை விகிதத்துடன் தொடர்பு உடையதாக இலாபவரம்பு (Return margin) காணப்படுகின்றது. ஒரு நிறுவனத்தில் ஏற்படுகின்ற செலவுகளனைத்தையும் செய்த பின்னர், அந் நிறுவனத்தின் பகுதாரர்களுக்கு அளிப்பதற்காக மீதமிருக்கும் தொகையே இலாப அளவு எனப்படும். நடைமுறை (செலவு) விகிதமும் இலாப அளவும் நேர்விகிதத்தில் மாறுபடுகின்றன. அதாவது நடைமுறைச் செலவு அதிகமானால், கிடைக்கின்ற இலாப அளவு குறைவாகவும், நடைமுறைச் செலவு குறைவானால் கிடைக்கின்ற இலாப அளவு அதிகமாகவும் காணப்படும். சான்றாக, ஒரு நிறுவனம் நூறு ரூபாய் மதிப்புள்ள வர்த்தகத்தை 90 ரூபாய் செலவில் செய்திருக்குமேயானால், அந் நிறுவனத்திற்குக் கிடைக்கும் இலாப அளவு பத்து ரூபாய் ஆகும்.

நடைமுறைச் செலவுத் தொகைக்கும், இலாப அளவிற்குமிடையே உள்ள தொடர்பினைப் போன்றே, முதலீட்டுத் தொகைக்கும், நடைமுறைச் செலவிற்குமிடையே உள்ள தொடர்பினைப் போன்றே, முதலீட்டுத் தொகைக்கும், நடை-

முறைச் செலவிற்குமிடையே நெருங்கிய தொடர்பு உள்ளது. அதிக அளவில் முதலீடு செய்யப்பட்டிருக்கும் நிறுவனங்களில் அன்றாட நடைமுறைச் செலவுகள் குறைந்து காணப்படும். மாறாக, முதலீடு குறைவாக இருக்குமேயானால், அன்றாட நடைமுறைச் செலவும் குறைந்து காணப்படும். இக் கருத்தின் அடிப்படையில், முதலீட்டுத் தொகை அதிக அளவில் காணப்படும். பொதுப் பயன் தொழில்களின் நடைமுறைச் செலவுகள் குறைவாகவே இருக்கும் என்பது புலனாகிறது. அவ்வாறெனில், இத் தொழில்களில் கிடைக்கும் இலாப அளவு அதிகமானதாக இருக்கும். இலாபம் அதிகமாக கிடைக்கும் இந் நிறுவனங்களின் பங்குதாரர்களுக்கும் இலாப ஈவு அதிகமாகவே கிடைக்கும். இவ்வுண்மையைக் கீழ்க்காணும் அட்டவணை தெளிவாக விளக்கு கின்றது:—

**அட்டவணை 2**

| எண் | தொழில் வகைகள் | நடைமுறைச் செலவு விகிதம் (நூற்றியம்) |
|---|---|---|
| 1. | மின் திறன் தொழில்கள் ... | 80% |
| 2. | எரிவாயுத் தொழில்கள் ... | 88% |
| 3. | தொலைபேசி நிறுவனங்கள் ... | 86% |
| 4. | குடிநீர் வழங்கும் நிறுவனங்கள் ... | 75% |
| 5. | பெருமளவில் உற்பத்தி செய்யும் நிறுவனங்கள் ... | 94% |

பொதுப்பயன் தொழில் நிறுவனங்களைவிட, அதிகமான முதலீட்டு வருவாய் விகிதத்தினையுடைய பிற நிறுவனங்களின் நடைமுறைச் செலவு விகிதமும் அதிகமாகவே காணப்படுவதைக் கவனித்தல் வேண்டும். இதிலிருந்து அதிகமான வருவாயை உடைய நிறுவனங்களின் நடைமுறைச் செலவும் அதிகமாகவே காணப்படும் என்று தெரிந்து கொள்ளலாம். சான்றாக, மேற் கண்ட அட்டவணைப்படி, பெருமளவில் மொத்த உற்பத்தி செய்யும் நிறுவனங்களின் முதலீட்டு வருவாய் விகிதம் 2.0 எனக் கணக்கிடப்பட்டது. இவற்றின் வருவாயும் (குறைந்த மூல தனத்தில்) அதிக அளவில் கிடைப்பதாகக் கணக்கிடப்பட்டது. ஆனால் (அட்டவணை 2-ன் படி) இந்த வருவாயைச் சம்பாதிக்க

வேண்டுமானால், இந் நிறுவனங்கள் அதிக அளவில் நடைமுறைச் செலவினைச் செய்ய வேண்டியிருக்கும் என்பதும், அதிகமான செலவின் காரணமாக மொத்த இலாபம் குறைய நேரிடும் என்பதும் அறியத் தக்கது. இதனைக் கணக்கிடும் சூத்திரம் பின்வருமாறு :-

$$\left.\begin{array}{c}\text{நடைமுறைச்}\\ \text{(செலவு)}\\ \text{விகிதம்}\end{array}\right\} = \frac{\text{நடைமுறைச் செலவுகள்} + \text{தேய்மானச் செலவுகள்} + \text{வரி அளிப்பு.}}{\text{மொத்த வருமானம்.}}$$

நடைமுறைச் செலவு விகிதத்திற்கும் கிடைக்கின்ற இலாபத்திற்கும் இடையேயுள்ள எதிர்மறைத் தொடர்பினை அடிப்படையாகக் கொண்டு, ஒரு பொதுப்பயன் தொழிலுக்கும், பிறவகைத் தொழிலுக்குமிடையேயுள்ள வேறுபாட்டினை அறிய வாய்ப்பு ஏற்படுகின்றது. குறிப்பாக, இவ்விருவகைத் தொழில்களிலும், முதலீடு செய்வதில் ஏற்படும் ஆபத்தினையும் நடைமுறை விகிதத்தினைக் கொண்டு அறியலாம். எவ்வாறெனில், நடைமுறைச் (செலவு) விகிதம் மிகுந்து காணப்படின் அத் தொழிலினின்று கிடைக்கின்ற இலாபம் அல்லது வருவாய் குறைவாகக் காணப்படும் என்ற உண்மையைக் கொண்டு, இத் தொழில் தொடர்ந்து நடத்தப் பெறுமேயாயின், நாளடைவில் இதனுடைய நிதிநிலைமை சீர்குலைந்துவிடும் என்று அறியலாம். வருவாய் குறைவதோடுமட்டுமன்றி, நடைமுறைச் செலவுகளும் அதிகமாகி விட்டதால் பங்குதாரர்களுக்குப் பகிர்ந்தளிக்கக் கூடிய இலாப ஈவும் மிகவும் சொற்பமானதாகவே இருக்கும். சில தொழில்களில் கம்பெனியின் சொத்துகளை விற்றுவது தொழிலை நடத்த வேண்டிய நிலை ஏற்படலாம். இவ்வாறு, எப்போது ஒரு தொழிலின் நடைமுறைச் செலவு அதிகமாகத் தொடங்குகின்றதோ, அப்போது அத் தொழிலினை நிதிப்பற்றுக்குறை என்னும் கொடிய நோய் பற்றியுள்ளதாகக் கூறலாம்.

பொதுப்பயன் தொழிலைப் பொறுத்தமட்டில், இந் நிலை பெரும்பாலும் ஏற்படுவதில்லை. ஏனெனில், அவற்றின் நடைமுறைச் செலவு விகிதம் குறைந்து காணப்படுகின்றது. இதன் காரணமாக அவற்றின் வருவாயில், செலவுகளுக்கு ஈடுசெய்தது போக, அதிக அளவுத் தொகை மிஞ்சுகின்றது. இதனைப் பங்குதாரர்களுக்குப் பகிர்ந்து அளிக்கும்போது ஒவ்வொருவருக்கும் அதிக அளவில் இலாப ஈவு கிடைக்கின்றது. இவ்வாறின்றிச் சிலவகைப் பொதுப்பயன் தொழில்களில் நடைமுறைச் செலவு அதிகமாகவும் அமையலாம். அப்படியானால்

இவற்றின் நிலையும் பிணிகொண்ட நோயாளியைப் போன்றது தானே என்ற வினை ஒருவர் மனதில் எழலாம்; ஆனால் பொதுப் பயன் தொழில்களுக்கும் பிற தொழில்களுக்கும் இடையே வேறுபாடு உண்டு அல்லவா? பொதுப்பயன் தொழில்கள் தம் வயம் பெருமளவில் நிலையான சொத்துகளை வைத்துக் கொள்பவை. எதிர்பாராதவிதமாக, நடைமுறைச் செலவுகள் உயர்ந்துவிட்டால், அதனை ஈடுகட்டும் வகையில், இச் சொத்துகளை விற்று அதைச் சமாளிக்கலாம். ஆனால், நிலையான சொத்துகளைக் குறைந்த அளவில் வைத்திருக்கும் பழக்கமுள்ள ஏனைய தொழில்களால் இவ்வாறு செய்ய இயலாது. ஆகவே நடைமுறைச் செலவுகளின் காரணமாகப் பொதுப்பயன் தொழில் களின் நிதிநிலைமை பெரிதும் பாதிக்கப்படுவதில்லை என்ற கருத்தினை உணரலாம்.

## 1. கடன் விகிதம் (Debt Ratio)

ஒரு தொழிலின் முதலீட்டுத் தொகைக்கும் அத் தொழில் பெற்றுள்ள கடன் தொகைக்கும் இடையேயுள்ள தொடர்பினையே கடன்விகிதம் காட்டுகின்றது. இதனை,

$$\text{கடன் விகிதம்} = \frac{\text{நீண்ட காலக் கடன்}}{\text{மொத்த மூலதனம்}}$$

என்ற சூத்திரத்தின்மூலம் கணக்கிடலாம். எத்தொழிலையும் சொந்த மூலதனத்துடன் மட்டும் நடத்த இயலாது. பெருமளவில் முதலீடு செய்து நடத்தும் நிறுவனங்களும் கடனுதவி பெற்றே தொழிலுக்கு வேண்டிய மூலதனத்தைப் பெறுகின்றன. தனிநபர் தொழில்களும், கூட்டுப்பங்கு கம்பெனிகளும், ஏனைய நிறுவனங் களும் இத்தகைய கடனைப்பெற பல்வேறு முறைகளைக் கையாளலாம். சான்றாக, வங்கியிலிருந்து கடனைப் பெறுதல், பொதுமக்களிடமிருந்து வைப்புத்தொகை (Deposits) பெறுதல், சென்ற ஆண்டின் இலாபத்தினை மீண்டும் உபயோகித்தல் போன்ற பல வழிகளை அவை கடைப்பிடிக்கலாம். ஆனால் பொதுப்பயன் தொழில்களைப் பொறுத்தமட்டில், அவற்றின் மூலதனத்தின் பெரும்பகுதி கடன்தொகையால் அமைக்கப்பட் டிருக்கும். சில நேரங்களில் இத் தொகை மூலதனத்தில் மூன்றில் ஒரு பங்காகவோ மூன்றில் இரண்டு பங்காகவோ இருக்கலாம். இன்னும் சில பொதுப்பயன் தொழில்களில் இக் கடன் தொகை, மூலதனத்தில் சரிபாதியளவுகூட இருக் கலாம். இத் தொழில் நிறுவனங்கள் வெளியிடுகின்ற கடன் பத்திரத்தினைப் பெருமளவில் வாங்குவதன்மூலம் பொதுமக்கள் இவற்றிற்குக் கடன் தொகையை வழங்குகின்றனர். இக் கடன்

பத்திரங்கள் வெளியிட்ட நாள்முதல் ஒரு வார காலத்திற்குள்ளாகவே அவை அனைத்தையும் பொதுமக்கள் வாங்கிவிட்டார்கள் என்ற அறிக்கையை அடிக்கடி செய்தித்தாள்களில் பார்க்கலாம். இவ்வாறு எவ்விதத் தடையுமின்றி, எளிதில் இந் நிறுவனங்கள் கடன் எழுப்புவதற்கு முக்கிய காரணம், பொதுமக்கள் இந் நிறுவனங்களின்மீது வைத்துள்ள நம்பிக்கைதான். முன்னரே குறிப்பிட்டபடி பொதுப்பயன் தொழில்களின் நடைமுறைச்செலவு விகிதம் (operating ratio) குறைவாகவும், முதலீட்டு விகிதம் அதிகமாகவும் இவற்றின் காரணமாக, மூலதன வருவாய் விகிதம் (capital turnover ratio) அதிகமாகவும் இருப்பதுதான். மேலும் சந்தையில் போட்டியின்றித் தனிநிலை பெற்று இயங்கும் இப் பொதுப்பயன் தொழில்களின் வாழ்வும் (life) நீடித்திருக்குமாதலால், பொதுமக்கள் எவ்விதத்தடையும், ஐயமுமின்றி இவற்றிற்கான கடன் தொகையினை அளிக்க முன் வருவர். இதன் காரணமாக, வாணிகச் சுழல்களினால் ஏற்படுகின்ற சுறுசுறுப்பான அல்லது மந்தநிலைகளின்போதும் இந் நிறுவனங்களின் வாழ்க்கை பாதிக்கப்படுவதில்லை. சான்றாக, 1928ஆம் ஆண்டு உலகம் முழுவதும் ஏற்பட்ட வாணிக மந்தநிலையின்போது, 40 தொழில் நிறுவனங்களின் வருவாய் 11·6%லிருந்து, 2·6% ஆகக் குறைந்துவிட்டது. இருப்பினும் நான்கு ஆண்டுகள் கடந்தபின் மந்த நிலையின் மிக மோசமான வருடமான 1932ஆம்ஆண்டிலும் பொதுப்பயன் தொழில்களின் வருவாய் 7·9%-லிருந்து, 6·2%-ற்குக் குறைந்தது.* இப் புள்ளிவிவரத்திலிருந்து, பொதுப்பயன் தொழில்களின் வருவாய் மிகவும் சீராகவே காணப்படுமென்ற உண்மையை நாம் உணர முடியும். ஆகவேதான், இந் நிறுவனங்களின் கடன்தொகை, இவற்றின் மூலதனத் தொகையில் சரிபாதியளவு இருக்கக் காணுகின்றோம்.

**பங்காதாய அளிப்பு விகிதம் (Dividing Pay-out ratio)**

எந்த ஒரு தொழிலும் உயர்ந்த அளவில் இலாபம் ஈட்டுவதையே குறிக்கோளாகக் கொள்ளும். இவ்வாறு ஈட்டப்பட்ட இலாபத்தினை அத் தொழில் நிறுவனத்தின் பங்குதாரர்களுக்குப் பிரித்துக் கொடுத்தல் மரபு. சுருங்கக்கூறின் ஒரு தொழில் நிறுவனத்தின் வருவாய்க்கும் அந் நிறுவனத்தின் பங்குதாரர்களுக்கு அளிக்கப்படும் பங்காதாயத்திற்கும் (dividend) இடையே உள்ள தொடர்பினைப் "பங்காதாய அளிப்பு விகிதம்" எனக் குறிப்பிடலாம். இதனைக் கண்டுபிடிக்கப் பயன்படும் சூத்திரம் பின்வருவதாம்:—

* "How Profitable is Big Business?" New York, 20th Century Fund.

$$\left.\begin{array}{c}\text{பங்குதாரர்களுக்கு அளிக்கப்படும்} \\ \text{பங்காதாய விகிதம்}\end{array}\right\} = \frac{\text{பங்கு ஆதாயம்}}{\text{மொத்த வருவாய்}}$$

பொதுவாகப் பிற தொழில் நிறுவனங்களைவிட பொதுப்பயன் தொழில் நிறுவனங்கள் அதிக அளவில் பங்காதாயத்தினை அளிக்கின்றன. இவ்வாறு செய்வதன்மூலம் இந் நிறுவனங்களின் மற்றொரு பொருளாதாரச் சிறப்புத் தன்மை வெளிப்படுகின்றது. அதாவது பிற தொழில் நிறுவனங்கள் தங்களது கடந்த ஆண்டின் நிகர இலாபத்தின் பெரும்பங்கினை அந் நிறுவனத்தின் வளர்ச்சிக்காக மீண்டும் முதலீடு செய்வதுண்டு. இவ்வாறு செய்வதால் பங்குதாரர்களுக்குப் பகிர்ந்து அளிக்கப்படும் பங்காதாயம் குறைந்துபோக நேரிடும். ஆனல், பொதுப்பயன் தொழில்கள் தாம் ஈட்டுகின்ற நிகர இலாபத்தின் முழு அல்லது பெரும் பகுதியைப் பங்குதாரர்களுக்கே பகிர்ந்து அளிக்கின்றன. இதனுல் ஒவ்வொருவருக்கும் கிடைக்கக்கூடிய பங்காதாயம் அதிகமாகக் காணப்படுகின்றது. மேலும், வளர்ச்சித் திட்டங்கள் போன்ற தங்களது பல திட்டங்களுக்குக் கடந்த ஆண்டின் இலாபத்தினைப் பொதுப்பயன் தொழில்கள் எதிர்பார்ப்பதில்லை. மாருக நிதிச் சந்தையிலிருந்து கடன் வசதி பெறுவதையும், பொதுமக்களிடம் இருந்து வைப்புநிதிகளைப் பெறுவதையுமே நம்பி உள்ளன. மேலும் பிற நிறுவனங்களைப்போல் சொத்துகளின் தேய்மானத்தால் (Depreciation) கிடைக்கக்கூடிய வருவாயையும் இவை நம்பியுள்ளன.

எந்த ஒரு தொழிலையும் அதனுடைய பொருளாதாரச் சிறப்பியல்புகளைக்கொண்டே மதிப்பிடுதல் மரபு. பொதுப்பயன் தொழிலின் தனித்தன்மை பல்வகையானதால் விரிவாக ஆராயப்பட்டது. அவை:

(1) இயற்கையான முற்றுரிமை (Natural monopoly).

(2) இயற்கையான முற்றுரிமைநிலையில் அளிப்பு விதிகள் (The Economics of supply under Natural monopolies).

(3) பொதுப்பயன் தொழில்களின் தேவை விதிகள் (The laws of demand of Public utilities).

(4) பொதுப்பயன் தொழில்களின் விலைக்கொள்கை (Price Policies).

(5) பெருமளவு முதலீடு (Large Capital investments).

(6) மூலதன வருவாய் விகிதம் (Capital turnover ratio).

(7) நடைமுறை (செலவு) விகிதம் (Operating ratio).

(8) கடன்விகிதம் (Debt ratio).

(9) பங்காதாய அளிப்பு விகிதம் (Dividend pay-out Ratio).

மேற்கண்ட பொருளாதாரச் சிறப்பியல்புகளைத் தவிர பொதுப்பயன் தொழில்களைச் சமுதாயம் மதிக்கின்ற விதமும் குறிப்பிடத்தக்கது. இன்றியமையாத பொருள்களையும், வசதிகளையும் அளிக்கின்ற இந் நிறுவனங்கள், சமுதாயத்தின் கண்ணோட்டத்தில் பொதுப்பணியாள்களாகவே (Public Servants) எண்ணப்படுகின்றன. ஏனெனில், பிற தொழில்நிறுவனங்களைப் போலன்றி இவை தங்களது விருப்பம்போல் நுகருவோரினைத் தேர்ந்தெடுக்கவோ, ஒருவருக்குப் பொருள்களை அளித்து, மற்றொருவருக்கு மறுக்கவோ இயலாது. இன, மொழி, கால வேறுபாடின்றி எந்நிலையிலும் பொதுமக்களின் பணியாள்களைப் போன்று இவை தொண்டு செய்யக் காத்திருக்கின்றன என்பது குறிப்பிடத்தக்கது.

**கருத்துக் கோப்பு**

பொதுப்பயன் தொழில்களின் பொருளாதாரச் சிறப்பியல்புகள்—இயற்கையான முற்றுரிமை (Natural Monopoly)—முற்றுரிமையின் தன்மைகள்—இயற்கையான முற்றுரிமையில் அளிப்பு விதிகள்—விலையில் வேறுபாடு—பொதுப்பயன் தொழில்களின் தேவை விதிகள்—தேவையின் காலம்—விலை நெகிழ்ச்சி—பொதுப்பயன் தொழில்களின் விலைக் கொள்கை—பெருமளவு முதலீடு—கடன் விகிதம்—பங்காதாய அளிப்பு விகிதம் ஆகியவை.

# 6. கடமையும் உரிமையும்

"நீ ஆற்ற வேண்டிய கடமையைப் பற்றி முதலில் சிந்தி; உன்னைச் சேர வேண்டிய உரிமைகள் தன்னால் வந்து சேரும்."

—அண்ணல் காந்திஜீ.

சந்தையிலுள்ள பிற தொழில்களினின்றும் மாறுபட்டிருக்கும் பொதுப்பயன் தொழிலுக்கெனச் சில கடமைகளும், உரிமைகளும் உள்ளன. அவ்வப்போது ஏற்படுகின்ற சிக்கல்களைச் சட்டத்தின் மூலம் தீர்க்க முற்படும்போது இக் கடமைகளும், உரிமைகளும் பொதுப்பயன் தொழில்களுக்கென உருவாக்கப்பட்டன. பொதுவாக ஒரு வியாபாரி 'ஒப்பந்தச்சட்டங்களின்' (Laws of Contract) படி, தாம் ஈடுபட்டுள்ள வியாபார ஒப்பந்தத்தை நிறைவேற்றக் கடமைப்பட்டுள்ளார். இஃது அவரது கடமையாகிறது. இக் கடமையை ஆற்றுவதற்குக் கைம்மாருக அவருக்கெனச் சில சலுகைகள் வழங்கப்படும். சான்ருக அவர் ஒரு பொருளை விற்ருல் அதற்குப் பதிலாக அப் பொருளை வாங்குபவரிடமிருந்து அப் பொருளின் மதிப்பினை (விலையை)ப்பெற அவருக்கு உரிமையுண்டு. சாதாரண ஒரு வணிகருக்கே இக் கடமைகளும் உரிமைகளும் உரித்தானல், பொதுமக்களுக்காகவே, அவர்களின் நலனைக்காக்கும் பொருட்டே உருவாக்கப்பட்ட பொதுப்பயன் தொழில்களுக்கென வரையறுக்கப்பட்ட கடமைகள் எவ்வளவு இருக்கும் என்பதனையும், இவ்வாறு பொதுநல ஈடுபாட்டினைக் கொண்டு செயற்படும் நிறுவனத்திற்கு அளிக்கப்படவேண்டிய உரிமைகளின் தன்மையைப்பற்றியும் விரிவாக ஆராய்தல் நன்மை பயக்கும்.

**பொதுப்பயன் தொழில்களின் கடமைகள்**

பொதுப்பயன் தொழில்களுக்கெனக் கீழ்க்காணும் கடமைகள் நிருணயிக்கப்பட்டுள்ளன :

**வேறுபாடின்றிப் பொருளினை வழங்குதல்**

(1) முதலாவதாக, இன, மொழி, பொருளாதார, சமுதாய வேறுபாடு எதுவுமின்றி, தாம் பெறக்கூடிய பொருளிற்கான விலையை அளிக்க முன்வரும் எந்த ஒரு நபருக்கும் பொதுப்பயன் தொழில்கள், தாம் உற்பத்தி செய்கின்ற பொருளை அல்லது பணியை வழங்கவேண்டும்.

பொதுப்பயன் தொழில்கள் மக்களுக்காகவே ஏற்பட்ட நிறுவனங்களாகையால், அவற்றின் கண்ணோட்டத்தில் அனைவரும் ஒன்றாகவே கருதப்பட வேண்டும். ஆண், பெண், கற்றோர், கல்லாதோர், குறைந்த வருமானமுடையவர், மிகுதியாக வருமானம் ஈட்டுபவர், வறிஞர், செல்வர் போன்ற எத்தகைய சமுதாய மற்றும் பொருளாதார வேறுபாடுகளும் இத் தொழில்களால் கருதப்படமாட்டா. இவை உற்பத்தி செய்து அளிக்கின்ற பொருளை (அன்றிப் பணியினை) விரும்பி, அதனைப் பெறும் பொருட்டு உரிய வகையில் விண்ணப்பம் செய்யும் எந்த நபருக்கும், அவரிடமிருந்து இதற்கான விலையினைப் பெற்றுக் கொண்டு இப் பொருளினை அளிக்கப் பொதுப்பயன் தொழில்கள் கடமைப்பட்டுள்ளன.

(2) பொதுப்பயன் தொழில்கள் அனைத்தும் தங்களுடைய வாடிக்கையாளர்களின் தேவைக்கேற்றவாறு பொருள்களை உற்பத்தி செய்து அளிக்க முற்படவேண்டும். சில நேரங்களில் வாடிக்கையாளரிடமிருந்து இப் பொருள்களுக்காகத் திடீரெனத் தேவை மிகுந்து காணப்படலாம். இந் நிலையைச் சமாளிக்க வேண்டுமானால், பொருள்களின் உற்பத்தி அதிகரிக்கப்பட வேண்டும். ஆனால், இதற்கான ஏற்பாடுகள் தயாரான நிலையில் இருக்க வேண்டும். எடுத்துக்காட்டாக, பொருள்களை உற்பத்தி செய்வதற்குத் தேவையான மூலப்பொருள்கள், இயந்திரச் சாதனங்கள் போன்றவை கைவசம் இருந்தால்தான் உடனடியாகப் பொருள்களின் உற்பத்தியினைப் பெருக்கமுடியும். இதுவே பொதுப்பயன் தொழில்களின் இரண்டாவது கடமையாகும்.

**நியாயமான கட்டணத்தினை விதித்தல்**

(3) நியாயமற்ற வேறுபாடின்றி, பொதுப்பயன் தொழில்கள் அளிக்கின்ற பொருள்கள் அன்றி பணிகளுக்கான கட்டணம் நியாயமான முறையில் நிருணயிக்கப்பட வேண்டும். வேண்டுவோருக்குக் குறைந்த விலையை விதிப்பதன்மூலம் சலுகையளிப்பதும், வேண்டாதோருக்கு விலையை உயர்த்துவதும் கூடாது. அதுபோன்றே, குறிப்பிட்ட அல்லது நிருணயிக்கப்பட்ட விலைக்கு

மேல் கூடுதலாக வசூலிக்கக்கூடாது என்பதே மூன்ருவது கடமை யாகக் கருதப்படுகிறது. இக் கருத்தினை ஏற்றுக் கொள்கையில், நியாயமான கட்டணம், கூடுதல் கட்டணம் என்ற இரண்டினையும் சிறிது விளக்கமாக ஆராய்தல் நன்மை பயக்கும்.

பொதுநல ஈடுபாட்டுடன் நடத்தப்பெறும் பொதுப்பயன் தொழில்கள், தம் வாடிக்கையாளர் அனைவரையும் ஒன்ருகவே கருதவேண்டும். அறிமுகமானவருக்குக் குறைந்த கட்டணத்தை யும் அறிமுகமாகாதவருக்கு அதிக கட்டணத்தையும் விதித்தல் கூடாது.

**Fitchburg Rail Road (vs) Gage** என்னும் வழக்கில் பிற கப்பல் நிறுவனங்கள் குறைந்த கட்டணத்தினை வசூலிக்கும் போது, குறிப்பிட்ட ஒரு நிறுவனம் மட்டும் அதிக கட்டணத்தை வசூலித்தது தவருனது என்று தீர்ப்பு வழங்கப்பட்டது. இனி **Messenger vs Pennsylvania Rail Road** என்னும் வழக்கினைப் பார்ப்போம். இவ்வழக்கில் பொருள்களை ஏற்றுமதி செய்யும் நபரொருவர் பிறருக்கு விதிக்கப்பட்ட கட்டணத்திலிருந்து சிறிது சலுகை (கழிவு) தர தமக்கு வாக்குறுதி அளிக்கப்பட்டதாயும், அத் தொகை தமக்குத் தரப்பட வேண்டுமென்றும் வழக்காடினுர். ஆனல், பிறருக்கு அளிக்கப்படுவதைவிட எவ்வகையிலும் விசேடச் சலுகைகள் அளிக்கப்படமாட்டாதென்றும் அதனல் அக் கழிவுத் தொகை அளிக்கப்படமாட்டாதென்றும் தீர்ப்பு வழங்கப் பட்டது.

ஆனல், சில நேரங்களில் கூடுதல் தொகை வசூலிக்கவும் இந் நிறுவனங்களுக்கு உரிமை வழங்கப்படுதலும் உண்டு. சான்ருக, 'அ' என்னும் குறிப்பிட்ட இடம் வரை ஒரு பொருளை எடுத்துச்செல்ல ஒப்புக்கொண்ட போக்குவரத்து நிறுவனம் ஒன்று அக் குறிப்பிட்ட இடத்தினையும் தாண்டி, 'ஆ' என்னும் இடத்திற்கு அப் பொருளை எடுத்துச்செல்ல நேரிட்டால் அதற் கான கட்டணத்தினைக் கூடுதல் தொகையாக வாடிக்கையாளரிட மிருந்து வசூலித்துக் கொள்ளலாம்.

**தொழில் நிலையில் மாற்றம் செய்யாதிருத்தல்**

(4) நான்காவது கடமையாக, பொதுப்பயன் தொழில்களின் விரிவாக்குதலைப்பற்றிக் கூறலாம். இந் நிறுவனங்கள் தக்க காரணமில்லாமல் தங்களது உற்பத்தியைச் சுருக்குதலோ மாற்றியமைத்தலோ கூடாது. மேலும், தாங்கள் வழங்கும் பொருள்களின் அல்லது பணியின் தரத்தினையும் மாற்றுதல் கூடாது. இதேபோன்று ஓரிடத்திலிருந்து பல்வேறு இடங்

களுக்குத் தங்களது தொழிலினை விரிவாக்க முயன்றால் அதற்கு பொதுமக்களின் விருப்பமும், ஆதரவும் உள்ளதாவெனக் கண்டறிய வேண்டும். அவர்களின் விருப்பம் இல்லாதுபோனால், இம் முயற்சியைக் கைவிட வேண்டும்.

**முழு அளவுப் பாதுகாப்பு**

(5) பொது வசதிகளைத் துய்த்து அன்றாட வாழ்க்கையை நடத்தும் நுகர்வோருக்கு முழு அளவு பாதுகாப்பினை வழங்குவதே பொதுப்பயன் தொழில்களின் அடுத்த கடமையாகும். சான்றாக, போக்குவரத்துத் தொழிலை எடுத்துக்கொள்வோம். தினந்தோறும் பல்லாயிரக்கணக்கான மக்களை ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்கு ஏற்றிச் செல்லும் பேருந்துகள் நல்ல முறையில் பாதுகாக்கப்படவேண்டும். அவை அடிக்கடி பழுதுபார்க்கப்பட்டு வந்தால்தான் விபத்துகளைத் தவிர்க்க இயலும். இன்றளவும் நகரின் சாலைகளில் "யாளென்றும் அறியேன் பராபரமே" என்றும் "நாமார்க்கும் குடியல்லோம் நமனை அஞ்சோம்" என்றும் நடைபாதை ஓரத்தில் சென்றுகொண்டிருக்கும் பாதசாரிகளை ஒரு சில பேருந்துகள் காற்றுத்தடை (air-brake) பழுதுபட்டதால் எவ்விதத் தடையுமின்றி, மோதி வீழ்த்துகின்ற காட்சிகளைப் பார்க்கலாம். ஆகவே, போக்குவரத்து வசதியினை அளிக்கின்ற பொதுப்பயன் தொழில் நிறுவனம், மக்களுக்கு எவ்வித ஆபத்தும் வாராது பாதுகாத்தல் அவசியம்.

இதுபோன்று மின் அழுத்தத்தினை (voltage) அதிகரிப்பதாலோ குறைப்பதாலோ ஏற்படக்கூடிய ஆபத்தினை மின் திறனைப் பயன்படுத்துவோர் அடையநேரிடலாம். மின் திறனை வழங்கும் நிறுவனம் முன்னெச்சரிக்கையுடன் நடந்துகொண்டால் இவ்வித ஆபத்தினைத் தவிர்க்கலாம்.

எரிவாயுவைத் தயாரித்து அளிக்கும் நிறுவனமும் இவ் வாயுவின் அழுத்தத்தினைக் கவனமுடன் சரிபார்த்து அனுப்பினால் "காஸ் சிலிண்டர் வெடித்து மரணம்" என்ற செய்திகள் வெளிவாரா. ஆகவே, தாங்கள் அளிக்கும் பொருள்களையும் வசதிகளையும் துய்த்துணருகின்ற வாடிக்கையாளருக்குப் பாதுகாப்பினை அளிப்பது பொதுப்பயன் தொழில்களின் ஐந்தாவது கடமையாகக் கருதப்படுகிறது.

(6) பொதுநலஈடுபாட்டின் காரணமாகப் துவக்கப்பெற்று இயங்கிக்கொண்டிருக்கும் ஒரு பொதுப்பயன் தொழில் தன் னிச்சைப்படி தொடர்ந்து செயல்படுவதோ தொழிலுக்கு முற்றுப்புள்ளிவைப்பதோ கூடாது. குறிப்பாக, இந் நிறு

வனங்கள் அளிக்கக்கூடிய பொருள்களையும், பணிகளையும் மக்கள் தங்களின் அன்றாட வாழ்க்கைக்கு இன்றியமையாததாகக் கருதினால், பொதுமக்களின் அனுமதியைப் பெற்ற பின்னரே இந் நிறுவனங்கள் தங்களது சந்தையின் எல்லையினைக் குறைத்துக் கொள்ளவோ தொடர்ந்து செயல்படாது இயக்கத்தினைத் தற்காலிகமாகவோ நிரந்தரமாகவோ நிறுத்திக்கொள்ளவோ முடியும். ஆகவே, பொதுப்பயன் தொழில்களின் இயக்கத்தில் ஏற்படுகின்ற எவ்வித மாற்றமும் பொதுமக்களின் முன் அனுமதியுடன் தான் நடைபெற வேண்டும் என்பது புலனாகிறது.

**உரிமைகள்**

எந்த ஒரு தனிநபரும் தாம் ஆற்ற வேண்டிய கடமைகளைச் செய்த பின்னர், தமக்கெனச் சில சலுகைகளைப் பெற விழைவது இயற்கையே. தனிநபரைப் போன்றே தொழில் நிறுவனங்களும் கடமைகளை ஆற்றுகின்றன. ஆனால் பெரும்பாலான தொழில் நிறுவனங்கள் இலாபநோக்குடன் செயல்படுவதால், அவை தம் கடமையை ஆற்றுவதாக எண்ண இயலாது. ஆனால், பொதுநல ஈடுபாட்டுடன் செயல்புரிந்து வரும் பொதுப்பயன் தொழில் நிறுவனங்கள் சமுதாயத்தின் நலனைக் கருதி தம் கடமையை ஆற்றிவருகின்றன. ஆகவே, இதற்குக் கைம்மாறாக அவற்றுக்கெனச் சில சலுகைகள் அளிக்கப்படுவதில் தவறில்லை.

பொதுப்பயன் தொழில்களுக்கென அளிக்கப்படும். சலுகைகள் அவ்வப்போது நீதிமன்றங்களில் நடைபெறும் வழக்குகளின் முடிவினையொட்டித் தீர்மானிக்கப்பட்டன. அவை பின்வருவனவாம் :—

**(1) நியாயமான கட்டணத்தினை விதிக்கும் உரிமை**

பொதுப்பயன் தொழில் நிறுவனங்கள் தாம் தயாரித்து விற்பனைக்காக அளிக்கின்ற பொருள்களுக்கு நியாயமான கட்டணத்தை விதிக்க உரிமை பெற்றுள்ளன. நியாயமான கட்டணமென்பது தொழில் நிறுவனத்தில் ஏற்படுகின்ற பல்வேறு செலவுகளையும் செலுத்தியது போக ஓரளவாவது இலாபம் கிடைக்கின்ற வகையில் நிருணயிக்கப்பட வேண்டும். சான்றாக, நிறுவனத்தின் நடைமுறைச் செலவுகள், அளிக்கப்படவேண்டிய வரிகள், கடன்மீதான வட்டி, தேய்மானச் செலவுகள் போன்ற பலவிதமான செலவுகளைச் செய்யக் கணிசமான தொகை தேவைப்படுமல்லவா? மேலும் நிறுவனம் தொடர்ந்து நடைபெற குறைந்த அளவு இலாபமாவது கிடைக்க வேண்டும். ஆகவே, நடைமுறைச் செலவுத்தொகையோடு குறைந்த அளவு இலாபத்

தினைக் கூட்டி வருகின்ற மொத்தத் தொகையினை விற்பனைமூலம் சரிக்கட்ட வேண்டும். இக் கருத்தினை எண்ணத்தில் கொண்டு தாங்கள் விற்பனை செய்கின்ற பொருள்களின் கட்டணத்தினை, பொதுப்பயன் தொழில் நிறுவனங்கள் நிருணயிக்கின்றன.

**(2) சந்தையில் முற்றுரிமை**

இன்றியமையாத ஒரு பொருளைப் பொதுப்பயன் தொழில் நிறுவனம் மட்டுமே உற்பத்தி செய்யவேண்டுமென்பதில்லை. இலாபநோக்குடன் இயங்குகின்ற தனிநபர் வாணிக அமைப்புகளும் (கூட்டுப்பங்கு நிறுவனம் போன்றவை) இப் பொருளின் உற்பத்திசெய்து விற்கலாம். இவ்வாறு இரண்டுக்கு மேற்பட்ட நிறுவனங்கள் சந்தையில் ஒரே பொருளினை விற்கையில் அவற்றினிடையே கடுமையான போட்டி ஏற்பட வாய்ப்புள்ளது. விலைப் போட்டி, பொருளின் தரப்போட்டி போன்றவை நடைபெறும். இப் போட்டியின் விளைவாக முதலில் குறைந்துகொண்டே போகக்கூடிய விலை, முடிவில் வலிமை வாய்ந்த ஒரே ஒரு நிறுவனம் மட்டுமே சந்தையிலிருக்கும் காரணத்தால், உயர்ந்து கொண்டே போகும். ஆனல், இன்றியமையாப் பொருளை வாங்கி நுகரும் பொதுமக்களின் நிலை என்னவாகும் என்பதைச் சிந்தித்துப் பார்த்தல் வேண்டும். இக் கொடிய நிலை மாற வேண்டுமாயின், சந்தையில் போட்டியினை நீக்குதல் வேண்டும். அதாவது இலாப நோக்கினை நீக்கிப் பொதுநல உணர்வோடு செயற்படுகின்ற நிறுவனத்திற்கு மட்டுமே அனுமதி வழங்கப் படும். அவ்வாறெனில், பொதுப்பயன் தொழில் நிறுவனத்திற்கு மட்டுமே சந்தையில் செயல்புரிய அனுமதி வழங்க வேண்டும். இக் கருத்தினை உணர்ந்தே பல சட்டங்களின்மூலம் பொதுப் பயன் தொழில் நிறுவனங்களுக்கு "முற்றுரிமையை" (Monopoly Rights) அரசு வழங்குகின்றது.

**(3) பொதுச் சொத்துகளை ஏற்றுக்கொள்ளும் உரிமை**

சிலவகைப் பொருள்களை உற்பத்தி செய்யும்போதோ அதனை வழங்கும்போதோ சிலவகைப் பணிகளை வழங்கும் போதோ பொதுப்பயன் நிறுவனங்களுக்குச் சிலவகைச் சங்கடங்கள் நேரிடலாம். சான்ருக, மின்திறனை வழங்கும் நிறுவனம் கம்பங்களைச் சாலைகளில் நட்டு, கம்பிகளை இணைத்துப் பின்னர், வீட்டிற்குவீடு, இணைப்பினைக் கொடுத்து மின்திறனை வழங்குதல் வழக்கம். இவற்றுள் சாலைகளில் கம்பங்களை நடுதல் சிக்கலானது. கமபங்களை நட இயலாத சந்தடி மிகுந்த சாலைகளில் நிலத்தினைத் தோண்டி நிலத்திற்கடியில் கம்பியினைச் செலுத்தி மின்திறனை அளித்தல் வழக்கம். எப்படியாயினும் நிலத்தினை அகழ்தல்

தவிர்க்க இயலாதது. இதற்கான அனுமதியை அரசிடமிருந்து ஒவ்வொரு முறையும் மின் நிறுவனம் பெற்றுக் கொண்டிருக்க முடியாது. மாறாக இதற்கான உரிமையை மின்நிறுவனத்திற்கே வழங்கிவிடுதல் நன்மை பயக்கும் எளிய முறையாகும்.

இது போன்றே, போக்குவரத்து வசதியினை அளிக்கும் நிறுவனங்களுக்கும் சிலவகை உரிமைகளை வழங்கிடுதல் இன்றியமையாதது. சான்றாக, நல்ல சாலைகளை அமைத்தால்தான் பேருந்துகள் நல்லமுறையில் ஓடமுடியும். நகர்ப்புறங்களிலும் புறவெளிகளிலும் சாலைகள் நன்கு அமைக்கப்பட வேண்டும். கிராமங்களுக்குப் பேருந்து வசதி அளிக்கப்பட வேண்டுமானால், சில வயல்களின் ஊடேதான் சாலையை அமைக்க நேரிடும். இவ்வாறு செய்யும்போது, வயலின் உரிமையாளருக்கு நியாயமான தொகையினை நட்ட ஈடாகக் கொடுத்தல் மரபு.

இவ்வாறு, தங்களது பணியினைச் சிறப்புறச் செய்யும் வகையில் பொதுமக்களின் சொத்துகளை ஏற்றுக் கொள்ளவோ, நியாயமான நட்ட ஈட்டினை அளிக்கும் உரிமையைப் பொதுப்பயன் தொழில் நிறுவனங்கள் பெற்றுள்ளன.

### (4) வரையறுக்கப்பட்ட கோட்பாடுகள்

வரையறுக்கப்பட்ட நியாயமான சிலவகை விதிகளின்படி செயல்படுகின்ற உரிமையினைப் பொதுப்பயன் தொழில்கள் பெற்றுள்ளன. சான்றாக, அலுவலக வேலைநேரம், உரிய நேரத்தில் கடனைத் திருப்பியளிக்கையில் கிடைக்கின்ற தள்ளுபடி போன்றவைகளுக்கு அரசின் ஆதரவு பொதுப்பயன் தொழில் நிறுவனங்களுக்குக் கிடைக்கும்.

### (5) பொருளின் உற்பத்திக்கானவற்றைப் பெறுவதில் முதன்மை

சிலவகைக் கச்சாப் பொருள்கள் கிடைக்காவிடில் பொருள்களின் உற்பத்தி பெரிதும் பாதிக்கப்படலாம். மேலும், சிலவகை இயந்திரங்கள் இன்றிப் பொருளினை உற்பத்தி செய்ய இயலாமலும் போகலாம். பொதுப்பயன் தொழில்கள் எந்நிலையிலும், எல்லா நேரத்திலும், எவ்விதத் தடையுமின்றித் தம் பொருள்களையும், பணிகளையும் பொதுமக்களுக்கு அளிக்கக் கடமைப்பட்டுள்ளன. ஆகவே, இவற்றின் உற்பத்தி எந்நிலையிலும் பாதிக்கப்படக்கூடாது. அவ்வாறெனில், இவற்றிற்குத் தேவையான கச்சாப்பொருளைப் பெறுவதில் முதன்மையும், இயந்திரங்களை வெளிநாடுகளிலிருந்து இறக்குமதி செய்வதில் சலுகைகளையும் அரசு அளித்து வருகிறது.

*இவ்வாறு பலவகைப்பட்ட கடமைகளைச் சிரமேற்கொண்டு இயங்கி வருகின்ற பொதுப்பயன் தொழில்களுக்கெனச் சில உரிமைகளும் வழங்கப்படுதலில் தவறில்லை அல்லவா?*

## கருத்துக்கோப்பு

*பொதுப்பயன் தொழில்களின் இன்றியமையாத கடமைகள், வேறுபாடின்றிப் பொருளை வழங்குதல்—வாடிக்கையாளரின் தேவைக்கேற்றவாறு உற்பத்தியினைப்பெருக்குதல்—நியாயமான கட்டணத்தை விதித்தல்-முன்னறிவிப்பின்றித் தொழிலின் நிலையை மாற்றியமைக்காதிருத்தல்—பொருளினை நுகர்வோருக்கு முழு அளவுப்பாதுகாப்பினை அளித்தல்—எல்லையின் அளவில் மாறுதல் செய்யாதிருத்தல் போன்ற கடமைகள்—இவற்றினைச் சரிவர செய்யும் பொருட்டு—நியாயமான கட்டணத்தினை விதிக்கும் உரிமை—சந்தையில் முற்றுரிமை பெற்றியங்கும் உரிமை—நட்டஈட்டினை அளித்தபின் பொது நிலங்களையும், பொதுச் சொத்துகளையும் ஏற்றுக்கொள்ளும் உரிமை—வரையறுக்கப்பட்ட சில கோட்பாடுகளுடன் இயங்கும் உரிமை—பொருளின் உற்பத்திக்குத் தேவையான கச்சாப்பொருள்கள், இயந்திரங்கள் இவற்றினைப் பெறுவதில் முதன்மை—போன்ற பல்வேறு உரிமைகள் வழங்கப்படுகின்றன.*

# 7. பொதுப்பயன் தொழில்களின் மீதான கட்டுப்பாடுகள்

*"போட்டியினால் ஏற்படுகின்ற நன்மைகளைப் பெறுவதற்காக, இரண்டிற்கு மேற்பட்ட தொழில் நிறுவனங்களிடையே போட்டியினை வளரவிடுகின்ற அதே நேரத்தில் போட்டியின் தீமைகளைக் குறைத்து. நுகர்வோருக்கு நன்மை பயப்பதே கட்டுப்பாட்டின் முக்கிய குறிக்கோளாகும்."*

*—அமெரிக்க நாட்டின் பொதுப்பயன் தொழில்களின் சங்கம்.*

கட்டுப்பாடு என்பது பொருளாதார மற்றும் சட்டநுணுக்கம் வாய்ந்த ஒரு கொள்கையினைக் குறிப்பதாகும். பொதுப்பயன் தொழிலின்மீது கட்டுப்பாடு என்பது, போதுமான ஆராய்ச்சிக்கும், அனுபவத்திற்கும் பின்னர் எடுக்கப்பட்ட ஒரு முடிவாகும். 'கட்டுப்பாடு' என்ற இந்தச் சொல், ஒழுங்குப்படுத்துதல் அல்லது முறை செய்தல் என்ற பொருளினைக் குறிப்பதாகும். பொதுப் பயன் தொழில்கள் நன்கு நடைபெறவும், அவற்றின் நன்மையினை நுகர்வோர் பெற்றிடவும் இத்தகைய கட்டுப்பாடுகள் அவசியமாகின்றன. காலப்போக்கில் ஏற்பட்ட விஞ்ஞான, பொருளாதார மற்றும் தொழிலியல் மாற்றங்களால் இத் தொழிலில் ஏற்பட்ட மாறுபாடுகளைச் சரிசெய்யும்பொருட்டுக் 'கட்டுப்பாடுகள்' விதிக்கப்பட்டன. இதற்கென 'ஒழுங்காற்றுக்குழு' (Regulatary commission)ஒன்றும் ஒன்றும் முதன்முதலாக அமெரிக்காவில் ஏற்படுத்தப்பட்டது. பொதுப்பயன் தொழில்கள் சரிவர இயங்குகின்றனவா என்பதைக் கண்காணிக்கவும். அவ்வாறு இயங்காத நிறுவனங்களைச் சட்டத்தின்மூலமும், பிற ஒழுங்கு நடவடிக்கைகள்மூலமும் முறைப்படுத்தி, அவை நன்முறையில் செயலாற்றும்படி செய்யவும் ஒழுங்காற்றுக்குழுக்களுக்கு அதிகாரம் வழங்கப்பட்டுள்ளது. இக் கட்டுப்பாடுகளை மேன்மேலும் அதிகரிக்கத் தற்சமயம் வாய்ப்பில்லாது போனாலும், இக் கட்டுப்பாடுகளின் காரணமாகப் பொதுப் பயன் தொழில் நிறுவனங்கள் சரிவர இயங்கும் நிலை ஏற்பட்

டுள்ளது. என்பதில் ஐயமில்லை. ஆகவே, கட்டுப்பாடுகள் என்பவை அவசியமானவை என்ற கருத்தினை ஏற்றுக்கொண்டு, அவை எத்தன்மையவை என்பதை இங்குப் பார்ப்போம்.

## 1. நீதிமன்றக் கட்டுப்பாடு (Judicial Regulation)

எந்த ஒரு தனிமனிதனும் சமுதாயத்தோடு ஒன்றிவாழ விரும்பினால், சிலவகைச் சட்டத்திட்டங்களுக்கு உட்பட்டே அவன் நடக்க நேரிடும். காலத்தின் மாறுதலில் மனிதனின் வாழ்க்கை முறை மாறமாறச் சட்டதிட்டங்களும் மாறின. அதுபோன்றே பொதுப்பயன் தொழில் நிறுவனங்கள் நன்முறையில் இயங்கும் வண்ணம், அவற்றின் இயக்கத்தினை முறைப்படுத்தும் எண்ணத்தோடு சில கட்டுப்பாடுகள் விதிக்கப்பட்டன. இக் கட்டுப்பாடுகள், உண்மையிலேயே இத் தொழில் நிறுவனங்களைக் கட்டுப்படுத்தும் வல்லமையைப் பெற்றிருக்க வேண்டுமென்ற நோக்கத்தோடு இவற்றினை நீதிமன்றங்களின்மூலம் அமுலாகச் செய்தனர். இதுவே கட்டுப்பாடுகளை விதிக்கும் முறைகளில் மிகப் பழமையானதாகும்.

உற்பத்தி செய்யப்படும் எந்தப் பொருளினையும், அவற்றின் நியாயமான கட்டணத்தைச் செலுத்திய பின்னர், நுகரக்கூடிய உரிமை நுகர்வோருக்கு உண்டு. சான்றாக, ஒரு வானொலிப் பெட்டி உற்பத்தி செய்யப்பட்டுச் சந்தைக்குக் கொண்டு வரப்பட்டுச் கடைகளில் அழகுற அடுக்கி வைக்கப்பட்டிருந்தால், அது விற்பனைக்குத் தயார் என்பதே பொருள். அதனுடைய விலையினை அளிக்க முன்வரும் எவருக்கும் அப் பொருளினை வாங்கிடும் உரிமை உண்டு. இதுபோன்றே பொதுப்பயன் தொழில்கள் உற்பத்தி செய்கின்ற பொருள்களையும், வசதிகளையும் பெற்றுத் துய்க்க அனைவருக்கும் உரிமை உண்டு, தனிப்பட்ட விற்பனையாளர்கள், தங்களுடைய விருப்பப்படி கட்டணத்தைக் கூட்டவோ, குறைக்கவோ செய்யலாம். அதுபோன்றே, பொருள்களை வைத்துக் கொண்டே, ஒரு நபருக்கு விற்க மறுக்கும் உரிமையும் அவருக்குண்டு. ஆனால், பொதுப்பயன் தொழில் நிறுவனங்களுக்கு இவ்விரண்டு உரிமைகளும் இல்லை. நியாயமான விலையினை (கட்டணத்தை) அளிக்க முன்வரும் எவருக்கும் பொருள்கள் விற்பனை செய்யப்பட வேண்டும். இவ்வுரிமையை நீதிமன்றத்தின்மூலம் அமுலாக்கச் செய்த முயற்சிகளின் விளைவாகப் பொதுப்பயன் தொழிலின்மீது சிலவகைக் கட்டுப்பாடுகள் விதிக்கப்பட்டன. எப்போதெல்லாம் வாடிக்கையாளர்களுக்கு இதுபற்றிய குறைகள் ஏற்பட்டனவோ, அப்போதெல்லாம் நீதிமன்றங்களின்மூலம் வழக்குகள் தொடரப்பட்டன. ஆனால், வழக்கிற்குத் தீர்ப்பு

சொல்ல நீதி மன்றங்கள் எடுத்துக் கொண்ட காலம், இதற்கான செலவு இவற்றினை எண்ணிப்பார்க்கையில்,நீதிமன்றங்களின்மூலம் அளிக்கப்பட்ட தீர்ப்புகளின் பயனைப்பற்றி ஐயுறவேண்டியுள்ளது. ஏனெனில், பொதுப்பயன் தொழில்களின்மீது தொடரப்பட்ட வழக்கினை விசாரிக்கும் நீதிபதி ஒருவருக்கு, இத் தொழில் நிறுவனங்களின் சிறப்புத் தன்மைகளைப்பற்றித் தெரிந்திருக்க வாய்ப்பில்லை. மேலும், தற்சமயம் விதிக்கப்பட்ட கட்டணத்தை, நியாயமற்ற கட்டணம் என்று இவரால் தீர்மானிக்க முடியுமேயன்றி நியாயமான கட்டணமென்பதென்ன என்பதை இவரால் தீர்மானிக்க இயலாது. ஏனெனில், பொதுப்பயன் தொழில்களின் சிறப்புத்தன்மைகளை நன்கு அறிந்த பின்னர், இதற்கான சட்டத்தினை இயற்றுவதன்மூலம் இதனைச் செய்யமுடியும். சுருங்கக் கூறின், நீதிமன்றங்களின் 'தீர்ப்புகள் பொதுப்பயன் தொழிலினை முழுமையாக்கக் கட்டுப்படுத்த இயலாத நிலையில். அவற்றினைச் சட்டத்தின் மூலமாகக் கட்டுப்படுத்தவேண்டிய நிலைஉருவாகியது.

## 2. நேரடிச் சட்டக் கட்டுப்பாடு(Direct Legislative Regulation)

நீதிமன்றங்களில் அவ்வப்போது தொடரப்பட்ட வழக்குகளின் தீர்ப்பினைக் கொண்டு, பொதுப்பயன் தொழில் நிறுவனங்களை முறைப்படுத்த இயலாதென்பதும் அதற்கான சட்டங்களை இயற்றுவதே சிறந்த வழி என்பதும் உணரப்பட்டது. சட்டமன்றங்களின் மூலமாக, தொழில் நிறுவங்களுக்கான பொது மற்றும் சிறப்புரிமைகள் வழங்கப்பட்டன. பொதுப்பயன் தொழில்களுக்கு இவைதவிர, பல்வகையான சிறப்புரிமைகள் வழங்கப்பட்டன. சான்ருக, வரிவிலக்கு, நிரந்தர பணிவாய்ப்பு, பொதுச்சாலைகளைப் பயன்படுத்தும் உரிமை போன்ற பல்வேறு உரிமைகள் இவற்றிற்கு அளிக்கப்பட்டன. இச் செயலின் முக்கிய நோக்கம், இச் சலுகைகளைப் பயன்படுத்திக் கொண்டு மேன் மேலும் நல்ல வளர்ச்சியினை அடைந்து, மக்களுக்கு இவை நன்முறையில் பணியாற்ற வேண்டுமென்பதே. ஆனல், ஏகபோக உரிமை (Monopoly Rights) மட்டும் பொதுவாக இந் நிறுவனங்களுக்கு முன்னர் வழங்கப்பட்டிருந்தது. காரணம், சந்தையில் போட்டி நிலவினல்தான் பொதுப்பயன் தொழில்களின் நன்மைகளை, நுகர்வோர் நியாயமான கட்டணத்தில் அடைய முடியும் என்பதே. பொதுப்பயன் தொழில்கள், தாம் வழங்கும் பொருள்கள் அல்லது பணிகளுக்காகக் குறிப்பிட்ட கட்டணத்தை மட்டுமே விதிக்க, சட்டங்கள் அனுமதி வழங்கின. இந்த நிறுவனங்கள் தமக்குத் தோன்றிய கட்டணத்தை விதிக்க இயலாதெனக் கூறி, உயர்ந்தபட்ச கட்டணத்தினையும் சட்டமே நிர்ணயித்தது. இன்னும் சில நிறுவனங்களுக்கு, அவை விதிக்கக் கூடிய உயர்ந்த

அளவு கட்டணத்தினை ஓர் அட்டவணையாகவே தயாரித்துச் சட்டம் வழங்கியது. இந் நிறுவனங்களின் சொத்துகள் மூலம் வரக்கூடிய வருவாய் விகிதத்தினையும் சட்டமே முன் நின்று வரையறுத்தது. 19ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் அநேகமாக அமெரிக்க நாட்டின் எல்லா மாநில அரசுகளும் ஓர் அதிகாரியினை நியமித்து எத் தொழிலையும் அவ்வதிகாரியின் அனுமதியைப் பெற்ற பின்னரே, ஆரம்பிக்க வேண்டுமென்ற சட்டத்தினை இயற்றின. பொதுப் பயன் தொழில்களுக்கான சட்டங்கள் விரிவான முறையில், அவற்றின் கடமைகள், உரிமைகள், கட்டண விகிதங்கள் போன்ற வற்றை வரையறை செய்தன. இருப்பினும், தொழில் நிறுவனங் களை முறைப்படுத்த ஏற்படுத்தப்பட்ட இச் சட்டங்களை வலியுறுத் துவதில் பெரிதும் தோல்வியே ஏற்பட்டது.

நேரடியாக சட்டமன்றங்களின்மூலம் இயற்றப்பட்ட இச் சட்டங்கள் பொதுப்பயன் தொழில்களை முறைப்படுத்துவதில் மிகப்பெரும் மாறுதல் எதனையும் ஏற்படுத்தவில்லை. ஏனெனில் இச் சட்டங்கள் பெரும்பாலும் பொதுவானவையாகும். மேலும் குறிப்பிட்ட சந்தர்ப்பங்களுக்கு ஏற்றவையாக இல்லாமலும் இருந்தன. ஏனெனில் பொதுப்பயன் தொழில்களின் பணிநிலை (Working condition) இடத்திற்கு இடம் மாறுபட்டதாக இருந்தது. மேலும், இந் நேரடி சட்டத்தினை இயற்றுகின்றவர்கள் இத் தொழில்களின் சிறப்புக் கூறுகளை அறியாதவராக இருந்த மையால், இடத் தொழில்களுக்கான சிக்கல்களை உணர்ந்து அதற் கேற்பச் சட்டங்களை இயற்றமுடியாது போயிற்று. இதன் விளைவாக, பொதுப்பயன் தொழில்கள் பெருகப்பெருகச் சட்டத் தினை மீறுதல் என்பது வழக்கமாகிவிட்டது. சுருங்கக் கூறின் காலத்திற்கேற்ப மாறுதல் செய்யப்படாத சட்டங்களின்விளைவால், பொதுப்பயன் தொழில்களைச் சிறப்பாக முறைப்படுத்த இயலாது போயிற்று. இதன் விளைவாக, 19ஆம் நூற்றாண்டின் பின்பகுதியில் உள்ளூர் ஆட்சி மன்றங்களிடமே (Local Government) இத் தொழில்களை முறைப்படுத்தும் உரிமை வழங்கப்பட்டது,

**உள்ளூர் ஆட்சிமன்றத்தின் கட்டுப்பாடு (Regulation by Local Government)**

**சிறப்புச் சலுகைகள்**

19ஆம் நூற்றாண்டின் இறுதியிலிருந்து 1920ஆம் ஆண்டு வரை அமெரிக்க நாட்டின் பொதுப்பயன் தொழில்கள் ஆங்காங்கேயுள்ள உள்ளூர் ஆட்சி மன்றங்களின் மூலமாகவோ கட்டுப்பாடு செய்யப் பட்டு வந்தன. இம்முறை இன்னும் அந்நாட்டின் பலபகுதிகளில்

நிலவி வருகின்றது. நம் நாட்டில் உள்ளூர் ஆட்சி மன்றங்களின் அனுமதியைப் பெற்றுப் பொதுப்பயன் தொழில்கள் பணிபுரிதல் தொன்றுதொட்டு நடந்து வருகின்ற செயலாகும். இவ்வாறு, வழங்கப்படும் அனுமதியோடு சிலவகைச் சிறப்புச்சலுகைகளும் இந் நிறுவனங்களுக்கு வழங்கப்படுதல் மரபு. பொதுவாகவே, இவ்வாறு அளிக்கப்படும் சலுகைகளைப் பயன்படுத்தி, (1) தெருக்களைத் தோண்டவும், குழாய்களிடவும், பாதைகளைச் செப்பனிடவும், மற்ற இது போன்ற செயல்களைச் செய்யவும் பொதுப் பயன் தொழில் நிறுவனங்களுக்கு வழங்கப்படுகின்றது, (2) இந் நிறுவனங்கள் தாங்கள் உற்பத்தி செய்யும் பொருள்களைச் சந்தையில் விற்கும் முற்றுரிமையை (Monopoly) பெறுகின்றன. இச் சலுகைகளைப் பெறுமல், எந்த ஒரு பொதுப்பயன் தொழில் நிறுவனமும், தெருக்களையும் மற்றும் இதர பொதுச் சொத்துகளையும் தன்னிச்சைப்படி உபயோகித்தால் அது சட்டத்தை மீறிய குற்றமாகும். எனவேதான், இதற்கான சலுகை வழங்கப் படுகின்றது.

சான்ருக, ஒரு பொதுப்பயன் தொழில் நிறுவனம் ஒரு குறிப்பிட்ட இடத்தில் செயற்பட விரும்பிஞல், அந் நிறுவனம் உள்ளூர் ஆட்சி மன்றத்திடம் விண்ணப்பிக்க வேண்டும். இவ் விண்ணப்பத்தை பரிசீலனை செய்தபின் அந் நிறுவனத்திற்கு அவ்வட்டாரத்தில் பணிபுரிய அனுமதியும், சிலவகைச் சலுகைகளும் அளிக்கப்படும். அந் நிறுவனம் இச் சலுகைகளை ஏற்றுக் கொண்ட பின்னர், உள்ளூர் ஆட்சிமன்றத்துடன் ஓர் ஒப்பந்தம் செய்து கொள்ளும். பின்னர் இவ்வொப்பந்தம் ஒரு சட்டமாக இயற்றப்படும்.

சிறப்புரிமைகளைப் பெற்று இயங்கும் பொதுப்பபன் தொழில் நிறுவனத்திற்கென சில கடமைகளும் உண்டு. சான்ருக, நியாயமான கட்டணத்தை விதித்தல், நுகர்வோருக்கு ஊறு விளைவிக்காத வகையில் பொருள்களையோ பணிகளையோ அளித்தல், வரிவிதிப்பதில் நியதி போன்ற சில கடமைகளையும் இந் நிறுவனங்கள் சரிவரச் செய்ய வேண்டி இருக்கின்றன. இவ்வாறு சலுகைகளையும், கடமைகளையும் ஒருங்கே பெற்று உள்ளூர் ஆட்சி மன்றத்தின் கட்டுப்பாட்டின்கீழ் பொதுப்பயன் தொழில்கள் இயங்கும் தன்மை முதல் உலகப்போர் தொடங்கும் வரையிலும் அனைத்து நாடுகளிலும் பிரசித்தி பெற்றிருந்தது. இதன் பின்னர் உள்ளூர் ஆட்சிமன்றங்களுக்குப் பதிலாக, மாவட்ட அல்லது மாநில அரசுகளே இத் தொழில் நிறுவனங்களின் அலுவல்களை முறைப்படுத்த ஆரம்பித்தன. இருப்பினும், உள்ளூர் ஆட்சி மன்றங்களும் ஆங்காங்கே தங்களது பணிகளைத் தொடர்ந்து

செய்து வந்தன. சில பகுதிகளில், பொதுப்பயன் தொழில் களின் பொருளாதாரக் கொள்கைகளை மாநில அல்லது மாவட்ட அரசும் ஏனைய செய்திகளை, உள்ளூர் ஆட்சிமன்றமும் முறைப் படுத்தி வந்தன.

**இன்றியமையாத மற்றும் பொதுவசதிப் பணிச் சான்றிதழ்**
**(Certificate of Public Convenience and Necessity)**

உள்ளூர் ஆட்சி மன்றங்களின் நேரடிக் கண்காணிப்பில் பணி புரிந்துவந்த பொதுப்பயன் நிறுவனங்கள் காலப்போக்கில் மாநில அரசின் நேரடிக் கண்காணிப்பில் பணிபுரிய ஆரம்பித்தன. சில மாநிலங்களில் குறிப்பிட்ட சில துறைகளில் ஒரு வணிக நிறுவனம் ஈடுபட விரும்பினால் அதற்கான அனுமதிச் சான்றிதழ் ஒன்றினைப் பெற்றாக வேண்டும். மக்களின் அன்றாட வாழ்விற்குத் தேவையான பொருள்களையும், பணிகளையும் வழங்கிடும் பணியினைச் செய்யும் எந்த ஒரு நிறுவனத்திற்கும் 'இன்றியமை யாத மற்றும் பொதுவசதிப் பணிச் சான்றிதழ்' (Certificate of Public Convenience and Necessity) வழங்கப்படும். இம் முறை அமெரிக்கா, கனடா போன்ற நாடுகளில் இன்றளவும் காணப் படுகின்றது.

இத்தகைய சான்றிதழைப் பெற்ற நிறுவனங்கள் சந்தையில் முற்றுரிமை உரிமையை (Monopoly Rights) பெற்றுத் திகழ்கின் றனவா என்று வினவினால் ஆம் என்றும் இல்லை என்றும் விடை யளிக்கலாம். ஏனெனில், சில மாநில அரசுகள், தனிநிலை உரிமையை அளிப்பதற்காகவே சான்றிதழினை அளிக்கலாம். இன்னும் சில அரசுகள் இத்தகைய சான்றிதழினை அளிக்காமல் தனிப்பட்ட நிறுவனங்களுக்கும் சந்தையில் செயற்படுகின்ற உரிமையை அளித்துள்ளன. ஆகவே, மாநில அரசுகள் அளிக் கின்ற சான்றிதழைப் பொதுப்பயன் தொழில்களுக்கு அளிக்கப் படும் சலுகைகளோடு ஒப்பிடலாகாது. ஏனெனில், சலுகை களைப் பெற்ற நிறுவனத்தோடு அரசிற்கு ஓர் ஒப்பந்தம் ஏற்படு கின்றது. ஆனால், இன்றியமையாப் பொதுவசதிச் சான்றிதழினைப் பெறுகின்ற நிறுவனத்தோடு ஒப்பந்தம் ஏற்பட்டதாகக் கருத இயலாது. இருப்பினும், சான்றிதழ், சலுகைகள் இவையிரண்டுமே பொதுப்பயன் தொழில் நிறுவனங்களைச் சரியான வகையில் முறைப்படுத்தவே உபயோகிக்கப்படுகின்றன என்பதை உணர்தல் வேண்டும். இனி, இச் சிறப்புச் சலுகைகளைப்பற்றி விரிவாக ஆராய்வோம்.

**சலுகைகளின் காலம்**

பொதுப்பயன் தொழில்களுக்கு அளிக்கப்படும் சிறப்புச் சலுகைகள் காலத்தின் அடிப்படையில் வேறுபடுகின்றன. அதாவது, இச் சலுகைகள் குறுகிய அல்லது நீண்ட காலத்திற்கோ, மற்றும் குறிப்பிட்ட காலத்திற்கோ அளிக்கப்படுபவை. இச் சலுகைகள் எவ்வளவு காலத்திற்கு அளிக்கப்பட்டுள்ளன என்பதைப் பொறுத்தே இந் நிறுவனங்களின் செயல்முறை கட்டுப்பாடு அமைகின்றது. மேலும், இச் சலுகைகளைப் பொறுத்து இந் நிறுவனங்களுக்கு அளிக்கப்படும் நிதி உதவியும் கணக்கிடப்படுகின்றது. காலத்தின் அடிப்படையில் பொதுப்பயன் தொழில்களுக்கு அளிக்கப்படும் சிறப்புச் சலுகைகளை மூன்று வகைகளாகப் பிரிக்கலாம். அவை,

(1) நிரந்தரமானவை,

(2) குறிப்பிட்ட காலத்திற்கு அளிக்கப்பட்டவை,

(3) மாற்றத்தக்க காலவரையறையற்ற சலுகைகள், என்பனவாம்.

**நிரந்தரமான சலுகைகள் (Perpetual Franchise)**

நிரந்தரமான சலுகைகள் எனப்படுபவை ஒரு நிறுவனம் ஆரம்பித்த நாள் முதலாய் அளிக்கப்படுபவை. பெரும்பாலும் இவை நகர்ப்புறப் போக்குவரத்து நிறுவனங்களுக்கும் மின் திறன் உற்பத்தி செய்யும் நிறுவனங்களுக்கும் அளிக்கப்படுபவை. நீண்ட கால அளவில், சுமார் 999 வருடங்களுக்கு இச் சலுகைகள் அளிக்கப்படுகின்றன, இச் சலுகைகள் அளிக்கப்பட வேண்டிய காலம்பற்றி அரசின் சட்டமோ இச் சலுகைகளின் விதிகளோ ஏதும் உணர்த்தாமல் இருந்தால், இச் சலுகைகள் நீண்டகால அளவில் அளிக்கப்படும். இத்தகைய நீண்டகாலச் சலுகைகளின் விளைவாக, நிறுவனங்களின்மீது பொதுமக்களுக்கு ஒரு நல்லெண்ணம் ஏற்பட வாய்ப்புள்ளது. ஏனெனில் இந் நிறுவனங்களின் உழைக்கும் காலம் (life period) நீண்டதாக இருக்குமென எதிர்பார்க்கப்படுகின்றது. ஆகவே, இவற்றிற்குக் கிடைக்கக் கூடிய நிதி உதவியும் மிகுந்து காணப்படும். இந் நன்மையைப் பெறும்போதே இதனையொட்டிய தீமையும் அறியப்பட வேண்டும். ஒரு நிறுவனத்துக்கு இச் சலுகைகளை வழங்குகின்ற நகராட்சி மன்றம், காலப்போக்கில் இந் நிறுவனத்தோடு வியாபார முறையில் புதிய எவ்வித ஒப்பந்தத்தையும் செய்யவோ கட்டண விகிதங்களை மாற்றவோ, செய்யும் உரிமையை இழக்கின்றது. ஏனெனில், 999 வருடங்களுக்கு முன்னர் செய்யப்

பட்ட ஒப்பந்தத்தின் விதிகள் செயலாக்கப்படும். இக் குறையினை நீக்கப் பொதுப்பயன் தொழிலின் ஆயுள்காலத்தையே மாற்றி அமைத்தல் வேண்டும்.

**குறிப்பிட்ட காலத்திற்கு அளிக்கப்படும் சலுகைகள்** (Limited term of Franchise)

ஐம்பது வருடங்களுக்கோ அதற்குக் குறைந்த காலத்திற்கோ அளிக்கப்படும் சலுகைகள் குறிப்பிட்ட காலத்திற்கு அளிக்கப்படுபவையாகக் கருதப்படுகின்றது. இக் கால அளவைத் தாண்டினால் அவை நிரந்தரமாக அளிக்கப்பட்டவையாகக் கருதப்படும். நிறுவனங்களில் காலப்போக்கில் ஏற்படும் பொருளாதார மற்றும் தொழில்முறை மாற்றங்களுக்கேற்ற மாறுதல்களைச் செய்யும் எண்ணத்தில் இச் சலுகைகள் குறிப்பிட்ட ஒரு கால அளவிற்கு மட்டுமே அளிக்கப்படுகின்றன. இஃது ஒரு நன்மையாகக் கருதப்பட்டாலும், தீமைகளும் இல்லாமலில்லை. அவை பின்வருவனவாம்,

1. ஒரு குறிப்பிட்ட நிறுவனத்திற்குப் பத்துவருட காலத்திற்கு மட்டுமே அனுமதியும் சலுகைகளும் வழங்கப்பட்டால் அந் நிறுவனம் இக் குறுகிய கால அளவிற்குள் தன்னுடைய நிரந்தரமான அபிவிருத்தித் திட்டங்களுக்கான நிதிஉதவியை அதிக செலவில் ஏற்பாடு செய்தாக வேண்டிய நிலைக்கு உள்ளாக்கப்படுகின்றது. மேலும், நீண்ட காலத்திட்டங்கள் பெரும்பாலும் விரும்பப்படுவதில்லை.

2. இதைத் தவிர, ஒரு பொதுப்பயன் நிறுவனத்தின் உழைக்கும் காலம்பற்றிய சலுகை முடிவடையும் தருவாயில், இவற்றின், பணிகள் சரிவர ஆற்றப்படுவதில்லை. எடுத்துக் காட்டாக ஒரு பொதுப்பயன் தொழில் நிறுவனம் தெருக்களை பராமரிப்பதில் காட்டவேண்டிய கவனமும், அக்கறையும் அத்தகைய அனுமதி முடிவடையும் தறுவாயில் காட்டப்படுவதில்லை.

3. இச் சலுகைகளைப் பொதுப்பயன் நிறுவனங்களுக்கு வழங்கும்போது, குறிப்பிட்ட இத் துறையின் பொருளாதார அல்லது தொழில்நுட்பநிலைக் கருவிக்கேற்ப அரசு வழங்கும். நாளடைவில் இக் கொள்கைகளில் ஏற்படுகின்ற மாற்றங்களுக்கேற்ப, இந் நிறுவனங்களின் கட்டணவிகிதமும் மாற்றி அமைக்கப்பட வேண்டும். ஆயினும், நடைமுறையில் இவ்வாறு செய்ய இயலாது. ஏனெனில், முன்னரே நிருணயிக்கப்பட்ட கட்டணம், விசேடச் சலுகைகள் வழங்கப்பட்ட காலம் வரை (50 வருடமோ அதற்குக் குறைந்தோ) நீட்டிக்கப்படவேண்டும். இந் நிலையில்

உண்மையாக விதிக்கப்படவேண்டிய கட்டணத்தைவிட நடைமுறையில் அமுலாக்கப்பட்ட கட்டணம் அதிகமாகவோ குறைவாகவோ காணப்படும்.

**4.** குறிப்பிட்ட காலம் முடிவடைவதற்கு முன்னதாகவே விசேடச் சலுகைகளில் மாற்றம் ஏதும் செய்யப்பட வேண்டுமானல் அதற்கு இரண்டு பக்கத்தாரின் (நிறுவனங்களின்) இசைவும் கிடைத்தாக வேண்டும். ஆனல், இச் சலுகைகளால் நன்மை பெற்ற நபர், இத்தகைய மாற்றத்திற்கு இசைவாரா என்பது ஐயத்திற்குரியதே.

**5.** இறுதியாக இச் சலுகைகளின் காலவரையறை முடிவடையும்போது, இவற்றைப் பெற்றுவந்த நிறுவனம் தன்னுடைய சொத்துகளை அரசிடமோ, தனக்குப் பதிலாக நியமிக்கப்பட்ட புதிய நிறுவனத்திடமோ ஒப்படைக்கத் தயாராக இருக்க வேண்டும். இவ்வாறு ஒப்படைப்பதற்கான விதிமுறைகள் ஏற்கனவே அளிக்கப்பட்ட விசேடச் சலுகைகளின் விதிமுறைகளில் கூறப்பட்டிருக்கும். ஆயினும், நடைமுறையில் இது சாத்தியமாவதில்லை. குறிப்பிட்ட கால அளவு முடிந்து போகும் நிலையில், அரசு புதிய நிறுவனத்திடம் ஒப்படைப்பதற்குமுன், இந் நிறுவனத்தின் சொத்துகளை மதிப்பீடு செய்யவும் சிறந்த முறை ஏதும் இருப்பதில்லை.

இவை குறிப்பிட்டகால வரையறைக்கு அளிக்கப்படும் விசேடச் சலுகைகளின் குறிப்பிடத்தக்க தீமையாகும்.

**மாற்றத்தக்க காலவரையறைச் சலுகைகள்**

காலத்தின் அடிப்படையில் வழங்கப்படும் விசேடச் சலுகைகளில் மூன்றாவது வகையாக இச் சலுகைகளைக் கூறலாம். உள்ளுராட்சி மன்றத்தின் கண்காணிலிருப்பதை விடுத்து மாநில அரசின் நேரடிக் கண்காணிப்பில் பொதுப்பயன் தொழில்கள் பணிபுரியும்போது இத்தகைய சலுகைகள் வழங்கப்படுகின்றன. இவற்றிற்குக் காலவரையறை ஏதும் விதிக்கப்படுவதில்லை. ஆனல், இக் காலவரையறையில் மாற்றம் ஏதும் செய்யப்படும் வரை இச் சலுகைகள் அமுலிலிருக்கும். ஆகவே, இத்தகைய சலுகைகளை மாற்றத்தக்க காலவரையறைச் சலுகைகள் என்றும் மாற்றக்கூடிய சலுகைகள் என்றும், கூறலாம். ஒரு நிறுவனத்துக்கு அளிக்கப்பட்ட சலுகைகளையும், அனுமதியையும் நகராட்சி திரும்பப் பெற்றுக்கொள்ளுமுன் அந் நிறுவனத்தின் சொத்துகளையும் பிற உடைமைகளையும் அவற்றிற்கான நட்ட ஈட்டை அளித்த பின்னர் ஏற்றுக் கொள்ளுவது மரபு. பொதுப்பயன் தொழில்

நிறுவனங்கள் நன்றி உணர்வுடன் பணிபுரிய வேண்டும் என்பதற்காகவே இத்தகைய சலுகைகள் அளிக்கப்படுகின்றன. இந்நிறுவனங்களின் அனுமதியும், சலுகைகளும் அரசினால் திரும்பப் பெற்றுக் கொள்ளப்படும்போது, அதற்கான நியாயமான நட்டஈடு அளிக்கப்படுமாதலால் இந்நிறுவனங்கள் தங்களது அபிவிருத்தித் திட்டங்களைக் காரணமின்றிக் குறைத்துக் கொள்வதில்லை. இது குறிப்பிடத்தக்க ஒரு நன்மையாகும்.

இத்தகைய சலுகைகள் இந்நாள்களில் கீழ்க்காணும் மூன்று நன்மைகளை உடையவாகயிருக்கின்றன:—

(அ) உள்ளூரிலுள்ள சாலைகள்போன்ற பகுதிகளை நிறுவனம் உபயோகித்துக்கொள்ள உரிமையும், நகராட்சிக்கென சில அதிகாரங்களும்.

(ஆ) நிறுவனங்களை முறைப்படுத்தும் முழு அதிகாரம், நகராட்சியிடமிருந்து மாநில அரசிற்கு மாற்றப்பட்ட நிலை.

(இ) போதுமான அளவிற்கு வசதிகளை அளித்து வருகின்ற பொதுப்பயன் தொழில் நிறுவனம் சந்தை முழுவதும் முற்றுரிமை பெற்று விளங்கும் தன்மை.

இம் மூன்று தன்மைகளைத் தவிர, எப்போது வேண்டுமானாலும் இந்நிறுவனங்களுக்கு அளிக்கப்பட்ட உரிமைகளைத் திரும்பப் பெற்றுக்கொண்டு, இந்நிறுவனங்களுக்கு நட்டஈடு கொடுத்த பின்னர், இவற்றைச் செயலற்றுப்போகும் நிலைக்குக் கொண்டுவர மாநில அரசிறகு உரிமை வழங்கப்பட்டுள்ளது.

**சிறப்புச் சலுகைகளின் விதிகள்**

எந்த ஒரு பொதுப்பயன் தொழில் நிறுவனத்திற்கும் விசேடச் சலுகைகள் அளிக்கப்படுவதன் முக்கிய நோக்கம், அந்நிறுவனத்தை முறைப்படுத்துவதேயாகும். பொதுமக்களின் நல்வாழ்விற்கெனப் பணிபுரியும் இந்நிறுவனங்களின் பணிநிலையும், இவற்றின் கடமைகளும், உரிமைகளும் இச் சிறப்புச் சலுகைகளில் இடம் பெற்றுள்ளன. இச் சலுகைகளின் முக்கிய நோக்கம், இந்நிறுவனங்களின் ஆயுள்காலத்தை நிருணயிப்பதாகும் [இதுபற்றி ஏற்கனவே விரிவாக ஆராயப்பட்டது]. ஏனைய விதிகள் விரிவாக ஒப்பந்த முறையில் தயாரிக்கப் படுகின்றன. ஒரு பொதுப்பயன் தொழில் நிறுவனத்தின் பணிநிலைபற்றிக் குறிப்பிடும்போது, அந்நிறுவனம் அளிக்கின்ற

பொருள் அல்லது பணியின் அளவு அல்லது தன்மை தொடர்ந்த அளிப்பு (continued supply) விரிவாக்கம் போன்றவையும் குறிப்பிடப்படவேண்டும். சான்றாக, பேருந்துகளின் வேகம் (போக்குவரத்து நிறுவனம்) குடிநீரின் தூய்மை (நீர் வழங்கும் நிறுவனம்) எரிவாயுவின் வெம்மை (எரிவாயு நிறுவனம்) போன்றவையும் பாதுகாப்பு ஆய்வு வசதிகள் போன்றவையும் விரிவாகக் குறிப்பிடப்பெறும். இவையனைத்திலும் மேம் பட்டதாகப் பொதுப்பயன் தொழில் நிறுவனங்கள் விதிக்க வேண்டிய கட்டணவீதம் பற்றிய செய்தியும், சிறப்புச் சலுகைகளின் விதிகளில் ஒன்றாகும். இவ்வாறு நிருணயிக்கப் பட்ட கட்டணத்தில் பெரும்பாலும் மாற்றம் ஏதும் செய்ய இயலாது. நியாயமான கட்டணமென்பது மிகவும் குறைந்த தாகத்தான் இருக்கவேண்டுமென்பதில்லை. மேற்கண்ட செய்தி களைத் தவிர, சலுகைகளின் விதிகளில், இந் நிறுவனங்களின் கணக்குப் பதிவியல் பற்றிய செய்திகள், முற்றுரிமைநிலை, தொழிலாளர் தம் சிக்கல்களைத் தீர்க்கும் முறை அவர்களுக்கு அளிக்கப்பட வேண்டிய இலவச மற்றும் விசேட வசதிகள், சொத்துகளை உடைமையாக்குதல் அல்லது மாற்றித் தருதல் போன்ற பலவிதச் செய்திகளும் இடம்பெறுகின்றன. இது போன்ற, பல செய்திகளையும் விதிகளின் வடிவில் அமைத்துக் கொடுத்த போதிலும், நடைமுறையில் அவற்றினைச் செயற் படுத்தும்போது பலவிதச் சிக்கல்கள் எழுவதும் இங்குக் குறிப் பிடத்தக்கது.

**சிறப்புச் சலுகைகளின் குறைபாடுகள்**

**1.** பொதுப்பயன் தொழில் நிறுவனங்களுக்கு அளிக்கப்படும் இவ்விசேடச் சலுகைகளின் குறிக்கோள் அவற்றை முறைப் படுத்துவதேயாகும். ஆயினும், பெரும்பான்மையான சலுகைகள் சாலைகளை உபயோகித்துக் கொள்ளவும், மற்றும் இவை போன்ற செயலுக்கும் அளிக்கப்பட்ட 'வெறும் அனுமதியாகவே' கருதப் படுகின்றன: விசேடச் சலுகைகள்மூலமாக அளிப்பதன் நோக்கம் இதுவன்று. ஆகவே, விசேடச் சலுகைகள் மூலமாகப் பொதுப்பயன் நிறுவனங்களைக் கட்டுப்படுத்த இயலாது போகிறது.

2. இரண்டாவது குறையாக இவ்விசேடச் சலுகைகளின் எல்லை வரையறையை நிருணயிப்பதில் ஏற்படும் சிக்கலைக் குறிப்பிடலாம். ஒரு குறிப்பிட்ட பொதுப்பயன் தொழில் நிறுவனத்திற்கு வழங்கப்படும் சலுகைகளை உபயோகித்து அந் நிறுவனம் அந் நகர எல்லைக்குள் மட்டுமே செயற்பட முடியும்.

ஆனால், தற்சமயம் எந்த ஒரு நகரமும் வரையறுக்கப்பட்ட எல்லையைக் கொண்டதாக இல்லை. பெருகி வரும் மக்கள் தொகைக்கேற்ப, மக்கள் வசிக்குமிடமும் விரிவடைந்து கொண்டே போகின்ற இந் நாளில் தினந்தோறும் புதிய 'காலனி களையும்' 'குடியிருப்புகளையும்', நகர்களையும் காண்பதில் ஐயமேது மில்லை. ஆனால், இவற்றை நகர எல்லைக்குள் சேர்க்க இயலாததால் உடனடியாக இவற்றிற்குத் தேவையான வசதி களையும், பணிகளையும் பொதுப்பயன் தொழில் நிறுவனங்களால் அளிக்க இயலாது. ஏனெனில், அவற்றின் பணி எல்லை முன்னரே வரையறுக்கப்பட்டுவிடுகிறது.

3. சிறப்புச் சலுகைகளை அளிக்கின்ற நகராட்சி அவற்றைச் செயற்படுத்துவதிலும் போதிய ஆர்வம் காட்டவேண்டும். சலுகைகளை அளிப்பதோடுமட்டும் தன்னுடைய பணி முடிந்து விட்டதாக எண்ணாமல், இச் சலுகைகள் அளிக்கப் படுவதன் முக்கிய குறிக்கோள் நிறைவேற்றப்பட்டதாவெனக் கண்டறிய வேண்டும். ஆயினும், பெரும்பான்மையான நகராட்சி மன்றங்கள் இப் பணியினைச் சரிவரச் செய்வதில்லை.

**இன்றையநிலை**

இன்று பெரும்பான்மையான நாடுகளில் பொதுப்பயன் தொழிலுக்கென வழங்கப்படும் சலுகைகள், விசேடச் சலுகை களாகக் கருதப்படுவதில்லை. ஏனெனில், இந் நிறுவனங்கள் மக்களின் வாழ்க்கையோடு இணைந்து நிற்பதால் இந் நிறு வனங்கள் தங்களது கடமையைப் பெரிதும் உணர்ந்து செயற் படத் துவங்கியுள்ளன. சான்றாக, ஒரு தனி நபரின் இல்லத் திலோ ஒரு பொதுச்சாலையிலோ மின்விளக்கு எரியாம லிருந்தால் செய்தி எட்டியவுடன் உடனடியாக மின்திறன் வழங்கும் நிறுவனத்திலிருந்து பணியாள்கள் வந்து இவ் விளக்கினைச் சரி செய்வதைக் கண்கூடாகப் பார்க்கின்றோம். மக்களின் தேவைகளையும் குறைபாடுகளையும் உணர்ந்து செயற் படுகின்ற இந் நிறுவனங்கள் இன்றைய தினம் மாநில அரசின் நேரடிக் கண்காணிப்பில் இயங்கி வருகின்றன. இதற்காகவே, பெரும்பான்மையான பொதுப்பயன் தொழில்கள் அரசுடமை யாக்கப்பட்டு வருகின்றன.

**கருத்துக்கோப்பு**

பொதுப்பயன் தொழில்களின் பணிநிலையை முறைப் படுத்தும் பொருட்டுக் கட்டுப்பாடுகள் (Regulations) விதிக்கப்

படுகின்றனவென்றும் இவை நீதிமன்றக் கட்டுப்பாடுகள் (Judicial Regulations), நேரடிச் சட்டக் கட்டுப்பாடுகள் (Direct Legislative Regulations), உள்ளூர் ஆட்சிமன்றக் கட்டுப்பாடுகள் (Regulation by Local Government) என மூன்று வகைப்படும் எனக் கூறப்பட்டது. உள்ளூர் ஆட்சிமன்றங்கள் பொதுத்தொழில் நிறுவனங்களுக்கென வழங்கிடும் சிறப்புச் சலுகைகள் இவை வழங்கப்படும் காலத்தினைப் பொறுத்து, நிரந்தரமானவை என்றும், குறிப்பிட்ட காலத்திற்கு அளிக்கப்பட்டவை என்றும், மாற்றத்தக்க காலவரையறை சலுகைகள் என்றும் மூன்று வகைப்படுகின்றன. இச் சிறப்புச் சலுகைகள் அளிக்கப்படுவதன் முக்கிய நோக்கம் பொதுப்பயன் தொழில்களின் பணி எல்லை, பணிநிலை, கட்டணவீதம் போன்றவற்றை முறைப்படுத்துவதாகும். இவற்றால் குறிப்பிடத்தக்க நன்மைகள் பலவும், சிலவகை குறைபாடுகளும் இருக்கின்றன.

# 8. செயல்முறைச் செலவுகள்

"உற்பத்தி செய்த பொருளைச் சந்தையில் விற்பதற்காக ஒரு நிறுவனம் செலவிடக்கூடிய தொகையினை அந் நிறுவனத்தைச்சார்ந்த இயக்குநரவைதான் தீர்மானிக்க வேண்டும். இருப்பினும், பொதுப்பயன் தொழில் நிறுவனங்கள் இதே குறிக்கோளுக்காக வீணை அல்லது தேவையற்ற செலவினைச் செய்வது அனுமதிக்கப்படமுடியாததாகும்".

ஜஸ்டிஸ் இராபர்ட்ஸ் (Justice Roberts)

பொதுப்பயன் தொழில்களின் பொருளாதாரக் கொள்கைகளில் கட்டண விகிதம் பற்றிய கொள்கையே இன்றியமையாததாகும். இந் நிறுவனங்கள் தயாரித்து அளிக்கும் பொருள்களுக்கும், பணிகளுக்கும், நுகர்வோரிடமிருந்து வாங்க வேண்டிய கட்டணம் என்னவென்பதை அறிந்து கொள்ளுமுன் இவற்றின் செயல்முறைச் செலவுகள் என்னவென்பதைப் பற்றியும் அறிந்துகொள்ள வேண்டும். செயல்முறைச் செலவுகளைப் பற்றி அறியுமுன் இவற்றோடு தொடர்புள்ள சில சொற்கள் மற்றும் கொள்கைகள் பற்றிக் காண்போம்.

**உற்பத்தி செலவுக் கொள்கை (Cost of Production Theory)**

பொதுப்பயன் தொழில்கள் அனைத்திற்கும் பொதுவான ஓர் இன்றியமையாத பொருளாதாரக் கொள்கை அவற்றின் பொருள்களை உற்பத்திச் செய்யச் செலவிடப்படும் தொகையினைப் பற்றியதாகும். வட்டார, மற்றும் மாநில அரசுகளும், தங்களின்கீழ் இயங்கிவரும் இந் நிறுவனங்களின் எல்லாக் கொள்கையிலும், அவை உற்பத்தி செய்கின்ற பொருளுக்காக விதிக்கின்ற கட்டணத்தை முறைப்படுத்துவதில்தான் அதிக கவனமும், ஆர்வமும் காட்டுகின்றன. சந்தையின் ஒரு குறிப்பிட்ட பகுதியிலோ சந்தை முழுவதிலுமோ குறிப்பிட்ட ஒரு பொருளை (அன்றிப் பணியினை) விற்பதற்கான முற்றுரிமையைப் பெற்றியங்

கும் பொதுப்பயன் தொழில் நிறுவனங்கள் தம்முடைய பொருள்களுக்கு விதிக்கின்ற கட்டணத்தைத் தாமே முடிவு செய்கின்றன. இவ்வாறு கட்டணத்தை நிருணயிப்பதால் அந் நிறுவனங்கள் எவ்விதக்கட்டுப்பாட்டுக்கும் அல்லது நிர்ப்பந்தத்திற்கும் உள்ளாவதில்லை. மற்ற நிறுவனங்கள் விதிக்கின்ற கட்டணத்தைப்பொறுத்துத்தான் இவற்றின் கட்டணமும் அமைய வேண்டுமென்பதில்லை. சுருங்கக்கூறின், முற்றுரிமை பெற்றுச் சந்தையில் இயங்குகின்ற பொதுப்பயன் தொழில் நிறுவனம் முழுச் சுதந்திரத்துடன் தங்களது பொருள்களுக்கான விலையை நிருணயிக்கின்றது. இருப்பினும் சில நேரங்களில் மற்றொரு தொழில்துறையின் விலைக் கொள்கையும் கவனமுடன் பரிசீலிக்கப்படுகிறது. சான்றாக, பேருந்துகளை இயக்கும் போக்குவரத்து நிறுவனம், தான் விதிக்க வேண்டிய கட்டணத்தைத் தானே நிருணயித்துக் கொள்ளலாம். ஏனெனில், குறிப்பிட்ட ஒரு நகரத்தின் எல்லாப்பகுதிகளுக்கும், இந்த ஒரு நிறுவனம் மட்டுமே போக்குவரத்து வசதியினை அளிக்கும் உரிமையைப் பெற்றிருக்கலாம். இருப்பினும் இப்போக்குவரத்து நிறுவனம், குறிப்பிட்ட ஒரு கட்டணத்தை நிருணயிப்பதற்குமுன், பிறவகைப் போக்குவரத்து நிறுவனங்களின் கட்டணவீதத்தையும் பரிசீலிக்க வேண்டும். எடுத்துக்காட்டாக, மோட்டார் வண்டிக் கட்டணம், புகைவண்டிக் கட்டணத்துடனும், புகைவண்டிக் கட்டணம், விமானக் கட்டணத்துடனும் ஒன்றுக்கொன்று தொடர்புடையதாய் அமைந்துள்ளது. ஆகவே, குறிப்பிட்ட பகுதியில் தனிநிலை உரிமை பெற்றியங்கும் பொதுப்பயன் தொழில் நிறுவனங்கள் தாம் விதிக்கும் கட்டணவீதத்தைத் தாமே முழுச் சுதந்திரத்துடன் நிருணயித்துக் கொண்டாலும் பிற துறைகளைச் சார்ந்த கட்டணவீதத்தையும் ஓரளவு ஒப்பிட்டுப் பார்த்த பின்னரே அவ்வாறு நிருணயிக்கின்றன எனலாம்.

**கட்டணவீதம்**

ஒரு பொதுப்பயன் தொழிலின் கட்டணவீதம் எவ்வாறு நிருணயிக்கப்படுகிறது என்பதை அறிந்துகொள்ளக் கீழ்க்காணும் சில வினாக்களுக்கு விடையளித்தல் இன்றியமையாததாகிறது. முதலாவதாக, பொதுப்பயன் தொழில் நிறுவனம் ஒன்றின் உற்பத்திச்செலவு என்பதென்ன என்ற வினா எழுகிறது. இவ்வினாவினையே சிறிது மாற்றி, ஒரு பொதுப்பயன் தொழில் நிறுவனம், தன்னுடைய பொருள்களை அல்லது பணிகளை விற்பனை செய்யும்போது, குறிப்பிட்ட ஒரு கட்டணத்தை விதிப்பதன் மூலம் எவ்வளவு மொத்த வருவாயை நுகர்வோரிடமிருந்து பெறலாம் என்றும் கேட்கலாம். வினா எத்தகையதாக இருப்பினும், விடை

ஒன்றேயாகும். அதாவது, பொதுப்பயன் தொழில்கள் அனைத்தும் தம்முடைய பொருள்களை உற்பத்திச் செய்யச் செலவிடும் மொத்தத்தொகையை மட்டுமே வருவாயாகப் பெறமுடியும் என்பது முடிந்த கருத்தாகும். ஆகவே, "இந் நிறுவனங்களின் வருவாய்த் தேவை (Revenue Requirement) என்பது, இவை செய்கின்ற மொத்த விற்பனையின் மூலம் கிடைக்கின்ற தொகையே" என்று கூறலாம்.

பொதுப்பயன் தொழில்களின் உற்பத்திச் செலவு என்பது பின்வரும் பல்வேறு செலவுகளின் கூட்டுத்தொகையினைக் குறிப்பதாகும் ;—

(அ) சரியான செயல்முறைச் செலவுகள்,

(ஆ) தேய்மானச் செலவுகள்,

(இ) வரிகள்,

(ஈ) நிலையான சொத்துகளிலிருந்து நியாயமான வருவாய்.

இதனைக் கீழ்காணும் அடையாளக் குறியீடுகளின்மூலம் விளக்கலாம்:—

1. வருவாய்த் தேவை (Revenue Requirement) = உற்பத்திச் செலவுகள் (Cost of service)

2. $RR = E + d + T \quad (V—D) R$

இவற்றுள்

RR—எனப்படுவது மொத்த வருவாய்த் தேவையையும்,

E—எனப்படுவது செயல்முறைச் செலவுகளையும்,

d—எனப்படுவது தேய்மானச் செலவுகளையும்,

T—எனப்படுவது வரிகளையும்.

V—எனப்படுவது மக்களுக்குப் பணியாற்ற உபயோகப்படுத்தப்பட்டுள்ள அனைத்துச் சொத்துகளின் மொத்த மதிப்பினையும்,

D—எனப்படுவது முன்கூட்டித் திரட்டப்பட்ட தேய்மானத்தையும்.

R—எனப்படுவது வருவாய்வீதத்தையும் (நூற்றியத்தில்),

(V—D)—எனப்படுவது கட்டண அடிப்படை (நிகர மதிப்பீடு) (Rate base) யினையும்,

**(V—D) R**—எனப்படுவது கட்டண அடிப்படையில் அனுமதிக்கப்பட்ட வருவாயினையும்

குறிப்பதாகும்.

மேற்கண்டவற்றுள் இரண்டாவது சமன்பாடு (equation) பொதுப்பயன் தொழில்களின் கட்டணவீதத்தை நிருணயிப்பதற்குக் கையாளப்படுகிறது. இச் சமன்பாட்டின்படி நல்லதொரு பொருளாதாரக் கொள்கையுடனும், திறமை வாய்ந்த மேலாண்மையுடனும் (Management) இயங்குகின்ற எந்த ஒரு பொதுப் பயன் தொழிலும், ஈட்டுகின்ற மொத்த வருவாய்,

(அ) நிருவாகச் செலவுகள், வரிகள், தேய்மானச்செலவுகள் இவற்றைச் சரிக்கட்டுவதற்கும்,

(ஆ) மக்களுக்குப் பணிபுரிவதற்கு ஈடுபடுத்தப்பட்டுள்ள அனைத்துச் சொத்துகளின் மதிப்பீட்டில் ஒரு குறிப்பிட்ட வருவாயை அளிப்பதற்கும் போதுமானதாக இருத்தல் வேண்டும் என்பது புலனாகிறது. மேலும், இக் குறிப்பிட்ட சொத்துகளின் மீதான வருவாயெனப்படுவது கட்டண அடிப்படை (Rate base), குறிப்பிட்ட விழுக்காடு வருவாய் என்ற இரண்டின் பெருக்கல் தொகையினைக் குறிப்பதாகிறது.

**விலைநிருணயம்**

பொதுப்பயன் தொழில்களின் மொத்த உற்பத்திச் செலவு எனப்படுவது எத்தகைய செலவுகளைக் குறிக்கின்றதென்பதையும் இவற்றின் கூட்டுத்தொகையே இத் தொழில்களின் வருவாய்க் குறிக்கோளாக இருக்க வேண்டுமென்றும் கண்டோம். இவ்வருவாயினை எவ்வாறு ஈட்டுவது? உற்பத்திசெய்து நுகர்வோருக்கு வழங்கக்கூடிய அனைத்துப் பொருள்களுக்கும் அன்றிப் பணிகளுக்கும், ஒரு நிறுவனம் குறிப்பிட்ட ஒரு கட்டணத்தை விலையாகப் பெற்றுக் கொள்கிறது. இவ்வாறு பொதுப்பயன் தொழில் நிறுவனங்கள் பெற்றுக் கொள்ளும் விலை இருவழிகளில் நிருணயிக்கப்படுகிறது. (1) பெரும்பான்மையான நிறுவனங்களில் மேலாண்மை அவையில் (Managerial Board) ஒப்புதலுடன் குறிப்பிட்ட ஒரு விலைப்பட்டியல் (Price schedule) தயார் செய்யப்படுகிறது. அல்லது (2) குறிப்பிட்ட நிறுவனத்திற்கெனச் சிலவகைச் செலவுகள், உற்பத்திச் செலவுடன் கூடுதலாக அனுமதிக்கப்படுகிறது. மேற்கண்ட இருவழிகளிலும் முடிவு செய்யப்பட்ட விலையினைப் பொதுப்பயன் தொழில்கள் தம்முடைய பொருள்களுக்காக

நுகர்வோரிடம் இருந்து பெற்றுக்கொள்கின்றன. எனினும் "ஏட்டுச்சுரைக்காய் கறிக்கு உதவாது" என்னும் பழமொழிக் கிணங்க, மேற்கண்ட வழிகளில் முடிவுசெய்யப்பட்ட விலையினை நடைமுறையில் அமுலாக்க முடியாது. ஏனெனில், ஒரு நிறுவனத் தின் உற்பத்திச் செலவினைத் தீர்மானிப்பதில் நுணுக்கமான மற்றும் அனுபவமிக்க முடிவு எடுக்கப்பட வேண்டும். குறிப்பாக, பொருளாதாரம், பணவியல், கணக்குப் பதிவியல், மற்றும் பொரு ளியல் துறைகளைச் சார்ந்த அனைத்துச் செய்திகளையும் ஒன்று திரட்டி, கவனமுடன் பரிசீலித்த பின்னரே ஒரு நிறுவனத்தின் உற்பத்திச் செலவு தீர்மானிக்கப்படுகிறது. இதில் எவ்விதக் குறைபாடும் ஏற்படாதிருத்தல் அவசியமாகிறது. ஏனெனில், மிகச் சிறிய அளவு வேறுபாடு இருப்பினும், மிகப்பெரிய அளவு நட்டத்தில் கொண்டு சேர்க்கும் என்பது உண்மை. ஆகவே, ஒரு நிறுவனத்தில் உற்பத்திச் செலவினை உடனடியாக மதிப்பிடுவது என்பது இயலாததாகும்.

அடுத்து, பொதுப்பயன் தொழில்களின் வருவாய்வீதத்தினைக் கணக்கிடுவதிலும் மிகுந்த கவனம் செலுத்தப்படவேண்டும். இத் தொழில்களை முறைப்படுத்தும் குழுக்களோ வேறு அதிகாரம் வாய்ந்த அமைப்போ, இந் நிறுவனங்களின் வருவாய் வீதத்தை நிருணயிப்பதில் ஓரளவு உதவி புரிகின்றன. ஆனால், இக் குழுக்களும், அதிகார அமைப்புகளும் தீர்மானிக்கின்ற வருவாய் வீதம், (நூற்றியத்தில்) இத் தொழில்களுக்கான வருவாய்க்கு உத்தரவாதம் (Guarantee) ஏதும் அளிப்பதில்லை. மாறாக, மொத்த வருவாயினை இந் நிறுவனங்கள் ஈட்ட ஒரு வாய்ப் பினையே அளிக்கின்றன. இதன் கருத்து, பொதுப்பயன் தொழில் கள் நல்ல முறையில் இயக்கப்பட்டுவந்தால், இவ் வருவாய் வீதத்தை விதிப்பதன்மூலம், தங்களது உற்பத்தி செலவிற்காகும் மொத்தத் தொகையினை ஈட்ட முடியும் என்பதாகும். சில நிறுவ னங்கள் இவ் வாய்ப்பினைச் சாதகமாகப் பயன்படுத்திக் கொள்வ துண்டு. எரிவாயு தயாரிக்கும் நிறுவனம், நகரப் போக்குவரத்து நிறுவனம் போன்ற நிறுவனங்கள் இவ் வாய்ப்பின்மூலம் பல னேதும் பெறுமல் போவதுண்டு.

இனி, இக் கட்டணவீதத்தை நிருணயிப்பது எவ்வாறு என்பதைப் பற்றிக் காண்போம். ஒரு நிருணயிக்கப்பட்ட கட்டண வீதம் பல வருடங்களுக்குத் தொடர்ந்து அமுலில் இருக்கும். ஆனல், முதல்முறை இதனை நிருணயிக்கும்போது சில முறைகளைக் கையாள வேண்டும். அவை பின்வருவனவாம் ;

பரிசோதனை வருடம் (Test Year) ஒன்றினை எடுத்துக் கொண்டு அவ் வருடத்தில் உற்பத்திச் செலவு என்னவென்பதைக் கண்டறிய வேண்டும். பொதுவாக, இச்சோதனை வருடம் என்பது, குறிப்பிட்ட ஒரு தேதிக்கு முன்னுல் கழிந்த கடைசி 12 மாதக் காலத்தினைக் குறிப்பதாகும். ஆகவே, இச் சோதனை வருடத்திற்கான கணக்கு ஏடுகளிலிருந்து உற்பத்திச் செலவினை அறிந்து, அதற்கேற்பக் கட்டணவிகிதத்தை நிருணயிக்கலாம். இந்த 12 மாத காலத்திற்குப் பிறகு ஏற்படும் மாற்றங்களும் கணக்கிற்கு எடுத்துக்கொள்ளப்படும். இதுபோலவே முன்கூட்டி எதிர்பார்க்கப்படும் செலவினங்களும் இதில் இடம்பெறும். இதுபோன்று, பரிசோதனை வருடத்துப் புள்ளிவிபரங்களைக் கணக்கிற்கு எடுத்துக் கொள்ளும்பொழுது சில சிக்கல்கள் எழுவது இயல்பு. எடுத்துக்காட்டாக, தொழிலின் அபிவிருத்தித் திட்டங்களுக்காகப் பணம் முதலீடு செய்யப்பட்டிருந்தும் இது பரிசோதனைக் காலத்தொகையுடன் சேர்க்கப்பட்டிருக்காது. இதுபோன்று நடைமுறைச் செலவுகளில் ஏற்படும் செலவுகளை முன்கூட்டி அறியும் போதும் இத்தகைய வேறுபாடுகள் எழும். சுருங்கக் கூறின், சோதனை வருடப் புள்ளிவிபரங்களில் இருந்து ஒரு பொதுப்பயன் தொழிலின் உற்பத்திச் செலவினைக் கணக்கிட்டு, அதன்மூலம் கட்டணவிகிதத்தைத் தீர்மானிப்பது என்பது நடைமுறையில் எளிதாகச் செய்யக் கூடிய செயலன்று. சான்ருக, இரண்டாவது உலகப்போருக்குப் பின்வரும் எந்த ஒரு வருடத்தினையும் "சோதனை வருடமாக" எடுத்துக் கொண்டு இவ் வருடத்தின் செலவுகளைக் கணக்கிட்டுப் பின்னர் ஒரு தொழிலின் கட்டணவிகிதத்தை நிருணயிப்பது தவருன முடிவினைத்தரும். ஏனெனில், இவ்வுலகப்போருக்குப் பின்னர், தொழில் உலகில் ஏற்பட்ட துரிதமான வளர்ச்சியும், உற்பத்திப் பொருள்களின் மிகுதியான விலையும், கூலி மற்றும் கருவிக்கலன்கள் போன்றவற்றிற்குச் செலவிடப்பட்டத்தொகையும் பணவீக்கத்திற்கு (Inflation) வழி வகுத்தன. ஆகவே, இப் புள்ளிவிபரங்களைக் கொண்டு எடுக்கப்படும் எந்த ஒரு முடிவும் சரியானதாக அமைய வாய்ப்பு இல்லை.

**செயல்முறைச் செலவுகளைக் கட்டுப்படுத்துதல்**

பொதுப்பயன் தொழில்களின் செயல்முறைச் செலவுகள், அவற்றின் பொருள்களையும், பணிகளையும் வழங்குவதற்காகச் செய்யப்படும் செலவினைக் குறிப்பதாகும். செயல்முறைச் செலவுகள் (அல்லது நடைமுறைச் செலவுகள்) எனப்படுவது தேய்மானச் செலவுகள், சிலவகைச் சொத்துகளில் ஏற்படும் நட்டம், வரிகள், பங்குதாரர்களுக்கு அளிக்கப்படும் தொகை ஆகியவை நீங்கலாகத் தொழிலாளர் கூலி, நிருவாகச் செலவுகள். கருவிக் கலங்கள்,

உற்பத்திப் பொருள்கள் மற்றும் ஒரு குறிப்பிட்ட காலத்தில் செய்யப்படுகின்ற இதர பணிகளுக்கான செலவுகள் போன்றவற்றைக் கொண்டதாகும். இவ்வாறு கணக்கிடப்பட்ட செயல்முறைச் செலவுகள், வரிகள், தேய்மானச் செலவுகள் போன்றவற்றைக் கொண்டவையாகக் காணப்படுவதில்லை. இக் குறையினைப் போக்கச் செயல்முறை வருவாய்த் தள்ளுபடிகள் (Operating Revenue Deductions) என்ற ஒரு புதிய சொற்றொடர் அறிமுகப்படுத்தப்பட்டது. இதன்படி ஒரு குறிப்பிட்ட காலத்திற்கான நிகர நடைமுறை வருவாயினைக் (Net operating revenues) கண்டு பிடிக்க, மொத்த நடைமுறை வருவாயிலிருந்து நடைமுறை வருவாய்த் தள்ளுபடிகளைக் கழித்தல் வேண்டும் அதாவது,

மொத்த செயல் நடைமுறை வருவாய் (Gross Operating Revenue) − செயல் முறை வருவாய்த்தள்ளுபடிகள் (Operating Revenue Deductions) = நிகர செயல் முறை வருவாய் (Net operating Revenue)

நடைமுறை வருவாய்த் தள்ளுபடியில் நடைமுறைச் செலவு தேய்மானச் செலவுகள், மற்றும் வரிகள் போன்றவை இடம் பெறும். ஒரு பொதுப்பயன் தொழிலின் கட்டண விகிதத்தை நெறிப்படுத்த வேண்டுமானால் அத் தொழிலின் நடைமுறைச் செலவுகளைக் கட்டுப்படுத்துதல் மிகவும் அவசியமாகிறது; அல்லது முறையற்ற நடைமுறைச் செலவுகளை உற்பத்திச் செலவுடன் சேர்ப்பதைத் தவிர்ப்பதே இதன் நோக்கமாகும். இக் கட்டுப்பாடுகள் உலகெங்கிலுமுள்ள பொதுத் தொழில்களின் மீது பல நாட்டு அரசுகளால் பல்வேறு வருடங்களில் விதிக்கப்பட்டுள்ளன. தவிரவும், நீதிமன்றங்களின் மூலமாகவும் இக் கட்டுப்பாடுகள் விதிக்கப்பட்டுள்ளன. சான்றாக, 1892ஆம் ஆண்டிலேயே அமெரிக்க நாட்டின் தலைமை நீதி மன்றம்,

"Chicago & Grand Trunk Railway
vs
Wellman"

என்னும் வழக்கின்மூலம் பொதுப்பயன் தொழில்களின் நடைமுறைச் செலவுகளைக் கட்டுப்படுத்துவதன் அவசியத்தை வலியுறுத்தியுள்ளது. இவ் வழக்கின்மூலம் கட்டண விகிதத்தை நிருணயிக்கும்போது முறையற்ற செலவுகளை நீக்கிவிடுவதற்கான உரிமையும் அளிக்கப்பட்டது, மேலும் நடைமுறைச் செலவு என்பது நன்முறையில் அல்லது திறமையுடன் இயங்கக்கூடிய

நிறுவனங்களுக்கு ஆகக்கூடிய செலவினைக் குறிக்கும். இதன்படி, திறமையற்ற ஒரு நிறுவனம் தன்னுடைய பொருளினை உற்பத்தி செய்வதற்காகச் செய்யக்கூடிய எவ்வாவிதச் செலவுகளையும் நடைமுறைச் செலவாகக் கருதக்கூடாது என்பது புலனாகிறது. எது முறையற்ற செலவு என்பதை இந் நிறுவனங்களின் நிருவாகக் குழுக்களே தீர்மானிக்க வேண்டும்.

**முறையான செலவுகளைத் தீர்மானித்தல்**

உற்பத்திச் செலவுகளுடன் ஒரு பொதுப்பயன் தொழிலில் ஏற்படுகின்ற சில நியாயமான செலவுகளைக் கணக்கில் எடுத்துக் கொள்ள வேண்டும். அவ்வாறெனில் ஒரு நிறுவனத்தின் முறையான செலவுகள் யாவை, முறையற்ற செலவுகள் யாவை, என்பதை முதலில் வரையறுக்க வேண்டும். இதற்காகவே, செலவு விகிதம், (Expenses ratio) என்ற சொற்றொடர் கையாளப் படுகிறது. இதனைக் கையாளுவதன் மூலம் ஒரு குறிப்பிட்ட செல வினம் முறையானதா அல்லது முறையற்றதா என்பதைக் கண்டு பிடிக்க முடியும். இச் செலவு விகிதம் ஒரு குறிப்பிட்ட வகைச் செலவிற்கு (சான்றாக மின் திறன் வழங்கும் செலவு) மற்றும் அந் நிறுவனத்தின் அனைத்து நடவடிக்கைக்கும் ஆகும் மொத்தச் செல விற்குமிடையே உள்ள தொடர்பினைப் புலப்படுத்துகின்றது. இத்தகைய தொடர்பினைக் காணுவதன்மூலம், ஒரு பொதுப்பயன் தொழிலை மற்றொரு பொதுப்பயன் தொழிலோடு ஒப்பிட்டுப் பார்க்க முடியும். மேலும் ஒரு குறிப்பிட்ட காலத்தில் ஒரு நகரத்தில் இயங்குகின்ற எல்லா நிறுவனங்களையும் ஒன்றோடு ஒன்று ஒப்பிட்டுப்பார்த்து, அவற்றின் செலவினங்களை ஆராய முடியும். இவ்வாராய்ச்சியின் மூலம், எந்த ஒரு தொழில் நிறுவனத் தில் செலவினங்கள் மிகுந்து காணப்படுகின்றன என்பதை அறியலாம். இதற்குக் காரணமான நிருவாகக் குழுவின் செயல் திறனைப்பற்றியும் அறிந்து கொள்ளலாம்.

ஒரு நிறுவனத்தை மற்றொரு நிறுவனத்தோடு ஒப்பிட்டுப் பார்க்கவே செலவு விகிதங்கள் பொதுவாகப் பயன்படுகின்றன. எந்த நிறுவனத்தின் செலவினம் அதிகரித்துள்ளது என் பதை அறியவும் பயன்படுகின்றன. ஆனால், பொதுப்பயன் தொழில்களுக்குள் ஏற்படுகின்ற இவ்வேறுபாட்டிற்கான காரணங் களை அறிய இவை பயன்படமாட்டா சான்றாக, நுகர்வோரின் தேவையளவு, சந்தையின் அமைப்பு, நிறுவனத்தில் கையாளப் படும் கருவிக்கலன்களின் தன்மை போன்ற காரணங்களால் இத் தொழில்களின் செலவினங்கள் ஒன்றுக்கொன்று மாறுபடும்.

**செலவு விகிதத்தைக் கணக்கிடுதல்**

ஒரு தொழிலின் செலவு விகிதத்தைக் கீழ்க்காணும் அடிப் படையில் கணக்கிடலாம் :—

1. ஒவ்வொரு ரூபாய் வருவாய்க்கும் செலவிடப்பட்ட தொகை,
2. சராசரி ஒவ்வொரு நுகர்வோருக்காகவும் செலவிடப் பட்ட தொகை,
3. ஒவ்வொரு பொருளினையும் உற்பத்திசெய்யச் செல விடப்பட்ட தொகை

ஆகிய மூன்றிற்குமிடையே உள்ள விகிதங்கள் கணக்கிற்கு எடுத் துக் கொள்ளப்படவேண்டும்.

பொதுப்பயன் தொழில்களின் நடைமுறைச் செலவுகளைக் கட்டுப்படுத்துவதோடு நியாயமான ஒரு செலவின் அடிப்படையை அமைக்க வேண்டுமானால், இந் நிறுவனங்களின் கணக்கியல் முறைகள் சீரானதாக (Uniform) இருக்க வேண்டும். குறிப்பாக மின் திறன் வழங்கும் நிறுவனங்கள் இம் முறையைக் கையாளுதல் மிகவும் இன்றியமையாதது. அமெரிக்க நாட்டில் மெசிசிபி, டென்னசி, வியோமிங் போன்ற நகரங்களில் இயங்குகின்ற மின் திறன் வழங்கும் நிறுவனங்கள் இச் சீரான கணக்கியல் முறை யினைக் கையாளுகின்றன. தவிரவும் இந் நகரங்களில் உள்ள தனியார்த் துறை எரிவாயு நிறுவனங்கள் தங்களது ஆண்டறிக் கையினை சீரான முறையில் மாநில அரசுக்கு அனுப்பவேண்டும் என்றும் சட்டம் இயற்றப்பட்டுள்ளது. மின்திறன் மற்றும் எரிவாயு போன்ற பொருள்களைத் தயாரித்து அளிக்கும் நிறுவ னங்களில் கையாளப்படும் சீரானமுறை கணக்குப் பதிவியலின் படி, நடைமுறைச் செலவுகள் எனப்படுவது கீழ்க்காணும் பிரிவு களைச் சார்ந்த செலவுகள் அனைத்தையும் உட்கொண்டதாக அமைகிறது :—

1. உற்பத்தி
2. மாற்றியனுப்புதல்
3. பகிர்ந்தளித்தல்
4. நுகர்வோர்பற்றிய கணக்குகள்
5. விற்பனை முடுக்கம் (Sales promotion)
6. நிருவாக மற்றும் பொதுச் செலவுகள்,

தொலைபேசி நிறுவனம் ஒன்றின் நடைமுறைச் செலவுகளில் இன்றியமையாததாகக் கீழ்க்கண்டவற்றைக் குறிப்பிடலாம்:—

1. பராமரிப்பு
2. தேய்மானம்
3. போக்குவாத்து
4. வாணிகம்
5. அலுவலக ஊதியம் மற்றும் பொதுச் செலவுகள்
6. இதர நடைமுறைச் செலவுகள்.

மின்திறன் வழங்கும் நிறுவனம் ஒன்றிற்கான நடைமுறைச் செலவுகளின் மாதிரி அட்டவணை,

I. உற்பத்திச் செலவுகள்

(அ) மின்திறன் உற்பத்தி—நீராவித்திறன்மூலம்
செயல்முறைச் செலவுகள்
பராமரிப்புச் செலவுகள்
இதரச் செலவுகள்

(ஆ) மின்திறன் உற்பத்தி—ஹைட்ராலிக் திறன்மூலம்.
செயல்முறைச் செலவுகள்
பராமரிப்புச் செலவுகள்
இதரச் செலவுகள்.

(இ) மின்திறன் உற்பத்தி—அதற்கான என்ஜின் திறன் மூலமாக
செயல்முறைச் செலவுகள்
பாாமரிப்புச் செலவுகள்
இதரச் செலவுகள்

(ஈ) ஏனைய உற்பத்திச் செலவுகளும், கடன்களும்.

II. மாற்றியனுப்பும் செலவுகள்
செயல்முறை, பராமரிப்பு, மற்றும் இதரச் செலவுகள்

III. பங்கீட்டுச் செலவுகள்
செயல்முறை, பராமரிப்பு மற்றும் இதரச் செலவுகள்

IV. நுகர்வோரின் கணக்குப் பதிவியல் மற்றும் வசூலிக் செலவுகள்

V. விற்பனை முடுக்கச் செலவுகள்

VI. நிருவாக மற்றும் பொதுச் செலவுகள், என்றும் மின் திறனை உற்பத்தி செய்து நுகர்வோருக்கும் பங்கீடு செய்யும் பொதுப்பயன் தொழில் ஒன்றின் நடைமுறைச் செலவுகளைப் பாகுபடுத்திக் காணமுடியும்.

**நடைமுறைச் செலவுகளைக் கட்டுப்படுத்துவதன் அவசியம்**

பொதுப்பயன் தொழில்களனைத்திற்கும் சீரான கணக்குப் பதிவியல்முறை ஒன்று இருக்குமேயானால் அவற்றின் நடைமுறைச் செலவுகளைக் கட்டுப்படுத்த வேண்டிய அவசியம் ஏற்படாது. ஏனெனில், சீரான கணக்குப் பதிவியலின் மூலம், செயல்முறைச் செலவுகளைப்பற்றிய குறிப்புகளை எளிதில் அறிந்துகொள்ளலாம். இருப்பினும் சீரான கணக்குப் பதிவியலின் வழியாக, எந்தெந்தச் செலவுகள் முறையானவை, எவற்றை நடைமுறைச் செலவுக் கணக்குடன் சேர்த்துக் கொள்ளலாம் எவை முறையற்ற செலவுகள் என்பன போன்றவற்றை அறிந்து கொள்ளமுடியாது. மேலும் ஒரு நிறுவனத்தில் இயந்திரங்களின் மீது ஆகும் செலவுகள், மூலப்பொருள்களை வாங்கும் செலவுகள், மற்றும் தொழிலாளருக்கு அளிக்கப்படும் ஊதியம் போன்றவற்றைத் தவிர்க்க முடியாதாகையால் அவற்றை நடைமுறைச் செலவுகளுடன் சேர்ப்பதா, இல்லையா என்ற ஐயம் எழ வாய்ப்பில்லை. ஆயினும், அவை தவிர, பிறவகைச் செலவுகளை நடைமுறைச் செலவாகக் கருதுவதா இல்லையா என்பதைப்பற்றி கருத்து வேறுபாடு எழ வாய்ப்புள்ளது. தவிரவும், இவ்வகைச் செலவுகளை ஏற்போர் யார்? இதனை நுகர்வோரிடமிருந்து, அதிக கட்டணத்தை விதிப்பதன்மூலம் பெற வேண்டுமா அன்றி, நிருவாகமே இதனை ஏற்பதா என்ற வினாக்களுக்கும் விடையளிக்கப்பட வேண்டும்.

சில வகை நிறுவனங்கள் தங்களுடைய அலுவலர்களுக்கு அதிக ஊதியம், ஓய்வுத்தொகை (Pension) போன்றவற்றை அளிக்கத் தங்களுடைய நிறுவனத்துடன் இணைந்த கிளை நிறுவனங்களிடமிருந்து கொள்முதல் செய்த பொருள்கள் மற்றும் பெற்றுக் கொண்ட பணிகள் இவற்றிற்காக, அதிகவிலை கொடுக்கவும் இசையலாம். இவற்றைத் தவிர, பொருள்களை விளம்பரப்படுத்துவதற்காகவும், கட்டணவீதத்தினை ஆய்வு செய்யவும், சிக்கல்களைத் தீர்க்கும் வழக்குகளுக்காகவும், மற்றும் பொதுமக்களுடன் தொடர்பு கொள்ளவும் ஒரு நிறுவனம் செய்யும் செலவுத் தொகை உண்மையிலேயே இன்றியமையாததா அன்றி, நிருவாகத்தின் அதிகாரம் முறையற்ற வகையில் பயன்படுத்தப்பட்டுள்ளதா வென்பதைக் கண்டறிதல் அவசியமாகிறது.

ஒரு நிறுவனத்தின் சொத்துகளின் மீதான தேய்மானச் செலவுகள், அந் நிறுவனம் செலுத்தும் வரிகள் போன்றவற்றையும் ஆராய்தல் நன்மை பயக்கும். ஏனெனில், தேய்மானச் செலவுகள், ஒரு நிறுவனத்தின் கட்டணவீதத்தைப் பின்வரும் இரு வழிகளில் பாதிக்கின்றது ;—

(1) நடப்பு ஆண்டில் செயல்முறைச் செலவாக அது கருதப்படும்.

(2) இந் நிறுவனத்தின் நிலையான மற்றும் மீண்டும் வருவாய் ஈட்டக்கூடிய சொத்துகளின் மதிப்பினைக் குறைப்பதன்மூலம், இந் நிறுவனத்தின் கட்டண அடிப்படையை (Rate base) மாற்றியமைக்கக்கூடியதாக இருக்கின்றது.

மேற்கண்ட இரு காரணங்களினால் ஒரு நிறுவனத்தின் தேய்மானச் செலவுகள் மிகுந்த கவனத்துடன் பரிசீலிக்கப்படுகின்றன. பொதுப்பயன் தொழில்கள் பலவும் தேய்மானச் செலவினை ஈடுகட்டுவதில் ஒரு தனிவழியை நெடுநாள்களாகக் கையாண்டு வந்தன. அதன்படி, வருவாய் மிகுந்து வரும் வருடங்களில், அதிக அளவு தேய்மானத்தைக் கணக்கிடுவதும், வருவாய் குறைந்துவரும் வருடங்களில் குறைந்த அளவு தேய்மானத்தைக் கணக்கிடுவதும் வழக்கில் இருந்தது. இம் முறையால் இந் நிறுவனத்தில் முதலீடு செய்தோர் நன்மை பெறுவரே தவிர நுகர்வோருக்கு எவ்வித ஆதாயமுமில்லை. தேய்மானச் செலவினைப் போலவே, தொழில் நிறுவனங்கள் செலவிடுகின்ற வரித்தொகையும் பரிசீலனைக்குரியது. பொதுவாக, இந் நிறுவனங்களின் வரித்தொகை பெரும்பாலும் செயல்முறைச் செலவுகளில் ஒன்றாகவே கருதப்படுகின்றது. இதனால், இந் நிறுவனங்கள் தயாரிக்கின்ற பொருள்களுக்கான விலையும் உயர்த்தப்படுகின்றது. ஆகவே, குறைந்த விலையினை எதிர்நோக்கும் நுகர்வோருக்கும், மிகுந்த வருவாயினை எதிர்நோக்கும் வரிவிதிப்போருக்குமிடையே எந்நேரமும் போராட்டம் நடைபெற்றுக் கொண்டே இருக்கும். புகைவண்டி நிறுவனங்களுக்கு அளிக்கப்படும் 'வேறுபாட்டு வரிக்கொள்கை' (Discriminatory Tax Policies) ஏற்கனவே நிலவுகின்ற குழப்பங்களை அதிகப்படுத்தும் வகையில் அமைகின்றது. மேற்கண்ட கருத்துகளை ஆராய்ந்து பார்ப்பதன்மூலம், ஒரு நிறுவனத்தின் நடைமுறைச் செலவுகளாக எவற்றைச் சேர்க்கலாமென்றும், அவை முறையற்றவையாக இருப்பின் நுகர்வோர் எந்த அளவுக்கு இன்னலுறுவர் என்பதையும் அறிய முடியுமல்லவா?

1. பிறவகைச் செலவுகள்

நடைமுறைச் செலவுகள் என்பது பல்வகையான செலவுகளின் தொகுப்பாகும். இச் செலவுகள் முறையானவையா, அவற்றை நடைமுறைச்செலவுகளுடன் இணைக்கலாமா என்பதைக் கண்டறிய சில நேரங்களில் நீதிமன்றங்களின் துணை நாடப்பட்டதும் உண்டு. இவ்வாறு நீதிமன்றங்களின் தீர்ப்புப்படி ஏற்றுக் கொண்ட செலவுகளைப்பற்றி ஈண்டு நோக்குவோம்.

எதிர்கால அடக்கவிலைக்கு ஏற்பாடு செய்தல் (Provision for future costs).

ஒரு நிறுவனத்தின் கட்டணவீதத்தை நிருணயிக்கும் பொருட்டுச் 'சோதனை வருடம்' (Test year) ஒன்றினைத் தேர்ந்தெடுத்து, அவ் வருடத்தில் செய்யப்பட்டுள்ள செலவுகளனைத்தையும் கணக்கிட்டால் கிடைக்கும் தொகையே, அந் நிறுவனத்தின் நடைமுறைச் செலவுத் தொகையாய்க் கருதப்படும். இம் முறை எளிதானது என்றாலும், சில நடைமுறைச் சிக்கல்களும் இதில் உள்ளன. 'சோதனை வருடத்தின்' அனைத்துச் செலவுகளையும் ஒன்றாகக்கூட்டும்போது சிலவகைச் செலவுகள் விடுபட்டுப் போகலாம். சான்றாக, சோதனை வருடத்தின் இடையே ஏற்படும் எதிர்பாராத செலவுகள் மொத்தச் செலவுத் தொகையுடன் கூட்டப்பட்டிருக்காது. அடுத்த பரிசோதனை வருடம் முடிந்த சில நாள்களுக்குள்ளேயே சிலவகைச் செலவுகள் ஏற்படலாம். இவ்விரண்டு வருடச் செலவுகளையும், சோதனை வருடத்தின் மொத்தச் செலவுத் தொகையோடு கணக்கில் எடுத்துக் கொள்ளலாமா, கூடாதா என்ற ஐயப்பாடு எழலாம். குறிப்பாக, இரண்டாவது உலகப் போர் முடிந்த பின்னர் உலகெங்கும் ஏற்பட்ட விலை உயர்வுச் சூறாவளியில் தொழில் நிறுவனங்களனைத்தும் சிக்குண்டு அவற்றின் நிதிநிலைமையும் சீரழியத் தொடங்கியது. பல்வகை நடைமுறைச் செலவுகளைச் செய்த பின்னரே, பொருள்களை உற்பத்தி செய்ய வேண்டிய கட்டாய நிலை இந் நிறுவனங்களுக்கு ஏற்பட்டது. இதன் பலனாக, இப் பொருள்களின் விலையும் உயர்த்தப்பட்டது. இருப்பினும், சிலவகைச் செலவுகள் எதிர்பாராமல் ஏற்பட்டு அவற்றைச் சமாளித்த பின்னர், இவற்றை மொத்த நடைமுறைச் செலவோடு சேர்த்துக்கொள்வதா என்ற வினா எழுந்தது. சான்றாக, பொருள்களின் விலை உயர்ந்ததன் காரணமாக அன்றாட வாழ்க்கையை எளிதாக நடத்த இயலாத தொழிலாளர்கள் அதிகக்கூலி கேட்டுத் தமது நிறுவனங்களுடன் போராடத் துவங்கினர். நிறுவனங்களின் நிர்வாகமும், தொழிலாளரின் இக் கோரிக்கையை ஓரளவு கவனிப்பதாக ஒப்புதலளிக்க ஆரம்பித்தது. இவ்வகை ஒப்பந்தத்தின்மூலமாக, நிறுவனங்களின்

நடைமுறைச் செலவு அதிகரிக்குமல்லவா? சோதனை வருடம் முடிந்த பின்னரும், இதனைக் கணக்கில் எடுத்துக்கொள்ளலாம் என 1957-ல் அமெரிக்க நாட்டு வழக்குத் தீர்ப்பு ஒன்று அனுமதி யளித்துள்ளது.*

சோதனை வருடம் முடிந்த பின்னரும் மேற்கண்ட செலவுகளை ஏற்றுக்கொள்கையில் அவற்றின் தன்மையை ஆராய்தல் அவசிய மாகிறது. சான்றாக ஒரு நிறுவனத்தின் எரிபொருளுக்காகச் செலவு செய்யப்படும் தொகையில் கூடுதல் எதுவும் காணப் பட்டால் அத் தொகையினைக் கணக்கில் ஏற்கலாகாது. தொழி லாளர் ஊதிய உயர்வு எரிபொருள்செலவு இவ்விரண்டிற்கு மிடையே உள்ள வேறுபாட்டினை ஈண்டு நோக்குவது சாலப் பொருத்தமுடையதாகும்.

மேற்கண்ட எடுத்துக்காட்டில் ஊதியஉயர்வுபற்றிச் சோத னைக் காலத்தினிடையே ஒப்பந்தம் ஒன்று ஏற்பட்டுவிட்டதால் எக்காரணத்தை முன்னிட்டும் அதனை நிறைவேற்ற வேண்டிய பொறுப்பு நிறுவனத்திற்கு ஏற்படுகிறது. எந்த வருடத்தில் இவ் ஒப்பந்தம் ஏற்படுத்தப்பட்டதோ அவ்வருடத்தின் நடைமுறைச் செலவோடு, தொழிலாளர்களுக்கு அதிகமாக அளிக்கப்பட்ட தொகையினையும் சேர்த்துக்கொள்வதே பொருத்தமானது. ஆனால், எரிபொருள் பற்றிய செலவு இத்தன்மையதன்று. எவ்வித ஒப்பந்தமும் இங்கு ஏற்படுத்தப்படவில்லை. மேலும் எரிபொரு ளின் விலையில் ஏற்படும் மாற்றங்கள் முன்கூட்டி அறிந்து கொள்ளப்பட்டவையே தவிர இவற்றைச் சோதனை வருடத்தின் நடைமுறைச் செலவுடன் சேர்த்துக்கொள்ள வேண்டிய அவசிய மில்லை.

மேற்கண்ட இரண்டு சான்றுகளை ஆராய்ந்து பார்க்கையில், எதிர்காலத்தில் ஏற்படக்கூடிய சிலவகைச்செலவுகளைச் 'சோதனை வருடம்' முடிந்தபின்னரும் அக் காலத்திற்குரிய நடைமுறைச் செலவுடன் ஏற்றுக்கொள்ளலாமென்ற உண்மை புலப்படு கின்றது.

2. ஆராய்ச்சிமூலம் அணுச்சக்தியைப் பெருக்குவதற்கான செலவுகள் (Development of Atomic Energy through Research costs)

பொதுவாக இத்தகைய செலவுகள் மேலைநாடுகளில் இயங்கி வரும் மின்திறன் வழங்கும் நிறுவனங்களால் செயற்படுகின்றன.

* Central Maine Power co vs Maine Public Utilities Commission (1957).

அங்குள்ள பலவகை தனியார்த்துறை நிறுவனங்கள் மின்திறன் உற்பத்தியில் ஈடுபட்டுள்ளன. குறைந்த செலவில், அதிக அளவில் மின்திறனை உற்பத்தி செய்யும் பொருட்டு இந் நிறுவனங்கள் ஆராய்ச்சி மூலம் அணுச்சக்தியை உற்பத்தி செய்து, அதனைப் பயன்படுத்தி மின்திறனை உற்பத்தி செய்யும் பணியில் ஈடுபட்டுள்ளன. இவ்வாறு, அணுச்சக்தியைத் தமது இலாபமீட்டும் குறிக்கோளுக்காகப் பயன்படுத்தும் பணியில் நிறுவனங்கள் மிகுந்த பொருள்செலவினைச் செய்ய வேண்டியிருக்கும். இச் செலவினையும், நடைமுறைச் செலவுடன் ஏற்றுக்கொள்வதா என வினா எழலாம். மின்திறன் வழங்கும் தமது பணியைச் சிறப்புடனும், தொழில்நுணுக்கத்துடனும் செய்யும் பொருட்டுச் செய்யப்படும் இச் செலவுத் தொகையை, நடைமுறைச் செலவில் ஒன்றாக ஏற்றுக் கொள்ளலாம் என அமெரிக்க நாட்டு நீதிமன்றங்களின் இரு தீர்ப்புகள் கூறுகின்றன.*

### 3. சம்பளம் மற்றும் கூலிச்செலவுகள் (Salaries and wages costs)

பொதுப்பயன் தொழில்களின் அலுவலகங்களில் பணிபுரியும் அலுவலரின் சம்பளம், தொழிற்சாலையில் பணிபுரியும் தொழிலாளர்களின் கூலி போன்ற செலவுகளை நடைமுறைச் செலவுக் கணக்கில் ஏற்றுக்கொண்டு அதனை ஈடுகட்ட தமது பொருள்களுக்காக நுகர்வோரிடமிருந்து அதிக விலையைப் பெற்றுக்கொள்ளுதல் சிறந்த வழியா என்ற வினாவிற்கு விடைகாண முயற்சிப்போம். அதற்கு முன்னர், பொதுப்பயன் தொழில்கள் நடத்தப்பெறும் விதத்தினையும் அறிதல் நன்மை பயக்கும். நமது நாட்டைப் பொறுத்தவரையில் பொதுப்பயன் தொழில்களில் மிகச் சிலதான் தனியார் துறையில் நடத்தப்பெறுகின்றன. ஏனைய பலவும், மாநில அல்லது மத்திய அரசுகளினால் ஏற்று நடத்தப்பெறுபவை. ஆனால், மேலை நாடுகளில், பலவகைப் பொதுப்பயன் தொழில்கள் தனியார் துறையினரால் நடத்தப்பெறுகின்றன. மேலும், சிலவகைத் தொழில்கள் ஒரு குடும்பத்தினைச் சார்ந்த எல்லா உறுப்பினர்களாலும் ஒன்றாக நடத்தப் பெறுகின்றன. சான்றாக, தொலைபேசி நிறுவனங்கள் பல மேலை நாடுகளில் இவ்வாறு இயங்கிவருகின்றன. குடும்பத்தின் உதவியோடு இயங்கிவரும் இத்தகைய நிறுவனங்களில் அலுவலர் சம்பளம் என்ற வகையில் அதிகத் தொகையினைச் செலவுசெய்வது முறையாகாது

* Re. Consumers Power co : 15 PVR
Re. Pacific gas & Electric co 21 PVR

என்ற ஒரு கருத்து நிலவுகிறது. இதற்குக் காரணமாகப் பின் வரும் காரணங்களைக் கூறலாம் :—

(1) பொதுப்பயன் தொழில்களில் பணிபுரிவோர் தமக்கு அதிக ஊதியம் அளிக்கப்பட வேண்டுமெனக் கோரிக்கை எழுப்பினால், இத்தொழில்களின் நிருவாகக்குழு அதற்கு விடைகாணும் பொருட்டு, தொழிலாளர், நிருவாகத்தினர் என இருசாராரையும் கொண்ட குழு ஒன்றினை அமைத்து ஊதிய உயர்வினை அளிப்பதா, எவ்வளவு அதிகத்தொகை அளிப்பது என்ற செய்திகளை ஆராயும். அதிக ஊதியம் அளிப்பதென்பது இந் நிறுவனங்களின் இலாபத்தொகையின் மறைமுகமாகக் குறைப்பதற்கான வழியாகும் என்பது பொதுவான ஒரு கருத்து. ஆகவே ஊதியத்தொகை உயரஉயர, நிகர இலாபத் தொகை குறைந்துகொண்டே போகும்.

(2) இரண்டாவதாக, பொதுப்பயன் தொழில்களின் ஊதியத்தொகையை அவற்றின் இலாபத் தொகையோடு ஒப்பிட்டுப் பார்க்கையில், இவற்றின் விகிதம் சரியான முறையில் அமைவதில்லை. பெரும்பாலும் அலுவலரின் ஊதியத்தொகை மிகுந்தே காணப்படும்.

மேற்கண்ட இரு காரணங்களைக் கருத்திற்கொண்டு பார்க்கையில் பொதுப்பயன் தொழில்கள் தமது அலுவலருக்காகவும், தொழிலாளருக்காகவும் செலவு செய்யும் ஊதியத் தொகையினை நடைமுறைச் செலவுகளில் ஒன்றாக ஏற்றுக்கொள்ளக்கூடாது என்பது விளங்கும். இதனை நிரூபிக்கும்வகையில் அமெரிக்க நாட்டின கொலராடோ மாநிலத்தில் உள்ள குடிநீர் வழங்கும் நிறுவனம் ஒன்றின் வழக்கினை எடுத்துக்கொள்வோம்.

இக் குடிநீர் வழங்கும் நிறுவனத்தின் வருடாந்தர இலாபம் 10,000 டாலர் என்றும் இந் நிறுவனம் தமது அலுவலருக்கான ஊதியத் தொகையாக 5,400 டாலர் செலவு செய்து வந்ததென்றும் கூறப்பட்டது. மேலும், மேற்பார்வை மற்றும் பராமரிப்புச் செலவுகள் என்ற வகையில் 1,200 டாலர் செலவழிக்கப்பட்டது. இதன காரணமாக இந் நிறுவனத்தின பங்காதாயம் 2,500 டாலராகக் குறைந்துவிட்டது. இதனைச் சரிகட்ட நுகர்வோரிட

யிருந்து குடிநீர்க் கட்டணம் அதிக அளவில் வசூலிக்கப்பட்டது. ஆகவே, இத்தகைய செலவுகளை நடைமுறைச் செலவுகளுடன் ஒன்றாக ஏற்றுக் கொள்ளலாகாது என்று தீர்ப்பு வழங்கப் பட்டது.* நியூயார்க் நகரில் இயங்கிவரும் பொதுப்பயன் தொழில் நிறுவனம் ஒன்றினை ஏனைய பிற நிறுவனங்களுடன் ஒப் பிட்டு நோக்கிய பின், இந் நிறுவனம் தனது மேலாண்மை அதிகா ரிகளுக்கென (Executives) அளித்த அதிக ஊதியத்தின் காரண மாக, நிருவாகத்தில் குறிப்பிடத்தக்க முன்னேற்றமேதும் ஏற்பட வில்லை என்றும் கருத்துத் தெரிவித்தது. ஆகவே, இவ்வாறு செல வழிக்கப்பட்ட தொகையினை நடைமுறைச் செலவுடன் ஏற்க லாகாது என்று தீர்ப்பு வழங்கப்பட்டது.*

மேற்கண்ட தீர்ப்புகளைக் கொண்டு, பொதுப்பயன் தொழில் களின் ஊதியச் செலவுத்தொகை பிறதொழில்களின் தொகையை விட எப்போதும் அதிகமாகவே காணப்படும் என்று கொள்வதற் கில்லை. ஏனெனில் கட்டுப்பாடுகளுக்குட்பட்டு இயங்கிவரும் இத் தொழில்கள், பிற நிறுவனங்களுடன் மேலாண்மை அதிகாரி களைத் தேர்ந்தெடுத்து நியமித்துக்கொள்வதில் போட்டியிட வேண்டியுள்ளது. திறமை வாய்ந்த நிருவாக அதிகாரிகளின் கையில்தான் ஒரு நிருவனத்தின் வெற்றி, தோல்வி அமைந்திருக் கின்றது. இதனையே 'பொதுமக்களுக்கு மட்டுமின்றி, நிறுவனத் திற்கும் இன்றியமையாதவர்களாகக் கருதப்படும் நிருவாக அதிகாரிகளின் சிறப்புத் தன்மையை ஒரு நிறுவனத்தைச் சார்ந்த இயக்குநரால் மட்டுமே உணரமுடியும்......" என மிச்சிகன் கமிஷன் அறிக்கை கூறுகின்றது.*

**அலுவலர் ஒய்வுத்தொகை** (Pension costs)

தங்களிடம் நெடுங்காலமாகப் பணிபுரிந்தபின்னர் ஓய்வு பெற்றுச் செல்லவிருக்கும் அலுவலருக்கு ஓய்வுத்தொகை அளிக்க எல்லா நிறுவனங்களும் முன்வருவது இயற்கையே. பொதுப்பயன் தொழில்களில் பணியாற்றி ஓய்வு பெற விரும்பும் பணியாளர்களுக்கு அளிக்கப்படும் ஓய்வுத்தொகை யினை, நடைமுறைச் செலவுகளுடன் சேர்த்துக்கொள்வது மரபு. இதனைச் செயலாக்கும் முன்னர் ஒரு சில கருத்துகளை ஆராய்தல் இன்றியமையாதது. ஒரு குறிப்பிட்ட வருடத்தில் (சோதனை

* Re Koscade Town co — 41 PVR 3rd 256 (colo 1961)
* Re Orange & Rockland Elec. co. 49 PVR (N.S.)
* Re Detroit Edison co 16 PVR (N.S.) (Mich 1936)

வருடத்தில்) அளிக்கப்பட்ட, ஓய்வுத் தொகையினை அவ்வருடத்தின் நடைமுறைச் செலவுடன் சேர்த்துக்கொள்ளலாம். இதன் விளைவாக இந் நிறுவனங்கள் விதிக்கும் கட்டணவீதமும் அதிகரிக்கும். இதனை நுகர்வோர் ஏற்க வேண்டியிருக்கும். எனினும் இம் முறையில் ஒரு சிக்கல் உள்ளது. அதாவது, நுகர்வோர் ஏற்கும் அதிகமான கட்டணவீதம் எப்போதும் ஒன்றாக இருப்பதில்லை. குறிப்பிட்ட ஒரு காலத்தில் இத் தொகை குறைந்தும், சில காலங்களில் மிகுந்தும் மற்றும் சில காலங்களில் அறவே இன்றியும் காணப்படலாம். இதனால் நுகர்வோரிடமிருந்து வாங்கப்படும் கட்டணம் முறையே சில நேரங்களில் குறைந்தும், சில நேரங்களில் சராசரித்தொகையாகவும் காணப்படும். இந் நிலை சரியன்று என்பது அறிஞர்களின் கருத்து.

இக் குறையினைப் போக்கும் வழியொன்றும் காணப்பட்டது. அதன்படி பணியாளர்களுக்கு அளிக்கப்படும் ஓய்வுத்தொகை அனைத்தையும் ஒரே வருடகாலத்தின் செலவுத் தொகையாகக் கருதாமல் மூன்று வருட அல்லது நான்கு வருட காலத்திற்துப் பகிர்ந்துவிட்டால், நுகர்வோரின் சுமையும் ஒரே வருடத்தில் மிகுந்து காணப்படாமல் மூன்று அல்லது நான்கு வருடங்களில் பரவலாகக் காணப்படும். இம் முறையினை விடுத்து மற்றொரு முறையினைக் காணலாம். தற்சமயம் ஒரு நிறுவனத்தில் பணி புரியும் அனைவரும் தங்களது மாத ஊதியத்திலிருந்து ஒரு குறிப்பிட்டத் தொகையினைத் தங்களது ஓய்வுத்தொகையுடன் சேர்க்கும்பொருட்டுச் சேமித்துவருவர். இத் தொகைக்கு ஈடாக தொழில் நிறுவனமும் ஒரு குறிப்பிட்டத தொகையினை அளிப்பது மரபு. இவ்வாறு தாங்கள் அளிக்க வேண்டிய தொகையை ஈடு செய்ய ஒவ்வொரு வருடமும் நிகர இலாபத்தினின்று ஒரு குறிப்பிட்ட தொகையை எடுத்து ஒரு சேமிப்புநிதியாகவே நிருவாகக் குழு ஏற்படுத்திவிடும். இவ்வாறு சேமித்துவைத்த நிதியிலிருந்துதான் ஓய்வுத்தொகை அளிக்கப்பட வேண்டும். இம் முறையைக் கையாண்டுவந்தால் நிருவாகத்தினருக்கு தங்கள் நிறுவனத்தின் நிதிநிலையைப்பற்றி அச்சம் கொள்ளவேண்டிய அவசியமேற்படாது. அதனால், செலவுத்தொகை கூட்டப்பட்டு, இறுதியில் நுகர்வோரின் தலையில் இச் சுமை வந்துவிழும் நிலையும் ஏற்படாது. மேற்கண்ட கருத்துகளைக் கொண்டு, ஓய்வுத்தொகை என்பதனைச் சில நேரங்களில் செலவுத் தொகையாகக் கருதலாமென்றும் இந்த ஓய்வுத்தொகை 'சேமிப்புநிதியாக' வைக்கப்பட்டிருந்தால், இதனை செலவுத்தொகையுடன் ஏற்கலாகாதென்றும் தெரியவருகிறது.

**பிடிப்புக் கம்பெனிகளிடமிருந்து (Holding Companies) பெற்றுக் கொண்ட பொருள்களுக்கும், பணிகளுக்குமான செலவுத் தொகை.**

நிருவாகத் திறமையின் காரணமாகவோ நிதிப்பற்றுக் குறையினாலோ வேறு ஏதாவது காரணங்களினாலோ, ஒரு நிறுவனம் தன்னைவிட திறமைமிக்க வேறொரு நிறுவனத்தின் உதவியை நாடுதல் இயல்பு. இத்தகைய திறமைமிக்க நிறுவனம் நிருவாகக் கம்பெனியென்றும், உதவியை நாடிடும் நிறுவனம் துணைக்கம்பெனியென்றும் அழைக்கப்பெறும். இந் நிலையில் கணக்குப் பதிவியல், கொள்முதல், பொறியியல்திறன், விற்பனை முடுக்கம், கட்டண மதிப்பீடு போன்ற பல்வகைப் பணிகளை நிருவாகக் கம்பெனித் துணைக்கம்பெனிகளின் சார்பில் செய்வதுண்டு. இதற்கான செலவுகளைத் துணைக்கம்பெனியிட மிருந்து பெற்றுக்கொள்வதும் முறையேயாகும். இவ்வாறு துணைக்கம்பெனி அளிக்கும் தொகை, அதன் நடைமுறைச் செலவுத் தொகையுடன் ஒன்றாகக் கணக்கிடப்படும். ஆனால் இதற்கான சில விதிகளும் உள்ளன. அவற்றின்படி ஒரு துணைக்கம்பெனி தான் பெற்றுக்கொண்ட பொருளுக்காகவும், இதர பணிகளுக் காகவும், நிருவாகக் கம்பெனிக்குச் செலுத்தும் தொகை அத் துணைக்கம்பெனி தனித்தியங்கினால் இவற்றிற்காக ஆகும் செலவுத் தொகையைவிட அதிகமாக இருக்கலாகாது. மேலும், நிருவாகக் கம்பெனியிடமிருந்து பெற்றுக்கொண்ட எல்லா வகைப் பணிக ளுக்கும் ஈட்டுத்தொகை அளித்தல் என்பது ஏற்றுக்கொள்ளப்பட மாட்டாது. குறிப்பிட்ட அல்லது இன்றியமையாத சிலவகைச் செலவுகள் மட்டுமே துணைக்கம்பெனியால் ஏற்றுக்கொள்ளப்பட வேண்டுமென்பது அமெரிக்க நாட்டுப் பொதுப்பயன் தொழில் களுக்கான நிருவாகக் குழுவின் தீர்ப்பு ஆகும். இன்றியமையாத செலவுகள் யாவை என்ற வினா ஒன்றும் இத்துடன் எழுந்தது. ஒரு தொழில் தடையின்றி தொடர்ந்து நடைபெறுவதற்குச் செய்ய வேண்டிய செலவுகளனைத்தும் இன்றியமையாச் செலவுகள் என்று கருதலாம். மேலும், ஒரு நிறுவனத்தின் இன்றியமையாச்செலவு. மற்றொரு நிறுவனத்திற்குத் தேவையற்றதாக இருக்கலாமல்லவா? ஆகவே, ஒரு செலவு தேவையானதா இல்லையா என்பதனை அந்தந்தச் சூழ்நிலைகளுக்கேற்பத் தீர்மானிக்க வேண்டும் என்ற கருத்தே பொருத்தமானது. ஆகவே, இச் செலவுகளை மட்டுமே நடைமுறைச் செலவுகளோடு ஏற்றுக்கொள்ளலாம்.

**பொதுத்தொடர்புக்கான செலவுகள் (Public Relations Costs)**

எல்லா நாடுகளையும்விட அமெரிக்க நாட்டு வணிகர், பொதுத் தொடர்பின் இன்றியமையாமையை நன்கு உணர்ந்தவர்கள்

எனலாம். ஒரு பொருளை உற்பத்தி செய்வதோடு, தொழில் நிறுவனத்தின் கடமை முடிந்துவிடுவதில்லை. அப் பொருளினைச் சந்தையில் அறிமுகப்படுத்தவும், அதன்பின்னர், நுகர்வோர் அதனைத் தாமாகவே விரும்பிவந்து வாங்கும்வண்ணம்செய்யவும், போட்டி நிறுவனங்களிடையே துணிந்துநின்று விற்பனை முடுக்கம் செய்யவும், கல்வி நிலையங்களுக்கும் அரசின் தொடர்பினைப் பெற்றிட அரசியல் கட்சிகளுக்கும் நன்கொடை அளிக்கவும் இவ்வாறு பலவகைச் செலவுகளைச் செய்யவேண்டியுள்ளது. இததகைய செலவுகளையெல்லாம் அந் நிறுவனத்தின் நடைமுறைச் செலவுகளாகக் கருதுவதா என்ற வினு எழுவது இயற்கையே.

20ஆம் நூற்ருண்டில் தொழில் துறையில் ஏற்பட்டுவரும் மாறுதலுக்கேற்பப் பொதுத் தொடர்புக்கெனச் செய்யப்படும் செலவுத் தொகையும் அதிகரித்து வந்துள்ளது. குறிப்பாக துணைக்கம்பெனிகள் மற்றும் நிருவாகக் கம்பெனிகள் போன்ற பல்வகை நிறுவனங்கள் தோன்றியமையால் பொதுமக்களுடன் நிரந்தரத் தொடர்பினை வைத்திருத்தல் அவசியமாயிற்று. இதன் விளைவாகப் பல்வகைத் 'தகவல் சேகரிப்பு நிலையங்களும்' (Information Bureaus) 'சந்தை ஆராய்ச்சி நிலையங்களும்', (Market Research Centres) நிறுவப்பட்டன. பொதுமக்களின் வாங்குந்திறன் (Purchasing Power), விருப்பம், அவர்களின் தேவை (demand), அவர்கள் அளிக்க முன்வரும் விலை மற்றும் நிறுவனத்தைப்பற்றி நுகர்வோரின் கருத்து போன்ற பல செய்திகளைத் திரட்டித் தருவதற்கெனவே இந் நிலையங்களும், நிறுவனங்களும் இயங்கிவருகின்றன. இவற்றைத் தவிர "ஒரு தொழிலை முறைப்படுத்துவதற்கு (regulation) எதிரான கருத்து களைப் பரப்பவும், மக்களின் ஆதரவான கருத்தினைப் பெற்றிட செய்தித்தாள்களை நாடவும், மக்களுடன் தொடர்பு கொள்ள ஒரு பொதுநிலையத்தை நடத்தவும் மற்றும் தமது நிறுவனம் பற்றிய விளக்கக் குறிப்புகளை (Pamphlets) மாணக்கர், மற்றும் தகுதி வாய்ந்த பலரிடம் வழங்கிடச் செய்யவும் பெரும் அளவில் நிதி செலவிடப்படும்" எனப் பேராசிரியர் டிராக்சல் (Troxel) கருதுகிறுர்.

இன்றைய தினம் வாணிகக் கூட்டு நிறுவனங்களும் வாணிக மன்றங்களும் (Trade Associations) மற்றும் தனிநபர் நிறுவனங் களும் பொதுத்தொடர்பினை ஏற்படுத்திக்கொள்ளப் பெரும் தொகையினைச் செலவு செய்துவருகின்றன. பல நிறுவனங்கள் பொதுத் தொடர்பு அதிகாரி (Public Relations Officer) என்று ஒருவரை நியமித்து அவர்வழியே நிறுவனத்தின் சிறப்பியல்புகளை

மக்களுக்கு உணர்த்தியும், பொதுமக்களின் குறைகள், கருத்துகள் போன்றவற்றை நிறுவனத்திற்கு உணர்த்தியும் செயற்பட்டு வருகின்றன. குறிப்பாக நிறுவனங்களிடையே கடுமையான போட்டி நிலவுமேயானல் நுகர்வோரைத் தம் பக்கம் ஈர்க்க, வியக்கத்தக்க வகையில் விளம்பரங்களைச் செய்யவேண்டிய நிலையில் ஒவ்வொரு நிறுவனமும் உள்ளது. இவை அனைத்தையும் விட முதலீடு செய்வோரிடையே (Investors) நிறுவனத்தைப் பற்றிய நல்லதோர் கருத்தினை ஏற்படுத்தவும் பொதுத்தொடர் பிற்காகக் கணிசமான தொகை செலவழிக்கப்படுகின்றது. இவ் வகைத்துச் செலவுகளையும் நடைமுறைச் செலவாகக் கருதுவதா என்ற வினா எழுவது இயற்கையே.

நன்கொடைகள் அளித்தல் பற்றியும் சில மாறுபட்ட கருத்துகள் நிலவுகின்றன. பெரும்பாலான நிறுவனங்கள் நன்கொடையாக அளிக்கப்பட்ட தொகையினை தமது நடைமுறைச் செலவுடன் ஏற்றுக்கொள்ள அனுமதிக்கப்படவில்லை. இருப்பினும், அமெரிக்க நாட்டு வணிக நிறுவனங்கள் ஒரு சில இன்றளவும், நன்கொடைத் தொகையினை நடைமுறைச் செலவுகளில் ஒன்றுகக் கருதிவருகின்றன. பொதுப்பயன் தொழில் நிறுவனம் ஒன்று அறநிலையங்களுக்கு நன்கொடை ஏதேனும் வழங்கினுல் அதன் மூலம் பொதுமக்களின் நன்மதிப்பைப் பெற்றிட வாய்ப்பு ஏற்படு கின்றது. இருப்பினும், பொதுமக்களின் விருப்பு, வெறுப்பினை அறியாது, அவர்களை இத்தகைய நன்கொடைகளை மறைமுகமாக வழங்குமாறு கட்டாயப்படுத்துவதற்கொப்பான செயலாகும். ஏனெனில், நன்கொடையை அளித்தபின்னர், அச் செலவினை நடைமுறைச் செலவுகளில் ஒன்றுகக் கருதி நுகர்வோரிடமிருந்து அதிகக் கட்டணம் வசூலிக்க நேரிடும். இது மறைமுகமாகப் பொது மக்களைக் கட்டாயப்படுத்துவதாகுமென்று ஒரு சாரார் எண்ணு கின்றனர்.* இதற்கு முற்றிலும் மாறுக மற்றெரு கருத்தும் நிலவு கின்றது. அதன்படி, "பொதுப்பயன் தொழில் நிறுவனம் ஒன்று நல்லதொரு குடிமகனைப்போல நடந்துகொள்ள வேண்டும். நன்கொடை வழங்கும் ஒரு நிறுவனம், பொதுமக்களிடையே நல்ல மதிப்பினைப் பெறுகின்றது. இதன்மூலம் சமுதாயத்தின் பொரு ளாதார வளர்ச்சியினை உறுதிபடுத்தவும் அதனல் முடிகிறது." என்ற கருத்தும் ஏற்றுக்கொள்ளக் கூடியதாகவே உள்ளது.**

*Re: Pacific Telephone & Teleg. Co. (Calib 1964) (1962)

**Re: General Telephone & Co. of Florida & New England Tele Co. (1960)

இதற்குச் சான்ருக, டி. வி. எஸ். போக்குவரத்து நிறுவனத்தைக் கூறலாம். இந் நிறுவனத்தார் பொதுமக்களின் வசதிக்கெனக் குறித்த காலத்தில் பேருந்துகளை இயக்குவதோடுமட்டும் நின்றுவிடாமல் தங்களது ஊழியர்களுக்கும், பொதுமக்களுக்கும் பயன்படும் வகையில் திருமண மண்டபங்களைக் கட்டவும், கோவில்களுக்கு நன்கொடை அளிக்கவும், பள்ளி மற்றும் கல்லூரிகளில் பயிலும் மாணவ மாணவியருக்குச் சீருடை, மதிய உணவு, உதவித்தொகை போன்றவை வழங்கவும் முன்வந்துள்ளனர். இதன் பயனுக, டி. வி. எஸ். என்னும் இந் நிறுவனத்தின் மூன்றெழுத்துகளும் தாரக மந்திரமெனப் பொதுமக்களின் காதில் விழுந்துள்ளன. இத்தகைய மதிப்பினைப் பொதுமக்களிடமிருந்து பெறும் நோக்கத்துடனேயே நன்கொடைகள் அளிக்கப்படுகின்றன என்ற கருத்து ஏற்புடையது என்ருலும், நன்கொடையை நடைமுறைச் செலவுடன் சேர்க்கக்கூடாதென்றே பலரும் எண்ணுகின்றனர். ஆனல், இதிலிருந்து ஒரு விதிவிலக்கும் அளிக்கப்பட்டுள்ளது. அதன்படி, தொழில்துறை மற்றும் பொருளாதாரத்துறையின் வளர்ச்சிக்கெனப் பாடுபடும் வட்டார, மாநில வாணிகச் சங்கங்களுடன் தொடர்புகொள்ளும் பொருட்டு சிலவகைச் செலவுகள் செய்யப்படும். இச் சங்கங்கள் நடத்துகின்ற கூட்டங்கள், மாநாடுகள் மற்றும் இவைபோன்ற நிகழ்ச்சிகளில் பங்கேற்று அதன்மூலம் தன்னுடைய நிறுவனத்தின் பெயரினை வணிக உலகில் பிரபலப்படுத்தவும் இத்தகைய செலவுகள் செய்யப்படுகின்றன. இவற்றையும் நடைமுறைச் செலவுகளாகக் கருதுவதா என்ற வினவிற்கு விடையளித்தல் அவசியமாகிறது. இத்தகைய செலவுகளினல் ஒரு நிறுவனத்தின் விற்பனையும், புகழும் அதிகரிக்குமேயானல், அச் செலவுகளை நடைமுறைச் செலவுகளாக ஏற்றுக்கொள்வதில் தவறில்லை, என்று கலிபோர்னியா மாநிலத்தில் ஒரு வழக்கின் தீர்ப்புக் கூறுகின்றது.*

**விற்பனை முடுக்க மற்றும் விளம்பரச் செலவுகள்**

ஒரு பொருளை உற்பத்தி செய்வதோடுமட்டும் இன்றி அதனை நுகர்வோர் அனைவரும் அறியும் வண்ணம் விளம்பரப் படுத்துதலும், ஒரு நிறுவனத்தின் இன்றியமையாத கடமைகளில் ஒன்ருகும். ஏற்கனவே உள்ள நுகர்வோரின் எண்ணிக்கையுடன் மேலும் பல புதிய நுகர்வோரினைச் சேர்க்கும் வண்ணம் விற்பனை முடுக்கத் திட்டங்கள் தீட்டப்படுகின்றன. மேலும் ஒரு நிறுவனத்தின் விற்பனை அதிகரிக்க அதிகரிக்க அந் நிறுவனம் பெருமளவில் உற்பத்தியைப் பெருக்குகின்றது. இதன்மூலம் பல

*Re: Southern California Gas Company - 35 Pur (California 1960)

நன்மைகளையும் பெறுகின்றது. சுருங்கக்கூறின், ஏற்கனவே யுள்ள நுகர்வோரினைத் தக்க வைக்கவும் (to retain) மேலும் பல புதிய நுகர்வோரினை அறிமுகப்படுத்திக்கொள்ளவும் விளம்பரங்கள் செய்யப்படுகின்றன. இவ்வாறு விற்பனை முடுக்க நோக்குடன் செய்யப்படுகின்ற செலவுத் தொகையினை நடைமுறைச் செலவாக ஏற்றுக்கொள்வது இயல்பு. இதனையே அமெரிக்க நாட்டின் தலைமை நீதிமன்றம் (Supreme Court) "வாணிகம் என்பது மாற்றமில்லாது இருப்பதன்று. இது வளர்ந்தோ அன்றி தேய்ந்தோ போகும் தன்மையது. ஆகவே, ஒரு வணிக நிறுவனத்தின் வளர்ச்சிக்காக விளம்பரங்கள் போன்றவற்றின் மூலம் செய்யப்படுகின்ற செலவுத் தொகையினை நடைமுறைச் செலவாகக் கருதுவது தவறாகாது"* என்று ஒரு வழக்கில் தீர்ப்பளித்தது எனினும் விற்பனையைத் தீவிரப்படுத்துவதற்காக ஒரு நிறுவனத்தின் நிருவாகக்குழு எடுக்கும்முடிவே முடிவானதென்றும் வீண்செலவுகள் அல்லது தேவையற்ற செலவுகள் எவை என்பதை அறிந்து அவற்றை நீக்கவும்அதிகாரம் வழங்கப் பெறும்.**

மின்திறன் மற்றும் எரிவாயு வழங்கும் நிறுவனங்கள் சில வகைக் கருவிக்கலன்களைத் தாமே நுகர்வோருக்கு விற்பனை செய்ய முன்வரலாம். பெரும்பாலான விற்பனைகளில் இலாபம் எதுவும் கிடைக்காவிடினும், இக் கருவிக்கலன்களை அதிக அளவில் நுகர்வோர் கையாளும்பொழுது தங்களது பொருள்களைப் பெருமளவில் விற்பனைச்செய்ய இந் நிறுவனங்களுக்கு வாய்ப்புள்ளது. இவ்வாறு பொதுப்பயன் தொழில் நிறுவனங்களே கருவிக்கலன்களை விற்பனைச் செய்யும் வழக்கம் கடுமையாக எதிர்க்கப் பட்டுள்ளது. இருப்பினும் மற்றொரு சாராரின் கூற்றுப்படி இத்தகைய விற்பனைகள் புதிய விற்பனைகளாகக் கருதப்படவேண்டும். இதனையே பேராசிரியர் டிராக்சல் தமது நூலில் வலியுறுத்துகின்றார்.

ஒரு பொதுப்பயன் தொழில் நிறுவனம், குறிப்பாக மின்திறன் வழங்கும் நிறுவனம், தான் உற்பத்தி செய்து வழங்கும் பொருளுக்கேற்ற இதர கருவிக்கலன்களையும் தானே விற்பனை செய்வது அவசியமெனக் கருதினால் அனுமதியளிக்கப்படலாமென்று மேலே கண்டோம். இனி இத்தகைய அனுமதி வழங்கும் போது கடைப்பிடிக்கவேண்டிய சில கொள்கைகளையும் காண்

* Re : West Ohio gas company vs Public Utility Committee of Ohio 1935.

** Re : Illinois Commerce Commission vs People's Gas, lightcoke compan [1953]

போம். கருவிக்கலன்களை விற்பனை செய்யும் நிறுவனம், இதற்கான கொள்முதல், விற்பனை போன்றவற்றின் வரவு, செலவுக் கணக்கினைத் தனியே வைத்திருத்தல் வேண்டும். பொதுப்பயன் தொழிலின் கணக்கேடுகளுக்கும் இவ்விற்பனைக்கான கணக்கேடுகளுக்கும் தொடர்பு ஏதும் இருத்தல் கூடாது. மேலும், இப்பொருள்களை விற்பனை செய்வதற்காக பணியாளர்கள் (விற்பனையாளர்கள்) எவரேனும் நியமிக்கப்பட்டு அவர்களுக்கு மாத ஊதியம் ஏதேனும் அளிக்கப்பட்டால், அந்த ஊதியமும், மற்றும் இப் பொருள்களின் விற்பனைமூலம் வரக்கூடிய இலாப நட்டங்களும் எல்லாவகையிலும் பொதுப்பயன் தொழிலினைப் பாதிக்கக் கூடாது. அதாவது, பொதுப்பயன் தொழில் நிறுவனத்தின் முக்கியதொழிலும் அதனைச் சார்ந்த கருவிக்கலன்களின் விற்பனைத்தொழிலும் ஒன்றோடொன்று தொடர்பு கொள்ளாது நடைபெறவேண்டும். பொதுப்பயன் தொழிலின் கட்டண வீதத்தை நிருணயிக்கும் முறையில் எவ்வித மாற்றமும் இத்தகைய விற்பனைமூலம் ஏற்படக்கூடாது என்பதும் குறிப்பிடத்தக்க ஒரு கருத்தாகும்.*

இவ்வாறு விற்பனை முடுக்கத்தின் ஒரு பகுதியாகக் கருவிக் கலன்களை விற்பனை செய்யும் பணியும் இடம்பெறுகின்றது.

சிலவகைப் பொதுப்பயன் தொழில்கள் செய்துள்ள செலவுத் தொகைகளின் நோக்கம் விற்பனை முடுக்கமேயெனினும் எத்தகைய செலவுகள் பொதுப்பயன் தொழில்களின் ஒழுங்கற்றக் குழுவினால் அனுமதிக்கப்பட்டுள்ளன என்பதை ஈண்டுத் தெரிந்து கொள்ளலாம். இதற்கென அமெரிக்க நாட்டின் சில சான்றுகளைக் காட்டலாம். முதலாவதாக, அர்கன்ஸாஸ் (Arkansas) மாநிலக்குழு, பல்வேறு மின்திறன் வழங்கும் நிறுவனங்களைப் பார்வையிட்ட பின்னர், ஒரு பொதுப்பயன் தொழில் நிறுவனம் குறிப்பிட்ட ஒரு தொகைக்குமேல் விற்பனையை அதிகரிக்கும் நோக்குடன் செலவழிக்கக்கூடாது என்ற கட்டுப்பாடு விதித்துள்ளது.**

ஆனால், விற்பனை முடுக்கச்செலவுகளின் பயனாக, ஒரு பொதுப் பயன் தொழிலின் வாடிக்கையாளரின் எண்ணிக்கையும் அதனுடைய மொத்த விற்பனையும் அதிகரிக்குமேயானால் அச் செலவினை நடைமுறைச் செலவுடன் ஏற்றுக்கொள்ளலாம் என்று பென்சில்வேனியா நகரக்குழு தீர்ப்பு வழங்கியுள்ளது. இந் நகரப்

* Re : Nevada Powder co 43 PVR 1962
** Re : Arkansas Power & Light. co 13 PVR (1956)

பொதுப்பயன் தொழில்களின் உற்பத்திச்செலவு முந்தைய 14 ஆண்டுகளாக மாருதிருந்தபோதிலும், விற்பனை முடுக்கத்தின் காரணமாக அதிக அளவு விற்பனை ஏற்படுமேயானல் அத்தகைய நோக்கம் நிறைவேறச் செலவினைச் செய்யலாம் என்பதும் இவ் வழக்கின் தீர்ப்பாகும். இவ்வாறு பொதுமக்களின் கவனத்தை ஈர்க்கவும், அவர்களின் நன்மதிப்பைப் (Good will) பெற்றிடவும், விளம்பரங்கள் செய்யப்படுவதோடு, விற்பனையை முடுக்கிவிடச் செய்யப்படும்அனைத்துச் செலவுகளையும், அவற்றின் தன்மை, இன்றியமையாமை ஆகியவற்றை ஆராய்ந்த பின்னர் நடைமுறைச் செலவுடன் அவற்றைச் சேர்த்துக்கொள்வதா, இல்லையா என்ற வினவிற்கு விடையளிக்க முற்படுதல் நன்மை பயக்கும்.

**(நுகர்வோரின்) எரிபொருள் சாதனங்களைச் சீர்படுத்தும் செலவுகள்**

எரிபொருள்களுள் இன்றியமையாதது எரிவாயு ஆகும். இதனை உருண்டையான உலோகக்குழாய்களில் அடைத்து விற்பனை செய்வார்கள். இவ்வாயுவை எரிபொருளாக உபயோகிக்க நுகர்வோரின் வீடுகளில் இதற்கான சிறப்புச் சாதனங்கள் இயங்கும். இந்த எரிவாயுவைக் குறிப்பிட்ட ஓர் உஷ்ண நிலையில் (heating temperature) உபயோகிக்க வேண்டும். இவ் உஷ்ணநிலை, தயாரிக்கப்படும் எரிவாயுவின் தன்மையினைப் பொறுத்து அதிகமாகவோ, குறைவாகவோ காணப்படும். இயற்கையான வாயு, செயற்கை முறையில் தயாரிக்கப் படும் வாயு, இரண்டையும் கலந்த ஒரு கலப்பட வாயு என்று எரிவாயு முவ்வகைப்படும். இம் மூன்றிற்கும் மூன்றுவித உஷ்ண நிலை உண்டு. இதனைப் பொறுத்தே, எரிவாயுச் சாதனங் களும் மாற்றியமைக்கப்படும். சான்ருக, குறைவான உஷ்ணநிலை கொண்ட எரிவாயுவினை நுகர்வோருக்கு அளித்துவரும் ஓர் பொதுப்பயன் தொழில் நிறுவனம் அதிக உஷ்ணநிலை கொண்ட எரிவாயுவினைத் தயாரித்து அளிக்க முற்படுமேயானல் அதனை நுகர்வோருக்குத் தெரிவிப்பதோடு அல்லாமல், அவர்களின் இருப்பிடங்களுக்குச் சென்று அந்த எரிவாயுவினை உபயோகப் படுத்தும் சாதனங்களையும் மாற்றியமைக்க வேண்டும். இல்லா விடில் உஷ்ணநிலையின் முரண்பாடின் காரணமாக, வாயுக் குழாய்கள் வெடித்தல் போன்ற பேராபத்துகள் ஏற்பட நேரிடும். இவ்வாறு ஏற்படும் ஆபத்துகளைத் தவிர்க்கும் வண்ணம் மேற் கூறிய மாற்றங்கள் சாதனங்களில் செய்யப்படும். இதற்கெனச் செய்யப்படும் செலவுத் தொகையினை நிறுவனமே ஏற்றுக் கொள்ளும். அச்செலவைச் செயல்முறைச் செலவுகளில் ஒன்ருக வே கருதவேண்டும் என்ற கருத்துப் பெருவாரியாக நிலவிவரு

கின்றது. பெரும் இலாபம் சம்பாதித்து நன்முறையில் நடந்து வரும் பொதுப்பயன் தொழில்கள் அச் செலவினைப் பெரும் சுமையாகக் கருதப்போவதில்லையாகையால், அந் நிறுவனங்கள் (மட்டும்) அதனைத் தனது செயல்முறைச் செலவுகளில் ஒன்றாகக் கருதலாகாது.

**அரசியல் கட்சிகளுக்கு நன்கொடைகள்**

எந்த ஒரு நாட்டிலும், வணிக உலகம் அந் நாட்டின அரசியல் தலைவர்களை நம்பியும், அரசியல் தலைவர்கள் வணிக உலகினை நம்பியும் இருப்பது 'இன்றைய நிலை'. வணிக உலகினைப் பகைத்துக்கொண்டு அரசோச்ச முடியாததால், வர்த்தக உலகத்தினருக்கேற்ற திட்டங்களைத் தீட்டியும், சட்டங்களை இயற்றியும் அரசியலை நடத்த வேண்டியுள்ளது. இவ்வாறு தமக்கேற்ற வகையில் அரசின் திட்டங்களும், சட்டங்களும் அமைத்துத் தரும் அரசியல் கட்சிகளுக்குக் கைம்மாறாக (அல்லது கையூட்டாக) 'நன்கொடை' என்னும் பெயரில் குறிப்பிட்ட ஒரு தொகையினை நடைமுறைச் செலவுகளுடன் சேர்ப்பதால், பொருள்களின் உற்பத்திச் செலவு மிகவும் அதிகரித்து, இறுதியில் நுகர்வோருக்குச் சுமையாக வந்துசேரும். ஆகவே, அரசியல் கட்சிகளுக்கு அளிக்கப்படும் நன்கொடைத் தொகைகள் நடைமுறைச் செலவாக மாட்டா என அறிதல் வேண்டும். தற்போது இத்தகைய நன்கொடைகள் சட்டத்தின்மூலம் தடுக்கப்பட்டுள்ளன என்பது குறிப்பிடத்தக்கது.

சில நேரங்களில் தங்களுக்கிசைவான அரசியல் கட்சி நிருவாகத்திற்கு வராவிட்டால், வணிக நிறுவனங்கள் ஒன்று சேர்ந்து, தங்களுக்குள் ஒருவரைச் சட்டசபைக்கோ, நாடாளுமன்றத்திற்கோ, உறுப்பினராகத் தேர்ந்தெடுத்து அவர்மூலம் இசைவான பலவற்றைத் தேடிக்கொள்ளலாம். இவ்வாறு, தங்களுக்குள் ஒருவரைத் தேர்தலுக்கு நிற்க வைக்கவும், அவர் வெற்றி பெறவும் செலவிடப்படும் தொகையினை வணிகநிறுவனங்கள் பங்கிட்டுக் கொள்ளும். ஆகவே பொதுப்பயன் தொழில் நிறுவனம் ஒன்று இத்தகைய செலவுகளைச் செய்ய அனுமதிக்கப்படமாட்டாதென்பது கருத்து.

**வசூலிக்கப்படாத கட்டணப் பட்டியல்கள் (Uncollectable Bills)**

மின் திறனை வழங்கும் ஒரு பொதுப்பயன் தொழில் நிறுவனம் தன்னுடைய நுகர்வோருக்கு மின்திறனை வழங்கும்போது அதற்கான கட்டணத்தை வசூலிக்க நேரிடுகிறது. இக் கட்டணத்தினைப் பட்டியல்முறையில் தயாரித்துக் கணக்கிட்டு அப்

பட்டியலை நுகர்வோரின் இருப்பிடங்களுக்கு அனுப்புவது வழக்கம். ஆயினும், பெரும்பான்மையான நுகர்வோர், பட்டியலில் கண்ட கடைசி தேதிக்குள் கட்டணத்தை செலுத்துவதில்லை. இக் கட்டணங்களை வசூலிப்பதற்காக அலுவலர் பலர் நியமிக்கப்பட்டிருந்தபோதிலும், பெரும்பான்மையோரிடம் இருந்து கட்டணத் தொகையைக் குறித்த காலத்திற்குள் பெற முடிவதில்லை. ஒரு வகையில், நிறுவனத்திற்கு இது ஒரு நட்டமென்றே கூறலாம். இதனை, நடைமுறைச் செலவுடன் ஒன்றாக ஏற்றுக்கொள்ளலாகாது என்பது தெளிவுற அறியப்பட வேண்டும்.

## தேய்மானமும் செயல்முறைச் செலவும் (Depreciation and Operating Cost)

ஒவ்வொரு வருடமும், ஒரு நிறுவனத்தின் இறுதிநிலைக் குறிப்பில் (Balance Sheet) காணப்படும் பல்வேறு நிலையான சொத்துகளின் மதிப்பு ஒரு குறிப்பிட்ட அளவு குறைந்து கொண்டே அல்லது தேய்ந்துகொண்டே போகும். இவ்வாறு மதிப்பினை இழந்துவரும் சொத்துகளை மறுபடியும் வாங்குவதற்காகத் 'தேய்மானம்' என்னும் பெயரில் குறிப்பிட்ட சதவீதத்தில் ஒரு தொகை ஒவ்வொரு வருடமும் தனியே எடுத்து வைக்கப்பட்டிருக்கும். இதனை நடைமுறைச் செலவாகக் கருதுவதாவென்று எண்ணுவோருக்குக் கீழ்க்காணும் பகுதிகள் விடையிறுக்கும்:—

### 'தேய்மானம்' என்பதன் பொருள்

அமெரிக்க நாட்டின் "இரயில், ரோடு மற்றும் பொதுப்பயன் தொழில்களின் தேசிய கழகத்தின்" கருத்துப்படி, 'தேய்மானம்' எனப்படும் சொல் கீழ்க்காணும் பொருளினைக் குறிப்பதாகும் :—

(அ) நன்றாக இயங்கிக்கொண்டிருக்கும் ஒரு சொத்தின் வாழ்நாளினைப் பகுதியாகவோ முழுமையாகவோ குறைத்து இறுதியில் அதனை இயக்கமறச் செய்துவிடும் பணியில் ஈடுபட்டுள்ள சக்திகளினின்றும் பிறப்பதே 'தேய்மானம்' என்பதாகும்.

(ஆ) மேற்காணும் பணியில் ஈடுபட்டுள்ள சக்திகளில் சிலவாக அப் பொருளின் அன்றாட உபயோகம், பழமையடைதல், போதுமானதாக இல்லாதிருத்தல், காலத்திற்கு ஒவ்வாதிருத்தல் போன்றவற்றைக் குறிப்பிடலாம். மற்றும்

(இ) தேய்மானம், ஒரு பொருளின் செயல்திறனைக் குறைத்துவிடுகிறதென்றும் கூறலாம்.*

மேற்கண்ட மூன்று விளக்கங்களிலிருந்தும் தேய்மானம் என்பது ஒரு சொத்தின் செயல்திறனைப் படிப்படியாகக் குறைத்து இறுதியில் பயனற்றுவிடச் செய்வதைக் குறிக்கும் என்பதை அறியலாம். இனி, இத் தேய்மானம் என்னென்ன காரணங்களினால் ஏற்படுகின்றதென்பதையும் பார்ப்போம்.

தேய்மானத்தின் காரணங்கள்

| இயற்கையான காரணங்கள் (Physical reasons) | இயக்கக் காரணங்கள் (Functional reasons) |
|---|---|

பௌதிகக்கூற்றுக் காரணங்களில் ஏற்படும் தேய்மானம் ஒரு குறிப்பிட்ட சொத்தினை அடிக்கடி உபயோகிப்பதாலும், துருப்பிடித்துப் போவதாலும், அடர்ந்த தூசி படிவதாலும். காய்ந்து உருமாறிப்போவதாலும் ஏற்படுகின்றது. சுருங்கக் கூறின், காலத்தின் மாற்றத்தால் ஏற்படும் தேய்மானத்தைப் பௌதிகக்கூற்றுத் தேய்மானம் எனலாம். சான்றாக, டிரக் வண்டி ஒன்றும் அதனுடைய சக்கரங்களும், நாளடைவில் தேய்ந்து விடுவதையும், மின்சார, தொலைபேசிக் கம்பித் தூண்கள் நாளடைவில் துருப்பிடித்து உருக்குலைந்துபோவதையும், தண்ணீர்க் குழாய்கள் அரித்துப்போவதையும் குறிப்பிடலாம்.

இக் காரணங்களினால் தேய்மானம் என்பது ஒரு சொத்து, காலத்திற்கு ஒவ்வாது போவதாலும் (obsolete), திடீரென அதிகரிக்கும் நுகர்வோரின் தேவைக்கேற்றவாறு செயற்பட முடியாததாலும், புதியதொரு தொழில்நுட்பத்தினால் கண்டு பிடிக்கப்பட்ட புதுக்கருவிகளின் அல்லது இயந்திரங்களின் வருகையினாலும், மற்றும் பொதுமக்களின் கோரிக்கைக்கிணங்க வேண்டாமென்று ஒதுக்கப்படுவதாலும் ஏற்படுவதாகும் (எடுத்துக் காட்டு: விமானங்கள்) என்பது விளங்கும்.

மேற்கண்ட இரு காரணங்களைத் தவிர, எதிர்பாராத அல்லது ஈட்டுறுதி செய்யப்படாத விபத்துகளின் காரணமாக ஒரு சொத்தானது தன் மதிப்பினை இழக்கக்கூடும் (மோட்டார் வண்டி). இவ்வாறு ஏற்படும் தேய்மானங்களுள் 20% பௌதிகக் கூற்றுக்

*(1) National Association of Railroad and Utilities Commissioners, Report of the committee on Depreciation, 1943 ( & Washington)

காரணங்களாலும் 80% இயக்கக் காரணங்களாலும் ஏற்படு கின்றன என்று ஓர் அறிஞர் கருதுகிறார். எப்படியாயினும் தேய்மானம் என்ற வகையில் குறிப்பிட்ட ஒரு தொகை வருடந் தோறும் ஒதுக்கப்பட்டு வருவதன் நோக்கம், குறிப்பிட்ட கால அளவின் முடிவில், முதலீடு செய்தோருக்கு அவர் போட்ட முதல் கிடைக்கவேண்டும் என்பதற்காகவே. ஆகவே, இயங்கிக்கொண் டிருக்கும் ஒரு சொத்து தன்னுடைய சக்தியினையும் மதிப்பினையும் காலப்போக்கில் இழக்கும்போது, அச் சொத்தின் 'தேய்மானம்' கணக்கிடப்படுகின்றது. இவ்வாறு ஏற்படுத்தப்படும் தேய்மானக் காப்புத் தொகை ஒரே வருடத்தில் மொத்தமாகக் கழிக்கப்படுவ தில்லை. மாறாக, அடுத்தடுத்த வருடங்களில் படிப்படியாகத் தேய்மானச் செலவினைக் காண்பிப்பது வழக்கம். தன் மதிப்பினை அறவே இழந்துவிட்ட சொத்துகளுக்கு மதிப்பு அளிப்பதற் காகவோ அதனை மீண்டும் இயங்கச்செய்யவோ, தேய்மா னக் காப்புத்தொகை ஏற்படுத்தப்படுவதில்லை.* மேலும் தேய்மானம் என்ற சொல்லால் குறிக்கப்படும் ஒரு தொகை நடை முறைச் செலவுகளுடன் சேர்க்கப்பெறும் காரணம், ஒரு நிறுவ னத்தின்மூலம் நுகர்வோருக்குப் பணிபுரிந்து வந்த ஒரு சொத்தின் (இயந்திரத்தின்) மதிப்பு எவ்வளவு குறைந்துள்ளது என்பதைக் கணக்கிட இம் முறை உதவியாக இருக்கும் என்பதுவே. தேய்மானச் செலவாகக் கணக்கிடப்படும் தொகை ஏதும் காப்புநிதி (Reserve Fund) யாகவோ, ஒதுக்கீடா கவோ கருதப்படுவதில்லை. மேலும், தேய்மானச் செலவிற்கும், பராமரிப்புச் செலவிற்குமிடையே உள்ள வேறுபாட்டினை நன்கு உணர வேண்டும். ஓர் இயந்திரமோ அதுபோன்ற சொத்து களோ நாளடைவில் தங்களுடைய மதிப்பினை இழக்காமலிருக்கும் பொருட்டுச் செய்யப்படும் செலவுகள் பராமரிப்புச் செலவுகள் எனப்படும். எடுத்துக்காட்டாக, கட்டடத்திற்கு வெள்ளை யடித்தல், இயந்திரத்திற்கு எண்ணெய்யிட்டு சுத்திகரித்தல் போன்றவற்றைக் கூறலாம். ஆனால், தேய்மானச் செலவென்பது ஒரு சொத்து (அதனை உபயோகிப்பதால்) வருடந்தோறும் இழந்து வரும் மதிப்பினைக் கணக்கிடப்படுவதைக் குறிக்கும். வருடந் தோறும் படிப்படியாகத் தேய்ந்துவரும் சொத்தின் மதிப்பினை இலாபத்தினின்று சரி செய்வர். இவ்வாறு வருடந்தோறும் தனியே ஒதுக்கி வைக்கப்படும் தேய்மான ஒதுக்கீட்டுத் தொகை அதிகரித்துக்கொண்டே போகும். இறுதியில் குறிப்பிட்ட வருடம் முடிந்ததும், அச் சொத்து கிட்டத்தட்ட தன் முழுமதிப்பினையும்

*National Association of Railroad and Utilities Commissions—Report of the Committee on Depreciation 1963.

இழக்கும்போது, இத் தேய்மான ஒதுக்கீட்டுத் தொகையைக் கொண்டு புதியதொரு சொத்தினை வாங்கலாம்.

மேற்காணும், பராமரிப்புச் செலவு, தேய்மானச் செலவு ஆகிய இரண்டினுள், பராமரிப்புச் செலவினை மட்டுமே நடைமுறைச் செலவாகக் கணக்கிடவேண்டும் எனத் தலைமை நீதிபதி ஜஸ்டிஸ் ஹ்யூஸ் (Justice Hughes) தமது தீர்ப்பு ஒன்றில் கூறியுள்ளார்.*

**வரிகள் நடைமுறைச் செலவாகுமா?**

வணிக நிறுவனங்கள் அரசின் அனுமதியுடன் தொடர்ந்து வாணிகம் செய்ய வேண்டுமாயின் அதற்கென விதிக்கப்பட்டுள்ள வரிகளை அவ்வப்போது செலுத்தி வருதல்வேண்டும். இவ்வரிகள் உள்ளூராட்சி மன்றங்களாலும், மாநில மற்றும் மத்திய அரசுகளாலும் விதிக்கப்படுபவை. இன்றையதினம், பொருளாதார நிலையைச் செம்மைப்படுத்தும் வகையில், வணிக நிறுவனங்களிடமிருந்து வரிகள் வசூலிக்கப்படுகின்றன. விற்பனை வரி (Sales tax), உபரி வரி (Surcharge), வருமான வரி (Income tax), மாநில வரிகள் (State taxes) போன்றவையும், சுங்க வரிகளும் (Excise duty) வசூலிக்கப்படுகின்றன. இவற்றைச் செலுத்தியபின் வணிக நிறுவனங்களுக்கு எஞ்சி நிற்பது சொற்ப அளவு இலாபமே. ஆகவே, இதனைச் சரிக்கட்டும் வகையில் பொருள்களின் விலையை (கட்டணத்தை) அதிகரிப்பது இந் நிறுவனங்களின் வழக்கம். இதனை நோக்கும்போது, வரிகளையும் நடைமுறைச் செலவுகளுடன் சேர்க்கலாமா என்ற வினா எழுகின்றதல்லவா? ஒரு சில நிறுவனங்களைத் தவிர மற்ற எல்லா நிறுவனங்களும் நடைமுறைச் செலவுடன் தாங்கள் செலுத்துகின்ற வரித்தொகையையும் சேர்த்துக்கொள்கின்றன என்பது அறியப்பட வேண்டும்.

சட்டமன்ற உறுப்பினர்களும், அரசு அலுவலர்களும், வரித் தொகையை வசூலிப்போரும் எந்தெந்த வழிகளில் எவரெவரிடமிருந்து வரி வசூலிக்கலாம் என்பதைத் தீர்மானிக்கின்றனர். ஆனால், வணிக நிறுவனங்கள் ஈட்டுகின்ற இலாபத்தினை பராமரிப்புச் செலவிற்குப் பயன்படுத்துவதா அன்றி அதிகரித்துக் கொண்டேபோகும் வரிகளுக்குச் செலவிடுவதா என்ற வினாவிற்கு விடை அளிப்பது சற்றுச் சிரமமான செயலாகவே தோன்றுகின்றது. சான்றாக, குறிப்பிட்ட ஒரு நிறுவனம் ஒரு வருட முடிவில் அதிக அளவு இலாபத்தினைப் பெறுவதற்காக அந் நிறுவ

*Lindheimen vs Illinois Bell Feb Co-op- cit. p. 167.

னத்திலுள்ள எல்லா இயந்திரங்களும், மற்றச் சொத்துகளும் ஈடுபடுத்தப்பட்டிருக்கும். இதன் காரணமாக அச் சொத்துகள் தேய்ந்தும், உருமாறியும், தங்களது மதிப்பினை இழந்துகொண்டே வருமல்லவா? இதனைச் சரிசெய்யும் வகையில் அச் சொத்து களைப் பழுதுபார்த்துப் பராமரிக்கும் பணிகளைச் செய்வது அவசியமாகிறது. இதற்கெனச் செய்யப்படும் செலவுத் தொகை அவ்வருடத்தில் ஈட்டிய இலாபத்தினின்றும் எடுத்துக்கொள்ளப் படும். இவ்வாறு செய்தால்தான் அச் சொத்துகளை மீண்டும் தொடர்ந்து உற்பத்தி செய்யும் பணியில் ஈடுபடுத்தமுடியும். இதற்கு மாறாக, விதிக்கப்படும் வரிகளைச் செலுத்துவதற்காக இலாபத் தொகையினை உபயோகித்தால், எஞ்சி நிற்பது மிகவும் சொற்பமான தொகையே ஆகும். இத் தொகையினைக் கொண்டு பராமரிப்புச் செலவுகளைச் செய்ய இயலாது; மேலும் பரா மரிப்புச் செலவுகளைச் செய்யாமலும் இருக்க இயலாது. ஆகவே, அதிக அளவில் செலவினைச் செய்த பின்னர் இதனை ஈடுகட்டும் பொருட்டு நுகர்வோரிடமிருந்து அதிக கட்டணத்தை வசூலிக்க வேண்டியிருக்கும். குறிப்பாக, பொதுப்பயன் தொழில் நிறுவ னங்கள் அனைத்தும் அதிக அளவு வரிச்சுமையை ஏற்கவேண்டி யிருப்பதால், வரிகளை நடைமுறைச் செலவாக ஏற்றுக்கொள்வதா என்ற வினா எழுவது இயற்கையே.

**பொதுப்பயன் தொழில்கள் வரிவசூலிக்கும் வல்லமை படைத் தவை**

பொதுவாகவே, பொதுப்பயன் தொழில்கள் "வரி வசூலிக் கும் வல்லமை படைத்தவை" (Tax Collectors par excellence) என்ற கருத்து நிலவுகிறது. இதற்குக் கீழ்கண்டவற்றைக் காரண மாகக் கூறலாம் :—

(1) முதலாவதாக, இத் தொழில்கள் அனைத்தும் மிகப்பெரு மளவில் நடப்பவை. ஆதலால், வரிகளை வசூலிப்பதிலும், வசூலித்த வரியினை முறையாக வைத்திருப்பதிலும் சிக்கலெதுவும் தோன்றுவதில்லை.

(2) இரண்டாவதாக, பொதுப்பயன் தொழில்களில் போடப் பட்டிருக்கும் முதலீட்டுத் தொகையின் அளவினைக் கூறலாம். இந் நிறுவனங்களின், வருடாந்திர வருவாயைக் காட்டிலும் மூன்று அல்லது நான்கு மடங்கு அளவுள்ள தொகை முதலீடு செய்யப் பட்டிருக்கும். குறிப்பாக, புகைவண்டிப் போக்குவரத்து நிறுவ னங்களில் இத் தொகை ஐந்து மடங்காகவும், மின் திறன் வழங்கும் நிறுவனங்களில் நான்கு மடங்காகவும், எரிவாயு வழங்கும் நிறுவ னங்களில் மூன்றரை மடங்காகவும், தொலைபேசி நிறுவனங்களில்

மூன்று மடங்காகவும் காணப்படுகிறது. ஆனால், ஏனைய தொழில் நிறுவனங்களில் இம் முதலீட்டுத் தொகை வருடாந்திர வருவாயைக் காட்டிலும் ஒன்றரை மடங்கு மட்டுமே அதிகமாகக் காணப்படுகிறது. ஆகவே, முறைசெய்யப்பட்ட இப் பொதுப் பயன் தொழில்கள் அதிக அளவில் சொத்து வரியினைச் செலுத்த வேண்டியுள்ளன.

(3) மூன்றாவதாக, பொதுப்பயன் தொழில்கள் அளிக்கின்ற பொருள்களும், பணிகளும் அன்றாட வாழ்விற்கு இன்றியமையாதவையாய் இருக்கின்றன. இதே பொருள்களை வேறு ஒரு நிறுவனம் அளிக்குமேயானால் அவற்றின் தரம், விலை போன்றவற்றைத் தீர்மானிக்க இயலாது. ஆனால், பொதுமக்களுக்காகவே இயங்கிவருகின்ற பொதுப்பயன் தொழில்கள் தாம் அளிக்கின்ற பொருள்களின் தரத்தினைக் குறைக்காமல், அதே நேரத்தில் அவற்றின் விலையை அதிகரிக்குமேயானால் அதனைப் பொதுமக்கள் மறுக்கமாட்டார்கள். அதாவது இன்றியமையாத வசதிகளை அளிக்கின்ற பொதுப்பயன் தொழில் நிறுவனங்கள் தொடர்ந்து இயங்கவேண்டும் என்பதற்காக இவற்றின் விலையை உயர்த்த வேண்டியநிலை ஏற்பட்டாலும் பொதுமக்கள் அதனைப் பொருட்படுத்தமாட்டார்கள் என்பது கருத்து. இவ்வாறு பொதுமக்கள் பெறுகின்ற பொருள்களின் தரம் உயர்ந்து காணப்படுகையில் அவர்கள் அளிப்பது மிகவும் சொற்பமானது. ஆகவே, வரிகளை நுகர்வோரிடமிருந்து பெறுவதில் தவறில்லை என்று கருதப்படுகிறது. இறுதியாக, பொதுப்பயன் தொழில்கள்மூலம் அதிக அளவு வருவாயினைப் பெற நினைக்கும் அரசுகள் இவற்றை வரி வசூலிக்கும் கருவியாகப் பயன்படுத்துகின்றன என்று செனட்டர் S. L. ஹாலந்து கருதுகிறார்.* இவரது கூற்று முற்றிலும் சரியானது என்பதை நமது நாட்டில் அடிக்கடி உயரும் இரயில்வே கட்டணத்தை மக்கள் ஏற்றுக்கொள்வதிலிருந்து அறியலாம். மேலும், ஒவ்வொரு முறையும் மாநில, மத்திய அரசுகள் தங்களது வரவு-செலவுத் திட்டத்தினைத் (Budget) தயாரிக்கையில், தபால், தந்தி, இரயில் கட்டணம், மின்சாரக் கட்டணம் போன்றவற்றைப் பெரிதும் நம்பி இருப்பதைக் காணலாம்.

**வரிகளின் வகைகள்**

(1) பொதுப்பயன் தொழில்களின்மீது விதிக்கப்படுகின்ற வரிகளைக் கீழ்க்காணும் மூன்று வகைகளாகப் பிரிக்கலாம் :—

*Senator S. L. Holland—quoted from the Public Utilities Fortnightly 101 (208) 1966.

(1) பொதுப்பயன் தொழில்களுக்கும் வேறு நிறுவனங்களுக்கும் வேறுபாடின்றி விதிக்கப்பட்ட பொதுவான வரிகள். எடுத்துக்காட்டாக, மாநிலங்களின் வருவாய் விதிகள், விற்பனை வரிகள் தொழில் வரிகள் போன்றவையாகும்.

(2) எல்லா நிறுவனங்களுக்கும் விதிக்கப்பட்ட, ஆனால், வசூலிப்பதில் வேறுபாட்டுடன் காணப்படும் வரிகள். எடுத்துக்காட்டாக, பொதுப்பயன் தொழில்கள் தாங்கள் வைத்திருக்கும் சொத்துகளின்மீதான வரிகளைப் பிற நிறுவனங்களைக் காட்டிலும் அதிக அளவில் செலுத்துவதைக் குறிப்பிடலாம்.

(3) சில வகை வரிகள் பொதுப்பயன் தொழில்களிடமிருந்து மட்டுமே வசூலிக்கப்படுகின்றன. எடுத்துக்காட்டாக, விமானப் போக்குவரத்துக் கட்டணம். தொலைபேசிக் கட்டணம் மற்றும் மின்திறன்மீதான உபரிக்கட்டணம் போன்றவற்றைக் குறிப்பிடலாம்.

மேற்கண்ட கருத்துகளினின்றும், வரிகளை நடைமுறைச் செலவுகளில் ஒன்றாக ஏற்றுக்கொள்ளலாம் என்ற முடிவிற்கு நாம் வருதல் இயற்கையே. ஆனால், நடைமுறையில் ஒவ்வொரு நிறுவனத்திற்கும் உள்ள சிக்கல்களைப் பொறுத்தே நடைமுறைச் செலவுகள் தீர்மானிக்கப்படுகின்றன. தாம் அளிக்கும் வரிகளை நுகர்வோரிடமிருந்து பெற நினைத்தாலும், எல்லோரிடமிருந்தும் ஒரே அளவுத் தொகையை வசூலிக்க இயலாது. இந் நிறுவனங்கள் தமது வாடிக்கையாளர்களைப் பல பிரிவுகளாகப் பிரித்து ஒவ்வொருவரிடமிருந்தும் வேறுபட்ட தொகையினை வசூலிக்கின்றன. எடுத்துக்காட்டாக, மின்திறன் வழங்கும் நிறுவனத்தை எடுத்துக்கொள்ளுவோம். வீடுகளில் உபயோகப்படுத்தப்படும் மின்திறனுக்கு ஒருவகைக் கட்டணமும், தொழிற்சாலைகளில் பயன்படுத்தப்படும் மின்சக்திக்கு வேறு ஒருவகைக் கட்டணமும் விதிக்கப்படுகின்றன. இதுபோன்றே, போக்குவரத்து நிறுவனமும், பொதுமக்களிடமிருந்து ஒரு கட்டணத்தையும், மாணவர்களிடமிருந்து மற்றொருவகைக் கட்டணத்தையும், அலுவலகங்களில் பணிசெய்வோரிடமிருந்து பிறிதொருவகைக் கட்டணத்தையும் வசூலிப்பதைக் காணலாம்.

**ஏற்கக்கூடிய வரிச்சுமை**

இதுகாறும் பொதுப்பயன் தொழில் நிறுவனங்கள் அளிக்கின்ற பொருள்களின் இன்றியமையாமையைப் பயன்படுத்தி, அதிக அளவுக்கட்டணத்தை நுகர்வோரிடமிருந்து பெறமுடியும் என்றும், இதனைப் பயன்படுத்தி ஓர் அரசு அதிக அளவு

வரியினை இவற்றின்மீது விதிக்கமுடியும், என்றும் கூறப்பட்டது. ஆயினும், ஒரு சாராரின் கருத்துப்படி முறைசெய்யப்பட்ட தொழில்களுக்கும், (Regulated enterprises) பிற தொழில்களுக்கு மிடையே எவ்வித வரி வேற்றுமையும் இருக்கக்கூடாது என்று கருதப்படுகின்றது. இவ்விரண்டு கருத்துகளுக்கும் பொதுவாக, டிராக்சலின் (Troxel) கருத்துக் காணப்படுகிறது. இவரது கருத்துப்படி, "ஏற்கக்கூடிய அல்லது மிகச்சொற்பமான வரியினைப் பொதுப்பயன் தொழில்களின்மீது விதிக்கலாம்."*

## கருத்துக் கோப்பு

பொதுப்பயன் தொழில்கள் பொதுநல ஈடுபாட்டுடன் பணி புரியும் நிறுவனங்கள்—இவை விதிக்கின்ற கட்டணங்கள் நியாயமானதாக இருக்கவேண்டும்—பிற நிறுவனங்களைப் போலவே, இவற்றின் கட்டணங்கள் இத் தொழில்களின் நடைமுறைச் செலவினைப் பொறுத்தே அமைகின்றன—நடைமுறைச் செலவுகள் என்பவை தேய்மானச் செலவுகள், அரசியல் கட்சிகளுக்கு அளிக்கப்படும் நன்கொடைகள், பராமரிப்புச் செலவுகள், விளம்பரச் செலவுகள், விற்பனை முடுக்கச் செலவுகள், செலுத்தப்படுகின்ற வரிகள் என்று பலவகைப்படும்—இவையனைத்தையும் நடைமுறைச் செலவாகக் கருதுவதானல், பொருள்களின் விலை உயர்த்தப்படவேண்டும். அவ்வாருனல் நுகர்வோரின் தலையில் இச் சுமை ஏற்றப்படும். ஆகவே, நுகர்வோருக்காகவே இயங்குகின்ற பொதுப்பயன் தொழில்கள் தங்களது நடைமுறைச் செலவினை நன்கு ஆராய்ந்து, பின்னரே அவற்றைச் செய்யவேண்டும்.

* Troxel, OP, cit; P 257.

# 9. கட்டண அடிப்படை (The Rate Base)

"ஒரு பொதுப்பயன் தொழில் நிறுவனத்தில் பயன்படுத்தப்படும் எல்லாவகைச் சொத்துகளின் உண்மையான மதிப்பினை நல்லதொரு முறையில் கண்டறிவதும் மிகவும் இன்றியமையாததாகும்".

—இடாஹோ பொதுப்பயன்குழு (Iadaho Public utilities commission).

ஒரு பொதுப்பயன் தொழில் கட்டண அடிப்படையைத் தீர்மானிப்பதற்கு, அந் நிறுவனத்தில் பயன்படுத்தப்படும் எல்லா வகைச் சொத்துகளின் மொத்த மதிப்பினையும் கணக்கிடுதல் வேண்டும். இஃது அவ்வளவு எளிதான செயல் அன்று. ஏனெனில் முறைசெய்யப்பட்ட நிறுவனங்களில் பலதரப்பட்ட சொத்துகள் கையாளப்படுகின்றன. இவற்றின் மதிப்பு நாளுக்குநாள் குறைந்துகொண்டே போகலாம். இவ்வாறு குறைந்துகொண்டே போகும் மதிப்பினைத் "தேய்மானம்" என்ற சொல்லால் ஏற்கனவே குறிப்பிட்டோம். ஆகவே, எல்லாவகைச் சொத்துகளின் மொத்த மதிப்பிலிருந்தும் இத் தேய்மானச் செலவினைக் குறைத்துவிட்டால் எஞ்சியிருப்பது இச் சொத்துகளின் நிகரமதிப்பாகும் (Total value of all assets – Depreciation = Net value of all assets). ஒரு பொதுப்பயன் தொழிலில் ஏற்படுகின்ற பெரும்பாலான சிக்கல்களும் எளிதாகத் தீர்க்கப்படுகின்றன. ஆயினும், சொத்துகளை மதிப்பிடுவதில் ஏற்படும் சிக்கல்கள் பரவலாகவும் எளிதில் விடைகாண முடியாதனவாகவும் உள்ளன. எடுத்துக்காட்டாக, ஒரு பொதுப்பயன் தொழில் நிறுவனம் எவ்வளவு வருவாயை ஈட்டவேண்டும் என்ற வினவிற்கு விடையாக அந் நிறுவனம் தனது நடைமுறைச்செலவுகள், தேய்மானச் செலவுகள், வரிகள் இவற்றை அளிப்பதோடு முதலீடு செய்தோருக்கு நியாயமானதொரு வருவாயை அளிக்கும் அளவிற்கு அதனுடைய வருவாய் அமையவேண்டும் என்று கூறிவிட முடியும். அந் நிறுவனம் நியாயமானதொரு கட்டணத்தைத் தனது பொருள்களுக்கு விதிக்கவேண்டும் என்றே நுகர்வோர் விரும்பு

வர். இதற்கு முற்றிலும் மாறாக, இந் நிறுவனங்களில் முதலீடு செய்தோர் அதிக அளவு வருவாயை எதிர்பார்ப்பதும் இயல்பே. இவ்விரண்டு வினாக்களுக்குமே நாம் ஒருவாறு விடையளிக்க முடியும். ஆனால், அந் நிறுவனத்திலுள்ள சொத்துகளை எவ்வாறு மதிப்பிடுவது என்ற வினாவிற்கு விடையளித்தல் எளிதான செயல் அன்று.

**கட்டண அடிப்படை—சிறு விளக்கம்**

முறைசெய்யப்பட்ட பொதுப்பயன் தொழில் நிறுவனங்கள் தங்களுடைய பொருள்களுக்கான கட்டணத்தை விதிக்கும் முன்னர் இரண்டு கருத்துகளை கருத்தில் கொள்ளவேண்டும் முதலாவதாக, திறமையான நிருவாகத்தின்கீழ் இப் பொருளினை உற்பத்தி செய்ய ஆகும் செலவு என்ன என்பதனை அறிதல் வேண்டும். இரண்டாவதாக, ஏற்கனவே தீர்மானிக்கப்பட்ட கட்டண விகிதங்களில் ஏதாவதொன்றினைத் தேர்ந்தெடுத்து வருவாயைப் பெருக்கிக்கொள்ள இந் நிறுவனங்களால் முடியும். முன்னரே குறிப்பிட்டபடி ஒவ்வொரு பொருளின் உற்பத்திச் செலவு என்பது நடைமுறைச் செலவுகள், தேய்மானச் செலவுகள், வரிகள் மற்றும் முதலீட்டின்மீது அளிக்கப்படும் சிறு வருவாய் போன்ற பலவகைச் செலவுகளின் மொத்தமே ஆகும். இவற்றைத்தவிர பொதுப்பணியில் ஈடுபடுத்தப்பட்டுள்ள சொத்துகளின் மொத்த மதிப்பீட்டில் ஒரு குறிப்பிட்ட விகிதம் நடைமுறைச் செலவோடு சேர்த்துக்கொள்ளப்படும். இந் நிறுவனங்களிலுள்ள புலனாகக்கூடிய (Tangible) மற்றும் புலனாகாச் (Intangible) (கருவிக்கலன்கள், இயந்திரங்கள் உட்பட) எல்லா வகைச் சொத்துகளின் மதிப்புத் தொகையே "கட்டண அடிப்படை" என்று கூறப்படுகிறது. இதனையே பொருள்களின் கட்டணத்தை நிருணயிப்பதற்காகச் செய்யப்படும் சொத்து மதிப்பீடு என்றும் கூறலாம்.

மேற்காணும் நடைமுறைச் செலவுகள் போன்ற பலவகைச் செலவுகள் தவிர, ஒரு நிறுவனத்தின் நடைமுறை முதலையும் (Working capital) அங்குச் சில நேரங்களில் செய்யப்படுகின்ற மேற்செலவுகளையும் (Overhead costs) மற்றும் அந் நிறுவனம் இயங்குகின்றபோது அவ்வப்போது ஏற்படக்கூடிய செலவுகளையும் கட்டண அடிப்படையின்கீழ் ஒன்றாகச் சேர்க்கலாம். இவையனைத்தும் சேர்ந்தே இக் கட்டண அடிப்படையை உருவாக்குகின்றமையால், இவற்றைப்பற்றித் தனியே விளக்கமாகப் பின்னால் கூறப்பட்டுள்ளது.

இனி, கட்டண அடிப்படையின் இன்றியமையாத பகுதியாகிய நிலையான சொத்துகளை மதிப்பீடு செய்தலைப்பற்றிச் சிறிது காண்போம். ஒரு நிறுவனத்திலுள்ள பல்வேறு நிலையான சொத்துகளிலும், அந் நிறுவனத்தின் அன்றாட இயக்கத்துடன் இணைந்திருக்கும் இயந்திரச் சாதனங்கள், உற்பத்தியில் பெரும் பங்கு வகிக்கின்றன. ஆதலால், இவ்வியந்திரச் சாதனங்களை மதிப்பீடு செய்வதில் அதிகக் கவனம் செலுத்தப்படவேண்டும். ஏனெனில், இச் சாதனங்களை அவற்றின் உண்மையான மதிப்பிற்கும் அதிகமாகவோ, குறைவாகவோ மதிப்பிட்டால் அதன் விளைவாக, அந் நிறுவனத்தின் கட்டண அடிப்படையும் மாற்றி அமைக்கப்படவேண்டும். கட்டண அடிப்படை மாற்றி அமைக்கப்பட்டால், நுகர்வோரிடமிருந்து வசூலிக்கப்படும் கட்டணமும் மாற்றி அமைக்கப்படவேண்டும். இவ்வுண்மையை ஓர் எடுத்துக்காட்டின் மூலமாகக் காண்போம். ஒரு நிறுவனத்திலுள்ள சொத்துகளில் பெரும்பான்மையானவை இயந்திரச் சாதனங்கள் தாம். இதனை இவற்றின் உண்மையான மதிப்பினைக் காட்டிலும் மிக அதிகமாக மதிப்பீடு செய்கிறோம் என வைத்துக் கொள்ளுவோம். இதன் விளைவாக, இவ்வியந்திரங்களுக்கான தேய்மானத் தொகை போன்றவையும் அதிகரிக்கும். அப்படியாயின் இத்தொழிலின் கட்டண அடிப்படையும் அதிகரிக்கும். கட்டண அடிப்படை அதிகரித்தால் பொதுமக்களிடமிருந்து வசூலிக்கக்கூடிய கட்டணத் தொகையும் அதிகரிக்கும். இதற்கு மாறாக, இவற்றின் உண்மையான மதிப்பினைக் காட்டிலும் குறைவாக மதிப்பீடு செய்யப்படுமேயானால் கட்டண அடிப்படையும் குறைவாக அமையும். இதன் விளைவாக, நுகர்வோரிடமிருந்து பெறப்படும் கட்டணமும் குறைவாகவே அமையும். ஆகவே, பொதுநலத்திற்காகப் பணிபுரியும் பொதுப்பயன் தொழில் நிறுவனங்கள், அதிகமான அல்லது குறைவான கட்டணத்தை விதிக்காமல், 'நியாயமான'[1] கட்டத்தினை, நுகர்வோரிடமிருந்து பெறவேண்டுமானால் அவற்றின் கட்டண அடிப்படை சரியான முறையில் அமைக்கப்படவேண்டும். ஆகவே இயந்திரச் சாதனங்கள் போன்ற இன்றியமையாத சொத்துகள் சரியான முறையில் மதிப்பீடு செய்யப்பட்டால்தான், கட்டண அடிப்படை சரியான முறையில் அமையும் என்பது விளங்கும்.

**சொத்துகளை மதிப்பீடு செய்தல்**

ஒரு பொதுப்பயன் தொழில் நிறுவனத்திலுள்ள சொத்துகளின் மதிப்பீட்டினைச் செய்யுமுன்னர், இரண்டு கருத்துகளை நாம் மனதில் கொள்ள வேண்டும். (1) முதலாவதாக, எந்தெந்தச் சொத்துகளை மதிப்பீடு செய்ய வேண்டுமென்பதும் (2) இரண்

டாவதாக, இச்சொத்துகளை எவ்வழிகளில் மதிப்பீடு செய்ய லாம் என்பதும் தீர்மானிக்கப்படவேண்டும். இவற்றைப் பின் வரும் பகுதிகளில் விரிவாக ஆராய்வோம். மதிப்பீடு செய்யப் படவேண்டிய சொத்துகள் :

ஒரு நிறுவனத்தின் சொத்துகளைப் புலனாகக் கூடியவை, புலனாகாதவை என்று இருவகையாகப் பிரிக்கலாம். இவ்விரு வகைச் சொத்துகளுமே கட்டண அடிப்படையைத் தீர்மானிக் கும் வல்லமை படைத்தவை. இருப்பினும் மதிப்பீடு செய்யப்பட வேண்டிய சொத்துகளை நான்கு வகையாகப் பிரிக்கலாம். இவற்றில் முதல்வகையில் புலனாகக் கூடிய சொத்துகளைக் குறிப் பிடலாம். எடுத்துக்காட்டாக, உபயோகப்படுத்தப்பட்ட, மேலும் உபயோகத்திலுள்ள நிலம், கட்டடம் மற்றும் இயந்திரச் சாதனங் கள் இவற்றைக் கூறலாம். இத்தகைய புலனாகக்கூடிய சொத்து கள் எவை என்பதை ஒரு நிறுவனத்தின் இயக்குநரவை தீர்மா னிக்கிறது.

வெல்ச்சின் (Welch) கருத்துப்படி சிலவகைச் சொத்துகளை உபயோகத்திலிருப்பவையாகக் கருதக்கூடாது. அவை :

(i) (1) தேவையற்ற அல்லது தேவைக்கு அதிகமான சொத்து கள், (2) காலத்திற்கொவ்வாத, அல்லது பழமையான சொத் துகள், (3) கழித்துக்கட்டவேண்டிய சொத்துகள், (4) கழித் துக்கட்டப்பட்ட, உபயோகப்படாத சொத்துகள், (5) தேவைக்கு மேல் வளர்ச்சியடைந்துள்ள சொத்துகள், (6) குத்தகையில் விடப்படும் சொத்துகள், நிலம் போன்றவை, (7) முடிவுறாத கட்டடங்கள், (8) பொதுப்பயன் தொழிலுக்குப் பயன்படாத சொத்துகள், (9) பொதுப்பயன் தொழிலுக்கல்லாது பிறவற் றிற்குப் பயன்படும் சொத்துகள், (10) பிற பொதுப்பயன் தொழில்களைச் சார்ந்த சொத்துகள், (11) உடைமையாக்கப் படாத சொத்துகள், (12) நன்கொடையாக அளித்துவிடப் பட்ட சொத்துகள், (13) வாடிக்கையாளர்களால் செலுத்தப் பட்ட ரொக்கம், காப்புநிதி போன்றவை.

(ii) இவ்விரண்டாவது வகையில் கட்டடம் கட்டும்போது ஏற்படக்கூடிய செலவுகள், சட்டச் செலவுகள், ஈட்டுறுதிச் செல வுகள், வரிகள் போன்றவற்றைக் குறிப்பிடலாம்.

(iii) மூன்றாவது வகையில், நடைமுறைமுதலைக் (Working Capital) குறிப்பிடலாம். குறிப்பிட்ட காலத்திலுள்ள பொறுப் புகளைத் தீர்க்க உதவும் சொத்துகளை நடைமுறை முதல் எனக் கூறலாம்.

(iv) நான்காவது வகையாக, கண்ணுக்குப் புலப்படாத இருவகைச் சொத்துகளைக் குறிப்பிடலாம். எடுத்துக்காட்டாக வணிக நிறுவனத்தின் தொழில் நன்மதிப்பு (goodwill), பெற்றுள்ள தனிச் சலுகைகளின் மதிப்பு, குத்தகை உரிமை போன்றவற்றைக் கூறலாம்.

மேற்கண்ட நான்கு வகைச் சொத்துகளும் ஒரு பொதுப்பயன் தொழில் நிறுவனத்தில் காணப்படுபவையாதலால், இவை அனைத்தையும் மதிப்பீடு செய்தல் அவசியமாகிறது.

**மதிப்பீடு செய்ய வேண்டிய முறைகள்**

மதிப்பீடு செய்யப்படவேண்டிய சொத்துகளை முடிவுசெய்த பின்னர், இப் பணியை முடிக்கும் வழிகளை ஆராயவேண்டும். கட்டண அடிப்படையை உருவாக்கும் முன்னர் சொத்துகளின் மதிப்பினைக் காணவேண்டும் என்றும் 'மதிப்பு' என இங்குச் சொல்லப்படுவது, இந் நிறுவனங்களால் பல வழிகளில் கண்டறியப் படுவது என்றும் உணர்தல் வேண்டும். இம் மதிப்பீட்டில், 'நியாயமான மதிப்பு' (Fair value) என்பதும் ஒன்று. இது பொருளாதார நோக்கில் கூறப்படும் பொருளை உணர்த்தாது. மேலும், பொதுப்பயன் தொழில்களை முறைசெய்யும் குழுக்கள், இத் தொழில் நிறுவனங்களின் கட்டணவீதத்தைக் கணக்கிட்டுச் சொல்லும் பணியில் ஈடுபடுவதில்லை. மாறாக, கட்டண வீதத்தை அவைதான் தீர்மானிக்கின்றன. ஆனால், பொதுப்பயன் அல்லாத பிற தொழில்களின் மதிப்புச் சந்தையில் அவ்வப்போது நிர்ணயிக்கப்படுகிறது. ஒரு நிறுவனத்திலுள்ள சொத்தின் மதிப்பு. அந் நிறுவனத்தின் இலாபமீட்டும் தன்மையினைப் பொறுத்தே அமைகின்றது. எல்லாவகை நடைமுறைச் செலவுகளையும் செய்தபின்னர் எஞ்சியிருக்கும் இலாபத் தொகை அந் நிறுவனத்திலுள்ள சொத்துகளின் மதிப்பாகக் கருதப்படும். ஆனால் பொதுப்பயன் தொழில் நிறுவனத்தைப் பொறுத்தமட்டிலும், சொத்துகளின் மதிப்பு இவ்வாறு கணக்கிடப்படுவதில்லை. ஏனெனில் இத் தொழில்களின் இலாபமீட்டும் தன்மை, அவற்றின் கட்டணவீதத்தைப் பொறுத்தே அமைந்துள்ளது. பொருள்களுக்கான கட்டணம் உயரஉயர, அந் நிறுவனத்தின் இலாபத் தொகையும் அதிகரிக்கும். ஆகவே, சொத்துகளின் மதிப்பும் அதிகரிக்கும். இதற்கு மாறாக, குறைவான கட்டணம் விதிக்கப் படுமேயானால், இலாபத் தொகையும் குறையும். இதன் காரணமாகச் சொத்துகளின் மதிப்பும் குறையும் என்பது புலனாகிறது. மேற்கண்ட கருத்துகளினின்று ஓர் உண்மை புலனாகிறது. ஒரு பொதுப்பயன் தொழிலிலுள்ள சொத்துகளின் மதிப்பு, அந்

நிறுவனத்தின் கட்டணவீதத்தைப் பொறுத்தே அமைகின்றபடியால் அந் நிறுவனம் 'நியாயமான விலை'யை அதன் சொத்துகளின் மதிப்பைப் பொறுத்துமட்டும் தீர்மானிக்கப்படமுடியாது என்றும் உணரலாம். ஆகவே, கட்டணவீதத்தைத் தீர்மானிக்கும் பொருட்டுச் சொத்துகளின் மதிப்பைப் பல்வேறு வழிகளில்கண்டு பிடிக்க வேண்டியது அவசியமாகிறது. முறைகளில் சில பின்வருவனவாம் :

I. நிறுவுவதற்கான செலவுகளைக் கண்டறிதல் (Measures of construction cost value)

ஓர் இயந்திரத்தினைத் தொழிற்சாலையில் நிறுவுவதற்கான பல்வேறு செலவுகளைக் கீழே காணலாம்.

1. 'உண்மையான' அல்லது 'முதனிலை'ச் செலவுகள் (Actual or original cost)

முதன்முதலாக ஓர் இயந்திரத்தினைப் பொதுப்பயன் தொழிலில் ஈடுபடுத்தும்பொருட்டு, அதனைக் கொணர்ந்து, தொழிற்சாலையில் நிறுவுவதற்காக ஏற்படும் செலவுகள் அனைத்தும் 'உண்மையான' அல்லது முதல்நிலைச் செலவுகள் எனப்படும்.

2. கணக்குப் பதிவேடுகளில் காணப்படும் செலவுகள் (Book or Investment cost)

உபயோகத்திலிருக்கும் இயந்திரங்களையும் பிற சாதனங்களையும் நிறுவுவதற்கான செலவும், இவ்வகையில் கூடுதலாகச் செலவழிக்கப்பட்ட பிற செலவுகளும், முதலீட்டுக் கணக்கில் குறிக்கப்பட்டிருக்கும். இச் செலவுகளைக் கணக்குப் பதிவேடுகளில் காணலாம்.

3. அறிவார்ந்த முதலீடு (Prudent Investment)

ஓர் இயந்திரத்தின் (அல்லது சொத்தின்) உண்மையான மதிப்பிலிருந்து அச் சொத்திற்காகச் செய்யப்பட்ட, தேவையற்ற, ஏமாற்றுவதற்கான அல்லது முறையற்ற செலவுத் தொகையினைக் கழித்தால், எஞ்சியிருப்பது உண்மையான முதலீடு எனப்படும்.

4. முதலாக்கப் பணிக்கான தொகை (Capitalisation cost)

ஒரு நிறுவனத்திற்காகப் பங்குகள், பங்குத் தொகுப்புகள், பத்திரங்கள் ஆகியவற்றை வாங்குவதற்காகச் செய்யப்பட்ட செலவுகளை முதலாக்கப் பணிக்கான தொகையாகக் கருதலாம்.

## II. மறுஉற்பத்திச் செலவுகளைக் கண்டறிதல் (Reproduction cost)

### 1. மறு உற்பத்திச் செலவுகள்

இயந்திரத்தின் உண்மையான விலை, அவற்றின்மீதான உபரிச்செலவுகள் இவற்றை இச் சொத்தினை மதிப்பீடு செய்யும் தேதியில் உள்ள விலைக்கேற்றவாறு கணக்கிடுதல் வேண்டும்.

### 2. வேறுபடுத்தப்பட்ட செலவுகள் (Split Investing value)

குறிப்பிட்ட ஒரு நாளுக்கு முன்னதாகக் கொள்முதல் செய்யப்பட்டு, நிறுவப்பட்ட இயந்திரங்களின் உண்மையான செலவுகளும், இந் நாளுக்குப் பின்னர் கொள்முதல் செய்யப்படும் இயந்திரங்களின் மதிப்பும் தனித்தனியாகக் குறிக்கப்படும். இதனை வேறுபடுத்தப்பட்ட செலவுகள் எனலாம்.

## III. வரியளிப்பு மதிப்பு (Taxation value)

ஆண்டுதோறும் வரி செலுத்தும் பொருட்டு ஒரு நிறுவனம் தன்னுடைய எல்லாவிதச் சொத்துகளையும் மதிப்பீடு செய்வது வழக்கம். இவ்வாறு வரி அளிக்கும் பொருட்டுக் கணக்கிடப்பட்ட மதிப்பே, வரியளிப்பு மதிப்பீடு எனப்படும்.

## IV. சந்தை மதிப்பு (Market value)

ஒரு நிறுவனத்தின் இலாபமீட்டும் தன்மையை ஏறத்தாழ மதிப்பீடு செய்தால் அதனையே சந்தை மதிப்பு எனலாம். இதனை அந் நிறுவனத்தின் நிதிநிலைபற்றிய மதிப்பீடு என்றும் கொள்ளலாம்.

## V. பரிமாற்ற அல்லது கொள்முதல் மதிப்பு (Exchange or Purchase value)

ஒரு நிறுவனத்தை விற்பனை செய்ய வேண்டிய நிலை ஏற்படின் அதனை வாங்குவோர் ஒரு குறிப்பிட்ட விலையை அளிக்க முன் வருவர். இவ்விலையை விற்கப்படும் நிறுவனத்தின் கொள்முதல் மதிப்பீடு எனலாம்.

## சொத்துகளை மதிப்பிடுதல்-சட்டவழிக் கருத்துகள் (Ptoperty Valuation-Legal Concepts)

ஒரு நிறுவனத்திலுள்ள சொத்துகளின் மதிப்பினைப் பொறுத்தே அந் நிறுவனத்தின் கட்டண அடிப்படை அமைகின்றபடியால், சொத்துகளை மதிப்பிடுவதில் தீவிர கவனம் செலுத்தப்படவேண்டும். எவ்வழியில் இச் சொத்துகளை மதிப்பிடலாம் என்ற வினாவிற்கு இரண்டு முறைகளை விடையாக அளிக்கலாம். முதலாவதாக, ஒரு நிறுவனத்தின் சொத்துகளைச் சட்டத்தின் மூலமாக மதிப்பீடு செய்ய முடியும். இரண்டாவதாக, நீதிமன்

றங்களின்மூலமாக இச் சொத்துகளை மதிப்பீடு செய்யலாம். இவ்விரண்டு வழிகளிலும் சிறந்தது எதுவென்ற வினா எழுவது இயற்கையே. இச் சிக்கலான கேள்விக்கே 1898-ல் அமெரிக்க நாட்டில் நடைபெற்ற வழக்கு ஒன்றினை மேற்கோளாகக் காட்ட முடியும். ஸ்மித் vs ஏம்ஸ் என்ற அந்த வழக்கிற்கு முன்னர் ஒரு நிறுவனத்தின் சொத்துகளை மதிப்பீடு செய்யும் உரிமை சட்டத்திற்கே உண்டு என்ற கருத்து நிலவி வந்தது. குறிப்பாக 1877–ல் நடைபெற்ற ஒரு வழக்கில் இக் கருத்து வலியுறுத்தப்பட்டது. ஆனால், 1866-ல் இத் தீர்ப்பு மாற்றியமைக்கப்பட்டுச் சொத்துகளை மதிப்பீடு செய்யும் உரிமை நீதிமன்றத்திற்கே உண்டு என்று கூறப்பட்டது. ஒரு நிறுவனத்தின் சொத்துகளை மதிப்பீடு செய்பவரே அதன் கட்டணத்தையும் நிருணயிக்க வேண்டும். இதன்படி, ஒரு பொதுப்பயன் தொழில் நிறுவனத்தின் கட்டணத்தினை அரசின் சட்டமன்றம் வரையறை செய்தபோதிலும், இக் கட்டணத்தினைப் பரிசீலனை செய்யவோ நீதிமன்றத்திற்கே உரிமை உண்டு, என்ற கருத்து ஏற்றுக்கொள்ளப்படவேண்டும்.

**கட்டண அடிப்படை முறைகள்**

பொதுநல ஈடுபாட்டுடன் இயங்குகின்ற எல்லாப் பொதுப் பயன் தொழில்களையும் அரசு தனது கட்டுப்பாட்டின்கீழ்க் கொண்டுவர முற்படுதல் இயல்பு. இதற்கான பல்வகைக் கட்டுப் பாடுகளையும், விதிகளையும் ஏற்படுத்தி அவற்றைக்கொண்டு மக்களின் அன்றாட வாழ்வுடன் தொடர்புகொண்டுள்ள பொதுப் பயன் தொழில்களை முறைசெய்ய எந்த ஓர் அரசுக்கும் முழு அதிகாரம் உண்டு. இதனை மன் vs இல்லினாய்ஸ் (Munn vs Illinois) என்னும் அமெரிக்க நாட்டு வழக்கின் துணை கொண்டு ஏற்கனவே பார்த்தோம். இவ்வாறு அரசின் கட்டுப்பாட்டின்கீழ் இயங்குகின்ற ஒரு பொதுப்பயன் தொழில் நிறுவனம், தனது வாடிக்கையாளரிடமிருந்து, தான் உற்பத்தி செய்து அளிக்கின்ற பொருள்கள் அல்லது பணிகளுக்கென ஒரு குறிப்பிட்ட கட்டணத்தைப் பெற உரிமை பெற்றுள்ளது. குறிப்பிட்ட இக் கட்டணத்தின் தன்மைபற்றி அரசுக்கும், இந் நிறுவனத்திற்குமிடையே கருத்து வேறுபாடு எழலாம். அதாவது, தான் அளிக்கின்ற பொருள்களின் உற்பத்திச் செலவையாவது, சரிக்கட்டும் வகையில் பொதுப்பயன் தொழில்களின் கட்டண வீதம் அமைந்திருக்கவேண்டும். இவ்வாறன்றி, இத் தொழில்களை முறைசெய்ய வேண்டும். அல்லது தனது கட்டுப்பாட்டின்கீழ்க் கொண்டு வர வேண்டுமென்ற கருத்தில் ஓர் அரசு தானே முன் வந்து ஒரு குறிப்பிட்ட ஓர் கட்டணத்தை விதிக்கக்கூடும். ஆயினும், இக் கட்டணம், பொதுப்பயன் தொழில்களின் நியாய

மான கட்டணத்தைக் காட்டிலும் கூடுதலாக இருக்கமுடியுமே தவிர, குறைவாக இருத்தலாகாது. ஏனெனில், பொதுப்பயன் தொழில்களின் பொருள்களுக்கு அரசு விதிக்கின்ற கட்டணம் குறைவாக இருக்கவேண்டுமேயானால் அது, அந் நிறுவனங்களுக்கு இழைக்கப்படுகின்ற அநீதியாகும். ஆகவே, 'நியாயமான கட்டணம்' எது என்பதைப் பொறுத்தே பொதுப்பயன் தொழில் ஒன்றின் கட்டண அடிப்படை அமைகின்றது. இக் கருத்தினையே ஸ்மித் vs ஏம்ஸ் என்ற வழக்கு வலியுறுத்துகிறது.*

ஒரு சமயம் 'நெப்ராஸ்கா' என்னும் அமெரிக்க நாட்டு மாநில அரசு தனது மாநிலத்தில் உள்ள இருப்புப்பாதை சரக்கு வண்டிகள் ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்குப் பொருள்களை ஏற்றிச்செல்லக் குறிப்பிட்ட ஒரு கட்டணத்தை மட்டுமே வசூலிக்க வேண்டுமென்ற உத்திரவுகளைப் பிறப்பித்தது. அரசும் நிருணயித்த இக் கட்டணம், மிகவும் குறைவானதாகக் கருதப்பட்டதால், இவ்வுத்திரவை அமுலாக்குவதை எதிர்த்து இருப்புப்பாதை சரக்கு வண்டிகளின் உரிமையாளர்கள் வழக்குத் தொடுத்தனர். இறுதியில், இவ்வழக்கு அமெரிக்க ஐக்கிய நாட்டின் தலைமை நீதிமன்றத்திற்குக் கொண்டு செல்லப்பட்டது. இவ்வழக்கின் அரசுத்தரப்பு வழக்கறிஞரின் கூற்றுப்படி, ஒரு நிறுவனத்தின் கட்டண வீதம், அந் நிறுவனத்திலுள்ள சொத்துகளின் மதிப்பு, அச் சொத்துகளின் மூலம் வரக்கூடிய வருமானத்தின் அளவு இவற்றைப் பொறுத்து அமையவேண்டுமெனப்பட்டது. அவ்வாறெனில், இவ்வழக்கில் சம்பந்தப்பட்ட புகைவண்டித் தொடர் நிறுவனங்களின் சொத்துகளின் மதிப்பு மிகவும் குறைவான விலையில் விற்கப்பட்டன என்றும் கூறப்பட்டது. குறைவான மதிப்பினை உடைய சொத்துகளைக் கொண்டு குறைவான கட்டணத்தை விதித்தலே முறையானது என்றும் அரசுத் தரப்பு வழக்கறிஞர் வாதாடினர். மறுத்து வாதாடிய எதிர்த்தரப்பு வழக்கறிஞர், இப் புகைவண்டித்தொடர்களின் நிறுவனங்களிடமுள்ள சொத்துகள் அமெரிக்க நாட்டின் உள்நாட்டுப்போர் நடைபெறும்போது அதிக விலை கொடுத்து வாங்கப்பட்டன என்றும், அதன் காரணமாக அவற்றின் மதிப்பும் மிகவும் உயர்வானதென்றும், ஆகவே இவை விதிக்கின்ற கட்டணங்களும் சிறிது கூடுதலாகக் காணப்படுவதில் தவறில்லையென்றும் எடுத்துரைத்தார். இறுதியில், 'நியாயமான கட்டணமொன்றை' மட்டுமே விதிக்க அரசுக்கு உரிமை உண்டென்றும், இந் நியாயமான கட்டணத்தைக் கண்டுபிடிக்க வேண்டுமாயின் ஒரு நிறுவனத்திலுள்ள சொத்துகளின் நியாயமான மதிப்பினைக்

* Smyth Vs Ames in 1898

(Fair value) கண்டறிதல் மிகவும் இன்றியமையாதது என்றும் தீர்ப்பளிக்கப்பட்டது.

பொதுப்பயன் தொழில் ஒன்றின் சொத்துகளின் நியாயமான மதிப்பினைக் காணவேண்டுமாயின் கீழ்க்காணும் மூன்று கருத்துகளைப் பரிசீலனை செய்யவேண்டும்: (1) சொத்துகளின் உண்மையான மதிப்பு (2) அதே சொத்தினைத் தற்சமயம் உருவாக்க (அல்லது உண்டாக்க) ஏற்படும் செலவு மற்றும் (3) இன்ன பிற செலவுகள். இம்மூன்று வகைக் கருத்துகளும் இன்றியமையாதவையாகக் கருதப்படுகின்றன. ஏனெனில், இம் மூன்று வகைத் தொகைகளும், ஒரு பொருளின் உற்பத்திச் செலவு 'நியாயமானதாக' நிருணயிக்கப்பட்டுள்ளதா, இல்லையா என்பதைத் தீர்மானிக்க வல்லவை. ஆகவே, இம் மூன்றுவகைத் தொகைகளையும் தனித்தனியே ஆராய்வது நன்மை பயக்கும்.

**சொத்துகளின் உண்மையான மதிப்பீட்டு முறை (Actual Cost Method)**

பொதுப்பயன் தொழில் நிறுவனம் ஒன்றின் சொத்துகளை மதிப்பீடு செய்வதில் பல்வேறு குறைகள் உள்ளதென்பது நாம் அறிந்ததே. இச் சொத்துகளின் பல்வேறு மதிப்புகளைக் காண்பதைவிட அவற்றின் உண்மையான மதிப்பு என்னவென்பதைக் கண்டறிவது நன்மைபயக்கும். நிலையான சொத்தின் உண்மையான மதிப்பு என்றால் என்ன என்ற வினவிற்கு விடைகாண வேண்டுமாயின் அச் சொத்தினை 'உருவாக்க' ஆகும் செலவு, அச் சொத்தினை இயக்குவதற்கான செலவு மற்றும் அச் சொத்தினைப் பராமரிக்கின்ற செலவு போன்ற பல்வகைச் செலவுகளின் கூட்டுத் தொகையைக் காணவேண்டும். ஏனெனில், இக் கூட்டுத் தொகையே குறிப்பிட்ட சொத்தின் மொத்த மதிப்பாகக் கருதப்படும். மேற்கண்ட பல்வேறு செலவுகள் மூன்று தலைப்புகளின் கீழ்ப்பிரிக்கலாம். அவை:

(1) கடந்தகாலச் செலவு (Historical cost)
(2) அறிவார்ந்த முதலீடுகள் (Prudent Investments)
(3) தோற்றச் செலவு (Original cost)

(1) இவற்றுள் கடந்தகாலச் செலவுகள் என்றால் என்ன என்பதை முதலில் காண்போம்.

இக் கடந்தகாலச் செலவு ஒரு நிறுவனத்தின் கணக்கேடுகளிலிருந்து நாம் அறிந்துகொள்ளமுடியும். குறிப்பிட்ட ஒரு

சொத்தினைப் (சான்றாக, கட்டடத்தினை) பொதுப்பயன் நிறுவனம் ஏற்க மேற்கொண்ட செலவுத்தொகை, பின்னர் அச் சொத்திற்காகச் செய்யப்பட்ட செலவுகள் போன்றவற்றின் கூட்டுத் தொகையை முதலில் காணவேண்டும். இக் கூட்டுத் தொகையிலிருந்து, அச் சொத்தின் தேய்மானத்தொகையை நீக்கி விட வேண்டும். எஞ்சியுள்ள தொகையே குறிப்பிட்ட நிகரச் செலவாகக் கருதப்படும். இத் தொகையே ஒரு சொத்தின் மதிப்பாக ஏற்றுக்கொள்ளப்படும். சுருங்கக் கூறின், எந்த ஒரு சொத்தினையும் ஒரு நிறுவனத்தில் உருவாக்கவும், அதனை மேம்படுத்தவும் செலவிடப்படுகின்ற தொகையிலிருந்து அதன் தேய்மானச் செலவினைக் கழித்ததுபோக எஞ்சியுள்ள தொகை அச் சொத்தின் மதிப்பாகக் கருப்படும்.

கணக்கேடுகளிலிருந்து கடந்தகாலச் செலவுகள் அறியப்பட வேண்டுமென்பது விதியாகும். சில நிறுவனங்களில் கணக்குப் பதிவேடுகள் சரிவர வைக்கப்பட்டிருக்கமாட்டா. அத்தகைய நிறுவனங்களில் இக் கடந்த காலச் செலவுகளை (Historical cost) எவ்வாறு கண்டுபிடிப்பது என்ற சிக்கல் எழலாம். இதுபோன்ற நிலையில், அந் நிறுவனத்திலுள்ள சொத்துகளை நேரடியாகப் பரிசீலனை செய்து, அவற்றின் விபரங்களைக்கொண்டு தோராயமான ஒரு மதிப்பினைக் காணலாம். இச் சொத்தினை வாங்கும்போதோ, ஏற்பட்ட செலவுகள் மட்டுமே அச் சொத்தின் மதிப்பாகக் கருதப்படும். இம் மதிப்புத் தொகையுடன், குறிப்பிட்ட சொத்தினைப் பராமரிப்பதற்காகச் செய்யப்பட்ட செலவுகளும் சேர்க்கப்படவேண்டும். இறுதியில், அன்றாட உபயோகத்தின் காரணமாக இச் சொத்தில் ஏற்படுகின்ற தேய்மானத் தொகை அதன் மதிப்பிலிருந்து கழிக்கப்பட வேண்டும். எஞ்சியிருக்கும் நிகரத்தொகை அச் சொத்தின் மதிப்பாகக் கணக்கிடப்பட வேண்டும். இதனை,

சொத்தினை வாங்க அல்லது உருவாக்க ஏற்படும் செலவு } + அச் சொத்தின் பராமரிப்புச் செலவுகள் — தேய்மானச் செலவுகள்
= சொத்தின் உண்மையான மதிப்பு

Cost of Construction + Cost of Maintenance — Cost of Depreciation
= Actual Cost of Property

(2) இவ்வாறு கண்டுபிடிக்கப்பட்ட ஒரு சொத்தின் மதிப்பிலிருந்து தேய்மானத்தைத் தவிர வேறு சில தொகைகளும் கழிக்கப்பட வேண்டியிருக்கலாம். எடுத்துக்காட்டாக, முறையற்ற அல்லது தேவையற்ற செலவுகள் ஏதேனும் செய்யப்பட்டிருப்பின்

அச் செலவுத் தொகையும் கழிக்கப்படவேண்டும். இதுவே அறிவாய்ந்த முதலீட்டுமுறை (Prudent Investment) எனப்படும். ஒரு சொத்தின் உண்மையான மதிப்பினைக் (Actual cost) காண்பதில் இஃது இரண்டாவது முறையாகும்.

இதன்படி,

சொத்தினை வாங்க அல்லது உருவாக்க ஏற்படும் செலவு + பராமரிப்புச் செலவுகள் — [தேய்மானச் செலவுகள் + முறையற்ற செலவுகள்]

= அச் சொத்தின் உண்மையான மதிப்பு.

Cost of Purchase or Construction + Cost of Maintance — [Depreciation Cost + Wasteful orUnnecessay Cost]

= Actual Cost of the Property.

எனலாம்,

(3) தோற்றமுறையின் மூலம் (Original cost method) ஒரு சொத்தின் மதிப்பினைக் காணுதல் எங்ஙனம் என்பதை ஈண்டு நோக்குவோம். ஒரு நிறுவனத்தில் பல்வேறு சொத்துகள் வாங்கப்படுதல் இயல்பு. இச் சொத்துகளை முதன்முறையாக உபயோகப்படுத்தும்போது அச் சொத்தின் மதிப்பு என்னவோ அதிலிருந்து அச் சொத்துக்கான தேய்மானத் தொகையைக் கழித்ததுபோக எஞ்சியிருப்பது, அச் சொத்தின் உண்மையான மதிப்பு எனப்படும். ஆனால், இம் முறை சரிவரக் கையாளப்பட வேண்டுமாயின், அந் நிறுவனத்தின் கணக்குப் பதிவியல் முறைகள் சரிவர நடைபெறுதல் அவசியம். இக் கருத்தினையே அமெரிக்க நாட்டின் பெடரல் பவர் கமிஷனின் அறிக்கை ஒன்று அறிவிக்கின்றது.* உண்மை மதிப்பீடுமுறையின்படி குறிப்பிட்ட ஒரு சொத்தினை முதன்முதலாக உபயோகப்படுத்தும்போது அச் சொத்தின் மதிப்பு என்னவோ, அதுவே அச் சொத்தின் உண்மையான மதிப்பாக ஏற்றுக் கொள்ளப்படும் என்ற கருத்தினைக் கண்டோம். இக் கருத்துப் பெரும்பாலான பொதுப்பயன் தொழில்களுக்கு, குறிப்பாக மின்திறன் உற்பத்தி நிறுவனம், தொலைபேசி நிறுவனம் போன்ற நிறுவனங்களில் ஏற்றுக் கொள்ளப்படுவதாக அமைகின்றது.

*Federal Power Commission's definition from "Uniform System of Accounts Prescribed for Public Utilities and Licences"

கடந்தகால மதிப்பீட்டுமுறை, முறையான முதலீட்டு முறை என்னும் முதலிரண்டு முறைகளிலிருந்தும் உண்மை மதிப்பீட்டு முறை வேறுபடுகின்றது. ஏனெனில், முதலிரண்டு முறைகளிலும் உண்மையாண மதிப்பு அச் சொத்தின் உரிமையாளரைச் சார்ந்த தாகக் கணக்கிடப்படுகின்றது. மூன்றாவது முறையின்படி, சொத்தின் மதிப்பு பொதுமக்களைச் சார்ந்ததாகக் கணக்கிடப்படு கின்றது. சான்றாக, ஒரு நிறுவனம் இயந்திரச் சாதனம் ஒன்றினை 25,000 ரூபாய்க்கு விற்றது எனில், அச் சொத்தின் மதிப்பு ரூபாய் 25,000 எனக் கணக்கிடப்படும். இதே இயந்திரச் சாதனம் பொதுப்பயன் தொழில் நிறுவனம் ஒன்றிற்கு 30,000 ரூபாய்க்கு விற்கப்பட்டது என்றால், அச் சொத்தின் மதிப்பு 30,000 ரூபாய் ஆகும். அந்த இயந்திரச் சாதனம் முதன்முதலாகப் பொதுப்பயன் தொழிலின்மூலமாகப் பொதுமக்களுக்காக எப்போது உபயோகப்படுகிறதோ அப்போதைய மதிப்பே அச் சொத்தின் மதிப்பாகக் கருதப்பட வேண்டும் என்பது மூன்றாவது முறையின் கோட்பாடு. இதே எடுத்துக்காட்டின்படி குறிப்பிட்ட இயந்திரச் சாதனத்தை விற்பவர் பொதுப்பயன் தொழில் நிறுவனமாக இருப்பின், அச் சொத்தின் மதிப்பு 25,000 ரூபாயாகவே கணக்கிடப்படும். 30,000 ரூபாய்க்கு விற்றபோதிலும், வேறுபாட்டுத் தொகை சொத்தின் மதிப்பைப் பாதிப்பதில்லை.

**உண்மையான மதிப்பீட்டுமுறையின் நன்மைகள்**

ஒரு சொத்தின் மதிப்பினைக் கண்டுபிடிப்பதில் பல்வேறு முறைகள் இருப்பினும் உண்மை மதிப்பீட்டுமுறை (Actual cost method) யில் சில நன்மைகள் உள்ளன. அவை வருமாறு :

(1) நடைமுறையிலும், நிருவாகத்திலும் சிக்கலின்றி எளிதாகக் கையாளக் கூடியது.

(2) எளிதானதாக இருக்கும் பொருட்டு, ஒரு நிறுவனத்தின் கணக்கியல் முறைகள் சரிவர வைக்கப்பட்டிருக்கும்.

(3) இதன் விளைவாக, சுலபமாகவும், துரிதமாகவும் எவ்வித ஐயமின்றியும் ஒரு சொத்தின் உண்மையான மதிப்பினை அறிய முடியும்.

(4) ஒரு முறை காணப்பட்ட ஒரு சொத்தின் மதிப்பு அடிக்கடி மாறக் கூடியதன்று. உண்மையான மதிப்பீட்டின்படி காணப்பட்ட ஒரு நிலையான சொத்தின் மதிப்பு நிலையானதாக இருப்பது இம் முறையின் மற்றொரு நன்மையாகும்.

**குறைபாடுகள்**

எத்தகைய கோட்பாடும் முழுதாக ஏற்றுக்கொள்ளப்படுவதில்லை. அவை கடும் விமர்சனத்திற்கு ஆளான பின்னரே ஏற்றுக் கொள்ளப்படுகின்றன. இதுபோன்றே உண்மை மதிப்பீட்டு முறையின் மூலமாக ஒரு சொத்தின் மதிப்பினைக் கணக்கிடுவதிலும் சில குறைபாடுகள் இருப்பதாகக் கூறப்படுகின்றது. அவை பின்வருவனவாம்:

(i) முதலாவதாக, இம் முறையின்படி பொருளாதாரக் கோட்பாடுகள் சரிவரச் சீர்தூக்கப்படுவதில்லை. சான்றாக, பணத்தின் மதிப்பில் அவ்வப்போது ஏற்படுகின்ற மாறுபாடுகளை இம் முறையின்மூலம் நாம் அறிய வாய்ப்பில்லை. பணத்தின் மதிப்பில் ஏற்படும் மாற்றத்தினை, அப் பணத்தினைக் கொண்டு வாங்கப்படும் பொருள்களின் அளவில் ஏற்படுகின்ற மாற்றத்தினைக் கொண்டு அறியலாம். வேறு வகையில் கூறினால், பணத்தின் மதிப்பில் ஏற்படுகின்ற மாறுதலென்பது, அப் பணத்தின் வாங்கக் கூடிய திறனில் (Purchasing power) ஏற்படுகின்ற மாறுதலைக் குறிக்கும் எனலாம். உண்மை மதிப்பீட்டுமுறையின் ஒரு பகுதியான கடந்தகால முறைப்படி ஒரு பொதுப்பயன் தொழிலில் உள்ள சொத்துகளின் மதிப்பை மொத்தமாகக் கணக்கிட முடியவில்லையெனில், அச் சொத்தினைப் பகுதிபகுதியாக மதிப்பீடு செய்து அதன்பின்னர் மொத்த மதிப்பினைக் காணமுடியும். இது தவிர, சிலவகைச் சொத்துகள் ஒரே நேரத்தில் வாங்கப்படாமல், வெவ்வேறு சமயங்களில் வாங்கப்பட்டிருக்கலாம். அவ்வாறு வாங்கப்பட்ட சொத்தின் மதிப்பினைக் காண வெவ்வேறு சமயங்களில் செலுத்தப்பட்டு விலைத்தொகை அனைத்தையும் கூட்டி, அதனையே அச் சொத்தின் மதிப்பாகக் கருதுகிறோம். ஆனால் இம் முறை தவறானது. காரணம், வெவ்வேறு சமயங்களில் வாங்கப்படும் சொத்தின் மதிப்பு வெவ்வேறாகவே இருக்கும். ஏனெனில், பொருளாதாரக் கோட்பாடுகளின்படி பணத்தின் மதிப்பு நிரந்தரமாக இல்லாமல் அடிக்கடி மாறுபடக் கூடியதாக உள்ளது. ஆகவே, ஒரு குறிப்பிட்ட நாளில் குறிப்பிட்ட ஒரு விலை கொடுத்து ஒரு பொருளை வாங்குவோமாயின் அதே பொருளை சில நாள்கள் கழித்து வாங்கும்போது, இவ்விரண்டு கொள்முதலுக்குமிடையே வேறுபாடு இருக்கவே செய்யும். இவ்வேறுபாட்டிற்கான காரணம் பொருளின் விலை மாற்றம் என்பது மட்டுமின்றிப் பணத்தின் மதிப்பில் ஏற்பட்டுள்ள மாற்றமும் ஆகும். சுருங்கக்கூறின் பணத்தின் மதிப்பில் ஏற்படுகின்ற மாற்றம் தொடர்ச்சியானதென்றும், இதன் விளைவாக, பொருளின் மதிப்பிலும் தொடர்ந்து மாற்றம் ஏற்படும் என்றும், அதன் காரண

மாக வெவ்வேறு காலங்களில் வாங்கப்படுகின்ற சொத்துகளின் மதிப்பு வெவ்வேருக அமையும் என்றும் கூறலாம். ஆகவே வெவ்வேறு மதிப்புள்ள சொத்துகளை, கடந்தகால மதிப்பீட்டு முறையின்படி ஒன்ருகக் கூட்டி அதுவே பொதுப்பயன் தொழில் நிறுவனத்திலுள்ள ஒரு சொத்தின் மதிப்பு எனக் கூற இயலாது என்பதும் விளங்கும்.

ஹோப் வழக்கில் ஜஸ்டிஸ் ஜாக்ஸன் வழங்கிய தீர்ப்பு இக் கருத்தை வலியுறுத்தும் வண்ணம் அமைந்துள்ளது.* அத் தீர்ப் பின் விபரம் பின்வருமாறு :

1. பொதுப்பயன் தொழில்களிலுள்ள சொத்துகளின் மதிப்பினைப் பொறுத்தே அவற்றின் கட்டண அடிப்படை அமை கிறதென்பது உண்மை. ஆனல் இச் சொத்துகளின் மதிப்பு பல்வேறு வழிகளில் தீர்மானிக்கப்படுகிறது. ஆகவே, பல வகையான கணக்குகளை, இந் நிறுவனங்கள் தங்களது கணக்குப் பதிவேடுகளில் புதிய வைத்துக்கொள்ள வேண்டியுள்ளது. இந் நிறுவனத்தின் கணக்குப் பதிவியலை நாம் அவ்வாறே ஏற்றுக் கொள்வதையோ மதிப்பதையோ பொறுத்துச் சொத்துகளின் மதிப்பும் தீர்மானிக்கப்படும். கணக்குப் பதிவியல் சிறந்த தொரு விடையாக நமது வினவிற்கு அமையாவிட்டாலும், வேறெந்த வகையிலும் நமது ஐயத்தைப் போக்குமளவிற்கு அதாவது சொத்தின் மதிப்பைத் தெரிவிக்குமளவிற்கு, விடை கிடைக்காத காரணத்தால் இந் நிறுவனங்களின் கணக்குப் பதி வேடுகளிலுள்ள குறிப்புகளையே நாம் மனமார ஏற்றுக்கொள்ள வேண்டியுள்ளது. புள்ளிவிவரங்களாயினும் கணக்குப் பதி வேடுகளிலுள்ள இக் குறிப்புகளே சிறந்ததொரு கருவியாகப் பயன்படுத்தப்படுகிறது.

மேற்கண்ட தீர்ப்பின்படி, ஒரு நிறுவனத்திலுள்ள சொத்து களின் மதிப்பு அந் நிறுவனத்தின் ஏடுகளிலிருந்துதான் கணக்கி டப்பட வேண்டும் என்பதும் இக் கருத்து கடந்தகால மதிப்பீட்டு முறைக்கு ஒத்ததாக இருப்பதும் குறிப்பிடத்தக்கது.

2. இனி உண்மை மதிப்பீட்டு முறைக்கான இரண்டாவது கருத்துரையைப் பார்ப்போம். இதன்படி, பணப்பெருக்கம் (Inflation) அதிகமாகி விலை ஏற்றம் ஏற்படும் காலங்களில், மற்றவை அனைத்தும் மாறுதலுற்று இருக்க, உண்மை மதிப்பீட்டு முறைப்படி அமைந்த கட்டண வீதம், உண்மையில் முறையான

*Justice Jackson's Judgement in Hope's case.

வருவாயினையே முதலீடு செய்வோருக்குத் தருகின்றது, என்பதாகும். அதாவது, பணப் பெருக்கத்தின்போது அனைத்துப் பொருள்களின் விலையும் உயர்ந்துகொண்டே போவது இயல்பு. அந் நிலையில் தீர்மானிக்கப்பட்ட கட்டணவீதம் ஒன்றின்படி, ஒரு தொழிலில் முதலீடு செய்தோருக்கு நல்ல வருவாய் கிடைக்க வழியில்லை என்பது அறியப்பட வேண்டிய கருத்து. இதனைச் சற்றே விளக்கமாகக் காணலாம்.

பொருள்கள் அனைத்தும் மலிவாக, விலைகுறைந்து இருக்கும் வேளையில், பணத்தின் மதிப்பு உயர்வாகவே இருக்கும். அப்போது ஒருவர் தமது சேமிப்புத் தொகையை சொத்துகள் வாங்குவதன்மூலம் முதலீடு செய்கின்றார் எனக் கொள்வோம். பின்னர், காலப்போக்கில் பொருள்களின் விலை மிகவும் உயர்ந்து பணவீக்கம் ஏற்படின் அப்போது பணத்தின் மதிப்புத் தாழ்ந்து போகும். இந் நிலையில், சொத்துகளின் மதிப்புக் கண்டுபிடிக்கப் படவேண்டுமெனக் கொள்வோம். உண்மை மதிப்பீட்டு முறையின் மூலம் ஒரு சொத்தின் மதிப்பு கணக்கிடப்பட்டு, அம் மதிப்பினைப் பொறுத்து முதலீடு செய்தோருக்கு வருவாய் ஏதும் அளிக்கப்படுமேயாயின், அவ் வருவாய் மிகவும் சொற்பமானதாக இருக்கும் என்பது கருத்து. காலப்போக்கில் பொருளாதாரக் கூறுபாடுகளில் ஏற்பட்டுள்ள மாற்றங்களுக்குத் தக்கவாறு, ஒரு நிறுவனத்தைச் சார்ந்த முலதனக்காரர்களுக்கு அளிக்கப்படும் வருவாய்த் தொகையும் மாற்றி அமைக்கப்பட வேண்டும். ஆனால், ஒரு சொத்தின் உண்மையான மதிப்பினைக் கணக்கிட்டுப் பார்க்கையில், சில வருடங்களுக்கு முன்பு குறிப்பிட்ட தொகை செலவிடப்பட்டு ஏற்படுத்தப்பட்ட ஒரு சொத்தின் மதிப்பிற்கு ஈடு செய்யும் வகையில், தற்போது அளிக்கப்படும் வருவாய்த் தொகை அமைவதில்லை என்பது பொதுவான கருத்து.

இச் சிக்கலான கருத்தினைப் பல அறிஞர்கள் ஆராய்ந்துள்ளனர். பணவீக்கத்தின்போது ஏற்படுகின்ற இவ்வேறுபாட்டினை நீக்குவதற்கான வழிகளையும் அவர்கள் தமது ஆலோசனைகளின் மூலம் தந்துள்ளனர். அதன்படி குறிப்பிட்ட ஒரு சொத்தின் உண்மையான மதிப்புக்கு ஏற்றபடி, வருவாய் வீதத்தையும் மாற்றி அமைத்துக்கொள்ளலாம் என்று ஆகிறது. பேராசிரியர் மார்டின் ஜி. கிளேசர் (Martin G. Glaser) என்பார் இக் கொள்கையினை 1927ஆம் ஆண்டில் பரிந்துரைத்தார். இவரைத் தொடர்ந்து இக் கொள்கையினை ஆதரித்தவர்களுள் பேராசிரியர் வில்லியம் இ. மோஷர் (E. Mosher), பின்லா (Finla), ஜி. கிராஃபோர்ட் (G. Crawford) ஆகியோர் ஆவர்.

பணவீக்கத்தின் காரணமாகப் பங்குதாரர்களுக்கு ஏற்படும் இந்த 'நியாயமற்ற தீர்ப்பினை'க் கண்டு மனமிரங்கிய பேராசிரியர் எலியட் ஜோன்ஸ் (Prof. Eliot Jones), மற்றும் ட்ருமன் சி. பைகாம் (Truman C. Bigham) போன்றோர் வேறொரு வழியினைக் கண்டனர். அதன்படி பங்குதாரர்களுக்கு அளிக்கப்படும் வருவாய் வீதம் சிறிது தாராளமாக மாற்றி அமைக்கப்படலாம் என்று கருதப்பட்டது. டாக்டர் ஜான் பாயர் (Dr. John Bauer) என்பார் குறியீட்டு எண்படி (Index number) தீர்மானிக்கப்பட்டு அளிக்கப் படும் வழக்கமான வருவாய்வீதத்தை விடுத்து, சற்றுக் கூடுதலான வருவாய்வீதம் பங்குதாரர்களுக்கு அளிக்கப்பட வேண்டும் என்று கூறுகிறார். பேராசிரியர் இலி. டபிள்யூ. கிளமன்ஸ் (Prof. Eli. W. Clemens) என்பார் "பணத்தினுடைய வாங்கும் சக்திக்கேற்றவாறே வருவாய்வீதங்கள் மாற்றி அமைக் கப்பட வேண்டும்" என்று கருதுகின்றார்.

இவ்வாறு, கூறப்பட்ட கருத்துகளினைத்தையும் தொகுத்து நோக்கின் உண்மை மதிப்பீட்டு முறையின் நன்மைகள் சிலவற் றோடு சில நடைமுறைக் குறைபாடுகளும் உள்ளன என்பதும் புலனாகும்.

**மறுஉற்பத்திச் செலவுமுறை (Reproduction Cost New)**

மறு உற்பத்திச் செலவுமுறை எனப்படுவது ஆங்கிலத்தில் "Reproduction Cost New" என அழைக்கப்பெறும். இம் முறையின்படி முதலில் ஏற்கனவே உருவாக்கப்பட்ட ஒரு சொத்தினை, தற்போதுள்ள விலைப்படி, மறுபடியும் புதிதாக உருவாக்க என்ன செலவாகுமென்று கணக்கிடப்பட்ட தொகையி லிருந்து தேய்மானத் தொகையைக் கழித்ததுபோக எஞ்சியுள்ள தொகையைக் காணவேண்டும். இத்தொகையே ஒரு சொத்தின் மதிப்பாகக் கருதப்படும். இனி, இம் மதிப்பினைக் கொண்டு கட்டண அடிப்படையைக் கணக்கிடுவது எளிதான செயலாகு மல்லவா? இம் முறையினை "மறு உற்பத்திச் செலவில் தேய் மானம் நீக்கிய முறை" (Reproduction Cost New Less Deprecia- tion) என்றும் கூறலாம். ஆங்கிலத்தில் சுருக்கமாக "RCND Method" என்று இதனைக் குறிப்பர். இம் முறை நடைமுறையில் எவ்வாறு செயற்படுத்தப்படுகின்றது என்பதனைப் பின்னர் விரிவாகக் காண்போம். தற்போது இந்த மறுஉற்பத்திச் செலவில் தேய்மானம் நீக்கிய (RCND) முறையின்படி செய்யவேண்டியவை என்ன என்பதை மட்டும் சுருக்கமாகக் காண்போம். அவை வருமாறு:

(1) முதலாவதாகத் தொழில் நிறுவனத்தில் பொதுமக்களின் நன்மைக்காக உபயோகப்படுத்தபடுகின்ற மற்றும் உபயோகப்படுத்த வேண்டிய சொத்துக்களின் மதிப்பினைக் காணவேண்டும்.

(2) தற்சமயம் நிலவுகின்ற சராசரி விலை நிலவரத்தின்படி அச் சொத்தினை மீண்டும் புதிதாக உருவாக்க வேண்டுமாயின் ஆகக்கூடிய செலவு என்னவென்றும் இச் சொத்துக்களுடன் தேவைப்படுகின்ற இதரக் கருவிகளை வாங்குவதற்கான செலவினையும் அறிய வேண்டும்.

(3) மூன்றாவதாக, இச் சொத்துகளின் மதிப்பில் காலப் போக்கில் ஏற்படக்கூடிய தேய்மானச் செலவு என்னவென்பதைக் கணக்கிட்டு அதனைக் குறிப்பிட்ட சொத்தின் மதிப்பிலிருந்து கழித்துவிட வேண்டும்.

(4) இறுதியாக, நடைமுறைச் செலவுக்காக ஏதேனும் முதலீடு தனியாக ஏற்படுத்தப்பட்டிருக்குமேயாயின், அத் தொகையும் சொத்தின் மதிப்புடன் சேர்க்கப்பட வேண்டும்.

சான்றாக,

X — என்பது சொத்துகளின் மதிப்பு என்றும்,

Y — என்பது தற்போதைய விலையின்படி அச் சொத்தினை மீண்டும் உருவாக்க ஆகும் செலவுத் தொகை என்றும்,

D — என்பது தேய்மானச் செலவு என்றும்

Z — என்பது நடைமுறைச் செலவுக்கான முதலீட்டுத் தொகை என்றும் வைத்துக் கொள்வோம்.

கட்டண அடிப்படையைக் கணக்கிட:

$X + Y - D + Z =$ Rate base

$(X + Y + Z) - D =$ Rate base என்ற சமன்பாட்டினை உபயோகிக்கவேண்டும்.

இனி, குறிப்பிட்ட சொத்தின் மதிப்பினைக் காண மற்றொரு எளிய முறையினைப் பார்ப்போம். இம் முறைக்கு "நிலவர உண்மை அடக்க முறை" (Trended Orginal Cost Method) என்று

பெயர். இம் முறையில் பல்வேறு வகையான குறியீட்டு எண்கள் (Index numbers) கையாளப்படுகின்றன. இக் குறியீட்டு எண்களைக் கொண்டு, ஒரு நிறுவனம் குறிப்பிட்ட ஒரு சொத்தினை ஏற்பதற்குச் செய்த முதலீட்டைக் கண்டுபிடித்து அதனை தற்போதைய விலை நிலவரப்படி மாற்றியமைக்க முடியும். இவ்வாறு, மாற்றியமைக்க வேண்டுமாயின் தற்போதைய மதிப்பிற்கும், பழைய மதிப்பிற்குமான குறியீட்டு எண்களைக் கணக்கிட்டு அதற்கிடையே உள்ள விகிதத்தினைக் காணவேண்டும். பின்னர் இவ் விகிதத்தினை, பழைய முதலீட்டுத் தொகையினைக் கொண்டு பெருக்குதல் வேண்டும். இவ்வாறு செய்யின், குறிப்பிட்ட சொத்தின் 'நிலவர உண்மை அடக்க மதிப்பு' என்னவென்பதை அறியலாம்.

| | | | | |
|---|---|---|---|---|
| நிலவர உண்மை மதிப்பு (தற்போது) | = | சொத்து ஏற்படுத்தப்பட்ட வருடத்தில் அதற்கானச் செலவு | × | தற்போதைய வருடத்தின் குறியீட்டு எண் / சொத்து ஏற்படுத்தப்பட்ட வருடத்தின் குறியீட்டு எண். |
| Trended original cost of property unit in current year. | = | Actual Recorded cost of the property unit in years of Installation. | × | Index number of current year / Index number of year of Installation. |

இம் முறையின்படி கணக்கிடுவதால், ஒரு தொழிற்சாலையிலுள்ள பல்வேறுவகையான அல்லது எளிதில் மதிப்பிட முடியாத பொருள்களின் மதிப்பினைக் கண்டறிவதில் ஏற்படுகின்ற செலவும், காலவிரயமும் தவிர்க்கப்படுகின்றன.

நாம் இதுவரை ஆராய்ந்த ம.செ.தே.நீ (RCND) முறையினால் ஏற்படும் நன்மைகளில் சில பின் வருவன: (1) பணத்தின் மதிப்பில் காலப்போக்கில் ஏற்படக்கூடிய மாற்றத்தினையும் கணக்கில் எடுத்துக்கொண்டு அதற்கேற்ப மதிப்பீட்டு முறையினைத் தொடர்கின்றது. இதனால், பொதுப்பயன் தொழில்களின் பங்குதாரர்களுக்குக் கிடைக்கக்கூடிய வருவாய் கூடியவரையில் நிரந்தரமாக்கப்படுகின்றது. (2) ம.செ தே.நீ (RCND) முறையின் படி, எப்போதெல்லாம் குறிப்பிட்ட ஒரு பொருளின் விலையும் இதனை வாங்குவதற்கான கையிருப்பும் அதிகரிக்கின்றதோ

(அல்லது உயருகின்றதோ) அப்போதெல்லாம், நுகர்வோரிட மிருந்து வசூலிக்கப்படும் கட்டணமும் உயர்த்தப்படுகின்றது என்று பார்த்தோம், இதன் விளைவாகப் பொதுப்பயன் தொழில் களில் ஏற்படக் கூடிய, தேவையற்ற அல்லது செயற்கையான தேவை (artificial demand) தடுக்கப்படுகின்றது. ஏனெனில், பொதுப்பயன் தொழில்கள் அளிக்கக்கூடிய பொருள்களோ பணிகளோ குறைவான விலையில் விற்கப்படுவதால்தான் ஏராளமான அளவில் நுகர்வோர் அதனை வாங்கித் துய்க்க எண்ணுவர். இந்தப் பொருள்களின் விலை சிறிது அதிகரிக்குமே யாயின், நுகர்வோரின் எண்ணிக்கை குறைந்துவிடும். சுருங்கக் கூறின் இத் தொழில்களின் கட்டணவீதம் உயரஉயர, இவை தயாரித்து அளிக்கும் பொருள்களுக்கு நுகர்வோரின் எண் ணிக்கை குறைந்து கொண்டே போகும்.

இதனால் ஏற்படும் விளைவு யாது? (1) முதலாவதாக, குறைந்த விலை காரணமாக அதிகரிக்கக்கூடிய நுகர்வோரின் தேவையைச் சமாளிக்கும் பொருட்டு, இப் பொதுப்பயன் தொழில் களின் இயந்திரச் சாதனங்கள் மற்றும் உற்பத்தி சாதனங்களின் எண்ணிக்கை அதிகரிப்பது தவிர்க்கப்படுகின்றது. (2) இரண் டாவதாக, பொருள்களை உற்பத்திச் செய்யச் செலவிடப்படும் இயற்கையான, பொருளாதார மற்றும் நிதிமுதல் போன்ற பொருளாதார வளங்கள் அதிக அளவில் செலவிடப்படுவது தவிர்க்கப்படுகின்றது. மேலும், வீணே இவை இங்குச் செலவிடப் படுவதைக் காட்டிலும் நாட்டின் பொருளாதாரத்தினை வலுப் படுத்த இயங்குகின்ற இடங்களில் அல்லது தொழில் நிறுவனங் களில் இவை நன்முறையில் உபயோகப்படுத்தப்படலாம். (3) மூன்றாவதாகக் குறிப்பிடும் நன்மை, பொதுப்பயன் தொழில் களில் முதலீடு செய்துள்ள பங்குதாரர்களுக்குரியது. பொது வாக, பொதுப்பயன் தொழில் ஒன்றின் கட்டண வீதம் உயர்த்தப் படுமேயானால், இவ்வுயர்வு ஏனைய பிற நிறுவனங்களையும் பாதிக்கும் என்று உறுதியாகக் கூற இயலாது. இத் தொழில் நிறுவனங்கள் அளிக்கின்ற எல்லாப் பொருள்களின் விலையும் ஒன்றையொன்று பின்பற்றி உயர்த்தப்படுவதில்லை. மேலும் ஒரு நிறுவனத்திற்குத்தேவையான நிதிமுதல், இந் நிறுவனம் தயாரித்து அளிக்கின்ற பொருளின் விலையைப் பொறுத்து அமைகின்றது. இதற்கான காரணம் மிகவும் எளிதானது. எந்த ஒரு பொரு ளின் விலை அதிகரித்துக் கொண்டே போகின்றதோ, அப் பொரு ளுக்கு நுகர்வோரின் தேவை அதிகரிக்குமேயாயின், (இவ்வதிக மான விலைப்படி) இந் நிறுவனங்களின் இலாபமீட்டும் தன்மையும் அதிகரிக்கின்றது. அதிக அளவில் இலாபம் ஈட்டக்கூடிய அல்லது ஈட்டுகின்ற வாய்ப்பினைப் பெற்றுள்ள நிறுவனத்திற்குத்

தேவையான நிதியினை (கடனாகை) அளிப்பதில் எவருக்கும் தயக்கம் ஏற்பட வாய்ப்பில்லை. இதனை (RCND) முறை எளிதாக விளக்குகின்றது. நிறைவான கருத்துகளுக்கேற்ற குறைபாடுகளும் கூறப்பட்டால்தான், எந்த ஒரு கொள்கையினையும் நாம் நன்கு அறிந்தவர்களாவோம். அம் முறையில் இதுகாறும் RCND எனப்படும் முறைக்கு எதிராக வழங்கப்பெறும் கருத்துகளை இனிக் காண்போம்.

(1) முதலாவதாக, இம் முறைப்படி ஒரு சொத்தின் மதிப்பினைக் காணுவதில் பலவித நடைமுறைச் சங்கடங்கள் ஏற்படும். பொதுவாக, ஒரு பொதுப்பயன் தொழிலுள்ள சொத்தின் மதிப்பினை ஏற்கனவே கணக்குப் பதிவேடுகளில் குறித்து வைத்திருந்தால் இவ்வேடுகளைப் பார்த்து, வேண்டிய தகவல்களைத் திரட்டிக் கொள்ள முடியும். ஆனால், கணக்குப் பதிவேடுகள் மூலம் ஒரு சொத்தின் மதிப்பினை அறியமுடியாவிட்டால், இச் சொத்தின் பகுதிகளைத் தனித்தனியே மதிப்பீடு செய்து பின்னர் இம் மதிப்புத் தொகை அனைத்தையும் ஒன்றாகக்கூட்டி மொத்த மதிப்பினைக் காண்பது வழக்கம். இவ்வாறு ஓர் சொத்தின் மதிப்பினைக் காணும் முறை நடைமுறைக்கு ஏற்றதேயாயினும் இம்முறையில் சில நடைமுறைச் சிக்கல்கள் உள்ளன. சான்றாக, இம்முறையின்படி மதிப்பீட்டினைச் செய்ய மிகுந்த கால அளவு தேவைப்படும். மேலும், செலவு மிகுதியாக நேரிடும். இவ் விரண்டு சிக்கல்களையும் ஒருவாறு ஒதுக்கிவிட்டுத் தொடர்ந்து இம்முறையின்படி, மதிப்பீட்டினைச் செய்ய முற்படுவோமாயின், நமது முயற்சி முடிவடையும் தருணத்தில் இம் முறை காலத்திற்கு ஒவ்வாதென (out of date) ஒதுக்கித் தள்ளப்படும் அச்சமும் உள்ளது. ஏனெனில், அவ்வப்போது பொருள்களின் விலை மாறிக் கொண்டே (பெரும்பாலும் உயர்ந்துகொண்டே) வருவதால் எந்த ஒரு குறிப்பிட்ட விலையை எடுத்துக் கொண்டாலும், அவ் விலை சில நாள்களுக்குள்ளேயே சந்தை விலைக்கு முரண்பட்டதாக அமைந்துவிடும். ஆகவே, இம் முறையின்படி காலத்தின் துணை கொண்டு, ஒவ்வொரு பகுதியாக மதிப்பினைக் கண்டு, பின்னர் ஒரு சொத்தின் மொத்த மதிப்பினைக் காணும் முறை நடைமுறைக்கு ஏற்றதன்று என்றாகிறது.

(2) இனி, இரண்டாவதும், மிக இன்றியமையாததுமான மாற்றுக் கருத்தினைப் பார்ப்போம். இதன்படி, RCND முறைப்படி கணக்கிடப்படும் ஒரு சொத்தின் மதிப்பு நிச்சயமாகத் தவறானதாக இருக்கும். ஏனெனில், RCND முறைப்படி ஒரு சொத்தின் மதிப்பினைக் காணவேண்டுமாயின் (அதற்கு முன்னர்) பலவிதமான கொள்கை ஏற்புகளைச் (Assumptions) செய்தாக

வேண்டியுள்ளது. சான்ருக, ஒரு சொத்தினை உருவாக்க ஒப்பந்தம் செய்துள்ளோரின் இலாபத்தொகை, தற்போது மீண்டும் உருவாக்க முடியாத, ஆனல், ஏற்கெனவே உருவாக்கப் பட்ட ஒரு சொத்தின் இன்றைய மதிப்புப் போன்றவை தோராய மாக ஏற்றுக் கொள்ளப்படுகின்றன. ஆனல், இம் மதிப்பீடுகள் சரியானவையா என்பது ஐயத்திற்குரியதே. ஏனெனில், சொத் துக்களை மதிப்பிடும் ஆற்றல் பெற்ற பொறியியல் வல்லுநர்களைக் கொண்டு நாம் ஒரு சொத்தின் மதிப்பினைக் காண முற்படுவோ மாயின், பல்வேறு பொறியியல் வல்லுநர்களும், பலவகையான மதிப்பீடுகளைச் செய்திருப்பார்கள் என்றும், அவர்களின் மதிப் பீட்டுத் தொகை ஐயத்திற்கிடமின்றி, ஒன்றிற்கொன்று முரண் பட்டதாக அமைந்திருக்குமென்றும் கூறலாம். ஒரே நிறுவனத் தையுடைய குறிப்பிட்ட ஒரே ஒரு சொத்தின் மதிப்பு பல்வகை யாகக் கணக்கிடப்படுமேயாயின், அவ்வாறு கணக்கிட உபயோ கிக்கும் முறை ஐயத்திற்குரியதாகவும், நடைமுறைக்கு ஒவ்வாத தாயும் எண்ணப்படுவதில் வியப்பில்லையல்லவா?

(3) பொதுப்பயன் தொழில்களின் மூலதன அமைப்பு, (Capital structure) RCND முறைப்படி சரியானதாகத் தீர்மானிக் கப்படவில்லை, என்பது மூன்ருவது கருத்தாகக் குறிப்பிடத் தக்கது. அதாவது, எந்த ஒரு பொதுப்பயன் தொழிலின் முதலீட்டு அமைப்பிலும், நிலையான வருவாயினைத் தரக்கூடிய பங்குகள் அதிகமாகவும் மாறுபட்ட (அல்லது மாறக்கூடிய) வருவாயினைத் தரக்கூடிய சாதாரணப் பங்குகள் மிகச் சொற்பமாயும் இடம் பெற்றிருக்கும். பொருள்களின் விலை உயரும்போது RCND முறைப்படி அமைக்கப்பட்ட கட்டண அடிப்படையின் காரண மாகக் கிடைக்கக்கூடிய அதிகமான அல்லது உரியான வருவாய் ஒரு பொதுப்பயன் தொழிலின் பொதுப் பங்குதாரர்களுக்குப் பகிர்ந்தளிக்கப்படுவது இயற்கை. ஆயினும், இப்பொருள்களின் விலை வீழ்ச்சியடையும் தருணத்தில், இந் நிறுவனத்தின் நிதி நிலை யையே வீழ்த்துமளவிற்குக் கிறைவான வருவாய் மட்டுமே கிடைக்கும் என்பதில்லை. ஆகவே, ஒரு பொதுப்பயன் தொழிலின் மூலதன அமைப்பு, RCND முறைப்படிச் சரிவரத் தீர்மானிக்கப் படுவதில்லை என்பது கருத்து.

(4) அடுத்து, இம்முறையின்படி, ஒரு குறிப்பிட்ட சொத்தினை மீண்டும் புதிதாக உருவாக்க ஆகக்கூடிய செலவுத்தொகையினைக் காண்பதில் ஏற்படும் சிக்கல்களையும் காண்போம். இம் முறையின் படி, ஏற்கனவே ஏற்படுத்தப்பட்ட சொத்தினை மீண்டும் உருவாக்க என்ன செலவாகுமென்று கண்டுபிடித்த பின்னரே,

கட்டண அடிப்படையைத் தீர்மானிக்க முடியும். ஆனால், சந்தையில் விற்கக்கூடிய பொருள்களின் விலை வெகுவிரைவில் உயர்வது அல்லது குறைவதுபோல, பொதுப்பயன் தொழிலொன்றினைச் சார்ந்த சொத்தினை மறுபடியும் உண்டாக்க ஆகக்கூடிய செலவும் விரைவாகவும், அதே விகிதத்திலும் மாறும் எனக் கூற இயலாது. மேலும், இத் தொழில்களிலிருந்து கிடைக்கக்கூடிய வருவாய் மிகச் சொற்பமானதாகவோ போதுமானதாக அல்லாமலோ இருக்க வாய்ப்பில்லை. ஏனெனில், 'ஒரு பொதுப்பயன் தொழிலுக்குக் கிடைக்கக் கூடிய வருவாய், பொதுமக்கள் அந் நிறுவனத்தின்மீது அதிகமான அளவு நம்பிக்கையை வைக்கும்வண்ணம் அமைய வேண்டுமெனக்' கருதப்படுவதால், போதுமான அல்லது தேவைக்குத்* தகுந்த வருவாயினையே பொதுப்பயன் தொழில்கள் ஈட்டுகின்றன என்பதும் குறிப்பிடத்தக்கதாகும்.

(5) RCND முறையின் இறுதியான குறைபாட்டினை இனிக் காண்போம். இம் முறையின்படி, சொத்துகளின் மதிப்புக் கணக்கிடப்படுமென்று அறிந்தோம். இவ்வாறு மதிப்பீடு செய்யும்போது புத்தம்புதிய இயந்திரங்களை மட்டுமன்றிப் பழைய இயந்திரச் சாதனங்களையும் புதிதாக உருவாக்கி அவற்றை மதிப்பிடுவது இயல்பு. ஆயினும், மிகவும் பழமையான காலத்திற்கொவ்வாத (Obsolete) இயந்திரங்களையும் மீண்டும் புதியதாக உருவாக்கி அவற்றின் மதிப்பினைக் காண விழைதலில் பலனேதுமில்லை. ஏனெனில், தொழில்நுட்பக்கலை மிகவும் வளர்ச்சியுற்றுவிட்ட இந் நாளில் பழைய மற்றும் காலத்தால் புறக்கணிக்கப்பட்ட இயந்திரச் சாதனங்களை விடுத்து, அவற்றிற்குப் பதிலாக வேறு புதிய இயந்திரங்களைக் கண்டுபிடிக்கும் வல்லமை தோன்றியுள்ளது. ஆகவே, RCND முறைப்படி, பழைய இயந்திரச் சாதனங்களையும் மீண்டும் புதியதாக, இன்றைய சராசரி விலைப்படி உருவாக்குவது தேவையற்றதாகும். எனினும், இவ்வாறு வேண்டிய மற்றும் வேண்டாத, புதிய மற்றும் பழைய இயந்திரச் சாதனங்களனைத்தையும், எவ்வித வேறுபாடுமின்றி, ஒன்றாகவே மதிப்பீடு செய்வதென்பது RCND முறையில் மட்டுமன்றி எல்லாவித மதிப்பீட்டு முறைகளிலும் உண்டு என்பதையும் நாம் அறிதல்வேண்டும்.

RCND முறை சிறந்தவொரு முறையென்ற கருத்தில் மாறுபாடு எதுவும் எழ வாய்ப்பில்லை. இம் முறையில் ஒரு சில மாற்றங்கள் செய்யப்படின் மிகச் சிறந்ததாக இம் முறை விளங்குமென்பதில் ஐயமில்லை. சான்றாக, அமெரிக்க நாட்டின் ஒஹியோ

* Bluefield Water Works & Improvement Co. *vs*. Public Service Commissions 262, 1923.

மாநிலத்திலுள்ள பொதுப்பயன் தொழில்களின் ஒழுங்காற்றுக் குழு (Regulatory Commission) RCND முறையைக் காலத்திற் கேற்றதாகச் செய்யவேண்டுமென்ற விருப்பத்தினைத் தெரிவித் துள்ளது. குறிப்பாக, இரண்டாம் உலகப் போருக்குப் பின்னர் RCND முறையினை உபயோகித்துப் பொதுப்பயன் தொழில் களின் சொத்துகளின் மதிப்பினைக் கண்டுபிடித்து, அதன்மூலம் இத் தொழில்களின் கட்டண அடிப்படையைக் கணக்கிடவே பலரும் முயன்றனர். ஒரு சொத்தினை முழுதாக மதிப்பீடு செய்ய முடியாவிட்டால், அச் சொத்தின் பல்வேறு பாகங்களை மதிப்பீடு செய்வது இம் முறையின் இயல்பு. ஆயினும், காலத்தை யொட்டி மாற்றம் செய்யப்பட்ட RCND முறையின்படி, இத் தகைய சிக்கல்கள் ஏதும் எழுவதில்லை. இவ் வுண்மை ஒஹியோ மாநிலத்திலுள்ள தொலைபேசி நிறுவனங்களில் RCND முறை வெற்றிகரமாக உபயோகிக்கப்பட்டதிலிருந்து தெரியவருகின்றது.

**நியாயமான மதிப்பு (Fair Value)**

உண்மையான மதிப்பீட்டு முறையிலும், (Actual Cost Method) மறு உற்பத்திச் செலவில் தேய்மானம் நீக்கிய முறை யின்படியும் (ம. செ. தே. நீ. அல்லது RCND) பொதுப்பயன் தொழிலொன்றின் சொத்துகளை மதிப்பீடு செய்து, அதனைப் பொறுத்துக் கட்டண அடிப்படையை அமைப்பதுபற்றி இதுகாறும் விரிவாகக் காணப்பட்டது. ஆயினும், இவ்விரண்டு முறைகளைப் பற்றியும் வேறுபட்ட கருத்துகள் இருந்தவண்ணம் இருப்பதால் எம்முறை சிறந்ததெனத் தீர்மானிக்க இயலவில்லை. இவ்விரண்டு முறைகளில் ஒன்றினால் நுகர்வோருக்கும், மற்றொன்றினால் முதலீடு செய்தோருக்கும் பக்கப் பலன் ஏற்பட வாய்ப்புள்ளது. ஆகவே, ஒரு சாரார் மற்றொரு சாராருக்கு அதிக அளவுப் பயனைத் தர விரும்பாத காரணத்தால் இவ்விரண்டு முறைகளுமே அனைவ ராலும் ஏற்றுக்கொள்ளப்பட்டும், அதே சமயம் மறுக்கப்பட்டும் உள்ளன. இக் குறையினைப் போக்க வேண்டுமாயின் ஒரு சொத்தின் நியாயமான மதிப்பு என்னவென்பதைக் காண வேண்டும். இதனைக் காணக் கையாளப்படும் முறையே 'நியாயமான மதிப்பீட்டு முறை' (Fair Value Method) எனப் படும்.

நியாயமான மதிப்பீட்டு முறை எனப்படுவது முதன்முதலாக ஸ்மித் *vs*. ஏம்ஸ் (Smyth *vs*. Ames) என்னும் வழக்கின்மூலம் அறிமுகப்படுத்தப்பட்டது. இம் முறையின்படி, தேய்மானம் செய்யப்பட்டபின் ஒரு சொத்தின் உண்மையான மதிப்பு, மறு உற்பத்தி செய்யப்பட்ட சொத்தின் (தேய்மானம் நீக்கியதுபோகக்

காணப்பட்ட) மதிப்பு ஆகிய இரண்டு மதிப்புகளையுமே ஒன்ருகக் கணக்கிற்கு எடுத்துக்கொண்டு, அதன் பின்னர் இச் சொத்தின் நியாயமான மதிப்புக் காணப்படுகின்றது. மேற்குறிப்பிட்ட இரண்டுவித மதிப்புகளோடும் ஏனைய உபரிச் செலவுகள் ஏதும் இருக்குமேயாயின் அவையும் சேர்க்கப்படும். பின்னர், உண்மையான மதிப்பீட்டு முறையின் இன்றியமையாமை எத்தனை விழுக்காடு என்பதனை, ம.செ.தே.நீ. (RCND) முறையின் இன்றியமையாமை எத்தனை விழுக்காடு என்பதனை நாம் கண்டறிய வேண்டும். இதன் பின்னர்க் குறிப்பிட்ட ஒரு சொத்தின் மதிப்பு எளிதாகத்தெரிந்துவிடுமாகையால், இப் பொதுப்பயன் தொழில் நிறுவனத்தின் கட்டண அடிப்படையை அமைப்பதில் சிக்கல் ஏதும் ஏற்பட வாய்ப்பில்லை. ஆனல், இவ் விரண்டு முறைகளின் இன்றியமையாமையைத் தீர்மானிப்பதில் சற்று விழிப்புடன் இருத்தல் அவசியமாகிறது. மேலும், ஒருவரின் கருத்துப்படியே மற்றவரின் கருத்தும் இருக்க வேண்டுவதில்லையாகையால் சொத்துகளின் மதிப்பீட்டிலும், வேறுபாடு இருக்கவே செய்யும். சில நிறுவனங்கள் உண்மையான மதிப்பிற்கு 30 விழுக்காடுகளும், ம.செ.தே நீ. மதிப்பிற்கு 70 விழுக்காடுகளும் அளிக்கலாம். மற்றும் சில நிறுவனங்கள் இவ்விரண்டு மதிப்பீடுகளுக்குமே தலா 50 விழுக்காடுகளை அளிக்க முன்வரலாம்.* சுருக்கக் கூறின், நுகர்வோருக்கும், முதலீடு செய்தோருக்குமிடையே குறுகிய கால அளவிலே ஒரு சொத்தின் மதிப்பீட்டு முறைபற்றி ஏற்படக் கூடிய கருத்து வேற்றுமைகளை அறவே நீக்கும் வண்ணம் 'நியாயமான மதிப்பீட்டு முறை' திகழ்கின்றது எனலாம். ஏனெனில், நீண்ட கால அளவில் இக் கருத்து வேறுபாடுகள் தாமாகவே மறைந்துவிடக் கூடியனவாகும்.

உண்மையான மதிப்பீட்டு முறையின்படி காணப்பட்ட மதிப்பும் முற்றிலும் சரியானதாக இருக்க வாய்ப்பில்லை என்பதால் 'நியாயமான முறைப்படி' மதிப்பீடு செய்யப்பட்டது. இந் நியாயமான மதிப்பீடு முற்றிலும் பிழையிலிருந்து விடுபட்டதாவென நோக்குவோமாயின், இல்லை என்றே விடையிறுக்க வேண்டியுள்ளது. மேலும், இம் முறையின் மூலம் காணப்படும் மிக அதிகமான மற்றும் மிகக் குறைவான மதிப்புகளைப் பொறுத்துத் தான், இந் நியாயமான மதிப்பீட்டு முறையின் வலிமை அடங்கியுள்ளது. சமுதாயத்தில் அன்ருடம் நிகழக்கூடிய பல்வகையான செயல்களைக் கொண்டுதான், மக்களாட்சி முறையின் (Democratic)படி இந் நியாயமான மதிப்பீட்டு முறை செவ்வனே செயற்படுத்தப்படுகின்றது. இருப்பினும் ஒரு நிறுவனத்தின் கொள்

*Minnesota Commission—50% : 50%

கையை நிருணயிப்போர் (Policy Makers) பெரும்பாலும் இம் முறையினல் நன்மை பெறுவதைக் காட்டிலும், குழப்பமடைகின்றனர் என்றே கொள்ளவேண்டும். இந் நியாயமான மதிப்பீட்டு முறையின்மூலம் காணப்படும் ஒரு சொத்தின் மதிப்பு ஒன்ருக இன்றிப் பல்வேருக இருப்பதால், இதனைப் பொருளாதாரக் கூற்றுப்படி குறிப்பிட்டுச் சொல்ல இயலாது.

## III. கட்டண அடிப்படையும் நீதிமன்றத் தீர்ப்புகளும்

பொதுப்பயன் தொழில் ஒன்றின் கட்டண அடிப்படையைத் தீர்மானிக்க, அத் தொழிலின் பல்வேறு வகையான சொத்துகளையும் மதிப்பிடுதல் மரபு. அவ்வகையில் குறிப்பிட்ட நிறுவனத்தின் சொத்துகளை மதிப்பிட எம் முறையினைக் கையாள வேண்டும் என்ற வினு எழுகின்றது. இதற்கு விடைகாணும் நோக்கில் நீதிமன்றங்களின் தீர்ப்புகளையும் ஆராய்தல் நன்மை பயக்கும்.

*1898*ஆம் ஆண்டின் ஸ்மித் *vs.* ஏம்ஸ் (Smyth *vs.* Ames) என்னும் பிரபலமான வழக்கிற்குப் பின்னர், சுமார் நாற்பது வருடங்களுக்குக் கட்டண அடிப்படையைத் தீர்மானிக்கும் முறைகள்பற்றி உலகிலுள்ள பல நாட்டு நீதிமன்றங்களும் கவனம் செலுத்த ஆரம்பித்தன. குறிப்பாக, பொதுப்பயன் தொழில்களை முறைப்படுத்தும் குழுக்களைப் பெருவாரியாகப் பெற்றிருந்த அமெரிக்க நாட்டின் தலைமை நீதிமன்றம் இத் தொழில் நிறுவனங்களின் கட்டண அடிப்படை முறைகள்மீது பலவிதமான கட்டுப்பாடுகளை விதித்திருந்தது. இருப்பினும், நியாயமானதொரு கட்டண அடிப்படையைக் காண, RCND முறைதான் இந் நீதிமன்றங்களால் பெரிதும் விரும்பப்பட்டது. இவற்றைத் தவிர Natural Gas Pipeline Co. (*1942*) மற்றும் Hope National Gas Co. (*1944*) என்னும் இரண்டு பெரும் வழக்குகளின் தீர்ப்பில், ஒரு பொதுப்பயன் தொழில் நிறுவனத்தின் சொத்துகளை மதிப்பிடுவதில் எந்த ஒரு தனிப்பட்ட முறையையோ பல்வேறு முறைகளின் கூட்டமைப்பினையோ பின்பற்ற வேண்டிய அவசியமில்லை எனத் தலைமை நீதிமன்றம் கருதியது. இதன் விளைவாக, நீதிமன்றங்களின் தீர்ப்புகளைப் பொறுத்துக் கட்டண அடிப்படையைத் தீர்மானிக்கும் வழக்கம் நீங்கி ஒவ்வொரு தொழிலிலும் ஏற்படுகின்ற நிருவாகச் சிக்கல்களைப் பொறுத்து எந்த முறை சிறந்ததாகவும், ஏற்றதாகவும் இருக்கின்றதோ அதனையே ஏற்றுக்கொள்ளும் வழக்கம் ஏற்பட்டது. இதனைப் பின்வரும் சான்றுகளின் மூலம் காணலாம்.

**அ. நீதிமன்றத் துணைக்காலம் (Judicial phase)**

(1) நாக்ஸ்வில் *vs.* நாக்ஸ்வில் வாட்டர் கம்பெனி (Knoxville *vs.* Knoxville Water Co.) என்னும் வழக்கின்மூலம், கட்டண அடிப்படையைத் தீர்மானிப்பதில் தேய்மானச் செலவின் இன்றியமையாமை வலியுறுத்தப்பட்டது. ஏனெனில், இதற்கு முன்னர்க் காணப்பட்ட ஸ்மித் *vs.* ஏம்ஸ் (Smyth *vs.* Ames) வழக்கில் தேய்மானச் செலவுபற்றி ஏதும் கூறப்படவில்லை, ஆகவே, RCND முறையின்படி, ஒரு பொதுப்பயன் தொழிலின் சொத்துகளை மதிப்பிடும்போது ஏற்கெனவே கூடியுள்ள (accrued) தேய்மானத் தொகையினை இச் சொத்தின் மொத்த மதிப்பிலிருந்து கழித்துவிடவேண்டுமென்று இவ் வழக்கில் வலியுறுத்தப்பட்டது. இதன் நோக்கம், ஒரு குறிப்பிட்ட தேதியில், நிறுவனத்திலுள்ள சொத்துகள் முற்றிலும் புதியவை என்ற கருத்தினை ஏற்படுத்தவேயாகும்.

(2) சான் டியாகோ லாண்ட் அண்ட் கம்பெனி (San Diego Land and Co.) என்னும் இவ் வழக்கில் சொத்துகளின் மதிப்பீட்டு முறை பற்றியும், சொத்துகளிலிருந்து கிடைக்க வேண்டிய வருவாய்வீதம் பற்றியும் ஆராயப்பட்டது. அதாவது, ஒரு பொதுப்பயன் தொழிலின் கட்டணவீதம் அத் தொழில் நிறுவனத்தைச் சார்ந்த பங்குதாரர்கள் மற்றும் முதலீடு செய்தோருக்கு நியாயமானதொரு வருவாயை அளிக்கும் வண்ணம், நிருணயிக்கப்படவேண்டும். இக் கட்டண வீதம், தொழில் நிறுவனத்திலுள்ள சொத்துகளின் மதிப்பைப் பொறுத்தது என்பதால், இச் சொத்துகளுக்கு எவ்வித மதிப்பினை அளிப்பது என்ற வினா எழும். இதற்கு விடையாகக் கட்டணவீதத்தினை எந்தத் தேதியில் நிருணயிக்கிறார்களோ, அன்றைய தேதியில் உள்ளவாறு சொத்துகளின் மதிப்பினைக் காணவேண்டும் என்று கூறலாம். சில சமயங்களில் சுமார் பத்து அல்லது பதினைந்து வருடங்களுக்கு இச் சொத்துகளின் மதிப்பில் மாற்றம் ஏதும் காணப்படாவிட்டால், அவை குறைவாக மதிப்பிடப்படும் அச்சமும், எழ வாய்ப்புள்ளது. இத்தகைய தேவையற்ற அச்சத்தினைப் போக்கவேண்டுமாயின், RCND முறையினைப் பின்பற்றி, இச் சொத்துகளை மதிப்பீடு செய்து அதன் பின்னர், கட்டண விகிதத்தினை நிருணயிக்கலாம், என்று இவ் வழக்கின் தீர்ப்புக் கூறுகின்றது.

(3) மெக்கர்டில் *vs.* இண்டியானாபோலிஸ் வாட்டர் கம்பெனி (MeCardile *vs.* Indianapolis Water Co.) என்னும் வழக்கில்

கட்டண அடிப்படையைத் தீர்மானிப்பதில் மறு உற்பத்திச் செலவின் இன்றியமையாமை வலியுறுத்தப்பட்டது.

(4) Bluefield case.

(5) Hope Natural Gas Co.

(6) West *vs.* Chesa peahe & Potomae Telephone Co.

(7) Los Angels Gas and Electric Co.

(8) Minnesota Rate Cases.

இவ்வாறு மேற்குறிப்பிட்ட வழக்குகளிலும் கட்டண அடிப்படை எங்ஙனம் நிருணயிக்கப்படுகின்றதென்ற வினாவிற்குத் தீர்ப்புகளின்வாயிலாக விடையளிக்கப்பட்டது. இத் தீர்ப்புகளின் துணைகொண்டு, பொதுப்பயன் தொழில் நிறுவனங்கள் தங்களது கட்டணவிதத்தினை அமைத்துக்கொண்டன.

## ஆ. நிருவாகத் துணைக் காலம் (Administrative phase)

நீதி மன்றங்களின் துணைகொண்டு கட்டண அடிப்படையை அமைத்துக்கொண்ட வழக்கம் நீங்கி, ஒவ்வொரு நிறுவனத்திலும் ஏற்படுகின்ற நிருவாகச் சிக்கல்களைப் பொறுத்துக் கட்டண அடிப்படையைத் தீர்மானிக்கும் வழக்கம் பின்னுளில் எவ்வாறு ஏற்பட்டது என்பதனைப் பின்வரும் வழக்குகள்மூலம் காணலாம். முதன்முதலாக 1942ஆம் வருடத்தில் அமெரிக்க நாட்டின் தலைமை நீதிமன்றம், பெடரல் பவர் கமிஷன் *vs.* நேச்சுரல் காஸ் கமிஷன் கம்பெனி (Federal Power Commission *vs.* Natural Gas Pipeline Commission) என்னும் வழக்கில், பொதுப்பயன் தொழில்களின் கட்டண அடிப்படையைத் தீர்மானிப்பதில் குறிப்பிட்ட ஒரு முறையினையோ இம் முறைகளின் மொத்த வடிவத்தையோ பின்பற்ற வேண்டிய அவசியமில்லை என்றும், ஒவ்வொரு நிறுவனத்திலும் ஏற்படுகின்ற நிருவாகச் சிக்கல்கள் தனித்தனியானவை என்றும் ஆகையால் அச் சிக்கல்களின் தன்மையைப் பொறுத்துக் கட்டண அடிப்படையைத் தீர்மானிக்கும் முறையை அமைத்துக் கொள்ளலாம் என்றும் தீர்ப்பு வழங்கப்பட்டது.

'நேச்சுரல் காஸ் பைப்லைன் கமிஷன்' வழக்கின்மூலமாக, நீதிமன்றங்களின் தீர்ப்புகளை முற்றிலும் நம்பியிருக்கும் வழக்கத்திற்கு ஒரு முடிவு கட்டப்பட்டது. மேலும், பல புதிய மாற்றங்களும் இவ் வழக்கின் மூலமாக, அறிமுகப்படுத்தப்பட்டன. அவற்றுள் இன்றியமையாத மூன்றினைமட்டும் ஈண்டுக் காண்போம்.

(1) இவ் வழக்கு நீதிமன்றத்திற்கு வருவதற்கு முன்னல் ஒரு பொதுப்பயன் தொழிலினுடைய சொத்துகளை மதிப்பீடு செய்யக் கடைப்பிடிக்க வேண்டிய விதிமுறைகள் அனைத்தையும் இவ் வழக்குத் தள்ளுபடி செய்துவிட்டது.

(2) நீதிமன்றங்களின் துணையையே பெரிதும் நாடி, அத் துணையைக்கொண்டு சொத்துகளை மதிப்பிடும் முறை இவ் வழக்கின்மூலம் ஒழிக்கப்பட்டது. அதற்குப் பதிலாக அன்றாட நிருவாகத் துறையினில் ஏற்படுகின்ற சிக்கல்களைத் தீர்க்கும் வண்ணம் மதிப்பீட்டு முறைகள் அமையவேண்டும் என்று இவ் வழக்கின் தீர்ப்புக் கூறுகின்றது.

(3) மூன்ருவதாக, பின்னுளில் ஏற்பட்ட ஹோப் நேச்சுரல் காஸ் கம்பெனி (Hope Natural Gas Co.) வாயிலாக 'இறுதி முடிவுக் கொள்கை' (End Result Doctrine) என்ற ஒன்றினை அறியும் வாய்ப்பு ஏற்பட்டது.

**இறுதிமுடிவுக் கொள்கை என்பது என்ன?**

ஒரு பொதுப்பயன் தொழிலுக்கென விதிக்கப்படும் கட்டண அடிப்படை எந்தமுறையில் தீர்மானிக்கப்படுகின்றது என்பது முக்கியமன்று. ஆனல், விதிக்கப்பட்ட கட்டண அடிப்படையின் காரணமாக இத் தொழில் நிறுவனத்தில் எத்தகைய மாற்றங்கள் ஏற்பட்டுள்ளன என்பதையே நாம் கவனிக்க வேண்டும். இதனையே, 'இறுதி முடிவுக் கொள்கை' வலியுறுத்துகின்றது.

ஒரு நிறுவனம் எத்தகைய முறையைப் பின்பற்றினும், அம் முறையின்வழியே கட்டண அடிப்படை தீர்மானிக்கப்படுகின்றது. இக் கட்டண அடிப்படை எத்தன்மையதாக இருப்பினும், நிறுவனத்தின் செலவினங்களைச் சரிக்கட்டும் வகையிலும், முதலீடு செய்தோருக்குக் குறைந்தபட்ச வருவாயினை அளிக்கும் வகையிலும், இலாபத்தினைத் தரக் கூடியதாகவும் இருக்க வேண்டும். இவற்றுள் முதலீடு செய்தோருக்கு அளிக்கப்படும் வருவாய் வீதம் எந்த அளவுக்கு இருக்கவேண்டும் என்ற வினு எழலாம். குறிப்பிட்ட தொழில் நிறுவனத்திலுள்ளதைப் போலவே சிக்கல்களையும், ஆபத்துகளையும் கொண்ட பிற தொழில் நிறுவனங்களில் முதலீடு செய்தோருக்குக் கிடைக்கக்கூடிய வருவாய்க்குச் சமமாக இத் தொழில் நிறுவனத்திலும் கிடைக்க வேண்டும். இரண்டாவதாக ஒரு நிறுவனத்தின் நன்மதிப்பும், கடனீட்டும் திறனும் அதனுடைய இலாப அளவினைப் பொறுத்து இருப்ப

தால் இவ் விரண்டும் குறையாத வண்ணம் வருவாய் அமைய வேண்டும். மேற்கண்ட இரண்டு குறிக்கோள்களையும் நிறைவேற்றும் ஒரு கட்டண அடிப்படை அமையுமேயானல், அஃது எந்த முறையின் வாயிலாக அமைக்கப்பட்டது என்பதனை நாம் அறிய வேண்டுவதில்லை. சுருங்கக் கூறின், ஒரு பொதுப்பயன் தொழில் நிறுவனத்தின் கட்டண அடிப்படை சிலவகைக் குறிக்கோள்களைத் தன்னடக்கி அமைக்கப்படுகின்றது என்றும், இவை நிறைவேற்றப் பட்டுவிட்டனவா இல்லையா என்பது மட்டும் கவனிக்கப்பட வேண்டுமென்றும் கூறலாம். மேலும், இம் முடிவுதான் கவனிக்கப் பட வேண்டுமே தவிர, அது எம் முறையின் விளைவாக ஏற்பட்டது என்பது தேவையில்லை என்ற கருத்தும் ஏற்புடையது. மேற் கண்ட இரண்டு கருத்துகளையுமே 'இறுதிமுடிவுக் கொள்கை' கூறுகின்றது.

## IV. நடைமுறை முதல் ஒதுக்கீடு (Provision of Working Capital)

ஒரு தொழிலின் கட்டண அடிப்படையைத் தீர்மானிக்கும் பொருட்டு, அத் தொழிலிலுள்ள சொத்துகளின் (மதிப்பீடு செய்யும் முறை எத்தகையதாக இருப்பினும்) மதிப்பினைக் காண்பது இயல்பு. இச் சொத்துகளின் மதிப்புத் தொகையுடன், அந் நிறுவனத்தின் 'நடைமுறை முதல்' (Working Capital) தொகையினையும் சேர்த்துக்கொள்ளுதல் வேண்டும். 'நடைமுறை முதல்' என்பதுபற்றி ஏற்கெனவே நாம் ஓரளவு அறிந்திருப்பினும், தற்சமயம் அதனை மீண்டும் நினைவுபடுத்திக் கொள்வது நன்மை பயக்கும். எந்த ஒரு தொழிலையும் ஆரம் பித்து நிலைபெற அதனை நடத்துவதற்குத் தேவையான முதல் 'நிலை முதல்' (Fixed-Capital) என்று கூறப்படும். அதே தொழி லின் அன்றாடச் செலவுகளைச் சரிக்கட்டவும், சிலவகை நடைமுறை அல்லது நிருவாகச் செலவுகளைச் செய்யவும் தேவைப்படுகின்ற முதல் 'நடைமுறை முதல்' என்று கூறப்படும்.

ஒரு தொழில் நிறுவனம் தான் வழங்குகின்ற பொருள்களுக் கான விலையைத் (கட்டணத்தை) தீர்மானிக்கும் முன்னர், அப் பொருளின் உற்பத்திச் செலவினை நன்கு கணக்கிட வேண்டும். உற்பத்திச் செலவு என்பது, அப் பொருளினைத் தயாரிக்கச் செல விடப்பட்ட கச்சாப் பொருள்களின் மதிப்பு, மின்சாரச் செலவு போன்றவற்றை மட்டும் குறிப்பதன்று. அன்றாட நிறுவனத்தைச் செவ்வனே செய்யும் பொருட்டுச் செலவிடப்பட்ட நடைமுறைச் செலவுத் தொகையும், உற்பத்திச் செலவுடன் சேர்க்கப்பட்டால் தான், அத் தொழில் நிறுவனத்தின் கட்டண அடிப்படை சரியாக

அமையும். ஆகவே, கட்டண அடிபபடையைத் தீர்மானிக்கும் பொருட்டு வழக்கம்போல் நிறுவனத்திலுள்ள சொத்துகளின் மதிப்பினைக் கணக்கிட்ட பின்னர், மேற்கூறிய நடைமுறைச் செலவு களையும் அதனோடு சேர்த்துக்கொள்ள வேண்டும் என்ற கருத்து இங்கு வலியுறுத்தப்படுகின்றது.

நடைமுறை முதல் எவ்விதத்தில் வைக்கப்பட்டிருக்க வேண்டும்—பணவடிவிலா அன்றி, பொருள்களின் வடிவிலா என்ற ஐயப்பாடு ஒருவருக்கு எழலாம். நடைமுறை முதல் பணமாகவும் பொருள்களின் வடிவிலும், இன்னபிற சொத்துகளின் வடிவிலும் வைக்கப்பட்டிருக்கலாம். எப்படி வைக்கப்பட்டிருப்பினும் இந் நடைமுறை முதல்தொகை, ஒரு நிறுவனத்தை நல்லமுறையிலும் பொருளாதாரச் செறிவுடனும் நடத்துவதற்குப் போதுமானதாக இருத்தல் அவசியம். இனி நடைமுறை முதல் தொகையின் அளவு என்னவென்பதுபற்றிப் பார்ப்போம். பொதுப்பயன் தொழில் நிறுவனம் ஒன்று பொருள்களைத் தயாரித்து அளிக்க எடுத்துக்கொள்ளும் கால அளவினையும் இப் பொருள்களை விற்று, விற்பனைத் தொகையினைப் பெறும் வரை உள்ள கால இடைவெளி யையும் பொறுத்தே, நடைமுறை முதல் தொகையின் அளவு தீர்மானிக்கப்படுகிறது. இக் கால இடைவெளி நீண்டதாக இருப்பின், நடைமுறை முதலின் அளவு அதிகமாகவும், குறை வாக இருப்பின், தொகையின் அளவு குறைவாகவும் இருக்கும்.

சிலவகை முறைகளைக் கையாளுவதன் மூலம், ஒரு நிறுவனத் திற்குத் தேவையான நடைமுறை முதலின் அளவினைக் கணக்கிட முடியும். அமெரிக்க நாட்டின் பெடரல் பவர் கமிஷனின் (Federal Power Commission of America) ஆலோசனைப்படி, ஒரு நிறுவ னத்திற்குத் தேவையான மொத்த நடைமுறை முதலைக் கீழ்க்கண்ட வாறு கணக்கிட முடியும் :

(1) ரொக்கமாக வைக்கப்படவேண்டிய நடைமுறை முதல். ஒரு நிறுவனத்திற்குச் சராசரியாக ஒரு வருடத்திற்குச் செலவாகக் கூடிய நடைமுறைச் செலவுத் (Operating expenses) தொகையில் 12·5 விழுக்காடுகள் நடைமுறை முதலாக ஒதுக்கி வைக்கப் படலாம் எனக் கமிஷன் கூறுகின்றது. இவ்வாறு ஒதுக்கிவைக்கப் படும் ரொக்கம் குறைந்த அளவு சராசரி 45 நாள்களுக்கான செலவுத் தொகைக்கு நிகரானதாக இருத்தல் அவசியம்.

(2) இந் நிறுவனத்தில் வைக்கப்பட்டிருக்கும் அல்லது வைக்கப்படவேண்டிய கருவிக்கலன்கள் மற்றும் இதரப் பொருள் களின் மதிப்பிற்கு நிகரான தொகை.

(3) காப்பீட்டுத் தொகை, குத்தகை வரி போன்ற முன்கூட்டி செலுத்தப்படவேண்டிய செலவினங்களுக்குப் போதுமான தொகை ஆகிய மூன்று (1+2+3) வகைத் தொகைகளின் கூடுதலே நிறுவனத்திற்குத் தேவையான நடைமுறை முதல் தொகையின் அளவாகும். இக் கூட்டுத்தொகையிலிருந்து நிறுவனத்தின்மீதான கூடிய வருமான வரித்தொகையை (Accrued Income Tax) நீக்கிவிடின், எஞ்சியுள்ள தொகையே நிகர நடைமுறை முதலாகக் குறிக்கப்படும். வருவாய் மீதான வரியை முன்கூட்டியே கணக்கிட்டு அதனை நடைமுறை முதலுடன் வரவு (Credit) வைத்தல் சிறந்த முறையாகக் கருதப்படுகின்றது. ஆனால், நடைமுறையில் இதனை அமலாக்கும்போது, எவ்வளவு வரித்தொகையை வரவு வைக்கவேண்டும் என்ற சிக்கல் எழலாம். சில நிறுவனங்கள் 33, 34 விழுக்காடுகளும் மற்றும் சில 65·5 விழுக்காடுகளும் வரவு வைக்கும் தன்மை படைத்தன. சராசரியாக, ஒரு வருடத்தில் நாம் காட்டவேண்டிய வருவாய் வரித்தொகையில் 65 விழுக்காட்டினை நடைமுறை முதலுடன் வரவு வைக்கலாம் என்று பெடரல் பவர் கமிஷன் (Federal Power Commission) கருதுகின்றது. இவ்வாறு கணக்கிடப்பட்ட மொத்த நடைமுறை முதல் தொகையில் (Gross Working Capital) தொழில் நிறுவனத்தில் ஏற்படுகின்ற (எரிவாயுச் செலவுகள் போன்ற) கட்டுமானச் செலவுத்தொகை (Construction cost) சேர்க்கப்படுவதில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

## V. சில கட்டண அடிப்படை விடுபாடுகள் (Some Rate Base Exclusions)

கட்டண அடிப்படையைத் தீர்மானிக்கும்போது ஒரு நிறுவனத்திலுள்ள சொத்துகளின் மதிப்புத் தொகை, நடைமுறை முதல்தொகை போன்ற தொகைகளைச் சேர்த்துக்கொண்ட பின்னர்த் தேய்மானத் தொகையினை அவற்றிலிருந்து நீக்கியது போக எஞ்சியுள்ள தொகையினை மட்டும் கணக்கிற்கு எடுத்துக் கொள்கிறோம் அல்லவா? இவற்றைத் தவிர, இன்னும் சிலவகைத் தொகைகளும் கட்டண அடிப்படையைத் தீர்மானிப்பதில் தொடர்பு கொண்டுள்ளபடியால் அவற்றையும் கணக்கிற்கு எடுத்துக்கொள்வதா என்ற வினா எழலாம். அவற்றைப் பின்வரும் பகுதிகளில் சற்று ஆராய்வது நன்மை பயக்கும்.

முதலாவதாக, நுகர்வோர் (அல்லது பொதுமக்கள்) ஒரு பொதுப்பயன் தொழில் நிறுவனத்திற்கு ஏதேனும் நிதிமுதல் (Capital Fund) அளித்திருப்பார்களேயானால், அத் தொகை கட்

டண அடிப்படைத் தொகையுடன் சேர்க்கப்படக்கூடாது. சான்றாக, பொதுமக்களின் நலனுக்காக இயங்கி வருகின்ற பொதுப்பயன் தொழில் நிறுவனம் ஒன்று, தனது தொழிலை விரிவு படுத்தும் எண்ணத்துடன் ஒரு கட்டடத்தையோ இயந் திரத்தையோ புதிதாக வாங்க அல்லது உருவாக்க முற்படுமே யாயின், அதற்கென ஆகக்கூடிய செயலினை அந் நிறுவனமே ஏற்பது என்பது இயற்கை. இருப்பினும், அந் நிறுவனத்திலிருந்து தாம் பெறுகின்ற நன்மையைக் கருதி, நுகர்வோர் பலர், விரிவாக் கப் பணிக்கு ஆகக்கூடிய செலவில் ஒரு பகுதியைத் தாமே ஏற்க முன்வருவதுடன், கணிசமான ஒரு தொகையினை நிறுவனத்தில் முதலீடு செய்யலாம். இவ்வாறு நுகர்வோரிடமிருந்து பெற்றுக் கொண்ட நிதிமுதலைக் கட்டண அடிப்படையுடன் சேர்க்கக் கூடாது என்பது மரபு. ஏனெனில், நுகர்வோரிடமிருந்து நிதி முதல் கட்டணவீதம் என்ற இரண்டு வழிகளிலும் நிதி உதவி பெறுதல் ஏற்புடையதாகாது.

இரண்டாவதாக, பொதுமக்களிடமிருந்து, நிறுவனத்தின் நன்மைக்காகப் பெற்றுக்கொண்ட வைப்புகளும் (Public Deposits) கட்டண அடிப்படையுடன் சேர்க்கப்படக்கூடாது என்று கருதப்படுகின்றது.

மேற்கண்ட இருவகைத் தொகைகளும் நடைமுறை முதலு டன் சேர்க்கப்படமாட்டாவெனப் பார்த்தோம். இவற்றுள், குறிப்பாக நிறுவனத்தின் இயந்திரம், மற்றும் கட்டடம் போன்ற விரிவாக்கப் பணிகளுக்காகச் செலவிடப்பட்ட தொகை தனித் தன்மை வாய்ந்ததாகக் கருதப்படுகின்றது. ஏனெனில், வளர்ந்து வருகின்ற எந்த ஒரு நாடும் தனது பொருளாதார நிலையினை வளப்படுத்தவும் அதனை மேம்படுத்தவும் எண்ணுவது இயற்கை. இவ் வளர்ச்சியினை அடைய வேண்டுமாயின், நாட்டில் தொழிற் செறிவு நிறைந்திருக்க வேண்டும். இவற்றுள் பொதுநல ஈடு பாடுடைய பொதுப்பயன் தொழில்கள் பெருமளவில் தொடங்கப் பெற வேண்டும். அப்போதுதான் நாள்தோறும் பெருகி வருகின்ற மக்கள்தொகைக்கு வேண்டிய வாழ்க்கை வசதிகளை அரசு அளிக்க முடியும். பொதுப்பயன் தொழில்கள் வளர்ச்சியுற வேண்டுமானால், அவற்றின் உற்பத்தித் திறனும் அதிகரிக்கப்பட வேண்டும். இதற்கெனச் செலவிடப்படும் தொகையினை நடைமுறை முதலுடன் சேர்ப்பதா என்ற வினா எழுவது இயற்கையே. ஒரு நிறுவனத்தை வளர்ச்சியுறச் செய்ய வேண்டுமென்பதற்காக உருவாக்கப்படும் சொத்துகளின் மதிப்பினைக் கட்டண அடிப் படையுடன் சேர்த்துக்கொள்ளலாகாது என்றே பெரும்பாலான நீதிமன்றங்களின் தீர்ப்புகள் கூறுகின்றன. ஆயினும், இச்

சொத்துகளை உருவாக்கும் பொருட்டுச் செய்யப்பட்ட செலவுத் தொகையை முதலாக்கம் (Capitalization) செய்வது ஏற்றுக் கொள்ளப்படுகிறது. ஏனெனில், ஏராளமான ரொக்கம், புதிய சொத்து ஒன்றினை உருவாக்கும் பணியில் முடக்கப்பட்டிருப் பதால் இந் நிதியை வேறொரு பயனுள்ள (வருவாய் வரக்கூடிய) வழியில் ஈடுபடுத்த இயலாது. மேலும், இவ்வாறு உருவாக்கப் படும் சொத்தின் மதிப்பும் கட்டண அடிப்படையில் சேர்க்கப் படுவதில்லையாகையால் நிறுவனத்திற்கு எந்தவிதமான பலனும் ஏற்படுவதில்லை. எனவேதான், விரிவாக்கப் பணிகளுக்குச் செலவிடப்படும் தொகை முழுவதுமோ ஒரு பகுதியோ, 'உருவாக் கப் பணிக்கான வட்டி' (Interest on construction) என்ற முறையில் முதலாக்கம் செய்யப்படுகின்றது.

உருவாக்கப் பணிக்கான வட்டி அல்லது ஆதாயம் எனக் குறிக்கப்பட்ட இத் தொகை கீழ்க்காணும் மூன்று கருத்துகளை யும் அடிப்படையாகக் கொண்டே தீர்மானிக்கப்படுகின்றது. அவை :

(1) உருவாக்கப் பணியின் கால அளவிற்கு அனுமதிக்கப் பட்ட வட்டிவீதம்.

(2) உருவாக்கப் பணிக்கு அனுமதிக்கப்பட்ட மொத்த முதலீட்டுத் தொகை.

(3) கால அளவு.

இம் மூன்று செய்திகளையும் அடிப்படையாகக்கொண்டு நன்கு ஆராய்ந்த பின்னர், 'உருவாக்கப் பணிக்கான வட்டி'யை அளிப்பதா, இல்லையா என்றும், அளிப்பதானால் எவ்வளவு அளிக்கப்படவேண்டுமென்பதையும் தீர்மானிக்கவேண்டும்.

'உருவாக்கப் பணிக்கான வட்டி'யை முதலாக்கம் செய்வது அனைத்துப் பொதுப்பயன் தொழில்களாலும் ஏற்றுக்கொள்ளப் பட்டாலும், ஒரு சில விடுபாடுகள் (Exceptions) இருக்கத்தான் செய்கின்றன. சான்றாக, அமெரிக்க நாட்டின் பெல்முறையின் (Bell System)படி, விரிவாக்கப் பணிக்காகச் செலவிடப்படும் தொகை, வழக்கத்திற்கு மாறாக, நடைமுறை முதலுடன் சேர்க்கப் படுகின்றது. இச் செலவுக்கு ஆதரவான கருத்தினைத் தெரிவிப் பவர்களின் எண்ணப்படி, ஒரு நிறுவனம் தனது உற்பத்தித்திறனை வளர்த்துக் கொள்வதற்காக, விரிவாக்கப் பணிகளில் ஈடுபட நேரிடுகிறது. அப்போதெல்லாம், தேவைப்படுகின்ற செலவுத் தொகை பெரும்பாலும் பலவகையான பத்திரங்களை வெளியிடு

வதன்மூலம் திரட்டப்படுகிறது. எனவே, கடனுகப் பெற்றுக் கொண்ட தொகைக்கு மட்டுமே அளிக்கப்பட வேண்டிய 'வட்டி' சுயமாகத் திரட்டப்பட்ட தொகைக்கும், அளிக்கப்படுவதில்லை என்று கருதப்படுகிறது. எப்படி இருப்பினும் விரிவாக்கப் பணிக்காகப் பெருந் தொகையினைச் செலவு செய்யும் நிறுவனங்கள், இத் தொகையினைக் கட்டண அடிப்படையுடன் சேர்க்கக் கூடாது என்ற கருத்தினையே ஆதரிக்கின்றன.

**ஹோப் (Hope) வழக்கிற்குப் பின்னர் ஏற்பட்ட விளைவுகள்**

பொதுப்பயன் தொழில்களின் கட்டண அடிப்படையைத் தீர்மானிக்கும் வழக்குகள் பலவற்றிலும், ஹோப் வழக்குத் தனிச் சிறப்பு வாய்ந்ததாகக் கருதப்படுகின்றது. ஏனெனில், இவ் வழக்குத் தீர்ப்பின் மூலமாகத்தான் 'ஒரு நிறுவனம் குறிப்பிட்ட வகையில் தனது சொத்துகளை மதிப்பீடு செய்ய வேண்டுவதில்லையென்றும், நீதிமன்றங்களின் துணையைக் கொண்டு மட்டுமே கட்டண அடிப்படையைத் தீர்மானிக்கும் வழக்கம் நீங்கி நிருவாகச் சூழ்நிலைக்கு ஏற்ற வகையில் கட்டண அடிப்படையை நிருணயித்துக் கொள்ளலாமென்றும் உரிமை வழங்கப்பட்டது.' இத்துணைச் சிறப்பு வாய்ந்த வழக்கிற்குப் பின்னர்ச் சொத்துகளின் மதிப்பீட்டு முறை பலவகையிலும் மாறுபட்டுப் போயிற்று. அவற்றுள் பெரும்பாலான தொழில் நிறுவனங்களின் நியாயமான மதிப்பீட்டு முறை பல்வகையிலும் மாறுபட்டுப் போயிற்று. அவற்றுள் பெரும்பாலான தொழில் நிறுவனங்கள் நியாயமான மதிப்பீட்டு முறையினையும் (Fair value method), மற்றும் பல உண்மையான மதிப்பீட்டு முறையினையும் (Actual cost method) கடைப்பிடித்தன. ஆயினும், பொதுப்பயன் தொழில்களின் கட்டண அடிப்படை அவற்றின் சொத்துகளை மதிப்பிட்ட பின்னர், அவற்றிலிருந்து தேய்மானத்தொகை போக எஞ்சியதைக் கொண்டுதான் தீர்மானிக்கப்பட வேண்டுமென்பதில் ஐயமேதுமில்லை.

**கட்டண அடிப்படையின் அவசியம்**

கட்டண அடிப்படை எனப்படுவது, பொதுப் பயன் தொழில்களை முறைப்படுத்தக் கையாளப்படும் வழிகளில் ஒன்ருகும். எந்தெந்தத் தொழில்களுக்கு இக் கட்டண அடிப்படை என்னும் கட்டுப்பாட்டை விதிக்க வேண்டும் என்பதனைப் பற்றிச் சற்று ஆராய்வோம். அதற்கு முன்னராக இத் தொழில் நிறுவனங்களின் ஒழுங்குமுறைகளைப் (Regulatory measures) பற்றிய பொருளாதாரக் கருத்துகளைப் பற்றித் தெரிந்துகொள்வதும் நன்மை பயக்கும்.

**அ. ஒழுங்குமுறைகள் ஏற்படக் காரணமாக இருந்த பொருளாதாரத் தன்மைகள்**

ஒரு பொதுப்பயன் தொழிலுக்கான கட்டண அடிப்படையைத் தீர்மானிப்பதன் நோக்கம் என்ன? அந் நிறுவனம் தனது பொருள்களுக்காக விதிக்கின்ற கட்டணம், நியாயமானதாகவும், வரம்பிற்குட்பட்டதாகவும் உள்ளதா, இல்லையா என்பதைக் காணவேதான், கட்டண அடிப்படை கணக்கிடப்படுகிறதென்று கூறலாம். சான்ருக, ஒரு பொதுப்பயன் தொழில் நிறுவனம் முறையற்ற அல்லது அநியாயமான கட்டணத்தை விதித்துள்ளதென்று வழக்குத் தொடரப்படுமேயானுல், நீதிமன்றத்திற்குச் சில தகவல்கள் தெரிந்தாக வேண்டும். அதாவது, ஏன் இந்தக் கட்டணம் அநியாயமானது என்பதும் நியாயமான கட்டணத்தைத் தீர்மானிப்பது எவ்வாறு என்பதும் தெரிந்த பின்னரே, நீதிமன்றம் தனது தீர்ப்பினை வழங்க முடியும். ஆகவேதான், ஏதாவது ஓர் அளவினை அடிப்படையாகக் கொண்டு, கட்டண வீதம் சரியாக உள்ளதா இல்லையா என்பதைத் தீர்மானிக்க இயலும் என்று கூறப்படுகின்றது.

இருப்பினும், பொருள்களையும், பயணிகளையும் ஏற்றிச் செல்லும் போக்குவரத்து நிறுவனங்களைக் கட்டுப்படுத்தவோ நெறிப்படுத்தவோ, கட்டண அடிப்படையைத் தீர்மானிக்கும் முறை கையாளப்படுவதில்லை. ஆனுல், மின்திறன், குடிநீர், தொலைபேசித் தொடர்பு, எரிவாயு போன்ற இன்றியமையாப் பொருள்களையும் அளிக்கின்ற பொதுப்பயன் தொழில்கள் 'கட்டண அடிப்படை' என்ற ஆயுதத்தின்மூலம் நெறிப்படுத்தப்படுகின்றன என்பதும் உணரப்பட வேண்டும்.

மேற்கூறப்பட்ட கருத்துகளிலிருந்து இன்றியமையாத பொதுப்பயன் தொழில்களில் மட்டுமே 'கட்டண அடிப்படை முறை' கையாளப்படுகின்றது என்பதை உணர்ந்த நாம், அதற்கான காரணங்களையும் அறிய வேண்டாமா? இன்றியமையாப் பொருள்களை வழங்குகின்ற தொழில் நிறுவனங்களின் பொருளாதாரச் சிறப்பியல்புகளே இதற்குக் காரணமாக விளங்குகின்றன எனலாம்.

(1) இத் தொழில் நிறுவனங்கள் முற்றுரிமை (Monopoly Status) பெற்றவை என்பதும்,

(2) இவற்றின் வருவாய் விகிதம் மிகவும் சொற்பமானது என்பதும் இரண்டு பொருளாதாரச் சிறப்பியல்புகளாகும். இத்தகைய நிறுவனங்கள் அனைத்திற்கும்

> ஒரேமாதிரியான கட்டண அடிப்படையை நாம் விதிக்க இயலாதாகையால் ஒவ்வொரு தொழிலை யும் தனித்தனியே சீர்தூக்கி ஆராய்ந்து அதன் பின்னரே அதற்கேற்ற கட்டண அடிப்படையை நாம் விதிக்கவேண்டும். மேலும், இன்றியமை யாதவை என்று கருதப்படுகின்ற இந் நிறுவனங்கள் முற்றுரிமை பெற்று இயங்குவதாலும் உற்பத்திச் சொத்துகளில் மட்டுமே இவற்றின் முதலீடு முழுவதும் செய்யப்பட்டிருப்பதால் ஏற்படுகின்ற அபாயத்தை உணர்ந்தும் தனிப்பட்ட முறையில் கட்டண அடிப்படை தீர்மானிக்கப்படுகின்றது.

ஆகவே, (1) தமக்குள்ளே கடுமையான போட்டியைச் சமாளிக்கவேண்டிய பல்வேறு பொதுப்பயன் தொழில்களுக்கும் (2) மூலதனத்தின்வழியே பெருமளவு அபாயத்தை எதிர் நோக்காத பொதுப்பயன் தொழில்களுக்கும் தனிப்பட்ட முறை யில் கட்டண அடிப்படையை விதிக்க இயலாது. குறிப்பிட்ட ஒரு தொழிலில் ஈடுபட்டுள்ள பல்வேறு பொதுப்பயன் தொழில் நிறுவனங்களிடையே கடுமையான போட்டி நிலவும்போது ஒரே ஒரு நிறுவனத்திற்கு மட்டுமே 'கட்டண அடிப்படை' என்னும் கட்டுப்பாட்டினை விதிப்போமாயின், நாம் மாபெருந் தவற்றினை இழைத்தவர்களாவோம். ஏனெனில், போட்டியிடும் நிறுவனங் களிடையே ஒரு நிறுவனம் மட்டுமே உயர்ந்த கட்டண அடிப்படை யைக் கொண்டும், மற்ற நிறுவனங்கள் இத்தகைய எவ்விதக் கட்டுப்பாடுகளின்றியும் இருக்குமேயானால், முறைசெய்யப்பட்ட நிறுவனம் பெரும் நட்டத்தினை அடைய நேரிடும். ஏனெனில், சூழ்நிலைக்கேற்றவாறும், சந்தையின் தன்மைக்கேற்றவாறும், பிற நிறுவனங்கள் தங்களது கட்டண அடிப்படையை அமைத்துக் கொண்டு தொழிலைத் திறம்பட நடத்தும்போது, முறை செய்யப் பட்ட நிறுவனம் மட்டும் தனக்கென விதிக்கப்பட்ட கட்டண அடிப் படையைப் பின்பற்றி இயங்குமேயாயின், அந் நிறுவனம் சந்தையை விட்டுத் துரிதமாக வெளியேற நேரிடும் என்பதில் ஐயமில்லை. சான்றாக, ஒரு நகரத்தின் போக்குவரத்து ஊர்திக் கம்பெனிகள் பலவற்றிற்குள் கடுமையான போட்டி நிலவுகின்றதெனக் கொள் வோம். இவற்றுள், குறைவான கட்டணத்தை விதிக்கின்ற நிறுவ னத்திற்கே மிகுதியான இலாபம் கிடைக்குமென்பதும், இதன் காரணமாகப் பிற நிறுவனங்கள் நட்டத்தை ஏற்கவேண்டுமென்ப தும் வெள்ளிடைமலை. இந் நிலையில், தனிப்பட்ட முறையில் கட்டுப் பாடுகளை விதிப்பதாக எண்ணிக்கொண்டு, ஒரே ஒரு நிறுவனத் திற்கு மட்டுமே கட்டணம்பற்றிய கட்டுப்பாட்டினை விதித்தல்

விவேகமாகாது. மாறாக, அனைத்து நிறுவனங்களுக்கும் பொருந்தும் வகையில், ஒரேவிதமான கட்டுப்பாட்டினை, எல்லா நிறுவனங்களின்மீதும் விதிக்கவேண்டும். மோட்டார் வண்டி நிறுவனங்கள், புகைவண்டி நிறுவனங்கள், கப்பல் கம்பெனிகள், விமானக் கம்பெனிகள் போன்றவற்றிற்கு இத்தகைய 'குழுக் கட்டுப்பாட்டினை' (Group Regulation) விதிக்கலாம். நம் நாட்டைப் பொறுத்தவரையில் இவற்றிற்கென ஏற்படுத்தப்பட்ட வாரியங்கள் இக் கருத்தினை நன்கு செயற்படுத்துகின்றன. தென்னிந்திய இரயில்வேயாயினும், வட இந்திய இரயில்வேயாயினும் குறிப்பிட்ட தொலைவிற்கு வாங்கக்கூடிய கட்டணம் ஒன்றாகவே இருக்கும். இதுபோன்றே, மற்றொரு சான்றினையும் காண்போம். ஒருவர் சென்னையிலிருந்து செங்கற்பட்டிற்கு மோட்டார் வண்டியில் செல்ல விழைகிறார் எனில், அவர் அரசு (பல்லவன் போக்குவரத்துக் கழக) பேருந்துகளில் சென்றாலும், தனியார் துறையினரால் இயக்கப்படும் பேருந்துகளில் பயணம் செய்தாலும், அவர் செலுத்தப்போகின்ற கட்டணம் ஒன்றாகவேதான் இருக்கும். அரசு பேருந்து என்பதால் குறைவாகவோ கூடுதலாகவோ வசூலிக்க இயலாது. ஏனெனில், எவ்வித வேறுபாடுமின்றி, எல்லாப் போக்குவரத்து நிறுவனங்களுக்கும் ஒரே மாதிரியான 'கட்டண அடிப்படை' விதிக்கப்பட்டிருப்பதே யாகும். இவ்வாறு, சிலவகைத் தொழில்களுக்குத் தனிப்பட்ட கட்டுப்பாடுகளும், மற்ற வகைத் தொழில்களுக்குக் 'குழுக் கட்டுப்பாடுகளும்' விதிக்கப்படுகின்றன.

இன்றியமையாத பொதுப்பயன் தொழில்கள் அனைத்திற்கும் 'கட்டண அடிப்படை' என்ற கட்டுப்பாடு அவசியமாகிறது. ஆனால், பொதுப்பயன் தொழில் நிறுவனங்களுக்கு எவ்விதமான கட்டுப்பாடுகளும் தேவையில்லை என்றும், கட்டணவீதம், சொத்துகளின் மதிப்பு இவற்றைத் தீர்மானித்து எவ்விதக் குறிப்பிட்ட முறையினையும் பின்பற்றத் தேவையில்லை என்றும் 'ஹோப்' வழக்கின் தீர்ப்புக் கூறுகின்றது. மேலும், 'இறுதி முடிவுக் கொள்கை'யின் (End-Result Policy) மூலம் தொழில் நிறுவனங்களின் கட்டணவீதம் தானே நிருணயிக்கப்படவேண்டுமென்றும் 'ஹோப்' வழக்கின் தீர்ப்புக் கூறுகின்றது. இவ் வழக்கிற்குப் பின்னாளில் வந்த நீதிமன்றத் தீர்ப்புகள் 'ஹோப்' வழக்கின் 'இறுதிமுடிவுக் கொள்கை' சரியான முறையிலும் தெளிவுறவும் இல்லையெனக் கூறுகின்றன. சுருங்கக் கூறின், பொதுமக்களின் நலனுக்காக இயங்கிவருகின்ற பொதுப்பயன் தொழில்கள் நுகர்வோரிடமிருந்து சரியான அல்லது நியாயமான கட்டணத்தை மட்டுமே பெறவேண்டும் என்றும், சரியான

கட்டணத்தை நிருணயிக்க வேண்டுமாயின், கட்டண அடிப்படை என்ற கட்டுப்பாட்டினை இந் நிறுவனங்கள்மீது விதிக்கவேண்டு மென்றும் அறிகின்றோம்.

சில வகைப் பொதுப்பயன் தொழில்களில், குறிப்பாக, நகரப் போக்குவரத்துத் தொழில் நிறுவனங்களில், கட்டண அடிப்படை முறையைப் பயன்படுத்தாது, 'செயல்முறை விகிதத்தைப்' பயன்படுத்தி, அதன்மூலம் இத் தொழில்களை முறைப்படுத்தும் செயல் நடைபெறுகின்றது எனலாம். செயல்முறை விகித முறைப்படி ஒரு நிறுவனத்தின் இலாப ஈவு, அதனுடைய முதலீட்டுத் தொகையின்மீது குறிப்பிட்ட வருவாயினை அளிக்கும் வண்ணம் இருக்கவேண்டும் என எதிர்பார்க்கப்படுகின்றது. இந் நிறுவனத்தில் ஏற்படக்கூடிய நடைமுறைச் செலவுகளையும் மற்றவகைச் செலவுகளையும் சரிக்கட்டும் வண்ணம், இதனுடைய வருவாய் அமைந்தால்தான், முதலீடு செய்தோருக்கு ஓரள வாவது வருவாயினை நாம் அளிக்க முடியும்.

மேற்காணும் கருத்துகளை ஒன்றுதிரட்டி ஆராயும்போது, வேகமாய் மாறிவருகின்ற பொதுப்பயன் தொழில்களுக்கு ஏற்றவாறு அதன் கட்டணத்தை நிருணயிக்க வேண்டுமென்றும், போக்குவரத்துத் தொழில் நிறுவனங்களில் நாள்தோறும் மாற் றங்கள் ஏற்படுவதால், வழக்கமான 'கட்டண அடிப்படை' முறையினை விடுத்துச் செயல்முறை விகிதமுறையினைப் பின்பற்ற வேண்டுமென அறிகின்றோம்.

## கருத்துக் கோப்பு

கட்டண அடிப்படை என்பதென்ன? — பொதுப்பயன் தொழில் நிறுவனத்திலுள்ள பல்வகைச் சொத்துகளின் மொத்த மதிப்பினைக் காண்பதன் அவசியம் — எந்தெந்தச் சொத்துகள் மதிப்பீடு செய்யப்பட வேண்டும் என்றும், எவ்வழிகளில் மதிப்பிடப்படவேண்டும் என்பதனை அறிதல்—சட்டவழிக் கோட் பாடுகள்—கட்டண அடிப்படை முறைகள்—(அ) உண்மையான மதிப்பீட்டு முறை (Actual Cost Method)—(ஆ) மறு உற்பத்திச் செலவு முறை (Reproduction Cost New)—மறுஉற்பத்திச் செலவில் தேய்மானம் நீக்கிய முறை (Reproduction Cost New less Depreciation Method) அல்லது RCND முறை— (இ) நியாயமான மதிப்பு முறை (Fair Value Method)—கட்டண அடிப்படையும் நீதிமன்றத் தீர்ப்புகளும்—நிருவாகத் துணைக் காலம்—ஹோப் வழக்கும் அதன் தீர்ப்பும் (நடைமுறை முதல் ஒதுக்கீடு—சில கட்டண அடிப்படை விடுபாடுகள்—Some Rate Base Exceptions)—கட்டண அடிப்படையின் அவசியம்,

# 10. மதிப்பீட்டு முறைகள் (தொடர்ச்சி)

"பொதுப்பயன் தொழில்களிலுள்ள புலனாகக்கூடிய மற்றும் புலனாகாச் சொத்துகளைச் சரியான முறையில் மதிப்பிடாவிடில், அதன் விளைவாக நுகர்வோரின் துன்பம் அதிகரிக்கும்........"

—பெடரல் பவர் கமிஷன் (யு.எஸ்.) (U.S. Federal Power Commission)

கட்டண அடிப்படையினைப் பொறுத்தே ஒரு தொழிலின் கட்டணவீதம் நிருணயிக்கப்படுகின்றது. பொதுப்பயன் தொழில்களைப் பொறுத்தமட்டில், இக் கட்டண அடிப்படையைத் தீர்மானிப்பதில் தனி கவனம் செலுத்த வேண்டியுள்ளது. ஏனெனில், இத் தொழில் நிறுவனங்களிலுள்ள அனைத்துச் சொத்துகளின் மதிப்பினைக் கண்டறிந்த பின்னரே, கட்டண அடிப்படையைத் தீர்மானிக்க முடியும். இதற்கான முறைகள் பல உள்ளன என்பதையும், அவற்றின் சிறப்பியல்புகளையும், வேறுபாடுகளையும் பற்றிச் சென்ற அத்தியாயத்தில் விரிவாக எடுத்துரைக்கப்பட்டது. அதனைத் தொடர்ந்து அம்முறைகள் அனைத்திலும் சிறப்பு வாய்ந்த (1) விலைமதிப்புமுறை (2) தோற்ற மதிப்பீட்டு முறை என்றும் இரண்டு முறைகளைப் பற்றி மட்டும் இங்குக் காண்போம்.

## I. விலைமதிப்பீட்டு முறை

ஒரு பொதுப்பயன் தொழில் நிறுவனத்தின் சொத்துகளை மீண்டும் தற்போதைய சராசரி விலை நிலவரப்படி உற்பத்தி செய்ய வேண்டுமாயின் என்ன செலவாகுமோ அதுவே, அச் சொத்தின் மதிப்பாக எண்ணப்படும். இம் மதிப்புத் தொகையிலிருந்து தேய்மானச் செலவினை நீக்கியதுபோக, எஞ்சியிருப்பது சொத்தின் நிகர மதிப்பாகும். இவ்வாறு சொத்தின் மதிப்பீடும் முறையினை மறுஉற்பத்திச் செலவில் தேய்மானம் நீக்கிய முறை (Reproduction Cost New Less Depreciation or RCND) எனலாம். நடைமுறை முதல் (Working Capital) தொகையினை

யும் மற்றும் நிறுவனத்திலுள்ள கண்ணால் காண இயலாத (Intangible assets) சொத்துகளின் மதிப்பினையும், நிகர மதிப்புடன் சேர்த்துக்கொள்வது ஏற்புடையதாகும்,

இனி, மறுஉற்பத்திச் செலவு என்பது என்னவென்று பார்ப்போம். ஒரு சொத்தினைத் தற்போதைய விலை நிலவரப்படி, மீண்டும் உருவாக்க என்ன செலவு ஆகுமோ அது மறுஉற்பத்திச் செலவு என்று குறிக்கப்படும். இம்"மறுஉற்பத்திச் செலவு" என்பது "பதிலாக்கச்செலவு" அல்லது "பிணைசெய்யப்பட்ட செலவு" (Replacement cost) என்பதிலிருந்து வேறுபட்டது என்பதனை நாம் அறிதல்வேண்டும். குறிப்பிட்ட ஒரு சொத்தின் மூலமாகக் கிடைக்கக்கூடிய வசதிகளை, வேறொரு சொத்தின் மூலமாகப் பெற என்ன செலவாகுமோ, அச் செலவுத் தொகை "பதிலாக்கச் செலவு" எனப்படும். இவ்விரண்டு செலவுகளுக்கும் இடையேயுள்ள வேறுபாடு, பொதுப்பயன் தொழில்களைப் பொறுத்தமட்டில் தோன்ற வாய்ப்பில்லை. எனவே, இனி விலைமதிப்பு முறை (Appraisal Process)யின் பிற கோட்பாடுகளைப் பார்ப்போம்.

### (1) புலனாகும் சொத்துகளை மதிப்பிடுதல்

ஒரு தொழில் நிறுவனத்திலுள்ள சொத்துகளைப் புலனாகும் சொத்துகள் மற்றும் புலனாகாச் சொத்துகள் என் இரு வகையாகப் பிரிக்கலாம். அவற்றுள் புலனாகும் சொத்துகளை மதிப்பிடும் முறையினை மட்டும் இங்கு பார்ப்போம்.

விலைமதிப்பு முறையின் முதல்படியாக, ஒரு நிறுவனத்திலுள்ள சொத்துகளைப்பற்றி முழுப்பட்டியல் ஒன்றினைத் தயாரிக்க வேண்டும். இதனை ஆங்கிலத்தில் 'இன்வென்டரி' (Inventory) என்பார்கள். இப் பட்டியலைத் தயாரிக்கும் முன்னர், விலைமதிப்பீட்டினைச் செய்யும் பணியினை ஏற்றுக்கொண்ட பொறியியல் நிபுணர், அத் தொழில் நிறுவனத்தின் கடந்தகால வரலாற்றினைப் பற்றியும், அவ்வப்போது மாறக்கூடிய நிதிநிலையினைப் பற்றியும் முழுத் தகவல்களைச் சேகரிக்க வேண்டும். மேலும், இந்நிறுவனத்தில் சொத்துகளின் பேரேடு (Property Ledger) ஏதேனும் தயாரித்து வைக்கப்பட்டிருப்பின், அதனையும் கவனமாகப் பரிசீலனை செய்ய வேண்டும். இத்தகைய பரிசீலனையைச் செய்த பின்னர், அத் தொழில் நிறுவனத்தில் இன்னும் உபயோகப்படுத்தப்படாத மற்றும் உபயோகப்படக்கூடிய சொத்துகள் ஏதேனும் உள்ளனவா என்ற விபரம் தெரியவரும். ஆகவே சொத்துகளைப் பற்றிய தொடர்க் குறிப்பேடுகள் (Continuing Property Records) என்பவற்றிலிருந்து ஒரு நிறுவனத்திலுள்ள

பயன்படுத்தப்பட்ட, பயன்படுத்தப்படாத மற்றும் பயன்படக் கூடிய சொத்துகள் எவை என்பதையும் அவற்றின் மதிப்பு என்னவென்பதையும் நாம் அறிய முடியும். ஒரு குறிப்பிட்ட தேதியில் இந் நிறுவனத்திலுள்ள, சொத்துகளைப் பற்றிய விரிவான செய்திகளும், இச் சொத்து முதன்முதலில் உருவாக்கப் பட்டபோது செய்யப்பட்ட செலவு போன்ற செய்திகளும், இக் குறிப்பேடுகளில் காணப்பெறும். இத்தனைப் பயனைத் தருகின்ற இக் குறிப்பேடுகள் எல்லாப் பொதுப்பயன் தொழில்களிலும் வைக்கப்பட்டிருக்கும் எனக் கூற இயலாது. சில நிறுவனங்கள் தாமாகவும், மற்றும் சில பிற நிறுவனங்களைப் பார்த்தும் இத் தொடர்ச்சிக் குறிப்பேடுகளைத் தங்களது நிறுவனங்களிலும் வைத்துக்கொள்ளத் துவங்கின.

விலைமதிப்பீட்டு முறையில் இத்தகைய குறிப்பேடுகள் எங்ஙனம் பயன்படுகின்றன என்று பார்ப்போம்' ஒரு தொழிலி லுள்ள சொத்துகளைத் தனித்தனியே மதிப்பிடுவதை விலைமதிப்பு முறையின் கொள்கையாகும். இவ்வாறு செய்யும்போது சொத்து களைப் பற்றிய அனைத்து விபரங்களும் சரிவர நமக்குத் தெரிந் தால்தான், நாம் செய்துள்ள விலைமதிப்பீடு உண்மையானதாகவும் பயனுள்ளதாகவும் இருக்கும். சரியான தகவல்கள் கிடைக்கா விடில், மதிப்பீட்டினைச் செய்வோருக்குப் பலவித இன்னல்கள் தேரிடும். இதனைத் தவிர்ப்பதற்காகவே. இந் நிறுவனத்திலுள்ள சொத்துக்களை தனிததனியே வகைப்பறித்தி, தரம்பிரித்து, அவற்றை மதிப்பிட்டு, பின்னர் இவ்விபரங்கள் அனைத்தையும் "சொத்துகளைப்பற்றிய தொடர்குறிப்பேட்"டில் (CPL) பதிவு செய்து வைப்பார்கள். இதனைப் பயன்படுத்தி எந்நேரத்திலும் எவரும், விலை மதிப்பினைச் செய்யமுடியுமல்லவா ;

இனி, எவ்வகைச் சொத்துகளைப் பற்றிய தகவல்கள் சேகரிக்கப்படவேண்டுமென்பதைக் காண்போம். ஒரு பொதுப் பயன் தொழிலின் இயல்பான பணிக்கு உபயோகப்படுத்தப் பட்ட சொத்துகள் மட்டுமே விலைமதிப்பீட்டில் இடம்பெற வேண்டும். இச் சொத்துகளின் மதிப்புமட்டுமே கட்டண வீதத்தினை நிருணயிக்கும் பணிக்காகப் பயன்படுத்தப்படவேண் டும். மேலும், இதுவரை பயன்படுத்தப்படாத அல்லது பயன் படுத்தக் கூடிய சொத்துகள் ஏதேனும் தொழில் நிறுவனத்தில் இருக்குமேயாயின் அதனையும் கட்டணவீதத்தைத் தீர்மானிப் பதற்காகப் பயன்படுத்திக் கொள்ளலாம்.

**2. தனிமதிப்பினைக் கணக்கிடுதல் (Unit Cost Calculation).**

தொடர்க் குறிப்பேடுகளின் வழியாகவோ நேரடிப் பரிசீலனை மூலமாகவோ, ஒரு தொழில் நிறுவனத்திலுள்ள

சொத்துக்களை வகைப்படுத்தி, வகைப்படுத்திய பின்னர் ஒவ்வொரு சொத்தினையும் உருவாக்கச் செய்யப்பட்ட பலவகைச் செலவுத் தொகையினைக் கண்டறிந்து அவற்றையும் கணக்கிற்கு எடுத்துக் கொள்ள வேண்டும். இவ்வாறு செய்வதன்மூலம், ஒவ்வொரு சொத்தின் தனிப்பட்ட மதிப்பு (Unit Cost) என்னவென்று நாம் அறிந்து கொள்ளலாம்.

நடைமுறையில் ஒரு சொத்தின் தனிமதிப்பினைக் கணக்கிடுவதில் சில சிக்கல்கள் உள்ளன. விலைமதிப்பிடும் பணியினை ஏற்றுக் கொண்டிருக்கும் பொறியியல் வல்லுநர்கள், பல்வேறு கருத்தினை உடையவர்களாகவும், பல்வேறு முறையினைப் பின்பற்றுபவர்களாகவும் இருப்பதால், ஒரு நிறுவனத்தின் தனிச் சொத்தின் மதிப்பைக் கணக்கிடும்முறை, (Unit Cost Calculation Method) மற்ற நிறுவனங்களைப்போல இல்லாமலும், மேலும் அவற்றிலிருந்து வேறுபட்டும் இருக்கலாம். ஏனெனில், குறிப்பிட்ட ஒரு சொத்து, அதனுடைய உரிமையாளரால் உருவாக்கப்படுவதற்கும். ஒப்பந்தக்காரர்கள் (Contractors) மூலம் உருவாக்கப்படுவதற்குமிடையே மிகுந்த வேறுபாடு இருப்பதே காரணமாகும். ஆயினும், எல்லாவிதமான தொழில் நிறுவனங்களாலும், எப்போதும் ஏற்றுக்கொள்ளக்கூடிய சில செலவுத் தொகைகள் உள்ளன. அவற்றைப் பொறுத்தமட்டில் வேறுபாடு எதுவும் இந் நிறுவனங்களிடையோ இவற்றின் பொறியியல் வல்லுநர்களிடையோ தோன்றுவதில்லை. அத்தகையபொதுவான செலவுத் தொகைகள் வருமாறு :—

(அ) ஒரு குறிப்பிட்ட நாளில் இந் நிறுவனத்திலுள்ள அனைத்துக் கருவிக்கலன்கள் மற்றும் பொருள்களின் சராசரி விலை,

(ஆ) கப்பல் கட்டணம், சேமிப்புக்கிடங்கின் வாடகை (Storage Rent) போன்ற செலவுகள்.

(இ) தொழிலாளர் ஊதியம்.

(ஈ) இயந்திர மேற்பார்வைச் செலவுகள், சிறு கருவிக் கலன்கள் மற்றும் உபகரணங்களுக்காகும் செலவு, தொழிலாளர் நட்டஈட்டுத் தொகை (Workmen's Compensation) சமுதாயப் பாதுகாப்பு வரிகள் (Social Security Taxes) போன்றவை. பல்வேறு செலவுகளின் கூட்டுத் தொகையினை தனித்தனியாகவோ மொத்தமாகவோ கண்டுபிடித்த பின்னர் குறிப்பிட்ட ஒரு சொத்தின் மதிப்பினைக் காணுதல்

வழக்கமான முறையாகும். இவ்வாறு காணப் பட்ட மதிப்பிற்கு 'நேரடிக் கட்டுமானச் செலவு" (Direct Construction Cost) என்று பெயர்.

**3. கட்டுமான மேற்செலவுகள் (Overhead Constuction Costs)**

ஒரு சொத்தின் மறுஉற்பத்திச் செலவு என்பது அச் சொத்தினை உருவாக்கச் செய்யப்படும் நேரடிச் செலவுகள், கட்டுமான மேற்செலவுகள் என்ற இருவகைச் செலவுகளின் கூட்டுத் தொகையேயாகும். இதனை,

மறுஉற்பத்திச் செலவு = கட்டுமான நேரடிச் செலவுகள்
+ கட்டுமான மேற்செலவுகள்

Reproduction cost = Direct construction costs
+ Over head Constuction Costs

என்று வகைப்படுத்தலாம்.

**கட்டுமான மேற்செலவுகள் என்பன எவை ?**

கீழ்க்காணும் பலவகைச் செலவுகளும் கட்டுமான மேற்செலவு களாகவே கருதப்படும் :—

(அ) பொறியியல் பணிகளுக்கான ஊதியமும் மற்றும் மேற்பார்வைப் பணிக்காகும் செலவுகளும்,

(ஆ) அலுவலகத்தின் ஊழியருக்கான ஊழியத் தொகையும், மற்றவகைப் பொதுச்செலவுகளும்,

(இ) சட்ட ஆலோசனைச் செலவுகள், ஈட்டுறுதிச் செலவுகள், சொத்துகளின்மீதான வரிகள், கட்டுமானச் செலவுக்காகக் கடன் ஏதும் வாங்கியிருப்பின் அதற்கான வட்டித்தொகை.

(ஈ) சில நேரங்களில் நிறுவனத்தைத் தோற்றுவிக்கச் செய்யப்பட்ட செலவுகளும் (Promotion Expenses) கட்டுமான மேற்செலவுடன் சேர்க்கப்படுவதுமுண்டு.

மேற்காணும் அனைத்துச் செலவுகளும் கட்டுமான மேற்செலவுடன் சேர்க்கப்பட்டுக் கணக்கிடப்படும். ஆனல், ஒப்பந்ததாரரின் மூலம் இச் சொத்து உருவாக்கப்பட்டிருப்பின், இச் செலவுகளை "ஒப்பந்த மேற்படிச் செலவுகள்" என்று குறிப்பிடவேண்டும். மேலும், இவ்வனைத்துக் கட்டுமான மேற்படிச் செலவுகளும்,

நேரடிச் செலவுத் தொகையின் ஒரு குறிப்பிட்ட விழுக்காடாகவே குறிக்கப்படும்.*

### 4. கூடிய தேய்மானம் (Accrued Depreciation)

ஒரு தொழிலின் கட்டண அடிப்படையைத் தீர்மானிக்கவும், சொத்துகளின் மதிப்பினைக் காணவும் எந்த முறை கையாளப்பட்டாலும், தேய்மானத் தொகை அதிலிருந்து கழிக்கப்படவேண்டும். கணக்குப் பதிவியலின் கூற்றுப்படி ஒரு நிறுவனத்தின் சொத்துகளின் மதிப்பிலிருந்து இத்தகைய தேய்மானச் செலவினைக் குறைப்பது "கூடிய தேய்மானம் அல்லது ஏறிய தேய்மானம்" (Accrued Depreciaction) எனப்படும். பொதுப்பயன் தொழில்களை முறைப்படுத்தும் பல்வேறு முறைகளிடையே கூடிய தேய்மானத்தின் தன்மைபற்றியும், அதனுடைய அளவுபற்றியும், இத் தேய்மானத் தொகையைக் கணக்கிடும் முறைபற்றியும், கருத்து வேறுபாடுகள் நிறைய நிலவுகின்றன. ரால்ப், எம். பெஸ்ஸே என்பவரின் கருத்துப்படி, "பொதுப்பயன் தொழில்களின் கட்டண வீதத்தைத் தீர்மானிப்பதில் தேய்மானச் செலவுகளின் தன்மைபற்றி நிலவுகின்ற பல்வகையான கருத்துகள், குழப்பம் விளைவிப்பனவாக இருக்கின்றன.**

இனி, எவ்வகைத் தேய்மானங்கள் நீக்கப்பெற வேண்டுமென்பதைப்பற்றிப் பார்ப்போம்.

(1) முதலாவது கருத்துப்படி, எவ்விதத் தேய்மானமும் சொத்துகளின் மொத்த மதிப்பிலிருந்து நீக்கப்பட வேண்டியதில்லை என்று ஒரு சாரார் கருதுகின்றனர்.

(2) அடுத்து, பொறியியல் கோட்பாடுகளின்படி, நீக்கப்பட வேண்டிய தேய்மானங்களைக் குறிப்பிடலாம்.

(3) மூன்றாவதாக, தேய்மான ஒதுக்கீட்டு நிதி (Depreciation Reserve) ஏதேனும் வைக்கப்பட்டிருப்பின், அந் நிதித்தொகை கழிக்கப்படலாம்.

(4) ஒரு சொத்தின் மதிப்பு எவ்விதமாகக் குறைந்து கொண்டே போகின்றது என்பதை உணர்ந்திருக்கும் கணக்காளர்கள் (Accountants) இச் சொத்து

* Total overhead construction costs will always be represented as a percentage of the Total Direct Construction costs.

** Ralph M. Besse—former resident of the National Association of Rail Road & Utilities Commission—V.S.

களுக்காக, எந்த அளவுக்குத் தேய்மான ஒதுக்கீட்டினைச் செய்திருக்க வேண்டுமோ அந்தத் தொகையைச் சொத்தின் மொத்த மதிப்பிலிருந்து கழித்து விடலாம் என்ற நான்காவது கருத்தும் நிலவுகின்றது.

இவ்வாறு, தேய்மானத்தொகைகள் நீக்கப்பட்ட பின்னரே, ஒரு நிறுவனத்தின் சொத்துகளுடைய நிகர மதிப்பினைக் காணவும், அதனைக்கொண்டு, கட்டணவீதத்தைத் தீர்மானிக்கவும் இயலும். சில நேரங்களில் எவ்விதத் தேய்மான நீக்கமும் இல்லாமலும் போகலாம். ஆகவே, கூடிய தேய்மானத் தொகையினை நீக்குவதுபற்றித் தரமான அல்லது உறுதியான கருத்து எதையும் மேற்கோளாகக்கூற இயலாது.

**கூடிய தேய்மானத்தின் இன்றியமையாமை**

எத்தகைய தொழிலாயினும் சரி, அந் நிறுவனத்தில், தேய்மானத்திற்குரிய கணக்குப் பதிவியல்கள் அழகுறவும் தெளிவுறவும், வைக்கப்பட்டிருக்க வேண்டுமென்பது இந் நூலில் "தேய்மானங்கள்" என்ற பகுதியில் சிறப்பாகக் கூறப்பட்டுள்ளது. ஆகவே தற்போது பொதுத்தேய்மானம் என்பதுபற்றி மட்டும் ஆராய்வோம்.

1931ஆம் ஆண்டில் நடந்த மிகவும் பிரபலமான ஒரு வழக்கின்* தீர்ப்பு, கூடிய தேய்மானத்தின் இன்றியமையாமையைக் எடுத்துரைக்கின்றது. "ஒரு நிறுவனத்திலுள்ள குறிப்பிட்ட ஒரு சொத்து என்பது பலவித இயற்கைக் கூறுபாடுகளைத் தன்னுள்ளே கொண்டுள்ளன. இச் சொத்தினை நாள்தோறும் பயன்படுத்தும் காரணத்தால் இவற்றின் மதிப்பு நாளடைவில் தேய்ந்துகொண்டே போகுமென்பதில் ஐயமில்லை. இச் சொத்தின் மதிப்பினைக் காணும்பொருட்டு, உண்மையான மதிப்பீட்டு முறையினையோ மறு உற்பத்திச்செலவு முறையினையோ அல்லது வேறு எந்த முறையினைப் பயன்படுத்தினாலும், இச் சொத்தின் இழந்த மதிப்பினையும் கணக்கிற்கு எடுத்துக் கொள்வதே ஏற்புடையதாகும்" என்ற தீர்ப்பு இவ்வழக்கின்மூலம் வழங்கப்பட்டது. ஆகவே, கூடிய தேய்மானச் செலவு என்பது தவிர்க்கப்பட முடியாத ஒரு செலவுத்தொகை என்றும், அதனை நீக்கிய பின்னரே, ஒரு சொத்தின் உண்மையான (நிகர) மதிப்பு

* Excess Income of Richmond, Fredricksburg & Potomnc R. R. Co. (1931)

கிடைக்குமென்றும் அறிகிறோமல்லவா? இதனை ஒரு சிறு சான்று காட்டி விளக்கமுடியும்.

நேர்வழி முறையில் (Straight Line Method) ஒரு சொத்தின் தேய்மானம் கணக்கிடப்படுகின்றது எனக் கொள்வோம். குறிப்பிட்ட சொத்தின் உழைப்புக்காலம் (Life Period) ஓர் ஆண்டென்றும், ஏற்கனவே இந் நிறுவனத்தில் 15 ஆண்டுகளாக இச் சொத்துப் பயன்படுத்தப்பட்டு வருகிறதென்றும் கொள்வோம். இச் சொத்தின் 'கூடிய தேய்மானம்' 60% என்பது எளிதாகக் கண்டுபிடிக்கப்பட்டுவிடும்.

**தேய்மானமும் சீரான கணக்கியலும் (Depreciation and Proper Accounting)**

ஒவ்வொரு தொழிலுக்கும் ஏற்றவாறு, தேய்மானம் பற்றிய பலவிதமான கொள்கைகள் இருக்கலாம். ஒரே ஒரு நிறுவனத்தை மட்டும் எடுத்துக்கொண்டு பார்ப்போமேயானல், அந் நிறுவனத்திற்குச் சொந்தமான பலவகைச் சொத்துகளும் இருக்கும். எல்லாவிதமான சொத்துகளுக்கும், ஒரேவித முறையினைக் கையாண்டு, தேய்மானத் தொகையினைக் காணவேண்டுமென்பதில்லை. ஒவ்வொரு வகைச் சொத்திற்கும் அதற்குறிய வகையில், தேய்மானத்தைக் கணக்கிடலாம். சான்ருக, கட்டிடம் இயந்திரம், மோட்டார் வண்டிகள், கருவிக்கலன்கள் போன்ற பலவிதமான சொத்துகளுக்குப் பலவிதமான முறைகளைக் கையாளவேண்டும். ஆனல் குறிப்பிட்ட ஒரு சொத்திற்கு ஏற்படுத்தப்படும் தேய்மான அளவு சீரானதாகவும், இதற்கான கணக்குப் பதிவியல் முறைகள் சிலவகை விதிகளுக்குட்பட்டதாகவும் இருத்தல் வேண்டும். அவற்றைப்பற்றிச் சற்று விரிவாக இங்குப் பார்ப்போம்.

ஒரு நிறுவனத்தின் சொத்து உபயோகப்படுத்தப்படும்போது, அந் நிறுவனத்தின் செயல்முறைச் செலவு கூடுவது இயல்பு. மேலும் அதிக அளவில் நுகரப்படும்போது, இச் சொத்தில் முதலீடு செய்யப்பட்டதொகை குறைந்துகொண்டே செல்லும். இவ்வாறு குறைந்துசெல்லுகின்ற முதலீட்டுத்தொகை, அச் சொத்தின் குறைந்துகொண்டேவரும் மதிப்பிற்குச் சமமாகும். அதாவது, எந்த ஒரு பொருளும் நுகரப்படும்போது, அதன் மதிப்புக் குறைந்துகொண்டேபோகும். அதே நேரத்தில் அப் பொருளில் செய்யப்பட்ட முதலீடும் குறைந்து கொண்டே போகும். ஒரே நேரத்தில் அப் பொருள் இழக்கின்ற, மதிப்பும்

முதலீட்டுத் தொகையும் சமமாக இருக்கவேண்டும் என்பது கருத்து. இதனை,

சொத்து—நுகர்ச்சி = முதலீட்டு இழப்பு
சொத்து—நுகர்ச்சி = மதிப்பு இழப்பு
முதலீட்டு இழப்பு = மதிப்பு இழப்பு

என்று எளிதாகக் குறிப்பிடலாம்.

ஒவ்வொரு நிறுவனமும், அயர்ச்சி (Depletion) தேய்மானம், போன்றவற்றிற்காகச் சொத்துகளுக்குச் செலவிடும் தொகையும், அந் நிறுவனத்தின் கூடிய தேய்மானத் தொகையும், சமமாக இருத்தல் வேண்டும். இந் நியதி உலகெங்கிலுமுள்ள அனைத்துப் பொதுப்பயன் தொழில்களுக்கும் உரித்தானது.

இருப்பினும், கணக்கியல் முறையின்படி சீரான அளவில் தேய்மானச் செலவினை ஏற்படுத்துவது அனைத்துத் தொழில்களாலும் ஏற்றுக்கொள்ளப்படவில்லை. சீரான தேய்மானத்திற்குப் பதிலாக, "கண்காணிக்கப்பட்ட தேய்மானம்" என்ற ஒன்று நாக்ஸ்வில் வாட்டர் கம்பெனியின் வழக்கின்மூலம் அறிமுகப் படுத்தப்பட்டது."* இதன்படி, "தேய்மானம் எனப்படுவது, ஒரு குறிப்பிட்ட சொத்து எப்படி நல்ல முறையில் தன் பணியினைச் செய்யுமோ வசதியினை வழங்குமோ அந்தவகையில் இல்லாமலிருப்பதையும், அச் சொத்தின் இயற்கைத்தன்மை குறைந்து போவதையுமே குறிக்கும்." சான்றாக, இயந்திரம் ஒன்று வாங்கப்பட்டிருப்பின், அதன்மூலம் நாம் பெறுகின்ற வசதிகளைப் பழைய இயந்திரத்தின் மூலம் பெறுவதற்கில்லை. மேலும், பழைய இயந்திரம் தனது தன்மையைப் பெரும்பாலும் இழந்திருக்கலாம். இத்தகைய இழப்பினை எந்த ஒரு சொத்தும் ஏற்கும்போது, அதுவே தேய்மானம் எனப்படுகிறது. இதனையே பழைய இயந்திரத்திற்கும், புதிய இயந்திரத்திற்கும் உள்ள 'நூற்றிய நிலை' என்றோ 'விழுக்காட்டு நிலை' என்றோ (Presentcondition) கூறுவர். எப்படிக் கணக்கிட்டாலும், "கூடிய தேய்மானம்' என்பது, ஒரு சொத்தின் மதிப்பிலிருந்து கழிக்கப்பட வேண்டிய ஒன்று என்றுதான், பல்வகையான வழக்குகளின் தீர்ப்புகளும் கூறுகின்றன. மேலும், கணக்குப் பதிவியலின்படி, கூடிய தேய்மானத்தொகை சீரானதாக வைக்கப்படவேண்டும் என்றும் இத் தீர்ப்புகள் கூறுகின்றன. ஆனால், மற்றொரு வழக்கில் "தேய்மானச் செலவினைக் கொண்டு கட்டண அடிப்படையையோ

* Observed Depreciation-Introduced by the Knoxville Water Company case of 1909.

கட்டணவிதத்தையோ நிருணயித்தல் முறையாகாது என்றும், நுகர்வோர் அளிக்கும் கட்டணம் அவர்கள் பெறுகின்ற சவதிக்காகவே தவிர, ஒரு சொத்து இழந்த மதிப்பினைச் சரிகட்ட அன்று' என்றும் தீர்ப்பு வழங்கப்பட்டது.*

இனி, தேய்மானம் சீரானமுறையில் வைக்கப் படாதிருக்கும் நிலையினைக் காண்போம். ஒரு தொழில் நிறுவனத்தின் கட்டண அடிப்படையைத் தீர்மானிக்கும் பொருட்டு அதனுடைய செயல் முறைச் செலவும், கண்காணிக்கப்பட்ட தேய்மானமும் கணக்கிடப் பட்டிருக்கும். சிலசமயம் தேய்மானம் கணக்கிடப்படாமலும் போகலாம். எப்படியாயினும், கட்டண அடிப்படை என்ற ஒன்றினைக் கண்டுபிடித்த பின்னரே, அதன்மூலம் அதிக அளவு இலாபத்தினை நுகர்வோரிடமிருந்து இந் நிறுவனம் பெற முயற் சிக்குமேயானல், அப்போது ஏறிய தேய்மானம் என்ற சொல்லிற் குப் பொருளில்லாமலே போய்விடும். கட்டண அடிப்படையைத் தீர்மானிக்க செயல்முறைச் செலவு அதிகரிக்கப்படுமேயானல், நிறுவனத்தின் வருவாயும் அதிகரிக்கும். இதற்கு மாருக, செயல் முறைச் செலவினை மட்டும் அதிகரித்துவிட்டு வேறெந்த வகை தேய்மானச் செலவினையும் சொத்தின் மதிப்பிலிருந்து குறைத்து விடாதிருப்பின், சொத்தின் மதிப்பு அதிகமாகக் காணப்படும். இதன் காரணமாக, கட்டண அடிப்படையும் அதிகரிக்கும். அதாவது நுகர்வோரிடமிருந்து பெறப்படும் இலாப அளவும் அதிகமாக இருக்கும், என்பது கருத்து. ஆனல் இவ்விரண்டு வழிகளும் முறையற்ற தொகையால் சீரானதாக இருக்க வாய்ப் பில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

**கூடிய தேய்மானமும் தோற்ற மதிப்பும் (Accrued Depreciation & original cost)**

கட்டண அடிப்படையைத் தோற்ற மதிப்பீட்டு முறையின் படித் தீர்மானிக்கும்போது குறிப்பிட்ட சொத்தின் மதிப்பி லிருந்து, கணக்குப் பதிவேடுகளில் குறிக்கப்பட்டுள்ள தேய்மா னத் தொகையை மட்டுமே கழித்தல் வேண்டும். இவ்வாறு நிருணயிக்கும் கட்டண அடிப்படை பொருளாதார ரீதியில் மிகுந்த நன்மையைச் தரும் என்பதில் ஐயமில்லை. இருப்பினும், சில நேரங்களில் இந் நன்மைகள் நீடிப்பதுமில்லை. சான்ருக, இந் நிறுவனங்களில் "தேவையான ஒதுக்கீடுகள்" செய்யப்பட் டிருப்பின், இந்த ஒதுக்கீட்டுத் தொகையே சொத்தின் மதிப்பி லிருந்து கழிக்கப் பெறும். இத் தேய்மான ஒதுக்கீடு என்பது

* Board of Public Utility Commission vs New York Tele co 1929.

என்ன? ஒரு நிறுவனத்திலுள்ள சொத்துகளுக்கு ஆகக்கூடிய சொத்துகளின் தேய்மானத்தொகையை முன்கூட்டியே ஒதுக்கீடு செய்து வைத்தால், அது "தேவையான ஒதுக்கீடு" (Reserve Requirement) எனப்படும். இந்த ஒதுக்கீட்டுத் தொகை உண்மையாக ஏற்படக்கூடிய தேய்மானச் செலவினைவிட அதிக மாகவோ குறைவாகவோ இருக்க வாய்ப்புள்ளது. ஒரு நிறுவனம் தேவைக்குமேல் எச்சரிக்கையாயிருப்பின், அதிக அளவில் இந்த ஒதுக்கீட்டுத் தொகை சேர்ந்துவிடும். சொத்தின் வாழ்நாளை மிகவும் குறைவாக மதிப்பிடும்போது, தேய்மான ஒதுக்கீட்டு விகிதம் அதிகமாக்கப்படும். இதன் காரணமாக, ஒதுக்கீட்டுத் தொகையும் அதிகமாகும்' இதற்கு மாறாக, அதே நிறுவனம், சற்று அலட்சியமாகவோ கவனக்குறைவாகவோ இருந்துவிட்டால் ஏற்படக்கூடிய விளைவும் முற்றிலும், மாறானதாக இருக்கும். சொத்தின் வாழ்நாளை மிகவும் அதிகமாக மதிப்பிடும் போது, ஒதுக்கீட்டு விகிதம் மிகவும் குறைவாக விதிக்கப்படும். இதன் விளைவாக, தேய்மான ஒதுக்கீட்டுத் தொகையும் மிகவும் குறைந்து காணப்படும்.

கட்டணவீதத்தைத் தீர்மானிக்கும் பொருட்டு ஒதுக்கீட்டுத் தொகையினைப் பயன்படுத்துவது முறையான செயலென்றாலும், அதில் மிகுந்த கவனம் செலுத்தப்பட வேண்டும். ஏனெனில் ஒரு சொத்தின் மதிப்பினைக் கணக்கிட்ட பின்னர் அதிலிருந்து தேய்மான ஒதுக்கீட்டுத் தொகையினைக் கழித்த பின்னர், எஞ்சியிருக்கும் நிகரத் தொகையினை மதிப்பாகக் கொண்டு, கட்டண வீதம் நிருணயிக்கப்படும். ஆனால், சரியான அளவு தேய்மான ஒதுக்கீடு மட்டுமே சொத்தின் மதிப்பிலிருந்து நீக்கப்பட வேண்டும். இல்லாவிடில் ஏற்படக்கூடிய விளைவுகள் முற்றிலும் மாறானதாக இருக்கும். சான்றாக, தோற்றமதிப்பீட்டு முறை (Original Cost Method) யின்படி ஒரு சொத்தின் மதிப்பு கணக்கிடப்படுகின்றது என்று கொள்வோம். இம் மதிப்பிலிருந்து தேவைக்கு மேலாக அதிக அளவில் ஏற்படுத்தப்பட்ட தேய்மான ஒதுக்கீட்டினைக் கழிக்க நேரிடுகின்றது என்றால், அப்போது அந் நிறுவனத்தின் நிதிநிலை மிகவும் மோசமான முறையில் பாதிக்கப்படும். ஆகவே எந்த ஒரு நிறுவனமும், தேவையான அல்லது போதுமான அளவிற்கு மட்டுமே தேய்மான ஒதுக்கீட்டினை ஏற்படுத்தி, அதனை மட்டுமே சொத்தின் மதிப்பிலிருந்து கழித்தால் இதனைச் சார்ந்திருக்கக் கூடிய கட்டண அடிப்படையும் நியாயமானதாக இருக்கும். நடைமுறையில், பல பொதுப்பயன் தொழில்களுக்கு இம் முறையின் நன்மை, தீமைகள் தெரிந்திருப்பினும் தேய்மானத் தொகையோ தேய்மான ஒதுக்கீட்டுத்

தொகையோ சரியான அளவில் ஏற்படுத்தப்படுவதில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

**நியாயமான மதிப்பும் கூடிய தேய்மானமும் (Fair value and Accrued Depreciation)**

நியாயமான மதிப்பீட்டு முறையினைக் கையாண்டு சொத்துகளின் மதிப்பினைக் கணக்கிட்டு, பின்னர் கட்டண அடிப்படையை தீர்மானிக்கும் நியதி பல பொதுப்பயன் தொழில்களில் இன்று காணப்படுகின்றது. இம் முறையைப் பின்பற்றும்போது, எவ் வகையில் கூடிய தேய்மானத்தினை ஏற்படுத்துவது என்ற வினவிற்கு விடையளிக்கும் வகையில் கீழ்க்காணும் முறையினை அறிமுகப்படுத்துவோம்.

(1) பீல்டு முறை (Field Method)

(2) அலுவலக முறை (Office Method)

**பீல்டு முறை (Field Method)**

குறிப்பிட்ட ஒரு விகிதத்தில், ஒரு சொத்தின் உழைப்புக் காலத்தினை அடிப்படையாகக் கொண்டு, தேய்மானத் தொகை கணக்கிடப்படும். இவ்வாறு கணக்கிட்டு ஒதுக்கப்படும் தேய்மானத் தொகை மேன்மேலும் கூடிக்கொண்டே போகுமேயானால் அதுவே கூடிய தேய்மானம் (accrued depreciation) எனப்படுகின்றது. ஆனால், குறிப்பிட்ட ஒரு விகிதம் எவ்வாறு தீர்மானிக்கப்படுகிறது?

பீல்டு முறைப்படி, ஒரு தொழில் நிறுவனத்தின் உற்பத்தி இடத்திற்குச் சென்று, அங்குள்ள சொத்துகளை நேரடியாகப் பார்வையிட்டு, அவற்றின் மதிப்பினைப் பரிசீலித்து, அதன் பின்னர் அவற்றின் மொத்த மதிப்பிற்கேற்றவாறு, தேய்மான விகிதத்தைக் கணக்கிட்டு அதன்மூலம் கூடிய தேய்மானத்தினை அறிந்து கொள்ளுதல் வேண்டும்.

"இவ்வாறு ஒரு சொத்தின் புறத்தோற்றத்தினைக் கண்டு அதனை மதிப்பிட்டுப் பின்னர் அதன்மூலம் கூடிய தேய்மானத் தொகையினைக் காண்பதே பீல்டு முறையின் சிறப்பியல்புகளாகும்." என்று ஓஹியோ மாகாண வழக்கொன்றின் தீர்ப்பு கூறுகின்றது.*

Ohio Edison & Co. vs City of Mansfield (1961)

**அலுவலக முறை**

கணக்கியல் முறை நன்கு வைக்கப்பட்டிருக்கும் எந்த ஒரு நிறுவனத்திலும் அலுவலகமுறை பயன்படுத்தப்படுகின்றது இம் முறையின்படி சொத்துகளை நேரடியாகக் கண்டு, பின்னர் அவற்றின் மதிப்பினைக் கணக்கிட வேண்டுமென்ற துன்பம் இல்லை. இதற்கு மாறாக, அலுவலகத்தில் இருந்துகொண்டே, கணக்குப் பதிவேடுகளைப் புரட்டிப் பார்த்து அவற்றிலிருந்தே சொத்துகளின் மதிப்பினை அறிந்து கொள்ளலாம். ஆனால், இதற்கென ஒரு நிபந்தனை உண்டு. அதாவது, கணக்குப் பதிவியல் முறைகள் மிகச் சரியாக இருந்தாலே இம் முறையில் வெற்றி கிடைக்கும்.

சிலவகை நிறுவனங்களின் சொத்துகளின் சிறப்பியல்கள் அவற்றின் மதிப்பினைக் காண்பதில் சில சிக்கல்களைத் தோற்று விக்கலாம். இச் சிக்கல்களைத் தீர்க்கும் பொருட்டு, பீல்டு முறை, அலுவலக முறை என்ற இரண்டு முறைகளையும் பயன்படுத்தப் பட்டுச் சொத்துகளின் மதிப்புக் கணக்கிடப்படும். பின்னர் தேய்மான விகிதத்தை நிருணயிப்பதில் தொல்லை ஏதுமிராது என்று எண்ணப்படுகின்றது. சுருங்கக்கூறின் சொத்துகளின் தேய்மான விகிதத்தைக் தீர்மானிப்பதற்குத் எந்த முறை பயன் படுத்தப்பட்டாலும், சொத்துகளின் உண்மையான மதிப்பு முதலில் காணப்படவேண்டும் என்ற கருத்தே மேலோங்கி நிற்கின்றது எனலாம்.

பிறவகைச் சொத்துகளின் மதிப்பீடுகள் :

**நிலத்தின் மதிப்பீடு**

பொதுவாக, எரிவாயு தயாரிக்கும் நிறுவனம் புகைவண்டிப் போக்குவரத்து நிறுவனம் ஆகிய இரண்டுவகை தொழில்களைத் தவிர, மற்றவகைத் தொழில் நிறுவனங்களின் கட்டணவீதத்தை நிருணயிப்பதால், நிலத்தின் மதிப்பு இன்றியமையாததாகக் கருதப்படுவதில்லை. பொதுப்பயன் தொழில்களின் கட்டண அடிப்படையைத் தீர்மானிக்கும்போது, வழக்கம்போல் எல்லா வகைச் சொத்துகளின் மதிப்பினையும் முதலில் கண்ட பின்னர் தேய்மானச் செலவினை அதிலிருந்து கழித்தல் வேண்டும். ஆனால், எல்லாவகைச் சொத்துகளும் என்பது நிலத்தினைத் தவிர, என்றுதான் பொருள் கொள்ள வேண்டும். நிலமும் ஒரு நிறுவனத்தினைக் சார்ந்த சொத்துதான் என்றாலும் அதனுடைய

சில சிறப்புத் தன்மைகள் காரணமாக நிலத்தின் மதிப்பை மற்ற சொத்துகளின் மதிப்புடன் சேர்ப்பதில்லை. மாறாக, பிற சொத்துக்களின் மதிப்பினைக் கண்டறிந்து தேய்மானச் செலவினை நீக்கியபோது எஞ்சியிருக்கும் நிகரமதிப்புடன், நிலத்தின் மதிப்பினைச் சேர்க்க வேண்டும். அதாவது,

சொத்துகளின் மொத்த மதிப்பு—தேய்மானம் =
சொத்துகளின் நிகர + மதிப்பு
நிலத்தின் மதிப்பு

என்றே கணக்கிட வேண்டும். இவ்வாறு நிலத்தின் மதிப்பினை இன்றியமையாததாகக் கருதாமைக்கான காரணங்கள் வருமாறு :

(அ) ஒரு நிறுவனத்திலுள்ள மொத்த சொத்துகளில் நிலத்தின் பங்கு மிகவும் சொற்பமானது. (புகை வண்டி நிறுவனம், எரிவாயு நிறுவனம் தவிர.)

(ஆ) பிறவகைச் சொத்துகளை உற்பத்தி செய்ய செலவு ஏற்படும். ஆனால் நிலத்திற்கு உற்பத்திச் செலவு என்பதில்லை.

(இ) பிறவகைச் சொத்துகளின் மதிப்பு நாளடைவில் குறைந்து கொண்டே போகக்கூடியது. ஆனால் நிலத்தின் மதிப்பு மட்டும் நாளடைவில் உயர்ந்து கொண்டே போகும் தன்மை படைத்தது,

இத்தகைய சிறப்புத் தன்மைகளைக் கொண்டிருப்பதால் நிலத்தின் மதிப்பு பிறவகைச் சொத்துகளோடு சேர்க்கப் படுவதில்லை. மேலும், பிறவகைச் சொத்துகளை எவ்விதமான முறையில் மதிப்பிட்டாலும்,நிலத்தினை மட்டும் தோற்ற மதிப்பீட்டு முறையின் (Original Cost Method) படி மதிப்டுடுவதுதான் வழக்கம். ஆயினும், இக் கருத்திற்கு முரண்பட்ட சிலர், தற்போதைய சந்தை நிலவரப்படி பொதுமக்களுடைய நிலத்திற்கு என்ன விலை கொடுக்கப்படுமோ, அதேமுறையில் நிலத்தை மதிப்பீடு செய்யவேண்டும் என்று கருதுகின்றனர். ஏனெனில், புகை வண்டிப் போக்குவரத்து நிறுவனங்களைச் சார்ந்த நிலங்கள், மிகக்குறைந்த விலையிலோ விலைஏதுமின்றி அன்பளிப்பாகவோ பெற்றுக் கொண்டிருக்கப்படலாம். ஆகவே, தோற்ற மதிப்பீட்டு முறையின்படி பார்த்தால், இவற்றிற்கு மதிப்பே இல்லை என்றோ மிகக் குறைந்த மதிப்பு என்றோதான் தீர்மானிக்க வேண்டும். இஃது உண்மைக்கும், கணக்கியலுக்கும் மாறானது. ஆனால், இந் நிலத்தினை மேற்கொள்ள செய்யப்பட்ட மேற்செலவுகள் நிலத்தின் மதிப்புடன் ஏற்றுக் கொள்ளப்பட

மாட்டாது.* ஆகவேதான் தோற்ற மதிப்பீட்டு முறையினைத் தவிர்த்து தற்போதைய சந்தை விலைப்படி இதனை மதிப்பிடுவது முறையான செயலாகக் கருதப்படுகின்றது. ஆனல், எரிவாயு வைத் தயாரித்து அளிக்கும் நிறுவனங்கள் தங்களுக்குச் சொந்த மான நிலத்தினை தோற்ற மதிப்பீட்டு முறையின்படி மதிப்பிட வேண்டுமென்றே டிராக்சல் (Troxel) கருதுகின்றார். இருப்பினும் தற்போது உலகெங்கிலுள்ள பொதுப்பயன் தொழில் நிறுவ னங்கள் அனைத்தும் சந்தை விலைப்படியே நிலத்தினை மதிப்பிடும் முறையைப் பின்பற்றுகின்றன என்பது குறிப்பிடத் தக்கது.

**புலனாகாச் சொத்துகளை மதிப்பிடுதல்** (Valuation of Intangibles)

பிரபலமான 'ஸ்மித்' வழக்கின் தீர்ப்பு வழங்கப்பட்டபோது, அமெரிக்க நாட்டின் தலைமை நீதிமன்றம் ஆறுவகை மதிப்பீட்டு முறைகளைக் குறிப்பிட்டதுடன், சிலவகைப் புலனாகாச் சொத்துக் களின் மதிப்பினையும் சேர்த்துச்கொள்ள வேண்டியதின் இன்றி யமையாமையை வலியுறுத்தியது. அதன்படி, ஒரு பொதுப் பயன் தொழில் நிறுவனத்திலுள்ள புலனாகும் (Tangible) சொத் துகளின் மதிப்பினைக் காண்பதைவிட, இயங்கிக் கொண்டி ருக்கும் நிறுவனத்தின் மதிப்பினையும், புலனாகாச் சொத்துகளின் (Intangible) மதிப்பினையும் காணுதல் இன்றியமையாதது. சான்றாக, தொழில் நன்மதிப்பு (goodwill), சிறப்புரிமைகளின் மதிப்பு, நீர் உரிமையின் மதிப்பு, குத்தகைச் சொத்துகளின் மதிப்புப் போன்றவற்றை மதிப்பிடுதல் தவிர்க்க இயலாத ஒன்றாகும். இவ்வனைத்துச் சொத்துக்களின் மதிப்பும் கட்டண அடிப்படையைத் தீர்மானிப்பதில் பெரும்பங்கு வகிப்பதால் அவற்றைப்பற்றி இங்குக் காண்போம்.

**தொழில் நன்மதிப்பு** (goodwill)

"நன்முறையில் தோற்றுவிக்கப்பட்டு, செவ்வனே இயக்கப் பெற்று, அனைவராலும் அறியப்பட்ட நல்லதொரு தொழில் நிறு வனத்திற்கு, நுகர்வோரிடையே உள்ள மதிப்பே தொழில் நன் மதிப்பு எனப்படுகின்றது. இந் நன்மதிப்பின் காரணமாகக் குறிப் பிட்ட நிறுவனத்தின்மீது வாடிக்கையாளர்களுக்குள்ள பற்றும், தொடர்பும் அதிகமாவதால், விற்பனையும் அதிகரிக்கின்றது. ஆகவே, நன்மதிப்பு எனப்படுவது ஒரு தொழிலின் இலாபத்தி னைப் பெருக்குவதால், இதனையும் ஒரு சொத்தாகவே எண்ணு வதில் தவறில்லை.

* Minnesota Rate Cases - op - cit p 451

இனி, இத் தொழில் நன்மதிப்பினை மதிப்பிடுவதுபற்றி ஆராய்வோம். இவ் வகைச் சொத்தின் மதிப்புச் சுழல்முறையில் (Circular Method) கணக்கிடப்படுகிறது. மேலும், பொதுப் பயன் தொழில்களில் வணிகர், நுகர்வோர் மதிப்பு அவ்வளவு வேற்றுமையுடைதாகக் கருதப்படுவதில்லை. ஏனெனில், பொதுப் பயன் தொழில்கள் அளிக்கின்ற பொருள்களும், பணிகளும் மிகவும் இன்றியமையாதவையாகவும், பிற தனியார் நிறுவனங் களால் எளிதாக அளிக்கப்பட முடியாதவையாகவும் இருப் பதால், இந் நிறுவனங்கள் முற்றுரிமை பெற்று இயங்குகின்றன. ஆகவே, பொதுப்பயன் தொழில்கள் விதிக்கின்ற கட்டணம் எது வாயினும், பொருள்களைப் பெறும் நுகர்வோர் கட்டணம் அதிக மென்று கருதினல், பொருள்களின்றித் தவிக்கநேரிடும். ஆகவே, தொழில் நன்மதிப்பு எனப்படுவது பொதுப்பயன் தொழில்களைப் பொறுத்தமட்டில் ஏற்படவே வாய்ப்பில்லை. எனவே, தொழில் நன்மதிப்பினைக் கட்டண அடிப்படையைத் தீர்மானிக்கும் பணிக் கான கணக்கில் எடுத்துக் கொள்வதில்லை என்பது குறிப்பிடத் தக்கது.

**சிறப்புரிமைகளின் மதிப்பு**

ஒரு பொதுப்பயன் தொழில் நிறுவனம் குறிப்பிட்ட ஒரு சந்தை எல்லைகளுள் தனது பணியினைத் தொடங்கு முன்னர், சில சிறப்புரிமைகளைப் பெற்றுக் கொள்வது இயல்பு. இச் சிறப் புரிமைகள் நிறுவனத்தின் பணியினை எளிதாக்கவும், தடையின்றிச் செய்யவும் இன்றியமையாது தேவைப்படுகின்றன. பொதுவாக ஒரு குறிப்பிட்ட சந்தை எல்லைக்குள் பணிபுரிய ஒரேஒரு பொதுப் பயன் தொழில் நிறுவனத்திற்கு மட்டுமே உரிமை தரப்படும். ஆனல், போக்குவரத்து நிறுவனம் போன்ற சில நிறுவனங்கள் இதற்கு விதிவிலக்காகும். இவ்வாறு முற்றுரிமை பெற்ற நிறு வனம், தன்னுடைய நுகர்வோரிடமிருந்து எவ்விதக் கட்டணத்தை யும் பெறக்கூடிய நிலையை அடைகின்றது. மற்ற நிறுவனங்களை விட அல்லது பொதுவாகக் கிடைக்கக்கூடிய வருவாயினைவிட பொதுப்பயன் தொழில்களின் முற்றுரிமை, மிகுதியான வரு வாயினைப் பெற்றுத் தர வல்லவை. இத்தகைய தன்மை படைத்த சிறப்புரிமையை (சந்தையில் தனிநிலை) நிறுவனத்தின் சொத்து களில் ஒன்ருகக் கருதினலும் அவற்றை எவ்வாறு மதிப்பிடுவது என்பது பற்றிய சிக்கல் எழத்தான் செய்கின்றது. மேலும் கட்டண அடிப்படையைத் தீர்மானிப்பதில் சிறப்புரிமைகளின் மதிப்புச் சேர்க்கப்படுவதில்லை என்பதும் குறிப்பிடத்தக்கது. ஏனெனில், மிகுந்த வருவாயினைத் தரக்கூடிய இச் சிறப்பு உரிமை யின் மதிப்பும் மிகுந்திருக்குமாகையால், இம் மதிப்பினைக் கட்டண

அடிப்படையைத் தீர்மானிக்கக் கணக்குடன் சேர்த்துக் கொண்டால் நுகர்வோருக்கு நியாயமான கட்டணத்தினை நம்மால் விதிக்க இயலாது போய்விடும் என்பது உறுதி.

**நீர் உரிமைகள் (Water Rights)**

மின் திறன் வழங்கும் நிறுவனம், குடிநீர் வழங்கும் நிறுவனம், நீர்பாசன வசதி செய்து தரும் நிறுவனம் போன்ற நிறுவனங்களுக்கு 'நீர் உரிமைகள்' வழங்கப்படுகின்றன. அதாவது, இந் நிறுவனங்கள் கால்வாய், ஆறு, கடல் போன்ற நீர்நிலைகளைப் பயன்படுத்துவதன்மூலம் தங்கள் பணியினைச் செய்ய வேண்டியிருப்பதால், எவ்விதத் தடையுமின்றி அவற்றைப் பயன்படுத்திக் கொள்ளும் உரிமை வழங்கப்படுதல் வேண்டும். சில நேரங்களில் இந் நிறுவனங்கள் வாங்கக்கூடிய நிலப்பரப்பின் வழியே, அணைகளோ, ஊற்றுகளோ நீர்ப் பெருக்கமோ ஏற்படின் அதனையும் பயன்படுத்திக் கொள்ளும் உரிமை வழங்கப்படவேண்டும். பிற உரிமைகள் மாநில அல்லது உள்ளாட்சி மன்றங்களாய் இந் நிறுவனங்களுக்கு அளிக்கப்படுகின்றன. இனி, நீர் உரிமைகளின் மதிப்பினை எவ்வாறு கணக்கிடுவது என்ற வினா எழலாம். இவ்வுரிமைகளைப்பெற என்ன செலவு செய்யப்பட்டதோ, அச் செலவுத் தொகையையும் இவ்வுரிமைகளினால் நிறுவனத்திற்குக் கிடைக்கக்கூடிய வருவாய்த் தொகையையும் ஒன்றாகச் சேர்ப்பின் அதுவே இவ்வுரிமையின் மதிப்பாகும். ஆனால், பொதுப்பயன் தொழிலின் கட்டண அடிப்படையைத் தீர்மானிப்பதில், இவ்வுரிமைகளைப் பயன்படுத்திப்பெறக்கூடிய வருவாய்த் தொகையினைக், கணக்கிற்கு எடுத்துக் கொள்வதில்லை. இருப்பினும், இவ்வுரிமைகளைப் பெறுவதற்காகச் செய்யப்பட்ட செலவுத் தொகையினை மட்டும், கட்டண அடிப்படையைத் தீர்மானிப்பதற்காகக் கணக்குடன் இணைத்துக் கொள்வது வழக்கம்.

**குத்தகைச் சொத்துகள் (Lease-hold Properties)**

பொதுவாக, எல்லாவிதமான சொத்துகளும், குத்தகைக்கு எடுக்கப்பட்டாலும், நிலத்தினையே பெரும்பாலும் குத்தகைக்கு எடுப்பது வழக்கம். அதிலும் குறிப்பாக, எரிவாயு வழங்கும் நிறுவனங்கள், நிலத்தினைக் குத்தகைக்கு எடுத்துக் கொள்வது பெரிதும் காணப்படுகின்றது. இவ்வாறு, எடுக்கப்பட்ட நிலத்தினை அகழ்ந்து அந் நிலத்திலிருந்து இயற்கையான எரிவாயு (Natural gas) கிடைக்குமென அறிந்து கொண்டால், உடனே அந் நிலத்தின் மதிப்பு உயர்ந்துகொண்டே போகும். உண்மையான விலையைவிட, இந் நிலத்தின் சந்தைவிலை மிகவும் உயர்ந்தே காணப்படும். இவ்வாறு மிகுந்து காணப்படும் சந்தை விலையை

இக் குத்தகைச் சொத்துகளின் மதிப்பாக ஏற்றுக் கொள்வதா அவற்றையும் கட்டண அடிப்படையைத் தீர்மானிக்கும் பணிக்கு எடுத்துக் கொள்வதா என்பன போன்ற வினாக்கள் தொடர்ந்து எழுகின்றன. முன்னாள்களில், நிலத்தினை அகழ்ந்து எரிவாயுவைக் கண்டுபிடிக்கும் பணிக்கு ஊக்கமளிக்கும் பொருட்டு, இக் குத்தகைச் சொத்துகளின் அதிகரித்த மதிப்பினை அப்படியே முழுதாகவோ ஒரு பகுதியாகவோ கணக்கிற்கு எடுத்துக் கொள்வது வழக்கமாயிருந்தது. ஆனால், தற்சமயம் உள்ள பெரும்பான்மையான பொதுப்பயன் தொழில்கள் குத்தகைச் சொத்துகளைத் தோற்ற மதிப்பீட்டு முறையின்படியே மதிப்பீடு செய்யத் தொடங்கியுள்ளன. ஆகவே, அதிகரித்துள்ள மதிப்புக் கட்டண அடிப்படைக்காகக் கணக்கில் எடுத்துக் கொள்ளப்படுவதில்லை.

**தொழிலின் இயக்க மதிப்பு** (Going Concern Value)

வெற்றிகரமாக இயங்கிக் கொண்டிருக்கும் ஒரு நிறுவனத்தின் மொத்த மதிப்பிற்கும், அதேபோன்று தொடங்கப் பெற்று ஆனால் இன்னும் இயங்காத நிலையிலுள்ள மற்றொரு தொழில் நிறுவனத்தின் மதிப்பிற்கும் இடையேயுள்ள வேறுபாடுதான் ஒரு தொழிலின் இயக்க மதிப்பு (Going Concern Value) எனப்படும். இத் தொழிலின் இயக்க மதிப்பினைக் கணக்கிடும் பொருட்டு, எவ்வித முறையும் குறிப்பாகச் சொல்லப்படவில்லை. இனி, தொழிலியக்க மதிப்புப் பற்றிய வேறுபட்ட இரு கருத்துகளைப் பார்ப்போம். முதலாவது கருத்துப்படி ஒரு தொழிலினைத் தொடங்குவதற்கும் நிருவகிப்பதற்கும், அத் தொழிலிலுள்ள அலுவலருக்குப் பயிற்சி அளிப்பதற்கும் மற்றும் அத் தொழிலை மேம்படுத்தவும் ஆகக்கூடிய மொத்தச் செலவே தொழிலியக்க மதிப்பு ஆகும்.

[Going Concern Value of Business = Cost of Establishment
+
Cost of Recruiting of Training Personnel
+
Cost of Developing and Administrative Procedures
+
Cost of Acquiring a Market
+
Cost of Soliciting Business]

இரண்டாவது கருத்துப்படி, நல்ல வளர்ச்சியை அடையும் நாள் வரை ஒரு தொழில் அடைந்துள்ள நட்டத்தின் கூட்டுத் தொகையே தொழிலியக்க மதிப்பாகக் கருதப்படுகிறது.

(Going Concern Value = Total Losses Sustained in Earlier of Development.]

ஆனால், மேற்காணும் இரு கருத்துகளும் தவறானவை. ஏனெனில், (முதலாவது கருத்துப்படி) ஒரு தொழில் வளர்ச்சியடையும் வரை செலவிடப்பட்ட பல்வேறு செலவுகள் ஏற்கனவே செயல் முறைச் செலவுகளுடன் (Operating Expenses) சேர்க்கப்பட்டிருக்குமாகையால் கட்டண அடிப்படையுடன் இதனைச் சேர்க்க இயலாது. இனி இரண்டாவது கருத்தின்படி, இதுகாறும் ஏற்பட்ட நட்ட ஈட்டினையே தொழிலியக்க மதிப்பாகவும் கொள்ளவும் இயலாது. கடந்த வருடங்களின் நட்டத்தினை, நிகழ்கின்ற வருடத்தின் இலாபத்தினைக் கொண்டுதான் சமாளிக்க வேண்டுமாகையால் அதிக அளவு இலாபம் ஈட்ட வேண்டியுள்ளது. எனவே இவ்விரண்டு கருத்துகளுமே ஏற்றுக் கூடியவையல்ல என்பதே பொருந்தும். மேலும், ஒரு தொழிலின் தொழிலியக்க மதிப்பினைக் கணக்கிட எவ்விதமான குப்ப்பிட்ட முறையும் இல்லை என்பதும் நினைவில் கொள்ளத்தக்கது.

இக் குறைபாட்டினை நீக்கும் பலவகைத் தொழில் நிறுவனங்கள் தங்களுக்கேற்ற வகைகளிலெல்லாம் இத் தொழிலியக்க மதிப்பினைக் கணக்கிட்டுக் கொள்ளத் தொடங்கின. பெரும்பாலான நிறுவனங்கள் தங்களிடமுள்ள புலனாகும் (Tangible) சொத்துகளின் மதிப்பில் 10 விழுக்காட்டினை தொழிலியக்க மதிப்பாக எண்ணி அதனையும் கட்டண அடிப்படையைக் கணக்கிடுவதற்கு எடுத்துக் கொண்டன. ஆனால், இம் முறை தவறானதென்று பின்னாள்களில் வந்த நீதிமன்றத் தீர்ப்புகள் கூறுகின்றன*. ஆகவே, டிராக்ஸலின் கருத்துப்படி தொழிலியக்க மதிப்பினைக் காண எவ்வித முறையும் இல்லையாதலால், ஒரு பொதுப்பயன் தொழில் நிறுவனத்திற்கு வழங்கப்பட்டுள்ள சிறப்புச் சலுகைகளின் மதிப்பினைக்கொண்டே, அந் நிறுவனத்தின் தொழிலியக்க மதிப்பினைக் கண்டு கொள்ள வேண்டும் என்ற முடிவிற்கு வருவதே ஏற்புடையதாகும்.

### செயல்முறை முதலீடு

மறுஉற்பத்திச் செலவுத் தொகையினைக்காணும் முயற்சியில் நாம் இறுதியாகச் செய்ய வேண்டியது செயல்முறை முதலீட்டுத் தொகைக்கென ஒதுக்கீடு செய்ய வேண்டியது ஒன்றே. இதுபற்றிச் சென்ற அத்தியாயத்தில் விரிவாகக் கூறப்பட்டுள்ளது.

* 100 Angels Gas Ease. Troxel—op, Cit. p. 324

**இதுவரை நாம் அறிந்தது என்ன ?**

பொதுப்பயன் தொழில் ஒன்றின் கட்டண அடிப்படையைத் தீர்மானிக்கும் பொருட்டு அத் தொழிலினைச் சார்ந்த அனைத்துச் சொத்துகளையும் விலைமதிப்பீட்டு முறைப்படி (Appraisal Method) மதிப்பீடு செய்தல் வேண்டுமென்றும் அதற்கெனக் கீழ்க்காணும் வழிகளைக் கையாள வேண்டுமென்றும் இதுகாறும் கூறப்பட்டது :—

(1) நிறுவனத்திலுள்ள சொத்துகளை (இன்வென்டரி) நேரில் கண்டோ தொடர்குறிப்பேடுகளைப் (Continuing Ledgers) பார்த்தோ ஒரு பட்டியல் தயார் செய்ய வேண்டும்.

(2) தயார்செய்யப்பட்ட பட்டியலிலுள்ள சொத்துகளின் மதிப்பினைக் காணுதல் இரண்டாவது படியாகும்.

(3) இவ்வாறு கண்டறியப்பட்ட மதிப்புடன் கட்டுமான மேற்செலவுகள் (Construction overheads) ஏதுமிருப்பின் அவற்றையும் சேர்க்கவேண்டும்.

(4) இம் முறைப்படி கிடைத்த தொகையே சொத்துகளின் மொத்த மதிப்பாகும். இம் மொத்த மதிப்பிலிருக்கும் சொத்துகளின்மீதான ஏறிய (அல்லது கூடிய) தேய்மானத் (accrued depreciation) தொகையை நீக்கிவிட வேண்டும்.

(5) நிறுவனத்தைச் சார்ந்த நிலத்திற்கான மதிப்பினைக் கண்டறிந்து அதனையும் சேர்த்துக் கொள்ள வேண்டும்.

(6) புலனாகாச் சொத்துகள் (Intangible assets) ஏதுமிருப்பின் அவற்றின் மதிப்பினைக் கண்டறிந்து அதனையும் கணக்கில் ஏற்றுக்கொள்ள வேண்டும்.

(7) இறுதியாக, செயல்முறைக் செலவுக்கென ஒதுக்கீடு செய்து அதனையும் சேர்த்துக்கொள்ள வேண்டும். இவ்வாறு செய்த பின்னர் நிறுவனத்தின் உண்மையான மதிப்பு என்னவென்று தெரியுமாதலால் மேற்கொண்டு கட்டண அடிப்படையைத் தீர்மானிக்க, எளிதாக இருக்கும் என்பதை இதுகாறும் நாம் அறிந்தோம்.

**II. தோற்ற மதிப்பு**

பொதுப்பயன் தொழில்களனைத்தும், தங்களது நிறுவனத்திலுள்ள சொத்துகளின் மதிப்பினை எவ்வாறு வைத்திருக்க

வேண்டும் என்பது பற்றி இங்குப் பார்ப்போம். ஒரு சொத்து வாங்கப்படும்போதோ உருவாக்கப்படும்போதோ அதனுடைய மதிப்பு என்னவோ, அதுவே 'தோற்ற மதிப்பு' எனப்படும். பெடரல் கமிஷனின் கருத்துப்படி, முதன்முதலாக ஒரு சொத்து பொதுப்பயன் தொழிலில் ஈடுபடுத்தப்படும்போது அதன்மதிப்பு என்னவோ, அதுவே அச் சொத்தின் தோற்றமதிப்பாகக் கருதப் படும். ஒரு நிறுவனத்திலுள்ள சொத்துகள் அனைத்தும் இத் தோற்ற மதிப்பீட்டின்படியே மதிப்பீடு செய்யப்பட்டு, அவ்விவ ரங்கள், பேரேட்டுக் குறிப்புகளில் பதிவு செய்யப்பட்டிருக்க வேண்டுமென்று பொதுப்பயன் தொழில்களின் மீதான ஒழுங் காற்றுக் குழு கருதுகின்றது. ஏனெனில், ஒவ்வொரு பொதுப் பயன் தொழிலும், தன்னுடைய வசதிக்கேற்றபடி, தன்னிட முள்ள சொத்துக்களை மதிப்பீடு செய்து வைத்துக்கொண்டால், அவற்றின் கட்டணமுறையும் வெவ்வேருகவே இருக்கும். நுகர் வோருக்காகவே பொதுநல ஈடுபாட்டுடன் பணிபுரியும் இந் நிறு வனங்கள் இத்தகைய கட்டண வேறுபாட்டுடன் பணிபுரிதல் முறையாகாது. எனவே, இவற்றை முறைப்படுத்தும் எண்ணத் துடன் எல்லா நிறுவனங்களும், தங்களது சொத்துகளைத் தோற்ற முறைப்படியே மதிப்பீடு செய்தல் வேண்டுமென வலியுறுத்தப் பட்டன.

தோற்றமுறை மதிப்பீட்டின்படி, சொத்துகளின் பேரேடுகள் வைக்கப்பட்டிருக்க வேண்டுமானல் அச் சொத்து

(அ) குறிப்பிட்ட நிறுவனத்தாலேயே உருவாக்கப்பட் டதா? அல்லது

(ஆ) பிறரால் உருவாக்கப்பட்டு, இந் நிறுவனத்தால் உடைமையாக்கப்பட்டதா?

என்ற வினவிற்கு விடையளித்தல் அவசியமாகிறது. குறிப்பிட்ட ஒரு சொத்து நிறுவனத்தாலேயே உருவாக்கப்பட்டது என்ருல், அதற்கான செலவுகள் கணக்குப் பதிவேட்டில் சரிவரக் குறிக்கப் பட்டிருக்கும். எனவே, இக் கணக்கேடுகளைப் புரட்டிப் பார்த்துக் குறிப்பிட்ட சொத்தின் தோற்ற மதிப்பு என்னவென்பதை எளி தாக அறிந்துகொள்ள முடியும். இவ்வாறன்றி இதே சொத்து, வேருெரு நிறுவனத்தால் உருவாக்கப்பட்டுப் பின்னர் பொதுப் பயன் தொழில் நிறுவனத்தால் வாங்கப்பட்டிருக்குமேயானல், அப்போது அச் சொத்தின் வாங்கியவிலை எதுவோ, அதுவே தோற்றமதிப்பாகக் கருதப்படும். இதே எடுத்துக்காட்டில், குறிப்பிட்ட சொத்து வேருெரு பொதுப்பயன் தொழில் நிறுவ னத்திடமிருந்து வாங்கப்பட்டால், அப்போது வாங்கிய விலை

தோற்ற மதிப்பாகக் கருதப்படமாட்டாது. ஏனெனில், ஏற்க னவே அச்சொத்து பொதுப்பயன் தொழிலொன்றில் ஈடுபடுத்தப் பட்டுவிட்டதால் அதனுடைய தோற்றமதிப்பு என்பது முதலாவது நிறுவனத்தின் வாங்கிய விலையைத்தான் குறிக்கும் என்பதை அறிய வேண்டும். இவ்வாறு ஒரு நிறுவனத்திலுள்ள சொத்து களின் தோற்ற மதிப்பினை அந் நிறுவனத்தின் கணக்குப்பதிவேடு களிலிருந்து அறிந்து கொள்ளலாம். அவ்வாறு அறிய முடியாத போது இம் மதிப்பினைக் கணக்கீட்டுடனும் அறிந்துகொள்ளலாம்.

**தோற்ற மதிப்பும், ஏட்டு மதிப்பும் (Original Cost and Book Cost)**

பொதுப்பயன் தொழில் நிறுவனங்கள் நெடுநாள்கள்வரை ஒழுங்காற்றப்படாது இருந்தமையால் அவற்றின் சொத்துகள் பற்றிய புள்ளிவிபரங்களும் சரிவர வைக்கப்படாது இருந்தன.

மேலும், இந் நிறுவனங்களின் கணக்கு ஏடுகளில் சொத்து களின் மதிப்பாகக் குறிக்கப்பட்டிருக்கும் தொகை அச்சொத்து களின் உண்மையான தோற்றமதிப்பிலிருந்து வேறுபட்டதாகக் காணப்பட்டது. ஆகவே, இவ்விரண்டு மதிப்புகளுக்குமிடையே உள்ள வேறுபாட்டுத் தொகையைக் கணக்கேடுகளிலிருந்து நீக்கி விட வேண்டுமென வலியுறுத்தப்பட்டது. மேலும், பொதுப்பயன் தொழில்கள் தற்போது வளர்ச்சியுற்றுள்ளதுபோல் முன்னர் தோன்றிய தொழில் நிறுவனங்கள் இல்லை. ஒரு வணிக நிறுவனம் தோற்றுவிக்கப்படுமேயானால், அஃது ஒரே ஒரு குறிப்பிட்ட தொழிலில் மட்டுமே தன்னுடைய முழுக் கவனத்தையும் செலுத்தி வரும். ஆனால், இன்றைய தினம் கூட்டுக்கம்பெனிகள், துணைக் கம்பெனிகள், பிடிப்புக் கம்பெனிகள் போன்ற பல்வகை, வணிகக் அமைப்புகள் தோன்றியுள்ளன. தனியார் துறைகளில் மட்டு மின்றிப் பொதுப்பயன் தொழில்களிலும் இவ்வகைக் கூட்டமைப்பு கள் இன்றைய தினம் தோன்றியுள்ளன. இவைகளின் சொத்து களைப்பற்றி பலதரப்பட்ட மதிப்பீடுகள் செய்யப்பட்டிருக்கும். ஆகவே, இவற்றின் சரியான மதிப்பினைக் கண்டுபிடித்த பின்னரே சரியான அல்லது முறையான கட்டண அமைப்பினைத் தீர்மானிக்க முடியும்.

உண்மையான மதிப்பீட்டு முறைக்கும், தோற்றமுறை மதிப் பீட்டு முறைக்குமிடையே நெருங்கிய தொடர்பு உள்ளதென்பதை நாம் அறிதல் வேண்டும். ஏனெனில், தோற்ற முறைப்படிக் கணக்கிட்டுக் கண்டுபிடிக்கப்பட்ட ஒரு சொத்தின் மதிப்பு, நிறுவ னத்தின் கணக்கேடுகளில் சரியாகப் பதியப்பட்டிருக்கும். இதனையே உண்மையான மதிப்பாகப் பல நிறுவனங்கள் ஏற்றுக்

கொள்ளுகின்றன. ஆகவே, எளிதில் அனைவராலும் தெரிந்து கொள்ளும் வகையிலும், சீரான முறையிலும் தோற்றமுறை மதிப் பீடுகள் வைத்திருக்கப்படவேண்டுமென்று தெரிகிறதல்லவா? இவ்வாறு வைத்திருப்பதில் மற்றொரு நன்மை என்னவெனில், தேய்மானக் கணக்குகளை எளிதாகச் செயற்படுத்த முடியும் என்பதாகும்.

**தோற்றமுறை மதிப்பீட்டின் வரலாறு**

தொழில்நுட்பம் வேகமாக வளர்ந்துவரத் தொடங்கியதன் காரணமாக, ஆங்காங்கே பலவிதத் தொழில்களும் பல்கிப் பெருகத் தொடங்கின. தனியார் தொழில்கள், கூட்டுப்பங்குக் கம்பெனிகள், பொதுப்பயன் தொழில்கள், பிடிப்புக் கம்பெனிகள் (Holding Companies) போன்ற பல்வகை அமைப்புகள் உல கெங்கும் தோன்றின. பொதுப்பயன் தொழில்கள் குறிப்பிட்ட ஒரே ஒரு நிறுவனமாக மட்டும் இயங்காமல், பல நிறுவனங்கள் ஒன்றாக இணைந்தும் செயற்படத் தொடங்கின. இதனால் சில நன்மைகளும், பல தீமைகளும் ஏற்பட்டன. அவற்றுள், தொழில் நிறுவனங்களை விற்கும்போது ஏற்படுகின்ற மோசடிகள் குறிப் பிடத்தக்கவை. சான்றாக, ஒரு பொதுப்பயன் தொழிலினை எடுத்துக் கொள்வோம். அத் தொழில் ஏதோ ஒரு காரணம் பொருட்டு விற்கப்படும் நிலைக்கு வந்துள்ளது என்றும் கருது வோம். இந் நிலையில், அந் நிறுவனத்தை வாங்க முன்வருவோர் முதலில் அந் நிறுவனத்தினுடைய சொத்துகளின் மதிப்பினைக் கண்டறிய முற்படுவர். ஆனால், இச் சொத்துகளின் உண்மை யான மதிப்புக்கும் ஏட்டு மதிப்பிற்கும் வேறுபாடு இருக்கலா மல்லவா? பெரும்பாலும், ஏட்டுமதிப்பினை மிகப்பெருமளவில் அதிகரித்துப் பின்னர் அச் சொத்துகளை விற்பனை செய்து வருவர். இந் நிறுவனத்தை வாங்கமுற்படும் நபர், தமது கணக்குப் பதிவேடுகளில், ஐயத்திற்கிடமின்றி, இச் சொத்து களின் அதிகமான மதிப்பினையே (உண்மைக்கு முற்றிலும் புறம் பான மதிப்பினை) பதிவு செய்வார். இதன் விளைவு என்ன ஆகும் என்பதைச் சிந்தித்துப் பார்த்தல் வேண்டும். அதிகமான மதிப் புள்ள சொத்துகளை வைத்திருக்கும் இந் நிறுவனத்தின் கட்டண அடிப்படையும் அதிகமாகவே காணப்படும். இதன் விளைவாக, நுகர்வோரிடமிருந்து பெறப்படும் கட்டணமும் அதிகமாகவே இருக்கும். நுகர்வோருக்கு இத்தகைய அநீதி இழைக்கப் படாமல் இருக்கவே பொதுப்பயன் தொழில்களனைத்தும் தங்க ளுடைய ஏடுகளில், நிறுவனத்திலுள்ள சொத்துகளின் தோற்ற மதிப்பினைமட்டுமே பதிவு செய்து வைத்திருக்க வேண்டுமென்றும் இவ்வாறன்றி வேறு ஏதேனும் மதிப்புக் குறிக்கப்பட்டிருப்பின்

இவையிரண்டிற்குமிடையே உள்ள வேறுபாட்டுத் தொகையை அறவே நீக்கவேண்டுமென்றும் வலியுறுத்தப்பட்டது.

இனி, கணக்குப் பதிவேடுகளில் காணப்படும் மதிப்பினைவிட ஒரு பொதுப்பயன் தொழிலைச்சார்ந்த சொத்தினுடைய விற்பனை மதிப்பு அல்லது ஏற்புடைமை மதிப்பு (Acceptance Value) அதிகமாகவே இருப்பது ஏன் என்ற வினவிற்கு விடைகாண முற்படுவோம். பொதுவாகவே, ஒரு சொத்தினை உண்டாக்க ஆகும் செலவினைவிட, அச் சொத்து, சில காலத்திக்குப் பின்னர், விற்க வேண்டிய நிலைக்கு வருமேயானால் அப்போதுள்ள விலை நிலவரப் படி, அதனுடைய மதிப்பு கண்டிப்பாக உயர்ந்தே காணப்படும். ஏனெனில், நாளுக்குநாள் உற்பத்திச் செலவு கூடிக்கொண்டே போவதை நாம் அறிவோம். இப்படிப் பல காரணங்களைச் சொன்னபோதிலும், மற்றொரு தவிர்க்க இயலாத கருத்தினைச் சொல்லத்தான் வேண்டியுள்ளது. அதாவது, பொதுப்பயன் தொழில் ஒன்றினை அப்படியே வாங்கும்போதோ அங்குள்ள சொத்துகளை வாங்கும்போதோ, எவரும் பேரம் பேசி விலையினை முடிவு செய்வதில்லை. இதன் காரணமாக, என்ன விலைக்கு விற்றாலும், அதனையே வாங்கும் விலையாகக் கொள்ளும் நபர்கள் இருப்பதாலேயே இச் சொத்துகள் ஏற்றுக்கொள்ளப் படும்போது, அவற்றின் மதிப்பு மிகவும் உயர்ந்து காணப்படுகின்றது. தொழில்முறையில் அதிக அளவு இலாபத்தினை ஈட்டும் பொருட்டு ஏட்டுவிலை, உண்மையான விலை ஆகியவற்றை விட, விற்பனை விலை மிகவும் அதிகமாக நிருணயிக்கப்படுகிறது.

**தோற்றமதிப்பினை நிருணயித்தல்**

தோற்ற மதிப்பினைக் கண்டு, அதன்படி, சொத்துகளின் பட்டியலை ஒவ்வொரு பொதுப்பயன் தொழிலிலும் தயார் செய்ய வேண்டிய நிலை ஏற்பட்டுள்ளது. இவ்வாறு செய்வதற்கு, இந் நிறுவனங்களுக்கு ஒரு கால வரையறையும் கொடுக்கப்படும். இக் காலவரையறைக்குள், சொத்துகளின் தோற்ற மதிப்புக் கணக்கிடப்பட்டு, அதன்படி கணக்குப் பதிவேடுகள் தயார் செய்யப்பட்டிருக்கவேண்டும். சான்றாக, அமெரிக்க நாட்டிலுள்ள பெடரல் பவர் கமிஷன் (U.S. Federal Power Commission) தனது அதிகாரத்திற்குட்பட்ட எல்லா நிறுவனங்களும் இரண்டு வருட காலத்திற்குள், இத்தகைய மாற்றத்தினைச் செய்ய வேண்டுமென்று கட்டளையிட்டது. இவ்வாறு செய்யும்போது ஏதேனும் வேறுபாடுகள் தோன்றினால் அதனை "மதிப்புச் சீரமைப்பு" என்று ஏற்றுக்கொள்ள வேண்டும். பெடரல் பவர் கமிஷனின்

உத்திரவுப்படி, மின் திறன் வழங்கும் நிறுவனம் ஒன்றின் இயந்திரக் கணக்குக் கீழ்க்காணும் முறையில் வைக்கப்பட்டிருத்தல் வேண்டும் :—

| | | |
|---|---|---|
| கணக்கு எண் | 100·3 | மின்சார இயந்திரம். |
| க. எண், | 100·1 | பணியில் ஈடுபடுத்தப்பட்டுள்ள மின்திறன் இயந்திரம். |
| க. எண். | 100·2 | பிறருக்குக் குத்தகைக்குவிடப்பட்டுள்ள மின்சார இயந்திரங்கள். |
| க. எண். | 100·4 | எதிர்கால உபயோகத்திற்காகப் பயன்படுத்தப்படும் மின்சார இயந்திரங்கள். |
| க. எண். | 100·5 | மின்சார இயந்திரங்களை உடைமையாக்க ஏற்பட்ட செலவுகள். |
| க. எண். | 100·6 | சீரமைப்புச் செய்யப்படும் மின்சார இயந்திரங்கள். |
| க. எண். | 100.7 | மின்சார இயந்திரங்களின் அனுசரிப்புகள் (adjustments) |

மேற்கூறப்பட்ட கணக்குப் பதிவியல்முறையில் எவ்வாறு சொத்துகளின் மதிப்புகள் பிரிக்கப்பட்டுள்ளன என்பதைக் காண்போம்.

முதன்முதலாக ஒரு சொத்தினைப் பொதுப்பயன் தொழிலில் ஈடுபடுத்தும்போது அதனுடைய மதிப்பு என்னவோ, அதுவே அச் சொத்தின் தோற்ற மதிப்பு ஆகும். அம் மதிப்புத் தொகை, மேற்படி கணக்குகளில் 100.1 முதல் 100.4 வரை குறிக்கப்பட்டிருக்கும். தோற்ற மதிப்பினைவிட, கணக்கு ஏடுகளில் இச் சொத்துக்களின் மதிப்பு வேருகக் குறிக்கப்பட்டிருப்பின், இவ்வேறுபாட்டுத்தொகை 100·5 அல்லது 100·7 என்ற எண்களின் கீழுள்ள கணக்குகளில் குறிக்கப்பட்டிருக்கும். ஒரு சொத்தின் தோற்றமதிப்பிற்கும், அச் சொத்தினை உடைமையாக்குவதற்குச் செய்யப்பட்ட செலவிற்குமிடையே வேறுபாடு ஏதேனும் காணப்பட்டால், இவ்வேறுபாட்டுத்தொகை 100·5 என்ற எண்ணின்கீழ்க் குறிக்கப்படும். ஒரு சொத்து பொதுப்பயன் தொழிலைப் பொறுத்தமட்டில் என்ன மதிப்புடையதாக இருப்பினும் அம் மதிப்புத் தொகைக்கும், ஏட்டுமதிப்பிற்குமிடையே உள்ள வேறுபாடு 100·7 என்ற எண்ணுள்ள கணக்கில் குறிக்கப்படும். இவ்வாறு மின்திறன் வழங்கும் நிறுவனங்கள் தனித்தனி எண்

கொண்ட கணக்குகளில் ஒரு சொத்தின் வெவ்வேறு மதிப்புத் தொகையினைக் குறித்துவைக்கும் வழக்கத்தினைக் கையாள்கின்றன.

## கருத்துக்கோப்பு

கட்டண அடிப்படையின் தொடர்ச்சி—விலைமதிப்பு முறை—தோற்ற மதிப்பு முறைகளின்வழியே சொத்துகளின் மதிப்பினைக் காணல்—காணத்தகு மற்றும் காணத்தகாச் சொத்துகளை மதிப்பிடுதல்—கூடிய தேய்மானம்—இதனுடைய தன்மை, அளவு போன்ற செய்திகள்—தோற்ற மதிப்பினைக் காணல்—தோற்ற மதிப்பீட்டின் வரலாறு—இன்றைய நிலை?

# 11. தேய்மானம்

"வான்முட்டும் கோபுரங்கள், உயர்ந்த மாளிகைகள், அமைதி யான ஆலயங்கள், அழகான இவ்வுலகம் ஆம், இவ்வனைத்துப் பொருள் களும் என்றுமே நிலையாமை என்பதை அடைந்தே தீரும்போது ஒரு சிறு துளியேனும் மீதமிருப்பதில்லை"

"தி டெம்பஸ்ட் (Act IV Sc I) வில்லியம் ஷேக்ஸ்பியர்

"காலமென்னும் மந்திரக்காரனின் கையில் எத்துணை விலையுயர்ந்த பொருளாயினும் நாளடைவில் மதிப்பிழந்து போய்விடும்"

—"கிளேசர்"(Glaser)

விலையுயர்ந்த பொருளாயினும், விலை குறைந்த பொருளாயி னும் நாளடைவில் தங்களது மதிப்பினைப் படிப்படியாக இழந்து இறுதியில் மதிப்பற்றுப் போகக்கூடிய நிலையே அப் பொருளின் தேய்மானம் என்று குறிப்பிடப்படுகின்றது. ஒரு தொழில் நிறுவ னத்திலுள்ள மிகச் சிறிய பொருளாயினும், அல்லது மிகப் பெரிய பொருளாயினும், ஒரு குறிப்பிட்ட நாள்வரைதான் அது தன்னுடைய மதிப்பினை இழக்காமலிருக்கும். ஆனால், நாளடை வில் அச் சொத்துகள் தங்களது மதிப்பினை அறவே இழக்கவே செய்யும். இதனையே, தேய்மானம் என்று குறிப்பிடுகிறோம். இத் தேய்மானம் ஏற்படக் காரணமாயுள்ளவற்றைக் காண்போம்.

(அ) தொடர்ந்த உபயோகத்தின் காரணமாகத் தேய்ந்தும், அயர்ந்தும் போதல்.

(ஆ) காலப்போக்கின் காரணமாக ஒரு குறிப்பிட்ட பொருள் நெடுநாள்கள் நுகரப்படாதிருந்தபோதும், அதனுடைய மதிப்பு குறைந்துகொண்டேபோகும். (மோட்டார் வண்டிகள்) சில நேரங்களில் புதிய இயந்திரங்கள் அடிக்கடி சந்தைக்கு வந்துகொண்டி ருப்பதால், பழைய இயந்திரங்களின் மதிப்புக் குறைந்துபோவது இயற்கை.

**புதிய கண்டுபிடிப்புகள்**

(இ) இன்றைய விஞ்ஞான உலகில் நாள்தோறும் புதிய கண்டுபிடிப்புகள் தோன்றிக்கொண்டே இருக்கின்றன. இன்றையதினம் மிகப் புதியதாகத் தோன்றியுள்ள ஓர் இயந்திரம் அடுத்த மாதமோ, அல்லது அதற்கடுத்த மாதமோ பழைய இயந்திரமாக மாறிவிடலாம். அதாவது, இதனைவிடப் புதிய முறையில் தயார் செய்யப்பட்ட இயந்திரம் சந்தையில் அறிமுகப்படுத்தப்பட்டிருப்பின், முதல் இயந்திரம் தனது மதிப்பினை இழந்துவிடுகிறது. சான்றாக, ஏற்கனவே கண்டுபிடிக்கப்பட்ட டகோடா விமானங்கள், காரவல்லி விமானங்கள் வந்ததும் பழையனவாகிவிட்டன. அதுபோலவே, சூபர்சானிக் விமானங்களின் முன்னே, காரவல்லி போன்ற விமானங்கள் மதிப்பிழந்துபோகின்றன. இவ்வாறு புதிய கண்டுபிடிப்புகள் வந்ததும் பழைய கண்டுபிடிப்புகளுக்கு மதிப்பு அறவே போய் விடுகின்றது.

**விபத்துகள்**

(ஈ) தொழிற்சாலைகளில் விபத்துகள் ஏதேனும் நேரிடும் போது, அங்குள்ள இயந்திரங்கள், கட்டிடங்கள், கருவிக்கலன்கள் போன்ற சொத்துகள் பாதிக்கப்படலாம். இதன் காரணமாக, அவற்றின் மதிப்பும் குறைந்துபோவதுண்டு.

**சந்தைவிலை குறைந்துபோதல்**

சந்தையில் ஒரு பொருளின் விலை அதிகரிக்க அதிகரிக்க, அச் சொத்தின் மதிப்பும் அதிகரிக்கும். இதற்கு மாறாக, சந்தை விலை குறையக்குறைய, அச் சொத்தின் மதிப்பும் குறைந்து போகின்றது.

மேற்காணும் காரணங்களினால் சொத்துகளின் மதிப்புக் குறைந்துபோய்விடும். ஆனால் சில வகைச் சொத்துகளின் மதிப்பு நாளாகநாளாக அதிகரித்துக்கொண்டேபோகவும் காணலாம். சான்றாக. மிகவும் புகழ்பெற்ற பழைய ஓவியங்கள், நிலம்போன்ற சொத்துகளைக் குறிப்பிடலாம். ஆனால் பெருவாரியான சொத்துகள் நாளடைவில் தங்களது மதிப்பினை இழக்கின்றன. ஒரு நிறுவனத்தில் செய்யப்படுகின்ற பிறவகைச் செலவுகளுக்கும், தேய்மானத்திற்கும் ஒரே ஒரு வேறுபாடு

உண்டு. அதாவது, பிற வகைச் செலவுகள் எளிதில் காணப் பெற்று உணரப்படும், ஆனால் ஒரு சொத்தின் தேய்மானத்தினை நாம் புறக்கண்களால் காண இயலாது. ஆகவே, ஒரு சொத்தின் தேய்மானத்தினைக் கணக்கிடும்போது மிகவும் கவனமாக இருக்க வேண்டும்.

**தேய்மானம் என்பதன் பொருள் (Meaning of Depreciation)**

கணக்குப் பதிவியலுக்கு அப்பாற்பட்டுத் 'தேய்மானம்' என்ற சொல்லிற்கு விரிவான முறையில் பொருள் காண விரும்பினால் கீழ்க்காணும் பொருளினை உணர்த்தலாம்.

> "ஏதேனும் ஒரு காரணத்தினால், ஒரு சொத்தின் மதிப்பு நாளடைவில் குறைந்துகொண்டேபோகுமேயானால், அதுவே அச் சொத்தின் தேய்மானம் எனப்படும்.

சுருங்கக்கூறின், கணக்குப் பதிவியலின்படியும், வணிகவியலின்படியும் காணவேண்டிய பொருள் வருமாறு. "குறிப்பிட்ட ஒரு நிலையான சொத்துத் தொடர்ந்து உபயோகப்படுத்தப்படுவதாலோ, அதனுடைய வாழ்நாளின் காரணத்தாலோ வேறு ஏதாவது ஒருவிதத் தடையினாலோ தன்னுடைய மதிப்பினை இழந்துகொண்டே போகுமேயானால், அதுவே அச் சொத்தின் தேய்மானமாகக் கருதப்படும்."

இவ்வாறு நிலையான சொத்தின் மதிப்பிழப்பு வணிகர்களால் ஏற்றுக்கொள்ளப்படுகின்றது. மேலும், கணக்குப் பதிவியலின் (accounting principles)படி, ஒரு சொத்து இழக்கக்கூடிய மதிப்புத் தொகை, அச் சொத்து எவ்வளவு வருடத்திற்குச் சரியாக இருந்திருக்குமோ, அவ்வளவு வருடத்திற்குச் சமமாகப் பகிர்ந்திருக்கப்பட வேண்டும்.

இனி, நிலையான சொத்துகளுக்குத் தேய்மானம் ஏற்படுத்தப்பட வேண்டியதற்குத் தேவையான காரணங்களைக் காண்போம். அவை வருமாறு :—

ஒரு நிலையான சொத்தினை உருவாக்க அல்லது ஏற்படுத்த என்ன செலவாகியிருக்குமோ, அதனை, அச் சொத்தின் உழைப்புக் காலம் முழுவதிற்கும் பகிர்ந்து அளிக்கப்பட்டுள்ளதா என்று பார்க்கவேண்டும். மேலும், அச் சொத்திலிருந்து கிடைக்கக் கூடிய பயன் தொகையிலிருந்துதான், அச் சொத்தின் உருவாக்கச் செலவு சரி செய்யப்படுகின்றது என்பதையும் உணரவேண்டும்

நிலையான சொத்துகளுக்கும், தற்காலிகச் சொத்துகளுக்கும் இடையேயுள்ள வேறுபாடு எளிதானது. தற்காலிகச் சொத்துகளின் மீது செய்யப்படும் செலவுத் தொகையினை, அந்த வருடக் கடைசியில் கிடைக்கும் மொத்த இலாபத்தில் சரிசெய்து விடுவர். ஆனால், நிலையான சொத்துகள் அப்படிப்பட்டவையல்ல. இவற்றை உருவாக்கச் செய்யப்பட்ட செலவுகளை வருடாந்திர இலாபத்தில் எவ்விதக் குறிப்புமில்லாவிட்டாலும், சரிசெய்து விடுவது என்பது முறையான செயலாகாது. அதேபோன்று, இச்செலவுத் தொகை இலாபத்தில் சரி செய்யப்படாவிடில், அந் நிறுவனத்தின் இலாப நட்டக் கணக்கும், இருப்புநிலைக் குறிப்பும் சரியான நிதிநிலையைக் காண்பிக்கமாட்டா என்பதையும் நினைவில் கொள்ள வேண்டும். அதுவே, ஒரு சொத்தினை உருவாக்க அல்லது ஏற்படுத்த ஆன செலவுத் தொகையினைக் கண்டுபிடித்து அச் செலவினைச் சிறிதுசிறிதாக நீக்கிவிடுதலே முறையான செயலாகும்.

வருடந்தோறும் கிடைக்கும் இலாபத்திலிருந்து ஒரு குறிப்பிட்ட தொகையைத் தனியே ஒதுக்கி வைத்தால்தான், ஒரு இயந்திரம் நாளடைவில் பழுதுபட்டு இயங்காத நிலையினை அடையும் போது, உடனடியாக வேறொரு இயந்திரத்தினை வாங்கி அதனைக் கொண்டு தொழிலின் இயக்கம் தடைபடாது தொடர்ந்து நடக்கச் செய்ய முடியும். இவ்வாறு வருடந்தோறும் இலாபத்திலிருந்து ஓரளவுத் தொகையினை ஒதுக்கீடு செய்து சேமித்து வைக்காது போனால் நாளடைவில் குறிப்பிட்ட சொத்து பழுதுபட்டுப் போனவுடன், வேறொரு இயந்திரத்தினை வாங்கமுடியாமற் போய் விடும். இதன் காரணமாக நிறுவனத்தின் தொழில் நிலை மிகவும் பாதிக்கப்படும் என்பதை உணர்தல் வேண்டும். இந் நிலையைத் தவிர்க்கவே தேய்மான ஒதுக்கீடு என்ற ஒன்று ஏற்படுத்தப் படுகின்றது.

**தேய்மானம் கணக்கிடப்படும் முறை**

ஒரு நிறுவனம் தன்னிடமுள்ள சொத்திற்காக ஏற்படுத்துகின்ற தேய்மானத்தொகை, போதுமானதா இல்லையா என்பதை அறியக் கீழ்க்காணும் குறிப்புகளைத் தயாரிக்க வேண்டும் :—

(அ) சொத்தின் விலை (மதிப்பு)

(ஆ) சொத்தின் ஆயுள்காலம், தொழிலின்நிலை, வணிகரின் அனுபவம், எத்தகைய பணிக்காக ஒரு சொத்து பயன்படுத்தப்படுகின்றது போன்ற விபரங்களைக் கொண்டு. ஒரு சொத்தின் ஆயுள்காலம் தீர்மானிக்கப்படுகிறது.

(இ) சொத்தினுடைய உத்தேசமான ஆயுள்காலத்திற்குப் பின்னர் அதனை விற்றால் கிடைக்கக் கூடிய விற்பனைத் தொகை. இதனைச் சரியாகக் கணக்கிட முடியா விட்டாலும் உத்தேசமாகவாவது குறிப்பிடலாம்.

(ஈ) இச் சொத்து உபயோகப்படுத்த முடியாத நிலையினை அடையுமுன், இதனைக் காலத்திற்கு ஒவ்வாததெனை நிருணயிக்கும் வாய்ப்பு (opportunity of obsolescence) எப்போது ஒரு சொத்து காலத்திற்கும், நடைமுறைக்கும் ஒவ்வாததாகிவிடுமென்று சரி யாகச் சொல்ல இயலாது. இருப்பினும் விஞ்ஞான யுகத்தில், தொழில் துறையில் ஏற்படுகின்ற மாறு தல்களைக் கொண்டு ஒருவாறு இதனைக் கணக் கிடலாம்.

(உ) இச் சொத்துக்குப் பதிலாக வேறொரு சொத்தினை ஏற்படுத்துவதற்கு ஆகக்கூடிய செலவு நாள்தோறும் அதிகமாகிக்கொண்டே போவதன் காரணமாக, பின்னளில் வேறொரு சொத்தினை ஏற்படுத்து வதற்குத் தேவையான தேய்மான ஒதுக்கீட்டைச் சரியாகக் கணக்கிட்டு வைத்தல் வேண்டும்.

மேற்கண்ட குறிப்புகளைக் கவனமுடன் சீர்தூக்கி ஆராய்ந்த பின்னர், அதற்கேற்பத் தேய்மான ஒதுக்கீடு செய்யப்பட வேண்டும்.

**இயந்திரங்களின் குறிப்பேடு (Plant Register)**

எல்லா வகைக் சொத்துகளிலும், ஒரு நிறுவனத்திலுள்ள இயந்திரச் சாதனங்கள் மிகவும் இன்றியமையாதவையாகக் கருதப்படுகின்றன. ஏனெனில், இவற்றினைப் பொறுத்துதான், தொழில் உற்பத்தி, விற்பனை, இலாபம் போன்ற பல்வேறு செய்தி கள் தீர்மானிக்கப்படவேண்டும். ஆகவே, இயந்திரச் சாதனங்கள் வாங்கப்படுவதும், அவை பழையன ஆனவுடன் நீக்கப்படுவதும் அவற்றிற்குப் பதிலாக வேறு இயந்திரம் வாங்கப்படுவதும் இதற் கான தேய்மான ஒதுக்கீடு ஏற்படுத்தப்படுவதும்சரிவரச் செய்யப் படவேண்டும். இயந்திரச் சாதனங்களைப்பற்றிய முழு விபரங்கள் அடங்கிய குறிப்பேடு அல்லது பதிவேடு (Register) ஒன்று ஒவ் வொரு நிறுவனத்திலும் தயாரித்து வைத்திருக்கப்பட வேண்டும். இந்த இயந்திரக் குறிப்பேட்டில் ஒவ்வொரு இயந்திரத்தினைப் பற்றிய பொதுவான குறிப்புகளும், அதனுடைய விலைபற்றிய சிறப்பான குறிப்புகளும் இடம் பெறும். மேலும், இக் குறிப்பேட்

டின் வெவ்வேறு பத்திகளில் (columns) இயந்திரம் ஒன்றின் கணக்கிடப்பட்ட ஆயுள்காலம், இவ்வாயுள்காலம் முடியும்போது இயந்திரத்தின் விற்பனை மதிப்பு (Scrap value) (அல்லது எறிமதிப்பு), இதற்கென ஏற்படுத்தப்பட்ட தேய்மான ஒதுக்கீடு போன்ற குறிப்புகளும் இடம் பெற்றிருக்க வேண்டும்.

ஒவ்வொரு கணக்கியல் வருடத்தின் முடிவிலும் இவ்வியந்திரங்களைப் பற்றிய விரிவான அறிக்கை ஒன்று தயார் செய்யப்பட வேண்டும். இந்த அறிக்கையில் ஒவ்வொரு இயந்திரத்தின் தொடக்க மதிப்பு, பின்னர் அதனோடு சேர்க்கப்பட்ட மதிப்பு (ஏதுமிருப்பின்) இயந்திரங்கள் விற்கப்பட்டிருப்பின் அதன்மூலம் கிடைத்த இலாபம் அல்லது நட்டம், செய்யப்பட்ட மாற்றங்கள், எடுத்துவிடப்பட்ட (written off) தேய்மானம் மற்றும் இச்சொத்தின் இறுதி மதிப்பு போன்ற விபரங்கள் குறிப்பிட்டிருக்க வேண்டும். மேலும் இந் நிறுவனத்தின் பேரேட்டிலுள்ள இச் சொத்துகள் பற்றிய குறிப்புகளும், இவ்வறிக்கையில் தரப்பட்டிருக்கும் விபரங்களும் சரியாய்ப் பொருந்துகின்றனவா என்று பார்த்தல் இன்றியமையாதது. ஓர் இயந்திரத்தினை விற்கும்போது கிடைக்கும் விற்பனைத் தொகை, 'இயந்திரக் குறிப்பேட்டில்' வரவு வைக்கப்பட வேண்டும். மேலும், விற்பனைமூலம் கிடைக்கக் கூடிய இலாபம் அல்லது நட்டத்தினை எடுத்துவிடுதல் பற்றிய விபரமும், இயந்திரக் குறிப்பேட்டில் தரப்பட்டிருக்க வேணடும்.

**இயந்திரக் குறிப்பேட்டின் நன்மைகள்**

இயந்திரங்களைப் பற்றிய விபரங்களைத் தனியே விளக்கமுறக் குறிப்பதற்கென இயந்திரக் குறிப்பேட்டினைத் தயார் செய்வது மிகவும் தொல்லைதரும் முறையாகக் காணப்பட்டாலும், இதன் மூலம் ஏற்படுகின்ற நன்மைகள் பல உள்ளன. அவை :—

(1) சட்டத்தின்படி நிறுவனத்திலுள்ள சொத்துகளுக்கான தேய்மானம் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றதா என்பதை எளிதில் அறியலாம்.

(2) நிறுவனத்தை நல்லமுறையில் திறம்பட நடத்துவதற்குத் தேவையான செய்திகளை இக் குறிப்பேடு வழங்கும் என்பதில் ஐயமில்லை.

(3) மேலும், இந்தியக் கம்பெனிச் சட்டம் 1956-ன் ஆறாவது பிரிவின்படி, ஒரு நிறுவனம் தயாரித்து வைத்திருக்க வேண்டிய குறிப்புகளை எளிதில் அறிய வேண்டுமாயின் இத்தகைய குறிப்பேடுகள் அவசியம் தேவைப்படுகின்றன.

பொதுப்பயன் தொழில்களைப் பொறுத்தமட்டில், 'தேய்மானம்' என்ற சொல்லின் இன்றியமையாமையை, உலகிற்கு உணர்த்தியவர்கள் இத் தொழில் நிறுவனங்களின் கணக்கியல் பிரிவுகளைச் (accounting section) சார்ந்தவர்களேயாவார்கள் ஆகவே, பொறியியல் வல்லுநர்களின் கூற்றுப்படி, அழியக்கூடிய சொத்து ஒன்றின் நிகழ்கால மதிப்பிற்கும், எதிர்கால மதிப்பிற்குமுள்ள வேறுபாடே தேய்மானம் என்ற பொருள் கொள்வதும் பொருளாதார நிபுணர்களின் கூற்றுப்படி, "தேய்மானம்" என்பது ஒரு சொத்தினுடைய விலையினைக் குறிப்பது என்ற பொருள் கொள்ள வேண்டியுள்ளது. தேய்மானம் என்ற சொல்லுக்குத் தற்போதுள்ள பலவித இலக்கணங்கள், ஒரேவிதமான கணக்குப் பதிவியலைக் கொண்ட நிறுவனங்கள் பலவற்றிற்கும் பொருந்துமாறு அமைந்திருக்கின்றன. எடுத்துக்காட்டாக, அமெரிக்க நாட்டின் பெடல்பவர் கமிஷனின் (Federal Power Commission) எரிவாயு நிறுவனத்திற்கான இலக்கணத்தைக் கூறலாம்.

"எரிவாயுவை வழங்கும் நிறுவனம் ஒன்றில் அதனுடைய இயந்திரங்கள் குறிப்பிட்ட காலத்திற்குப் பின்னர் இழக்கப் போகும் மதிப்பினை அதற்கு முன்னரே அவ்வப்போது ஏற்படுத்துகின்ற ஒதுக்கீட்டின்மூலம் சரிசெய்வதையே தேய்மானம் என்ற சொல் மூலம் அறிகின்றோம். ஒரேவிதமான அல்லது சீரான கணக்குப் பதிவியலைக் கொண்ட நிறுவனங்களில் இத்தகைய இயந்திரங்களின் மீட்புமதிப்பினைக் (salvage value) காண்பதும் அவசியமாகிறது. மீட்பு மதிப்பு எனப்படுவது உபயோகமற்றுப் போகக் கூடிய ஒரு சொத்தினை விற்பதன்மூலம் கிடைக்கக் கூடிய விற்பனைத் தொகையிலிருந்து, இச் சொத்தினை விற்பதற்காகச் செய்யப்பட்ட செலவுத் தொகையினை நீக்கியது போக எஞ்சியிருக்கும் தொகையினைக் குறிக்கும்."

தேய்மானம் ஏற்படுவதற்கான காரணங்களை ஏற்கனவே அறிந்த பின்னர், அக் காரணங்கள் நடைமுறையில் எவ்வாறு செயற்படுத்தப்படுகின்றன என்று பார்ப்போம். எந்த ஒரு நிறுவனமும், தான் அவ்வப்போது ஈட்டுகின்ற இலாபத் தொகையினை அல்லது வருவாயினை அறிய விழைவது இயற்கையே. பொதுவாக, வருடத்திற்கொரு முறை இவ் வருமானத்தொகை கணக்கிடப்படும். ஆனால், சொத்துகளின்மீது செய்யப்படவேண்டிய தேய்மானத்தொகை எவ்வளவு என்பது தெரிந்த பின்னரே ஒரு நிறுவனத்தின் நிகர வருமானம் கணக்கிடப்பட வேண்டியது அவசியமாகிறது. இரண்டாவதாக, காலப்போக்கில் ஒரு

சொத்து எவ்வளவு மதிப்பு இழக்கிறது என்பதை அறிய முடிகிறது. இதனை அறிவதன்மூலம், பின்னளில், ஒரு புதிய இயந்திரத்தினை ஏற்படுத்தவும், தயாராக இருக்க முடிகிறது. மூன்றாவதாக, பொதுப்பயன் தொழில்களில் ஏற்படுத்தப்பட்டுள்ள தேய்மான ஒதுக்கீட்டுத்தொகை பெரிதும் பங்கு வகிக்கின்றது என்று கூறலாம்.*

**பொதுப்பயன் தொழில் நிறுவனங்களும், பிற நிறுவனங்களும்**

தேய்மானத்தைப் பொறுத்தவரையில், பிற வணிக நிறுவனங்களுக்கும், பொதுப்பயன் நிறுவனங்களுக்குமிடையே நிறைய வேறுபாடுகள் உள்ளன. காரணம், இவ்விருவகை நிறுவனங்களும் தங்களது தொழிலில் ஈடுபடுத்துகின்ற மூலதனத்தின் அளவேயாகும். பொதுப்பயன் தொழில் ஒன்றின் வருவாய் முதலீட்டு விகிதம், பிற நிறுவனங்களுடைய விகிதத்திலிருந்து மாறுபட்டுள்ளது என்பது உண்மை. ஏனெனில், ஒரு ரூபாய் வருமானத்தைப் பெற வேண்டுமாயின் குறைந்த அளவு முதலீட்டினைச் செய்தாலே பிற நிறுவனங்களுக்குப் போதுமானது. ஆனால், இதே ஒரு ரூபாய் வருமானத்தைப் பெற பல மடங்கு மதிப்புள்ள முதலீட்டினைப் பொதுப்பயன் தொழில்கள் செய்ய வேண்டிய நிலையிலுள்ளன. ஆகவே, பொதுப்பயன் தொழில் நிறுவனங்களின் தேய்மான விகிதமும், மற்ற நிறுவனங்களைவிட அதிகமாகவே காணப்படும். சான்றாக, பின்வரும் பல்வேறு நிறுவனங்களின் தேய்மானத்தைக் குறிப்பிடலாம் :—

| | | |
|---|---|---|
| 1. | மின்திறன் மற்றும் எரிவாயு நிறுவனங்கள் | ... 11.0% |
| 2. | குடிநீர் வழங்கும் நிறுவனங்கள் | ... 10.0% |
| 3. | தொலைபேசி மற்றும் இணைப்பு நிறுவனங்கள் | ... 7·0% |
| 4. | பயன்படுத்தப்படாத உலோகங்களை வழங்கும் நிறுவனங்கள் | ... 3.4% |
| 5. | பேருந்து நிறுவனங்கள் | ... 2.8% |
| 6. | மின் இயந்திரங்கள், மற்றும் கருவிக் கலன்களின் நிறுவனங்களின் | ... 1.9% |
| 7. | நூற்பு நிறுவனங்கள் | ... 0.7% |

* Decision in 1909.

மேற்காணும் குறிப்பினைக் கொண்டு பொதுப்பயன் தொழில்களின் தேய்மான விகிதம் அதிகமெனக் கண்டு கொள்ளலாம்.

இரண்டாவதாக, பொதுப்பயன் தொழில்களின் விற்பனை விலைக் கொள்கைகள், அவற்றின் தேய்மானக் கொள்கையுடன் நேரடித் தொடர்புடையவை. ஆனால், பிற வணிக நிறுவனங்களில் அஃது அவ்வாறில்லை.

மூன்றாவதாக, பொதுப்பயன் தொழில்களில் தேய்மான ஒதுக்கீடு என்பது குறிப்பிட்ட சொத்தின் மதிப்பினை அல்லது விலையினைச் சேமித்து வருவதாகக் கருதப்படும். அவ்வாறெனில் வாணிகச் சூழலின் காரணமாகச் சந்தையில் பொருள்களின் விலை விலையேற்றம் அடைந்தால், பிற நிறுவனங்களைவிட, பொதுப்பயன் தொழில் நிறுவனங்களே மிகவும் அல்லலுறும். ஏனெனில், குறிப்பிட்ட விலையுள்ளதாகக் கருதப்பட்டு, அதற்கேற்ப, தேய்மான ஒதுக்கீட்டினைச் செய்துள்ள நிறுவனத்தாருக்கு அதே அளவு தொகையினைக் கொண்டு, விலை உயர்ந்துள்ள இயந்திரத்தினை வாங்க இயலாது. ஏனெனில், பணவீக்கத்தின் காரணமாக நிறுவனத்தின் கைவசமுள்ள தேய்மான ஒதுக்கீட்டுத் தொகையின் 'வாங்கக்கூடிய சக்தி மிகவும் குறைந்துபோயிருக்கும் என்பது உறுதி.

மேற்சொன்ன காரணங்களிலிருந்து தேய்மானம் என்ற சொல் பிற நிறுவனங்களைவிட, பொதுப்பயன் தொழில் நிறுவனங்களில் மிகவும் இன்றியமையாததாகக் கருதப்படுகிறது என்பதை நாம் அறியவருகிறோம்.

**தேய்மான அடிப்படை**

சொத்துகளின்மீது தேய்மானத்தை ஏற்படுத்துவதற்கு முன்னர் எந்த விகிதத்தில் இத் தேய்மானத் தொகையை ஒதுக்கீடு செய்யப்போகிறோம் என்பதை நாம் அறிந்துகொள்ள வேண்டும். அதாவது, ஓர் அடிப்படைத் தொகையின்மீதுதான் தேய்மானம் என்பது ஏற்படுத்தப்படவேண்டும். இந்த அடிப்படைத் தொகையைத் தேய்மான அடிப்படை என்று கூறுவது வழக்கம். இனி, பொதுப்பயன் தொழில்களின் தேய்மான அடிப்படையைக் கணக்கிடும் முறையினைக் காண்போம். பல விதமான கருத்துகள் வழங்கப்பட்டபோதிலும், தேய்மான அடிப்படை எனப்படுவது ஒரு சொத்திற்குப் பதிலாக வேறொரு சொத்தினை ஏற்படுத்தும் சொத்து அல்லது அச் சொத்தினை மறு உற்பத்தி செய்ய ஆகும் செலவு அல்லது அச் சொத்தின் நியாயமான மதிப்பு போன்றவற்றில் ஒன்றினைக் குறிப்பதுதான்

வழக்கம். இதனையே, பலவித வழக்குகளின் தீர்ப்புகளும் குறிப்பிடுகின்றன. அவற்றுள்,

'யுனைடெட் இரயில்வேஸ்' (United Railways) என்னும் வழக்கில் ஒரு சொத்தின் தற்போதைய மதிப்பினையே அடிப்படைத் தொகையாக எடுத்துக்கொள்ள வேண்டுமென்றும், அதனைக் கொண்டு வருடாந்திரத் தேய்மானத் தொகை ஏற்படுத்தப்படவேண்டும் என்றும் கூறப்பட்டது.*

ஆனால், தற்போதைய மதிப்பின்படி, ஒரு சொத்தின்மீதான கட்டண அடிப்படையை ஏற்படுத்துவதில் சில சிக்கல்களும் உள்ளன. தினந்தோறும் பொருள்களின் விலை மாறுகின்ற நிலையில் பத்து அல்லது பதினைந்து வருடங்களுக்குப் பின்னர், குறிப்பிட்ட ஒரு சொத்திற்குப் பதிலாக வேறொரு சொத்தினை ஏற்படுத்தத்தேவைப்படும் தொகை ஐயத்திற்கிடமின்றி, மிகவும்அதிகமாகவே இருக்கும். இத் தொகை அச் சொத்தின் தற்போதைய மதிப்பைவிட அதிகமாகவே இருப்பதால், சொத்தினை வாங்குவதில் பற்றுக்குறை ஏற்படும். அவ்வாறாயின், நிறுவனத்தின் இலாபத்திலிருந்து தேவைக்குமேல், அதாவது ஒதுக்கீடு செய்யப்பட்டதற்குமேல், அதிகமான தொகை வேண்டியிருக்கும். இது சரியான முறையன்று. மேலும், தேய்மான அடிப்படை சரியாக அமையாவிட்டால் நிறுவனத்தின் இலாப, நட்டமும் சரிவரக் கணக்கிடப்படாமல், அதனுடைய நிதிநிலைமையே ஆட்டங்காணும் நிலை உருவாகிவிடும். ஆகவே, தேய்மான அடிப்படை சரிவர அமைய வேண்டுமானால், ஒரு சொத்தின் தற்போதைய மதிப்பினை எடுத்துக்கொள்வதில் பயனில்லை என்று தெரிகிறது.

மேற்கண்ட வழக்கின் முடிவினைச் சற்றே மாற்றிக் கூறும் வேறொரு சாராரின் கருத்துப்படி, தேய்மான அடிப்படை எனப்படுவது முன்கூட்டியே தீர்மானிக்கப்பட வேண்டிய கட்டாயமில்லை. அவ்வப்போது ஏற்படும் மாற்றங்களைக் கொண்டு, தேய்மான அடிப்படைத் தொகையிலும் மாற்றத்தினைச் செய்து கொள்ளலாம் என்பது ஆகும். இதனைத்தான் மிகப் பிரபலமான 'ஹோப்' வழக்கின் தீர்ப்பும் கூறுகின்றது.** இவ்வழக்கின் தீர்ப்பான 'முடிவு-இறுதிக் கொள்கையின்படி' பொதுப்பயன் தொழில்கள் அவ்வப்போது தங்கள் நிறுவனங்களில் ஏற்படும் மாறுதல்களைத் தக்கவாறு கவனித்து அதற்கேற்ப தேய்மான அடிப்படையை அமைத்துக்கொள்வதில் தவறேதுமில்லை என்று கூறப்

*United Railways Electric Co. vs. West.

**Hope case—1944

படுகின்றது, ஏனெனில், பொதுப்பயன் தொழில்களைப்பொறுத்த மட்டில், ஏராளமான அளவில் சொத்துகள் தொழிலின் தோற்ற நிலையிலேயே வாங்கப்படுவதால், இப்பொருள்களின் விலைமாற்றம் குறிப்பிடத்தக்க அளவில் இத் தொழில்களைப் பாதிப்பதில்லை. இந் நிறுவனங்களைப் பொறுத்தமட்டில், புதிதாக உருவாக்கப் படாமல் வேறொரு நிறுவனத்தினிடமிருந்து ஒரு சொத்து வாங்கப் பட்டால், அச் சொத்தின் தேய்மான அடிப்படையை எவ்வாறு கணக்கிடுவது என்றும், அச் சொத்தின் தோற்ற மதிப்பின் (original cost) அடிப்படையாக எதனை எடுத்துக்கொள்வது என்றும் வினா எழலாம். மேலும், தோற்ற மதிப்பு எனப்படுவது, இரண்டாவது நிறுவனத்தால் அளிக்கப்பட்ட விற்பனை விலையா அல்லது முதல் நிறுவனத்தால் இச் சொத்து உருவாக்கப்பட்ட போது அல்லது வாங்கப்பட்டபோது அளிக்கப்பட்ட தொகையா என்றும் ஐயம் எழலாம். ஏற்கனவே, இதுபற்றி நாம் அறிந்துள்ள கருத்திற்கேற்ப, ஒரு சொத்தின் தோற்ற மதிப்பு எனப்படுவது, அச் சொத்து முதன்முதலாக பொதுமக்களின் நன்மைக்காக எப்போது பயன்படுத்தப்படுகின்றதோ, அப்போது, அச் சொத் துக்காக அளிக்கப்படும் மதிப்பினையே குறிக்கும் எனலாம். ஆனால், பொதுப்பயன் தொழில்களில் மட்டுமே இக் கொள்கை ஏற்றுக்கொள்ளப்படுகின்றது. பிற நிறுவனங்களில், தற்போது அச் சொத்தின் உரிமையாளருக்கு அச் சொத்தினை வாங்க என்ன செலவாயிற்றோ அத்தொகையே, குறிப்பிட்ட சொத்தின் தோற்ற மதிப்பாகக் கருதப்படுகின்றது.

**தேய்மான ஒதுக்கீட்டினை ஏற்படுத்தும் முறைகள்**

பொதுப்பயன் தொழில்கள் பலவற்றில் 'நேர்வரிசை முறைப்படி" (Straight Line Method) தேய்மானம் ஏற்படுத்தப் பட்டாலும் "குறைந்துசெய்மீத முறைப்படி" (Diminishing Balance Method) தேய்மானம் ஏற்படுத்துவதையே பெரும் பாலான நிறுவனங்கள் விரும்புகின்றன. ஆயினும், தேய்மான ஒதுக்கீடு என்பது ஒரு சொத்தினுடைய தன்மையைப் பொறுத்தே கணக்கிடப்பட வேண்டுமாதலால், இதற்கென உள்ள பலவிதமான முறைகளைப் பற்றியும் நாம் அறிந்துகொள்ளுதல் அவசியமாகிறது.

**1. நேர்க்கோட்டு முறை (Straight Line Method)**

இதனைக் குறித்த தவணை முறை (Fixed Instalment Method) என்றும், தோற்ற மதிப்பு முறை (Original Cost Method) என்றும் குறிப்பிடுவதுண்டு. இம் முறையின்படி ஒரு சொத்தின் தோற்ற மதிப்பில், குறிப்பிட்ட ஒரு தொகை வருடந்தோறும்

தேய்மான ஒதுக்கீடாக எடுத்துவிடப்படும். அச் சொத்தின் ஆயுள்காலம் முடிவடையும்போது, கணக்கு ஏடுகளில், அதனுடைய மதிப்பு பூஜ்யமாக இருக்கும். இதற்குத் தக்கவாறு, கணக்கிடப்பட்ட தேய்மானம் வருடந்தோறும் எடுத்து விடப்படும். இம் முறை மிகவும் எளிதானது. ஒரு சொத்தின் மதிப்பு அதனுடைய ஆயுள்கால வருடங்களால் வகுக்கப்படும் போது கிடைக்கின்ற ஈவுத் தொகையே, வருடந்தோறும் கழிக்கப்படவேண்டிய தேய்மானத் தொகையாகக் கருதப்படும்.

சான்றாக,

ஒரு சொத்தின் மதிப்பு ரூ. 50,000 என்றும் அதனுடைய ஆயுள்காலம் 10 வருடங்கள் என்றும் கொள்வோமேயானால் அதனுடைய தேய்மானம் = $\frac{50,000}{10}$ = ரூ. 5,000 என்றாகின்றது. இச் சொத்துகளில் மேலும் ஏதாவது கூடுதல் செய்யப்படுமேயானால் அதற்கேற்ற தேய்மானத்தைத் தனியாகக் கணக்கிட வேண்டும்.

இம் முறையில், ஒரு சொத்தின் மதிப்பு வேறுபாடின்றி ஒரே சீராகப் பல வருடங்களுக்குத் தொடர்ந்து இருப்பதால் இது எளிதான முறையாகக் கருதப்படுகின்றது. மேலும் வருடந்தோறும் ஏற்படுத்தப்படுகின்ற தேய்மானத் தொகையினை ஒரு வரைகோட்டின்மூலம் வெளிப்படுத்தினால், அக் கோடு எவ்வித வளைவுமின்றி நேராக இருக்குமாதலால் இம் முறை 'நேர்க் கோட்டு முறை' என அழைக்கப்படுகின்றது.

## 2. குறைந்துசெல்மீதமுறை (Diminishing Balance Method)

இம் முறையை, மதிப்பிறக்க முறை (Written Down Value Method) என்றும், குறையும் தவணை முறை (Reducing Instalment Method) என்றும் குறிப்பிடலாம்.

இம் முறைப்படி, ஒரு சொத்தின் மதிப்பிலிருந்து ஒரு குறிப்பிட்ட விழுக்காடு வருடந்தோறும் குறைக்கப்பட்டுவரும். ஆனால், நேர்க்கோடு முறையிலிருந்து இது சிறிதே வேறுபட்டது. ஏனெனில், இம் முறையில் ஒவ்வொரு வருடத் துவக்கத்திலும் சொத்தின் மதிப்பு என்னவாக உள்ளதோ, அம் மதிப்பிலிருந்து தான் குறிப்பிட்ட ஒரு தொகை தேய்மானமாகக் கழிக்கப்படும். சொத்தின் ஆயுள்கால இறுதியில் அதனுடைய மதிப்பு பூஜ்யமாக ஆக்கப்பட்டுவிடும்.

சான்ருக,

ஒரு சொத்தின் மதிப்பு = ரூ. 10,000 என்றும்,
தேய்மான ஒதுக்கீடு = 10% (நூற்றியம்)

என்றும் கொண்டால் இதற்கான தேய்மானம் பின்வருமாறு கணக்கிடப்படவேண்டும்.

$$\text{முதல் வருடம்} = \text{ரூ.}\ \frac{10{,}000 \times 10}{100} = \text{ரூ.}\ 1000$$

முதல் வருட முடிவில் அல்லது இரண்டாவது
வருடத் துவக்கமதிப்பு ரூ. 10,000 − ரூ. 1,000 = ரூ. 9000

$$\text{இரண்டாவது வருடத் தேய்மானம்} = \frac{\text{ரூ.}\ 9{,}000 \times 10}{100} = \text{ரூ.}\ 900,$$

மூன்ருவது வருடத் துவக்க மதிப்பு ரூ. 9,000 − ரூ. 900 = ரூ. 8100

$$\text{மூன்ருவது வருடத் தேய்மானம்} = \frac{\text{ரூ.}\ 8{,}100 \times 10}{100} = \text{ரூ.}\ 810$$

எனக் கணக்கிடப்பட வேண்டும். இம் முறையில் ஒவ்வொரு வருடமும் ஏற்படுத்தப்படும் தேய்மானத் தொகை குறைந்து கொண்டேவருவது குறிப்பிடத்தக்கது. இயந்திரச் சாதனங்கள் போன்ற சொத்துகளுக்கு இம் முறை மிகவும் ஏற்றது.

இம் முறை வருமானவரித் துறையினரால் வரி செலுத்து வோரின் தேய்மான ஒதுக்கீட்டினைச் சரிபார்க்க அனுமதிக்கப் பட்டபோதிலும், சில குறைபாடுகளை உடையதாக உள்ளது. ஆனல், நேர்க்கோட்டு முறையிலுள்ள வசதியும், எளிமையும் இம் முறையில் இல்லையென்பதனை இம் முறையைப் பயன்படுத்துவோர் உணர்ந்தாரிலர். வருமானவரித் துறையினரின் விதிகளை நிறைவு செய்ய வேண்டுமென்பதற்காகவே, இம் முறையினைப் பயன்படுத்துகின்றனர். ஏனெனில், மிகப் பெருமளவில் தேய்மான ஒதுக்கீடு தொழிலின் ஆரம்ப நிலையிலேயே செய்யப் படுவது விவேகமான செயலாகக் கருதப்படுகிறது.

## ஆண்டுத்தொகை முறை (Annuity Method)

இம் முறையின்படி, ஒரு சொத்தின் தேய்மானத்தைக் கணக் கிடுவதற்கு முன்னர் அதனுடைய வருவாய்த் தன்மையும் கணக் கிற்கு எடுத்துக்கொள்ளப்படுகின்றது. முதலில், ஒவ்வோர் ஆண்டும் இச் சொத்தின்மூலம் கிடைக்கக்கூடிய வருவாயினை அதனுடைய மொத்த மதிப்பில், குறிப்பிட்ட ஒரு நூற்றியமாகக் குறிக்கவேண்டும். பின்னர், மொத்த மதிப்புத் தொகையோடு, இவ்வாண்டுத் தொகையினை சேர்த்துக்கொள்ள வேண்டும். அடுத்து, வருடாந்திர வரவு அட்டவணையைப் பின்பற்ற குறிப் பிட்ட காலத்திற்கு ஒரு ரூபாய்க்கு எவ்வளவு தேய்மானம் ஏற்ப

டுத்தப்படவேண்டுமென்பதைக் கண்டு, சொத்தின் மொத்த மதிப்பிற்கான தேய்மானத் தொகையைக் கண்டுபிடிக்கவேண்டும். இவ்வாறு, கண்டுபிடித்த தேய்மானத் தொகையினைச் சொத்தின் மொத்த மதிப்பிலிருந்து கழித்து விடை காணவேண்டும்.

எடுத்துக்காட்டாக,

**ஆண்டுத்தொகை முறைப்படி ஒரு ரூபாய்க்கு எடுத்துவிடப்பட வேண்டிய தேய்மான அட்டவணை பின்வருமாறு :**

| வருடங்கள் | 3% | $3\frac{1}{2}$% | 4% | $4\frac{1}{2}$% | 5% |
|---|---|---|---|---|---|
| 3 | ·353500 | ·356034 | ·360348 | ·363770 | ·367208 |
| 4 | ·269027 | ·272251 | ·275490 | ·278743 | ·282011 |
| 6 | ·218354 | ·221481 | ·224627 | ·227791 | ·230974 |
| 10 | ·117230 | ·120241 | ·123290 | ·126378 | ·129504 |
| 15 | ·088766 | ·086825 | ·089941 | ·003113 | ·096340 |
| 20 | ·067215 | ·070361 | ·073581 | ·076876 | ·080242 |

இனி, 1—1—1964 அன்று ரூ. 10,000 மதிப்புள்ள ஒரு சொத்து, குத்தகைக்கு எடுக்கப்படுகின்றதெனக் கொள்வோம். இதற்கான தேய்மானத்தினை வருடாந்திர வரவு முறைப்படி ஆண்டொன்றுக்கு 5% வீதம் ஏற்படுத்துவதென்றும்; குத்தகைக் காலம் 3 வருடம் என்றும் கொள்வோம். இனி இக் குறிப்புகளைக் கொண்டு தேய்மானத்தினைக் கணக்கிடுவோம்.

1. மேற்காணும் அட்டவணைப்படி 5 விழுக்காட்டிற்கு ரூ. 10,000த்திற்கு மூன்று வருட காலத்திற்குத் தேய்மானம்

$$·367208 \times 10{,}000 = 3672·08$$ என்ருகிறது.

இனி, இந்தத் தேய்மானத் தொகையினை ஒவ்வொரு வருடமும் எவ்வாறு கணக்குடன் சேர்ப்பது என்பதை ஒரு கணக்கும் பதிவியல்மூலம் காண்போம்.

(குத்தகைக்கு எடுக்கப்பட்ட) சொத்துக் கணக்கு

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1964 ஜன. 1 | ரொக்க க/கு | 10,000·00 | 1964 டிச. 31 | தேய்மான க/கு | 3,672·08 |
| டிச. 31 | வட்டி க/கு | 500·00 | | இருப்பு கீ/கு | 6,827·92 |
| | | 10,500·00 | | | 10,500·00 |
| 1965 ஜன. 1 | இருப்பு கி/கோ | 6,827·92 | 1965 டிச. 31 | தேய்மான க/கு | 3,672·08 |
| | வட்டி க/கு | 341·40 | | இருப்பு கீ/கு | 3,497·24 |
| | | 7,169·32 | | | 7,169·32 |
| 1966 ஜன. 1 | இருப்பு கீ/கொ | 3,497·24 | | தேய்மான க/கு | 3,672·08 |
| | வட்டி க/கு | 174·84 | | | |
| | | 3,672·08 | | | 3,672·08 |

**தேய்மான நிதிமுறை (Depreciation Fund Method)**

இம் முறையை இறங்குநிதிமுறை (Sinking Fund Method) என்றும் குறிப்பிடுவர். இம் முறையின்படி, ஒவ்வொரு வருடமும், ஒரு குறிப்பிட்ட தேய்மானத் தொகை, இலாப நட்டக் கணக்கில் எழுதப்படும். அதே தொகை தேய்மான நிதிக் கணக்கில் (Depreciation Fund Account) வரவு வைக்கப்படும். மேலும், இதே அளவுத் தொகை இந் நிறுவனத்திற்கு வெளியே உள்ள மற்ற நிறுவனங்களின் பத்திரங்களில் முதலீடு செய்யப்பட்டு, அத் தொகை அதிகரிக்குமாறு செய்யப்படும். குறிப்பிட்ட சொத்தின் ஆயுள்காலம் முடிந்ததும் உபயோகமற்று, மதிப்பற்றதாகிவிடும்போது, வெளி நிறுவனங்களில் முதலீடு செய்த தொகையினைக் கொண்டு வேறு புதிய சொத்தினை வாங்கி, பழைய சொத்திற்குப் பதிலாக ஈடுசெய்ய முடியும். பொதுவாக, அதிக மதிப்புள்ள சொத்துகளுக்குத் தேய்மானம் ஏற்படுத்தும் போது இம் முறையைக் கையாள்வர். இம் முறையில் கணக்குப் பதிவியல்களைக் கீழ்க்கண்டவாறு செய்தல் வேண்டும்.

**அ. முதல் வருட முடிவில்**

வருடாந்திர தேய்மானத் தொகையினை இலாப, நட்டக் கணக்கில் பற்று வைத்து, தேய்மான நிதித் தொகையில் வரவு வைக்க வேண்டும். மேலும், இதேயளவுத் தொகையினைத் தேய்மான நிதி

முதலீட்டுக் கணக்கில் (Depreciation Fund Investment A/c.) பற்றும் ரொக்கக் கணக்கில் வரவும் வைக்க வேண்டும்.

**ஆ. ஒவ்வொரு தொடர் வருட முடிவிலும்**

(1) ஒரு வருட முடிவில் ஈட்டிய பின்னர் அதனை மறுபடியும் முதலீடு செய்த வருவாய்த் தொகையினைத் தேய்மான நிதி முதலீட்டுக் கணக்கில் பற்றுவைத்து, தேய்மான நிதிக் கணக்கில் வரவு வைக்க வேண்டும்.

(2) வருடாந்திரத் தேய்மானத் தொகையினை இலாபநட்டக் கணக்கில் பற்று வைத்து, தேய்மான நிதிக் கணக்கில் வரவு வைக்க வேண்டும்.

(3) அதே அளவுத் தொகையினைத் தேய்மான நிதி முதலீட்டுக் கணக்கில் பற்றும் ரொக்கக் கணக்கில் வரவும் வைக்க வேண்டும்.

**இ. இச் சொத்திற்குப் பதிலாக வேறொரு சொத்தினை மாற்றும் போது.**

(1) முதலீடுகளை விற்பனை செய்வதன்மூலம் கிடைக்கும் தொகையினை ரொக்கக் கணக்கில் பற்று வைத்து, தேய்மான நிதி முதலீட்டுக் கணக்கில் வரவு வைக்க வேண்டும்.

(2) இப் பத்திரங்களை விற்பனை செய்வதன்மூலம் கிடைக்கக் கூடிய இலாபம் அல்லது நட்டத்தினை, தேய்மான நிதி முதலீட்டு கணக்கிலிருந்து தேய்மான நிதிக் கணக்கிற்கு மாற்றம் செய்ய வேண்டும்.

(3) சொத்து மாற்றம் செய்ய ஏற்படும் செலவுத் தொகையினைப் புதிதாக வாங்கிய சொத்துக் கணக்கில் பற்று வைத்து, ரொக்கக் கணக்கில் வரவு வைக்க வேண்டும்.

(4) இறுதியாக, தேய்மான நிதிக் கணக்கினைப் பற்றும், பழைய சொத்தின் கணக்கினை வரவும் வைப்பதன் மூலம் கணக்குப் பதிவுகள் நிறைவு பெறுகின்றன.

மேற்காணும் குறிப்புகளைப் பின்பற்றும்போது மற்றொன்றையும் நினைவிற்கொள்ளவேண்டும். அதாவது, இறுதிநிலைக் குறிப்பினைத் தயாரிக்கும்போது, தேய்மான நிதிக் கணக்கினைப் பொறுப்பாகவும், தேய்மான நிதி முதலீட்டுத் தொகையினைச் சொத்தாகவும் மதிப்பிட வேண்டும். தேய்மான நிதி முதலீட்டுத் தொகையினைச் சொத்தாகவும் மதிப்பிடவேண்டும். தேய்மான நிதி முறைப்படி

ஒரு சொத்தின் தேய்மானத்தைக் கணக்கிட இறங்கு நிதி அட்டவணையைச் சரிபார்த்தல் வேண்டும்.

**அட்டவணை 'அ'**

ரூ. 1 அளிப்பதற்கு உள்ள வருடாந்திர இறங்குநிதித் தவணைகள்
அல்லது
ரூ. 1 பெறுவதற்குத் தேவையான வருடாந்திர வரவு

| ஆண்டுகள் | 3% | 3½% | 4% | 4½% | 5% |
|---|---|---|---|---|---|
| 3 | ·325530 | ·321933 | ·320348 | ·318773 | ·317208 |
| 4 | ·239028 | ·237251 | ·235490 | ·283744 | ·232012 |
| 5 | ·188354 | ·186481 | ·184627 | ·182792 | ·180975 |
| 10 | ·087230 | ·085241 | ·083291 | ·081378 | ·079504 |
| 15 | ·053767 | ·051825 | ·049941 | ·048114 | ·047342 |
| 20 | ·037216 | ·035361 | ·033582 | ·031876 | ·030240 |

**அட்டவணை 'ஆ'**

ரூ. 1 வருடாந்திர வரவு பெறுவதற்குத் தேவையான தொகை

| ஆண்டுகள் | 3% | 3½% | 4% | 4½% | 5% |
|---|---|---|---|---|---|
| 3 | 3·09000 | 3·10622 | 3·12160 | 3·13702 | 3·15250 |
| 4 | 4·18362 | 4·21494 | 4·24646 | 4·27819 | 4·31012 |
| 5 | 5·30913 | 5·36246 | 5·41632 | 5·47071 | 5·52563 |
| 10 | 11·46387 | 11·73139 | 12·00610 | 12·28820 | 12·57789 |
| 15 | 18·59891 | 19·29568 | 23·02358 | 20·78405 | 21·57856 |
| 20 | 26·87037 | 28·27968 | 29·77807 | 31·37142 | 33·06595 |

மேற்கண்ட அட்டவணைகளின் துணை கொண்டு, கீழ்க் காணும் எடுத்துக் காட்டினை விளக்க முயற்சிப்போம்.

(1) 1964-ல் ரூ. 10,000 மதிப்புள்ள கட்டடம் குத்தகைக்கு வாங்கப்பட்டது.

(2) இச் சொத்திற்குப் பதிலாக மூன்று வருடங்களுக்குப் பின்னர் வேறொரு சொத்தினை ஏற்படுத்தும் வகையில், தேய்மான நிதியொன்று ஏற்படுத்தப்பட்டது.

(3) 5% வட்டி வருடந்தோறும் அளிக்கப்படுவதாகக் கணக்கிட வேண்டும். முதலாவதாக 5% கூட்டுவட்டியில் மூன்று வருடத்தில் ரூ. 10,000 ஆவதற்குச் செலுத்த வேண்டிய வருடாந்திரத் தவணை தொகையினைக் கண்டுபிடிக்க வேண்டும். இதனை மேற்காணும் அட்டவணையிலிருந்து காணலாம். அட்டவணை 'அ' வின்படி ரூ. ·317208 ரூ. 1க்குச் சமமாகிறது.

ஆகவே, ·317208 × 10,000 = 3172·08 என்றாகிறது. இதுவே வருடாந்திரத் தவணைத் தொகையாகும். இனி, கணக்குப் பதிவியல்களைப் பார்ப்போம்,

**தேய்மான நிதிக் கணக்கு**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1964 டிச. 31 | இருப்பு கீ/இ | 3,172·08 | 1964 டிச. 31 | இலாப நட்டக் க/கு | 3,172·08 |
| 1965 டிச. 31 | இருப்பு கீ/இ | 6,502·76 | 1965 ஜன. 1 | இருப்பு கீ/கொ | 3,172·08 |
| | | | டிச. 31 | தேய்மான நிதிமுதலீட்டுக் கணக்கு | 158·60 |
| | | | | ,, இலாப நட்டக் க/கு | 3,172·08 |
| | | 6,502·76 | | | 6,502·76 |
| | | | 1966 ஜன. 1 | இருப்பு கீ/கொ | 6,502·76 |
| | | | டிச. 31 | தேய்மான நிதிமுதலீட்டு க/கு | 325·16 |
| 1966 டிச. 31 | குத்தகைச் சொத்துக் கணக்கு | 10,000·00 | | தேய்மான இலாபநட்ட க/கு | 3,172·08 |
| | | 10,000·00 | | | 10,000·00 |

**தேய்மான நிதி முதலீட்டுக் கணக்கு**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1964 டிச. 31 | ரொக்க க/கு | 3,172·08 | 1964 டிச. 31 | இருப்பு கீ/இ | 3,172·08 |
| 1965 ஜனவரி 1 | இருப்பு கீ/கொ | 3,172·08 | 1965 டிச. 31 | இருப்பு கீ/இ | 6,502·76 |
| டிச. 31 | தேய்மான நிதி க/கு | 158·60 | | | |
| | ரொக்க க/கு | 3,172·08 | | | |
| | | 6,502·76 | | | 6,502·76 |
| 1966 ஜன. 1 | இருப்பு கீ/கொ | 6,502·76 | 1966 டிச. 31 | ரொக்க க/கு | 10,000 00 |
| டிச. 31 | தேய்மான நிதி க/கு | 325·14 | | | |
| | ரொக்க க/கு | 3,172·10 | | | |
| | | 10,000·00 | | | 10,000·00 |

புதிய சொத்தினை வாங்கியவுடன் வாங்கிய விலைத் தொகையில் சொத்துக்குப் பற்றும், ரொக்கத்திற்கு வரவும் வைக்கப் படும்.

**காப்பீட்டு பாலிசி முறை** (Insurance Policy Method).

தேய்மான நிதி முதலீட்டுத் தொகை முறைக்கும், ஈட்டுறுதித் தொகை முறைக்கும், கீழ்க்காணும் ஓரிரு வேறுபாடுகளைக் குறிப்பிடுவது நன்மை பயக்கும்.

(1) தேய்மான நிதி முதலீட்டுத் தொகை முறையில், புதிய ஆவணங்கள் வாங்கப்படுகின்றன. ஆனால் அதே தொகை, காப்பீட்டு பாலிசி முறையின்படி, காப்பீட்டுக் கம்பெனி ஒன்றிற்குத் குறித்தகாலப் பாலிசி எடுத்துக் கொண்டதற்காகக் காப்பீட்டுத் தவணைத் தொகையாகச் செலுத்தப்படுகின்றது.

(2) குறிப்பிட்ட காலம் முடிந்தாலும், காப்பீட்டு நிறுவனமே ஒரு குறிப்பிட்ட தொகையை அளிக்க ஒத்துக் கொள்கிறது.

(3) இரண்டாவது முறைப்படி கணக்குப் பதிவியல் வைக்கப்பட்டிருக்குமேயானால், தேய்மான நிதி முதலீட்டுக் கணக்கிற்குப் பதிலாக, பாலிசிக் கணக்கு என்ற ஒன்று எழுகின்றது. இத் தொகையின்மீது கிடைக்கக் கூடிய வருமானம் ஏதாவது இருப்பின், அது திட்ட ஆவணம் நிறைவு பெற்றதும் முடிவில் அளிக்கப்படும். எடுத்துக்காட்டு ஒன்றின் மூலம், காப்பீட்டுறுதி முறையினை விளக்கலாம்.

(1) 1964 ஜனவரி 1ஆம் நாள், ஒரு நிறுவனம் ரூ 10,000 மதிப்புள்ள சொத்தினை மூன்று வருட காலத்திற்காகக் குத்தகைக்கு வாங்கியது.

(2) இச் சொத்திற்குப் பதிலாக வேறொன்றினை ஏற்படுத்தும் நோக்கத்தில், காப்பீட்டுத் திட்ட ஆவணம் ஒன்று எடுக்கப்பட்டு ஆண்டுதோறும் ரூ 3,200 காப்பீட்டுத் தவணையாகக் கட்டப்படுகின்றது. இதற்கான கணக்கியல் பதிவு பின்வருமாறு.

(குத்தகைச்) சொத்துக் க/கு

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1964 ஜன. 1 | ரொக்கக் கணக்கு | ரூ. 10,000 | 1966 டிச. 31 | தேய்மான நிதிக் கணக்கு | ரூ. 10,000 |

தேய்மான நிதிக் கணக்கு

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1964 டிச. 31 | இருப்பு கீ/இ | 3,200 | 1964 டிச. 31 | இலாப நட்ட க/கு | 3,200 |
| 1965 டிச. 31 | இருப்பு கீ/இ | 6,400 | 1965 ஜன. 1 | இருப்பு கீ/கொ | 3,200 |
| | | | டிச. 31 | இலாப நட்ட க/கு | 3,200 |
| | | 6,400 | | | 6,400 |
| 1966 டிச. 31 | குத்தகைச் சொத்துக் க/கு | 10,000 | 1966 ஜன. 1 | இருப்பு கீ/கொ | 6,400 |
| | | | டிச. 31 | இலாப நட்ட க/கு | 3,200 |
| | | | | குத்தகைச் சொத்தின் பாலிசிக்கு | 400 |
| | | 10,000 | | | 10,000 |

குத்தகைச் சொத்து பாலிசி க/கு

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1964 டிச. 31 | ரொக்க க/கு | 3,200 | 1964 டிச. 31 | இருப்பு கீ/இ | 3,200 |
| 1965 ஜன. 1 | இருப்பு கீ/கொ | 3,200 | 1965 டிச. 31 | இருப்பு கீ/கொ | 6,400 |
| டிச. 31 | ரொக்கம் | 3,200 | | | |
| | | 6,400 | | | 6,400 |
| 1966 ஜன. 1 | இருப்பு கீ/கொ | 6,400 | 1966 டிச. 31 | ரொக்க க/கு | 10,000 |
| | ரொக்கம் | 3,200 | | | |
| | இருப்பு, தேய்மான நிதி க/கு (வட்டி) | 400 | | | |
| | | 10,000 | | | 10,000 |

6. பயன் அடிப்படை முறை (Basis of Use Method).

சில நேரங்களில் ஒரு நிறுவனத்திலுள்ள சொத்துகள் எந்த நோக்கத்துடன் வாங்கப்பட்டு, என்ன உபயோகத்திற்காகக் கையாளப்படுகின்றன என்பதைப் பொறுத்துத் தேய்மானம் கணக்கிடப்படும். எடுத்துக்காட்டாக, மோட்டார் வண்டிகளை எடுத்துக் கொள்வோம். ஒரு மோட்டார் வண்டியின் தேய்மானத்தைக் கணக்கிட அதன் ஆயுள்காலம் முக்கியமான குறிப்பாகாது. மாறாக, அவ்வண்டி எத்தனை மைல் தூரம் ஓடியுள்ளதென்பதைப் பொறுத்தே அதனுடைய தேய்மானம் கணக்கிடப்படும். அதாவது, அம் மோட்டார் வண்டியின் ஆயுள்காலமென்பது அவ்வண்டி ஓடிய மைல்கள் (ஆயிரத்தில்) தூரத்தை அதனுடைய மதிப்புத் தொகையில் வகுத்துக் கிடைப்பது, ஒரு மைல் தூரத்திற்கான தேய்மானமாகும். ஒவ்வொரு வருடமும் அவ்வண்டி ஓடிய மொத்த மைல்களைக் கணக்கிட்டு அதன் தேய்மான அடிப்படையால் பெருக்க நமக்குக் கிடைப்பது மோட்டார் வண்டியின் மொத்தத் தேய்மானத் தொகையாகும்.

7. மறுமதிப்பீட்டு முறை (Revalution Method).

அடிக்கடி தங்களது மதிப்புத் தொகையில் மாற்றங்காணக் கூடியதும், நிலையற்ற ஆயுள் காலம் உடையதுமான, சொத்துகளின் தேய்மானத்தைக் காண இம் மறு மதிப்பீட்டு முறை பயன்படுத்தப்படுகிறது. எடுத்துக்காட்டாக, கருவிக்கலன்கள், உற்பத்தி முறை உரிமைகள் (Patents) பதிப்புரிமைகள் போன்றவற்றைக் குறிப்பிடலாம். இத்தகைய சொத்துகளின் மதிப்பு ஒவ்வொரு வருடமும் மறுபடியும் கணக்கிடப்படுகிறது. ஒரு நிறுவனத்தின் இயக்கநிலையில் (as a going concern) இச் சொத்துகள் மறுமதிப்பீடு செய்யப்படவேண்டும்.

8. இழந்துசெல் மதிப்பீட்டு முறை (Depletion unit Method)

சிலவகைச் சொத்துகள் காலப்போக்கில் தம் மதிப்பினை அறவே இழந்துவிடும். பிறவகைச் சொத்துகளுக்குப் பதிலாக வேறொரு சொத்தினை ஏற்படுத்துவது போன்று, இச் சொத்துகளுக்கு ஏற்படுத்த முடியாது. எடுத்துக்காட்டாக, கல் உடைக்கும் சுரங்கம், நிலக்கரிச் சுரங்கம் போன்றவற்றைக் குறிப்பிடலாம். இத்தகைய சொத்துகள் தங்களது மதிப்பினை இழந்து கொண்டேசெல்வதால், இவற்றிற்கான தேய்மானத்தினைக் கணக்கிடும் வகை பின்வருவதாம் :—

1. கல் உடைக்கப்படும் சுரங்கம் ஒன்று மொத்தம் 10,000 டன் கற்கள் அளிக்கமுடியும் எனக் கொள்வோம்.

2. இச் சுரங்கத்தினை ரூ. 5,000 கொடுத்து வாங்குவதாகக் கொள்வோம்.

3, அவ்வாறெனில், 1 டன் கற்களின் மதிப்பு 5 பைசா வென எளிதாகக் கண்டுபிடித்துவிடலாம். பின்னர், எடுக்கப்படு கின்ற கற்களின் மதிப்பைக் கண்டுபிடித்து, அதனையே தேய்மான ஒதுக்கீடாகக் கருதுதல் இம் முறையின் கருத்தாகும்.

## 9. இயந்திர நேர முறை (Machine-hour Method)

இம் முறையின்படி, ஓர் இயந்திரத்தின் தேய்மானத்தைக் கணக்கிட முதலில், அந்த இயந்திரம் எத்தனை மணி நேரம் இயங்கு மெனத் தெரிந்துகொள்ள வேண்டும். பின்னர், அந்த மணி நேரத்தை இயந்திரத்தின் மதிப்புத் தொகையால் வகுக்க வேண்டும். கிடைப்பது, அந்த இயந்திரம் ஒரு மணி நேரம் இயங்க அதற்கேற்படுகின்ற தேய்மானம் எனத் தெரிந்துகொள்ளலாம்.

$$\text{தேய்மான அளவு} = \frac{\text{இயந்திரத்தின் மொத்த வேலைநேரம் (மணியில்)}}{\text{இயந்திரத்தின் மதிப்பு}}$$

இவ்வாறு குறிப்பிட்ட இயந்திரத்தின் தேய்மானவிகிதத்தைத் தெரிந்துகொண்ட பின்னர், ஒரு வருடத்தில் எவ்வளவு மணி நேரம் அஃது இயங்கியுள்ளதென்பதைக் கண்டு அதற்கேற்ற தேய் மானத் தொகையைக் கணக்கிட வேண்டும்.

## 10. கூட்டுவட்டி முறை (Compound Interest Method)

மின்திறன் வழங்கும் சட்டம், 1948-ன்படி (Electricity Supply Act 1948) மின்திறனை உற்பத்தி செய்து வழங்கும் நிறுவனங்களி லுள்ள நிலையான சொத்துகளின் தேய்மானம் கூட்டுவட்டி முறையில் கணக்கிடப்படுகிறது. இம் முறையின்படி ஒரு சொத்து வருடந்தோறும் இழக்கும் மதிப்பிற்கேற்ற தொகையை, 4% கூட்டுவட்டியுடன் சேர்த்துத் தனியே கணக்கில் வைத்துவர வேண்டும். ஒவ்வொரு வருடமும் இவ்வாறு சேர்ந்துகொண்டே வரும் தொகை, குறிப்பிட்ட சொத்தின் ஆயுள்காலம் முடிவடையும் போது அச் சொத்தின் தோற்ற மதிப்பில் 90% ஆக இருக்க வேண்டும். இக் கூட்டு வட்டிமுறை, இறங்குநிதி முறை (Sinking Fund Method)க்குச் சற்றே ஒத்திருப்பதுபோல் தெரிந்தாலும், வகையில் வேறுபடுகின்றது. அதாவது, இறங்குநிதி முறையில் தனியே எடுத்துவைக்கப்பட்ட தேய்மான ஒதுக்கீடு நிறுவனத் திற்கு வெளியே உள்ள பத்திரங்களில் முதலீடு செய்யப்பட்டு

கூட்டுவட்டியைப் பெறும். ஆனால், கூட்டுவட்டி முறையில், வெளி நிறுவனங்களின் பத்திரங்கள் என்ற பேச்சிற்கே இடமில்லை,

**பதில் சொத்தினை ஏற்படுத்துவதிலுள்ள சிக்கல்**

நிலையான சொத்து ஒன்றின் ஆயுள்காலம் முடிவடையும் போது, அதற்குப் பதிலாக வேறொரு சொத்தினை ஏற்படுத்த ஆகக்கூடிய செலவுத் தொகையைத் தேய்மான ஒதுக்கீட்டிலிருந்து எடுத்துக்கொள்வது முறையாகும். ஆனால், தேய்மான ஒதுக்கீட்டுத் தொகை கணிசமான (அல்லது சரியான அளவில்) இருந்தால்தான், பின்னாளில் பதில் சொத்தினை வாங்கமுடியும். ஏனெனில், எல்லாப் பொருள்களின் விலையும் உயர்ந்துவரும் இந் நாளில், சொத்துகளின் விலையும் நிச்சயம் உயர்ந்து கொண்டேபோகும் என்பதில் ஐயமில்லை. ஆனால், பல வருடங்களுக்குப் பின்னர் நிலவக்கூடிய விலையினை, இன்றே எதிர்பார்த்து அதற்கேற்பத் தேய்மான ஒதுக்கீட்டினைச் செய்வதும் இயலாத செயலாகும். ஆகவே, இச் சிக்கலைத் தீர்க்கும் வண்ணம், தேய்மான ஒதுக்கீட்டினை இரண்டு வகையாகச் செய்யலாம். முதலில் சொத்தின் தோற்ற மதிப்பினை அடிப்படையாகக் கொண்டு வழக்கம்போல் தேய்மான ஒதுக்கீட்டினைச் செய்துவர வேண்டும். பின்னர், உயர்ந்துவரும் விலைவாசிக்கேற்ப, குறிப்பிட்ட ஒரு சொத்தினை உருவாக்கத் தேவைப்படும் அதிக அளவுத் தொகையினை நிறுவனம் ஈட்டுகின்ற இலாபத்திலிருந்து எடுத்துத் தனியே 'தேய்மான ஒதுக்கீட்டு நிதி' என்ற ஒன்றில் சேர்க்க வேண்டும். ஆனால், இறுதிநிலைக் குறிப்பில் சொத்துகளின் தோற்ற மதிப்பினை மட்டும் குறிப்பிட்டால் போதுமானது.

**இந்தியக் கம்பெனிச் சட்டம் 1956-ன்படி தேய்மானம் ஏற்படுத்தும் முறை**

இந்தியக் கம்பெனிச் சட்டம் 1956-ன்படி கீழ்க்காணும் குறிக்கோள்களுக்காக ஒரு நிறுவனத்தின் நிகர இலாபம் கணக்கிடப் படவேண்டும் :

(அ) பங்காதாயத்தினை அறிவிப்பதற்காக,

(ஆ) நிகர இலாபத்தினை அடிப்படையாகக் கொண்டு மேலாண்மைக்கான கழிவுத் தொகையினைத் தீர்மானிக்க.

மேற்கண்டவற்றைத் தீர்மானிக்கும் பொருட்டு, ஒரு நிறுவனத்தின் நிலையான சொத்துகளின் மதிப்பினைக் கொண்டு,

அவற்றிற்கான தேய்மானத் தொகையினைப் பல வழிகளிலும் நாம் காண முடியும்.

## இலாபப் பங்கீடு

### தேய்மானம்

கம்பெனிச் சட்டத்தின் 205ஆவது பிரிவின்படி, 1960 டிசம்பர் திங்கள் 27ஆம் நாளுக்குப் பின்னர் வரக்கூடிய எந்த ஒரு நிதி வருடத்திலும் ஒரு நிறுவனத்தின் இலாபத்தைப் பகிர்ந்து அளிக்குமுன்னர், அந் நிறுவனத்தின் நிலையான சொத்துகள்மீது தேய்மான ஒதுக்கீடு செய்யப்பட்டுவிட்டதா என்று பார்க்க வேண்டும். சில நேரங்களில், கடந்த வருடங்களுக்கான தேய்மான ஒதுக்கீடும் ஏற்படுத்தப்படாதிருக்கலாம். அவ்வாறு ஏதுமிருப்பின், அதனையும் நடப்பு ஆண்டின் இலாபத்திலிருந்து எடுத்து விட்டபின்னரே நிறுவனத்தின் பங்குதாரர்களுக்கு இலாபப் பங்கீட்டினைச் செய்யவேண்டும். இதுபோன்றே கடந்த ஆண்டின் நட்டம் ஏதுமிருப்பின் அதையும் நடப்பு ஆண்டில் இலாபத்திலிருந்து எடுத்தபின்னரே பங்குதாரர்களுக்கு இலாப ஈவினை (பங்காதாயத்தினை)ப் பகிர்ந்தளிக்க வேண்டும்.

ஆனால், பொதுமக்களின் நன்மையை உத்தேசித்து இத்தகைய தேய்மானத்திற்கு வகை செய்வதற்கு முன்னரே, இலாப ஈவினை அளிப்பதற்கான அனுமதியை மத்திய அரசு வழங்க இச் சட்டம் வகை செய்கின்றது.

வருமானவரிச் சட்டம் 1961-ன்படி (Income Tax Act) எந்தெந்த நிலையான சொத்துகளின்மீது வரிவிதிக்கப்படு கின்றதோ, அச் சொத்துகளுக்கான தேய்மானம் பின்வரும் முறைகளில் கணக்கிடப்படலாம்:

(அ) குறைந்துசெல்மீத முறை (Diminishing Balance Method) அல்லது மதிப்பு இறக்க முறையின்படி சொத்துகளின் மீதான தேய்மானம் கணக்கிடப் படலாம்.

அல்லது

(ஆ) நேர்க்கோட்டு முறைப்படி ஒவ்வொரு வருட முடிவிலும் சொத்தின் மதிப்பில் குறைந்த அளவு 95% தேய்மானம் ஏற்படுத்தப்படலாம்.

அல்லது

(இ) குறிப்பிட்ட காலவரையறைக்குள் குறைந்த அளவு 95% தேய்மானம் ஏற்படுத்தக் கூடிய எந்த முறையினையும், மத்திய அரசின் அனுமதியின்பேரில் கையாளலாம்.

மேற்கண்ட முறைகளில் தேய்மானத் தொகையினைக் கணக்கிடும் முறைபற்றி ஏற்கனவே விரிவாகக் கண்டோம். வருமான வரிச் சட்டத்திற்குள் வரையறுக்கப்படாத ஏனைய சொத்துகளின் மீதான தேய்மானத்தை மத்திய அரசு அனுமதிக்கின்ற எவ்வகையிலும் கணக்கிடலாம்.

**கணக்கு ஏடுகளில் தேய்மானம் பற்றிய செய்திகளை வெளியிடுதல்**

இந்தியக் கம்பெனி சட்டத்தின்படி, ஒரு நிறுவனத்தின் இலாப, நட்டக் கணக்குகளில், அந் நிறுவனத்தைச் சார்ந்த சொத்துகளின் மீது ஏற்படுத்தப்பட்ட தேய்மானத் தொகைகள் குறிக்கப்பட்டிருக்க வேண்டும். மேலும், ஒரு நிலையான சொத்தின் மதிப்பில் ஏற்பட்ட மாற்றங்கள், இலாப, நட்டக் கணக்கில் காட்டப்பட்டிருக்க வேண்டும். பொதுவாக, தேய்மானம் என்பது, இலாப, நட்டக் கணக்கில் காண்பிக்கப்படும் நிகர இலாபத் தொகையைப் பாதிப்பதால் இதனை அக் கணக்கில் காட்டுவது பொருத்தமானது. சில நேரங்களில், இலாப, நட்டக் கணக்கினை (நிகர இலாபத்தினை)ப் பாதிக்காத வகையில் இத் தேய்மானம் ஏற்படுத்தப்பட்டிருக்குமேயானால், அப்போது, இத் தேய்மானம் எவ்வழியில் ஏற்படுத்தப்பட்டுள்ளது என்ற விபரங்கள், இலாப, நட்டக் கணக்கிற்கு அடியிலேயே, தனிக்குறிப்பாகத் தர வேண்டும். எடுத்துக்காட்டாக, தேய்மான ஒதுக்கீட்டுத் தொகை (Depreciation Reserve)யிலிருந்து தேய்மானம் ஏற்படுத்தப்பட்டிருந்தாலும், இலாப நட்டக் கணக்குப் பாதிக்கப்படுவதில்லை. எனினும், இதுபற்றிய குறிப்புத் தரப்பட வேண்டும். மற்றும் சில நேரங்களில் தேய்மானத்திற்கு ஏதும் வகை செய்யப்படாவிட்டாலும், அதுபற்றிய சிறப்புக் குறிப்பும், இலாப நட்டக் கணக்கில் தரப்பட்டிருக்க வேண்டும். அடுத்து, டிசம்பர் 27, 1960-க்குப் பின்னர் வருகின்ற எந்த ஒரு நிதியாண்டிற்குமான தேய்மான ஒதுக்கீட்டுப் பாக்கிகள் ஏதுமிருப்பின், அஃது இலாப, நட்டக் கணக்கில் குறிக்கப்பட்டிருக்க வேண்டும்.

இறுதிநிலைக் குறிப்பைப் பொறுத்தமட்டில், ஒரு குறிப்பிட்ட தேதியில் உள்ளவாறு. சொத்துகளின் உண்மையான மதிப்பினைக் காட்டவேண்டுமாதலால், தேய்மானத் தொகையினை, அச் சொத்துகளின் உண்மையான மதிப்பிலிருந்து கழித்து விடவேண்டும். கடந்த மற்றும் நடப்பு வருடங்களுக்கான தேய்மானத் தொகை ஒன்ருகச் சேர்த்துக் காண்பிக்கப்பட வேண்டுமென்றும் சட்டம் வலியுறுத்துகின்றது. இறுதியாக, ஒரு நிலையான சொத்தின்மீது ஏற்படுத்தப்பட்ட தேய்மானத்தொகை,

தேவைக்குமேல் அதிகமிருப்பதாகக் கருதப்பட்டால், அத் தொகையினைத் தேய்மான ஒதுக்கீடாகக் (Reserve) கருத வேண்டும்.

**பொருளாதாரத் தேய்மானம்** (Economic Depreciation)

பொருளாதாரத் தேய்மானம் அல்லது விலைமாற்றத் தேய்மானம் என்ற முறையின்படி தேய்மானம் கணக்கிடப்பட வேண்டிய வழியினை இங்குக் காண்போம்.

தோற்ற மதிப்பீட்டுமுறை, நியாயமான மதிப்பீட்டுமுறை போன்ற முறைகளைக் கையாண்டு நிலையான சொத்துகளின் மீதான தேய்மானத்தை ஏற்படுத்துவது குறித்து ஏற்கனவே விரிவாகப் பார்த்த நாம், இம் முறைகளில் உள்ள குறை ஒன்றினையும் கவனிக்கத் தவறக்கூடாது. அதாவது, எந்த வழிகளில் தேய்மானம் ஏற்படுத்தப்பட்டாலும். ஒரு குறிப்பிட்ட தொகை தேய்மான ஒதுக்கீடாக எடுத்து வைக்கப்படும். குறிப்பிட்ட சில வருடங்களுக்குப் பின்னர், வேறொரு சொத்தினை ஏற்படுத்த வேண்டுமாயின், அதற்கான செலவுத்தொகை இத் தேய்மான ஒதுக்கீட்டிலிருந்து கிடைக்காது. ஏனெனில், பொருள்களின் விலை நாள்தோறும் உயர்ந்துகொண்டேபோகும் இந் நாளில் தேய்மானம்பற்றிய பழைய முறைகள் எதுவுமே பயன்படமாட்டா. ஆகவே, நாள்தோறும் மாறிக்கொண்டிருக்கும் பணத்தின் மதிப்பு,பின்னாளில் எவ்வளவாகஇருக்கும் என்பதனைக் கணக்கிட்டு அதற்கேற்பத் தேய்மான ஒதுக்கீடு செய்யப்படவேண்டுமென்று கூறும் முறையின் பெயர்தான் 'பொருளாதாரத் தேய்மான முறை' அல்லது 'விலைமாற்றத் தேய்மான முறை' என்பதாகும்.

இரண்டாம் உலகப் போருக்குப் பின்னர், எல்லாப் பொருள்களின் விலையும் விஷம்போல் ஏறியபோது, பல நிறுவனங்கள் தங்களது சொத்துகளின்மீது ஏற்கனவே ஏற்படுத்தப்பட்ட தேய்மான ஒதுக்கீட்டுத் தொகையைக் கொண்டு, புதிய சொத்துகளை வாங்க முடியாமல், அதன் காரணமாகத் தொழில் நிறுவனத்தைத் தொடர்ந்து நடத்த முடியாமல் தவித்தன. இதனைக் கண்ணுற்றபிறகுதான், 'பொருளாதாரத் தேய்மான முறை' மிகவும் வலியுறுத்தப்பட்டு வருகின்றது. குறிப்பாக, பொதுப்பயன் தொழில்களுக்கு இம் முறை மிகவும் இன்றியமையாததாகும். ஏனெனில், பல நிறுவனங்களைவிட, இந் நிறுவனங்களில்தான் மிகப்பெருமளவில் நிலையான சொத்துகள் வைக்கப்பட்டிருக்கின்றன.

"ஒரு நிலையான சொத்து உருவாக்கப்படும்போதோ வாங்கப்படும்போதோ என்ன செலவானதோ அதனை அடிப்படையாகக்கொண்டு, அதே சொத்தினை அதனுடைய ஆயுள்காலம் முடிவடையும்போது, பல வருடங்களுக்குப்பின்னர் வாங்க என்ன தொகை செலவாகுமோ அத் தொகை கிடைக்க வழிசெய்வதே 'பொருளாதாரத்தேய்மானம்" எனலாம்.

பொதுப்பயன் தொழில்களில் குறிப்பாக, எரிவாயு, மின் திறன் போன்றவற்றை அளிக்கும் நிறுவனங்களில் இப் பொருளாதாரத் தேய்மான முறைப்படி தேய்மான ஒதுக்கீடு செய்யப் படாவிட்டால், அந் நிறுவனங்கள் தங்களது நுகர்வோரிடமிருந்து வசூலிக்கும் கட்டணத்தைச் சிறிது உயர்த்தக்கூடும். பொது மக்களுக்காக, பொதுநலத்துடன் பாடுபடும் எந்த ஒரு நிறுவனமும் இந் நிலையினை வரவேற்காது என்பது உறுதி. ஆனால், பொருளாதாரத் தேய்மானத்தினை அனைத்துப் பொதுப்பயன் தொழில்களுக்கும் ஏற்க வேண்டுமாயின், தற்போதுள்ள வருமான வரிச் சட்டங்களில் பெரிதும் மாற்றம் செய்யப்படவேண்டும். அப்போதுதான் இத் தொழில்களின் கட்டண அடிப்படையைத் தீர்மானிக்கும் பணிக்காக இம் முறையினைக் கையாள முடியும் என்பதும் உண்மை.

"பொருளாதாரத் தேய்மானம் அல்லது விலைமாற்றத் தேய்மானம்" என்ற கோட்பாட்டிற்கு எதிரான கருத்துகளும் உள. முதலில், பொருளாதாரத் தேய்மானத்தின்படி பின்னர் வரக்கூடிய விலைமாற்றங்களுக்கேற்பக் கணக்கிடப்படும் தேய்மானத்தொகை, குறிப்பட்ட சொத்தின் மூலம் ஈடுசெய்யத் தேவைப் படும் தொகைக்கு மிகச் சமமாக இருக்கும் என்று சொல்ல இயலாது. அதாவது, இம் முறையின் வழியே ஏற்படுத்தப்பட்ட தேய்மானத் தொகையினைக் கொண்டு. ஒரு சொத்தின் ஆயுள் காலம் முடிவடையும்போது, அதற்குப் பதிலாக வேறொரு சொத்தினை ஏற்படுத்தப் போதுமானதாக இருக்கும் என்று சொல்ல இயலாது. ஏனென்றில், சந்தையின் விலை மாற்றங்களை மிகத் துல்லியமாக எடைபோட அல்லது எதிர்நோக்க எவராலும் இயலாதாகையால், அதற்கேற்பத் தேய்மானவீதத்தையும் சரியாகக் கணக்கிட முடியாது. எனவே, சொத்தின் ஈட்டுத் தொகையும், தேய்மானத்தொகையும், பல வருடங்களுக்குப் பின்னர் சமமாக இருந்தால், அது சந்தர்ப்பவசத்தினல் ஏற்படக் கூடியதேயன்றிச் சரியான கணக்கியல் முறையால் ஏற்பட்டது என்று சொல்வதற்கில்லை.

இரண்டாவதாக, ஒரு சொத்தின் ஆயுள்காலத்தைக் கொண்டே, தேய்மான ஒதுக்கீடுகள் செய்யப்படுகின்றன

என்பதை நாம் அறிவோம். இவ்வாறு குறிப்பிட்ட ஒரு சொத்தின் ஆயுள்காலத்தை நிருணயித்துப் பின்னர் நாம் எதிர்நோக்கும் விலை மாற்றங்களையும் கணக்கிட்டுத் தேய்மானத்தொகை ஒன்றினை ஏற்படுத்துகிறோம் என்று வைத்துக்கொள்வோம். குறிப்பிட்ட ஆயுள்காலம் முடிவடைந்தபோதும், சில நேரங்களில், சொத்துகள் தங்களது மதிப்பினை இழக்காத நிலையில் இருக்கலாம், ஏனெனில், இன்றைய இயந்திர உலகில் பல்வேறு தொழில் முறைகள், தொழிலறிவு வளர்ச்சிகள் ஏற்பட்டுள்ளமையால், சொத்துகளின் குறைபாடுகள் எளிதாக நீக்கப்பட்டு அவற்றின் வாழ்நாள் நீடிக்கப்படும் வாய்ப்புகள் மிகுந்துள்ளன. இந் நிலையில் அதற்கு ஈடாக வேறொரு சொத்தினை ஏற்படுத்துவது அல்லது ஏற்படுத்தாமல் இருப்பது என்ற இரண்டுமே சரியான முடிவாகா. மேலும், ஏற்கனவே கணக்கிடப்பட்டு வைக்கப்பட்ட பொருளாதாரத் தேய்மானமும் சரியாக அமையாது என்பது மரபு.

மூன்றாவதாக, வருமானவரித்துறையின் விதிமுறைகள், இப்பொருளாதாரத் தேய்மானத்திற்கு ஏற்றதாக இல்லாதிருப்பதோடு, எதிரானதாகவும் அமைந்திருப்பதைக் கூறலாம். வருமான வரித்துறையின் விதிகளுக்கேற்ப, ஒரு நிறுவனத்திலுள்ள சொத்துகளுக்காக, அதன் தோற்ற மதிப்பீட்டின் மீது ஏற்படுத்தப்பட்ட தேய்மானத் தொகையை மட்டுமே வசூலிக்க முடியும். அவ்வாறன்றிப், பொருளாதாரத் தேய்மானம் அல்லது விலை மாற்றத் தேய்மான முறையின்படி ஏற்படுத்தப்படும் தேய்மானத் தொகை அதிகமானதாக இருப்பின், இதனால் நுகர்வோராகிய பொதுமக்களே பெரிதும் துன்புறுவர். ஏனெனில், வருமான வரியினைச் செலுத்திய பின்னர், ஏற்படுத்தப்பட்ட இந்த உபரித் தேய்மானத் தொகை நிறுவனத்தின் இலாப, நட்டக் கணக்கினை மிகவும் பாதிக்கக் கூடியது. எனவே, நிறுவனத்தின் நிதி நிலையைச் சமாளிக்கத் தங்களின் பொருள்களுக்கான கட்டண வீதத்தை உயர்த்துவது ஒன்றே ஏற்ற வழியாகும். பொதுப் பயன் தொழில்களின்மூலம் நுகர்வோர் பயன்பெறுவதற்குப் பதிலாக, துன்புறக் கூடிய நிலைக்கு அவர்களை ஆளாக்குவது விவேகமான செயலாகாது.

இறுதியாக, பெரும்பாலான பொதுப்பயன் தொழில்கள், இரண்டாம் உலகப் போருக்குப் பின்னர், ஏற்படுத்தப்பட்டமையால் இந் நிறுவனங்களின் சொத்துகள் அதிகமான விலை கொடுத்தே ஏற்படுத்தப்பட்டிருக்குமாதலால், இரண்டாம் உலகப் போருக்குமுன்னர் கையாளப்பட்ட பொருளாதாரத் தேய்மானம் காலத்திற்கொவ்வாததாக அமைகின்றது.

**துரிதப்படுத்தப்பட்ட தேய்மானம் (Accelerated Depreciation)**

இதுவரை நாம் அறிந்த பலவிதமான தேய்மான முறைகளில் மிகவும் பழமையானதும், பெரிதும் கையாளப்படுவதுமான நேர்க் கோட்டுத் தேய்மான முறையிலிருந்து துரிதப்படுத்தப்பட்ட தேய் மான முறை சற்றே மாறுபடுகின்றது. நேர்க்கோட்டு முறையில் ஒரு சொத்தின்மீது ஏற்படுத்தப்பட்ட தேய்மானம், அதனுடைய ஆயுள்காலம் முடிவடையும்வரை, ஒரே சீரானதாக, வருடந் தோறும் குறிப்பிட்ட ஒரு தொகை மட்டுமே எடுத்துவிடப்படும் படி, அமைந்துள்ளது. ஆனல், துரிதப்படுத்தப்பட்ட தேய் மானம் என்பது, வருமானவரித்துறையினரால் ஏற்படக்கூடியச் சிக்கல் காரணமாகவே ஏற்பட்டது எனலாம். இம் முறையின்படி, சொத்துகளின் மீதான தேய்மானம் இரண்டு வகையாக ஏற் படுத்தப்படுகின்றது. அச் சொத்தின் ஆயுள்காலத்தின் பகுதி யில் அதனுடைய மொத்த மதிப்பில் மூன்றில் இரண்டு பங்கோ ($\frac{2}{3}$) அல்லது நான்கில் மூன்று பங்கோ ($\frac{3}{4}$) தேய்மானமாக எடுத்துவிடப்படுகின்றது. எஞ்சியிருக்கும் மதிப்பு, ஆயுள் காலத்தின் இரண்டாவது பகுதியில் சரி செய்யப்படுகின்றது. இவ்வாறு செய்வதன் நோக்கம் என்ன? ஒரு நிறுவனம் தனது தொடக்கநிலையில் நன்ருகச் செழித்து வளர்ந்து, இலாபத்துடன் இயங்கிக் கொண்டிருக்கும்போது, அதிகமான அளவில் தேய் மானத்தை ஏற்படுத்துவதற்குத் தயங்காது. ஆகவே. சொத்து களின் பெருமளவு மதிப்பு, அவற்றின் ஆயுள்காலத்தின் பிற்பகுதி யில் சரிசெய்யப்படுகின்றது. இதே நிறுவனம், நாளடைவில் வருவாய்க் குறைந்த நிலையை அடையும்போது தேய்மானத்திற் காகக் குறைந்த தொகையினையே ஒதுக்க முடியும். எனவே தான் இம் முறை பயன்படுத்தப்படுகின்றது. "நாளை கிடைக்கக் கூடிய பலாப்பழத்தைவிட இன்று கிடைக்கும் களாப்பழமே சிறந்தது" என்ற பழமொழிக்கேற்ப, இத் தேய்மானமுறை அமைந்திருப்பது குறிப்பிடத் தக்கதாகும்.

**முடிவுரை :**

பொதுப்பயன் தொழில்களின் தேய்மானமுறை பல விதங் களில் அமையக்கண்ட நாம் எந்தமுறை மிகச் சிறந்ததென மிக எளிதில் விடையளிக்க முடியாது. ஏனெனில், சில நேரங் களில் சொத்துகளின் தன்மையைப் பொறுத்தும் பொதுப்பயன் தொழில்களின் தன்மையைப் பொறுத்தும் தேய்மான முறைகள் கையாளப்பட வேண்டும். முறை எதுவாயினும், அது முறை யானதாகவும், நுகர்வோருக்குத் தீங்கு பயக்காமலும் இருத்தல் மிகவும் இன்றியமையாததாகும்.

## கருத்துக்கோப்பு

தேய்மானத்தின் இலக்கணம் - அதற்கானகாரணங்கள்-தேய்மானம் என்ற சொல்லின் பொருள் - கணக்கிடப்படும்முறை-இயந்திரக் குறிப்பேடும் அதன் நன்மைகளும் - பொதுப்பயன் தொழில்களில் தேய்மானம் - தேய்மான அடிப்படை - தேய்மான ஒதுக்கீட்டை ஏற்படுத்தும் முறைகள் - நேர்க்கோட்டுமுறை - குறைந்துசெல்மீத முறை-வருடாந்திர-வரவு முறை தேய்மான நிதி முறை - ஈட்டுறுதித்தொகை முறை - நோக்க அடிப்படை முறை - மறுமதிப்பீட்டு முறை - இழந்துசெல் மதிப்பீட்டு முறை - இயந்திர முறை - கூட்டுவட்டி முறை - இந்தியக் கம்பெனிச் சட்டம் 1956-ன் படி தேய்மானம் ஏற்படுத்தப்படவேண்டிய முறைகள் - பொருளாதாரத் தேய்மானம் - துரிதப்படுத்தப்பட்ட தேய்மானம்.

# 12. வருவாய்விதம் (The Rate of Return)

"ஒரு தொழிலின் மதிப்பு அத் தொழிலின் வருவாயினைக் கொண்டே நிருணயிக்கப்படுகின்றது......"

—ஜஸ்டிஸ் டக்ளஸ் (Justice Douglas)

இன்றைய வாணிக உலகில் நாள்தோறும் நூற்றுக்கணக் கான தொழில்கள் பெருகுவதும், அதே நேரம் சில நிறுவனங்கள் நசிந்து மடிவதும் மிகவும் இயல்பான செயலாகும். தொழில் வளர்ச்சிக்குமட்டுமன்றி, தொழிலறிவு மேம்பாட்டிற்கும் காரண மாக விளங்குவது எது? ஒரு தொழிலில் கிடைக்கக்கூடிய இலா பம் அதிக அளவில் இருக்குமேயானல், அத் தொழில் மிகவும் எளிதாக விரிவடைந்துவிடும். அதேபோன்று இலாபம் ஈட்டக் கூடிய தன்மையை இழந்த தொழில் நிறுவனங்கள் வாணிக உல கில் வெகு நாள்கள் நிலைத்து நிற்க இயலாது. பணத்தை வழி படக் கூடிய முதலாளித்துவ உலகில், ஒவ்வொரு வணிகரும் தத்தம் தொழிலை முன்னேற்ற, அயராது உழைப்பதைக் காணலாம். அதிக விளம்பரங்கள் செய்தோ பொருள்களின் தரத் தினைக் கூட்டியோ அவற்றின் விலையைக் குறைத்தோ, தமது பொருள்களுக்கான விற்பனையைப் பெருக்கி அதன்மூலம் அதிக அளவு இலாபத்தினை ஈட்டவே ஒவ்வொரு நிறுவனமும் எண்ணுகின்றது. இத்தகைய போட்டி மனப்பான்மை தொழில் நிறுவனங்களிடையே நிலவுமேயானல், அஃது ஒரு வகையில் நாட் டின் பொருளாதாரத்தை வலுப்படுத்துவதாக அமையக்கூடும். ஏனெனில், வருவாயினை அதிகமாக ஈட்ட எண்ணுகின்ற எந்த ஒரு நிறுவனமும், அயராது உழைக்கவும், திறமையாகப் பாடு படவும், புதிய கருத்துகளை நன்முறையில் செயற்படுத்தவும் வேண்டிய நிலையில் இருக்கின்றது. இதன் காரணமாக, சமுதா யத்திலுள்ள ஒவ்வொரு நிறுவனமும் வலுவான அடிப்படையை யும் திறமையான நிருவாகத்தையும் கொண்டதாக அமைகின்றது.

பொருளாதாரப் பேராசிரியர் ஒருவர் வகுப்பறையில் சொல்லித் தரும் "செம்மைச் சந்தை" (Perfect Competion) யினை நடைமுறையில் எங்கும் காண இயலாது. ஏனெனில், இலாபத்தின் அடிப்படையில் நடைபெறக் கூடிய தொழில் நிறுவனங்களுடையே உற்பத்திப் பொருள்களைப் பெறுவதற்காகக் கடுமையான போட்டி நிலவுவது வெள்ளிடைமலை. தங்களுக்குக் கிடைக்கக்கூடிய இலாபத்தினை வைத்துக் கொண்டு அதிக விலை கொடுத்தாவது, தங்களது நிறுவனத்திற்கு வேண்டிய நிதி, நிலம் மற்றும் உழைப்பு போன்ற உற்பத்திப்பொருள்களை பெறுவதில் எல்லா நிறுவனங்களும் ஆர்வம் காட்டுவது இயற்கையே. இத்தகைய போட்டி நிலையில், மிக அதிக விலை கொடுக்கும் நிறுவனத்திற்கு இவ்வுற்பத்திப் பொருள்கள் விற்கப்படுவதும், அதிக விலை கொடுக்க இயலாத நிறுவனத்திற்கு இப் பொருள்கள் கிடைக்காமல் போவதிலும் வியப்பொன்றுமில்லை. மேலும், விலைப்போர் நடத்தும் இந் நிறுவனங்களிடையே எந்த நிறுவனத்திற்கு உண்மையிலேயே இப் பொருள்கள் இன்றியமையாது தேவைப்படுகின்றன, எந்நிறுவனத்திற்குத் தேவைப்படவில்லை என்ற வினவிற்கு விடைகாண இயலாது. சுருங்கக் கூறின், அதிக அளவு வருவாயுடைய நிறுவனம், தொழில் துறையில் தனிப்பேரரசாக விளங்கும் தன்மை பெற்றுள்ளது எனலாம். மேலும், வேகமாக மாறிவரும் இவ் வாணிக உலகில், தொழில் துறைக்கான அபாயங்கள், இலாபம், இலாப எதிர்நோக்கு போன்ற செய்திகள் இத் துறையின் போக்கினையே மாற்றி அமைக்கவல்லவை. காலப்போக்கில், ஒரு சில நிறுவனங்கள் மட்டுமே வல்லமை படைத்து இயங்கவும், பல நிறுவனங்கள் இயங்கமுடியாத நிலையை அடையவும் நேரிடும். இந் நிலைகளுக்கெல்லாம் மூலகாரணம் தொழில் உலகின் ஒரே குறிக்கோளான "வருவாய் அல்லது இலாபம்" என்பதேயாகும்.

### பொதுப்பயன் தொழில்களும், இலாப நோக்கமும்

எந்த ஒரு நிறுவனமும் தன்னுடைய பொருள்களின் உற்பத்தியையும், அவற்றின் விலையினையும் மிகப்பெருமளவில் இலாப மீட்டும் எண்ணத்துடனேயே நிருணயிக்கின்றன என்ற கருத்து அனைவராலும் ஏற்றுக் கொள்ளப்பட்டதுதான். ஒரு குறிப்பிட்ட நிலையினை அடையும்போது, அதிக அளவில் உற்பத்தி செய்யப்பட்ட கடைசிப்பொருள், நிறுவனத்திற்குக் கிடைக்கக்கூடிய இலாபத்தினைச் சரிசெய்து வருவதைக் காணலாம். இந் நிலையில் தான் அந் நிறுவனத்தின் உற்பத்திப் பெருக்கம் தடைபடுகின்றது. அதுவரையிலும், அதிக அளவு இலாபம் ஈட்டுதல் என்ற ஒன்றே இந் நிறுவனங்களின் குறிக்கோளாக அமைகின்றது. ஆனால், தனியார்துறை நிறுவனங்களால் மட்டுமே இவ்வாறு

தன்னிச்சைப்படி விலையை உயர்த்துவதும், அதிக ஆதாயத்தினைத் தேடுவதும் முடியும். முறைசெய்யப்பட்டு இயங்கக்கூடிய எந்த ஒரு தொழில் நிறுவனத்தாலும் இதுபோன்ற 'இலாபமீட்டும் வெறியோடு' இயங்க முடியாது. ஏனெனில், இத் தொழில்களின் நோக்கமே 'பொதுநல ஈடுபாடு' என்பதும் 'பொதுநலத் தொண்டு' என்பதுமாகும்.

பொதுப்பயன் தொழில்கள் ஈட்டக்கூடிய வருவாய், இத் தொழில் நிறுவனங்களின் நடைமுறைச் செலவு, தேய்மானச் செலவு, வரிச்சுமை போன்றவற்றைச் சரிக்கட்டப் போதுமானதாக இருப்பதோடு இத் தொழில்களுக்கான மூலதனத்தைப் பெறத்தக்க வகையில் கவர்ச்சியுடையதாகவும் இருக்கவேண்டும். பொதுவாகவே பொதுப்பயன் தொழில்கள் அனைத்தும், பொது மக்களின் நன்மைக்கே இயங்குபவை என்றும், அதன் காரணமாக அவை இலாபமே ஈட்டக்கூடாதென்றும் கருதப்படுகின்றது. ஆனால், பிற நிறுவனங்களைப் போன்று, இலாபமீட்டுவதையே தங்களது ஒரே குறிக்கோளாகக்கொண்டு இயங்காமல், ஓரளவிற்காவது பொதுப்பயன் தொழில்களும் இலாபத்தில் நடைபெற வழிசெய்யப்படவேண்டும். ஏனெனில், இவற்றிற்குக் கிடைக்கக்கூடிய வருவாயினைக் கொண்டுதான் சொத்துகளின் தேய்மானத்தையும், இதர நிருவாகச் செலவுகளையும் செய்யமுடியும். மேலும், பொதுப்பயன் தொழில்கள் தயாரித்து அளிக்கின்ற பொருள்களின் விலை, பிற நிறுவனங்களின் விலையினைவிடக் குறைவாக இருக்கவேண்டுமென்றும் எதிர்பார்க்கப்படுகின்றது. மூன்றாவதாக, பெருமளவில் இயங்கக்கூடிய பொதுப்பயன் தொழில்களுக்குத் தேவையான பெருமளவு நிதிமுதலைக் கடனாகப் பெறவேண்டியுள்ளது. நன்றாக இயங்கிக்கொண்டிருப்பதும், நல்ல வருவாயினை உடையதுமான பொதுப்பயன் தொழில்களுக்கே கடனுதவி அளிக்கவும், அவற்றின் பங்குதாரர்களாக ஆகவும், பொதுமக்கள் எண்ணுவர். மேற்கண்ட அத்தனை காரணங்களுக்கும் தேவையானது "வருவாயே." இவ்வருவாயை ஈட்ட வேண்டுமானால் இத் தொழில்களின் வருவாய் வீதம் (Rate of Return) சரியாக நிருணயிக்கப்பட வேண்டும். பிற நிறுவனங்களுடன் போட்டியிட்டுக்கொண்டு அவற்றைப் போன்று பெருமளவு இலாபத்தினை ஈட்டவேண்டுமென்ற பேரவா கொண்டு இயங்காவிட்டாலும், பொதுப்பயன் தொழில்களும், பிற நிறுவனங்களைப்போலவே, உற்பத்திப் பொருள்களைப் பெறுவதில் சந்தையின் சிக்கல்களை எதிர்நோக்க வேண்டியுள்ளது. பொதுப்பயன் தொழில்களும், பிற நிறுவனங்களும் சந்தையில் ஒன்றாகவே போட்டியிட்டுக்கொண்டு தங்களுக்குத் தேவையான நிதிமுதல், உழைப்பு போன்ற உற்பத்திப் பொருள்களைப் பெற முயற்சிக்

கின்றன. இந் நிலையில் பிற நிறுவனங்கள் அதிக விலை கொடுத்து இவற்றை வாங்கித் தங்களது தொழில்களில் ஈடுபடுத்திப் பொருள்களைத் தயாரித்து அவற்றை மிக அதிக விலைக்கு விற்பதன்மூலம் தங்களது வருவாயினைப் பெருக்கிக்கொள்கின்றன. ஆனால், எந்த நிலையிலும், தங்களது கட்டணத்தை உயர்த்துவதன்மூலம், வருவாயினைப் பெருக்கிக்கொள்ள இயலாத வகையில், தளையிடப் பெற்றுள்ள பொதுப்பயன் தொழில்கள், அதிக அளவு விலையினைக் கொடுத்துச் சந்தையில் உற்பத்திப் பொருள்களை வாங்க இயலாதுள்ளன.

இனி, பொதுப்பயன் தொழில்களின் இலாபம் எத்தன்மையது, அஃது எவ்வளவு அதிகமாக அல்லது குறைவாக இருக்க வேண்டும், எம்முறையின்மூலம் அந்த இலாபத்தினைக் கணக்கிட்டுச் சரிபார்க்க வேண்டும், பொருளாதார மற்றும் சட்டக் கோட்பாடுகளின்படி, பொதுப்பயன் தொழில்களின் இலாபம் அமைந்துள்ளதா என்ற வினைக்களுக்குப் பின்வரும் பகுதிகளில் விடையளிக்க முற்படுவோம். மேலும், இந்த இலாபத்தினை அல்லது வருவாயினை ஏற்படுத்தித்தரும் வருவாய்வீதத்தினைப் (Rate of Return) பற்றியும் ஈண்டு நோக்குவோம்.

பொதுப்பயன் தொழிலொன்றின் செயல்முறைச் செலவுகள் தேய்மானச் செலவுகள், வரிகள்போன்ற பலவிதச் செலவுகள் போக வருவாயில் எஞ்சியிருக்கும் தொகையினை, அந் நிறுவனத்தின் சொத்துகளை மதிப்பிட்டபின்னர், அதனைக் கொண்டு கணக்கிடப்பட்ட கட்டண அடிப்படையில் ஒரு விழுக்காடாகக் காண்பிக்கப்படுவதே இத் தொழிலின் வருவாய் வீதம் எனப்படும். அதாவது, ஒரு பொதுப்பயன் தொழிலின் கட்டண அடிப்படையே (Rate Base) ஏற்கனவே ஆராய்ந்த முறைகளில் கணக்கிட்டு வைத்துக்கொள்ளவேண்டும். பின்னர் அந் நிறுவனத்தின் பல வகைச் செலவுகள்போக, எஞ்சியிருக்கும் வருவாயினை மேற்சொன்ன கட்டண அடிப்படைத் தொகுதியில் ஒரு விழுக்காடு எனக் (as a percentage) கணக்கிட்டால் அதுவே அந் நிறுவனத்தின் வருவாய்வீதம் என்று கூறப்படும். மேற்காணும் கருத்துகளிலிருந்து,

1. வருவாய்வீதம் என்பது ஒரு, விழுக்காடாகவே குறிக்கப்படும் என்றும்,
2. இவ்விழுக்காடு, கட்டண அடிப்படைத் தொகையில் காணப்படும் என்றும் அறிகின்றோம்.

ஒரு நிறுவனத்திற்கு பல வகையிலும் நிதிஉதவி செய்துள்ள மக்களுக்கு (அதாவது பங்குதாரர்களுக்கும், கடனீந்தோருக்கும்)

குறிப்பிட்ட ஒரு வருவாயை அளிப்பதற்காகவே வருவாய் வீதமெனப்படுவது தீர்மானிக்கப்படுகின்றது. இவ்வருவாய் வீதத்தை, நூற்றியமாகக் குறிப்பிடும் நோக்கம், பிற நிறுவனங்களின் வருவாய் வீதத்தினையும், அதன் மூலம் அந் நிறுவனங்களின் நிதி நிலையையும் ஒப்பிட்டுப் பார்க்கவேண்டும் என்பதற்காகவே யாகும்.

**கட்டண அடிப்படையும், வருவாய்வீதமும்**

ஒரு பொதுப்பயன் தொழிலுக்கென அனுமதிக்கப்பட்ட வருவாய் வீதத்திற்கும் அத் தொழிலின் கட்டண அடிப்படைக்கும் இடையே நெருங்கிய தொடர்பு உள்ளதென்பதை நாம் மீண்டும் இங்கே நினைவுபடுத்திக்கொள்ள வேண்டும். நிகர வருவாய்த் தொகையினைக் கொண்டு ஒரு நிறுவனத்தின் பங்குதாரர்களுக்குச் சேர வேண்டிய வருவாயினை அளிக்கவேண்டுமாயின், கீழ்க் காணும் இரண்டு குறிப்புகளும் தீர்மானிக்கப்பட்டிருக்கவேண்டும்:

1. அந் நிறுவனத்தின் கட்டண அடிப்படையின் அளவு
2. குறிப்பிட்ட வருவாய் வீதம்.

இவ்விரண்டின் அடிப்படையில் பங்குதாரர்களுக்குச் சேர வேண்டிய தொகையும் தீர்மானிக்கப்படுகிறது. முறைசெய்யப் பட்ட எந்த ஒரு தொழிலும் தனக்கெனச் சிறிது அதிகமான அல்லது சிறிது குறைவான வருவாய்த் தொகையினைத் தீர்மானித் துக்கொள்ளலாம். இது வருவாய்வீதத்தினை மாற்றி அமைத்துக் கொள்வதைப் பொறுத்தே உள்ளது. இதற்கு முன்னர், ஒரு பொதுப்பயன் தொழிலின் கட்டண அடிப்படை குறித்து விரிவாக ஆராய்ச்சி செய்த நாம், அதே தொழிலின் வருவாய்வீதம்பற்றி ஒரு சிறிதளவாவது ஆராயாமற்போனால் அது நியாயமான செயலாகாது. எனவே, நியாயமான முறையில் 'இவ்வருவாய் வீதம்' நிருணயிக்கப்படும் என்ற நம்பிக்கை அனைவருக்கும் உண்டு.*

**சட்டத்தின் துணையோடு நியாயமான வருவாய்வீதத்தை நிருணயித்தல்**

வெகுநாள்களாகவே சொத்துகளை மதிப்பிடும் பணியில் மட்டுமே முழுக்கவனத்தையும் செலுத்தி வந்த பொதுப் பயன் தொழில்கள் அஃது ஒன்றையே தமது கடமையாக எண்ணிச் செய்து வந்தன. ஆயினும், காலப்போக்கில் தங்களது வரு வாயினையும் உயர்த்திக்கொள்ள வேண்டிய நிலையை உணர்ந்த இந் நிறுவனங்கள், அதற்கான வழிமுறைகளை ஆராயத்

*Re. Chesapeahe & Potomac Telephone Co. of Virginia.

தொடங்கின. அவற்றுள் தங்களது வருவாய்வீதத்தினை உயர்த்திக்கொள்வதன்மூலம் மொத்த வருவாயினை உயர்த்துவதே நியாயமான, எளிதானதுமான முறையாகக் கருதப்பட்டது. இவ்வாறு பொதுப்பயன் தொழில்கள் தங்களது குறிக்கோளினை மாற்றிக்கொள்ளக் காரணமாக இருந்தது சில பிரபலமான வழக்குகளின் தீர்ப்பே ஆகும். குறிப்பாக, ஹோப் நேச்சுரல் காஸ் வழக்கில், (Hope Natural gas case)* நுகர்வோருக்கு எவ்விதத் துன்பத்தினையும் விளைவிக்காத வகையில் பொதுப்பயன் தொழில்களின் இறுதி—முடிவுக் கொள்கை (End result-method) யினைப் பின்பற்றியே சொத்துகளின் மதிப்பினைக் கணக்கிடும் பணி செய்யப்பட வேண்டும் என்றும், இதனையொட்டியே, தேய்மான விகிதமும் நிருணயிக்கப்பட வேண்டுமென்றும் வலியுறுத்தப்பட்டது. மற்றும் சில நிறுவனங்கள், உண்மையான மதிப்பினைக் கொண்டு தேய்மான அடிப்படையை அமைத்துப் பின்னர் தேய்மான விகிதத்தைக் கணக்கிடும் முறையைப் பின்பற்றின. எந்த முறையைப் பின்பற்றினாலும், நாள்தோறும் பொருள்களின் விலை மாறி வரும்போது, குறிப்பிட்ட ஆயுள்காலம் முடிந்ததும் தேய்மானச் சொத்துகளுக்குப் பதிலாக மாற்றுச் சொத்துகளை ஏற்படுத்தப் போதிய அளவு நிதி கிடைப்பது அரிதாயிற்று. ஆகவே, போதிய அளவு நிதியினை ஏற்படுத்தும் பொருட்டு, இந் நிறுவனங்களின் வருவாயினை அதிகரிக்க வேண்டிய நிலை உருவாயிற்று. குறிப்பாக, இரண்டாவது உலகப் போருக்குப் பின்னர், ஏறக்குறைய எல்லாப் பொதுப்பயன் தொழில்களும் தங்களது வருவாய் வீதத்தினை உயர்த்திக் கொள்ள வேண்டிய கட்டாய நிலைக்கு ஆளாயின.

தங்களது வருவாயினை உயர்த்திக்கொள்ள எண்ணிய போதும், பொதுப்பயன் தொழில்கள் பொதுநல ஈடுபாட்டுடன் செயற்படவேண்டியிருப்பதால், ஓரளவு எச்சரிக்கையாயிருக்க வேண்டியுள்ளன. நீதிமன்றங்களின் ஆலோசனையோடு பலவித பொதுப்பயன் தொழில்கள் தங்களது வருவாய்வீதத்தினை நிருணயித்துக்கொள்ளவும் துவங்கின. அமெரிக்கா போன்ற நாடுகளில் அரசுகள் தங்களது நாட்டிலுள்ள பொதுப்பயன் தொழில்களின் வருவாய்வீதத்தினை நிருணயிப்பதில் பெரிதும் உதவியுள்ளன. எந்த ஒரு வணிக நிறுவனத்திற்கும் அதற்குரிய வருவாயினைச் சட்டத்தின்மூலம் பெறுவதற்கான சூழ்நிலையை உருவாக்கித் தரவேண்டும் என்ற கருத்தும் நிலவி வந்தது. பொதுப்பயன் தொழிலில் ஈடுபடுத்தப்படும் சொத்துக்களுக்கு நியாயமான வருவாய் கிடைக்கவேண்டும் என்று

* Natural Gas Pipeline Co. vs. Hope Natural Gas Co.

ஸ்மித் vs. ஏம்ஸ் (Smyth vs. Ames) என்ற வழக்கின் தீர்ப்பு வழி வகுக்கின்றது. இதன்மூலம் பொதுப்பயன் தொழில்களும், பிற நிறுவனங்களைப் போலவே, தங்களிடமுள்ள சொத்துகளைச் சந்தை விலைக்கேற்ப, மதிப்பீடு செய்து, அம் மதிப்பீட்டுத் தொகையைப் பெறும் வகையில் வருவாயினைப் பெருக்கிக் கொள்ள வேண்டும் என்ற கருத்து நாளடைவில் வலியுறுத்தப் பட்டது. இவ்வாறன்றி, இந் நிறுவனங்களைக் கட்டுப்படுத்தும் அல்லது முறைப்படுத்தும் எண்ணத்தோடு விதிக்கப்படும் சட்ட திட்டங்களின் விளைவாக, இவற்றின் வருவாய் குறைந்துபோகுமே யானல், அஃது இந் நிறுவனங்களுக்கு இழைக்கப்படும் மாபெரும் அநீதியாகும். மேலும், ஏனைய தொழில் நிறுவனங்களினல் எவ் வகைத் தொழில் அபாயங்கள் ஏற்படுமோ அதே அபாயங்கள், ஒரு பொதுப்பயன் தொழிலில் ஏற்பட வாய்ப்பிருக்கும்போது, பிற நிறுவனங்கள் மட்டும் அதிக அளவு வருவாயினையும்,பொதுப் பயன் தொழில்கள் குறைந்த அளவு வருவாயினையும் பெறுவதற் குக் காரணமாக எதனையும் கூற இயலாது. தேவையற்ற கட்டுப் பாடுகள் மூலமாகப் பொதுப்பயன் தொழில் ஒன்றினை முறைப் படுத்த எண்ணுவோமேயானல், அது சட்டத்திற்குப் புறம்பான வழியில் சென்று, அந் நிறுவனத்தை வருவாயின்றித் தடை செய் வதற்கு ஒப்பாகும், "சட்டத்தின் வழியே நியாயமான தீர்ப்பு" என்பதும் "வேறுபாடற்ற பாதுகாப்பு" என்பதுமான இரண்டு வகைச் செய்திகள், ஒரு பொதுப் பயன்தொழிலின் கட்டண அடிப்படையை உருவாக்கித் தந்து நல்லதொரு வருவாயினை அடைய வகை செய்தன. இதற்குச் சான்ருகப், புகழ் பெற்ற சிகாகோ இரயில் நிறுவன வழக்கு அமைந்துள்ளது.*

ஒரு நிறுவனத்தின் சொத்துகள் பயன்படுத்துவது தடை செய்யப்பட்டாலோ அந் நிறுவனம் இச் சொத்துகளைப் பயன்படுத்துவதன்மூலம் நியாயமானதொரு வருவாயினைப் பெற முடியாது. தடை செய்யப்பட்டாலோ, அந் நிறுவனத் தின் முதலீட்டுத் தொகையிலிருந்து வருவாய் ஏதும் பெற முடியாது போனலோ வருவாய்வீதம் சரிவர அமையவில்லை என்பது புரிந்துவிடும். மேலும் எக்காரணத்தைக் கொண்டும் முறையற்ற வகையில் பொதுப்பயன் தொழில்களின் வருவாய் வீதம் மிகவும் குறைந்த அளவிற்குத் 'தள்ளப்படுமேயானல்' (pushed) அத் தொழில்களின் மொத்த வருமானம் குறைந்து போக நேரிடும். இதனைத் தவிர்க்க வேண்டுமானல், 'நியாய மானதொரு வருவாய் வீதத்தினை' நிருணயித்து, அதனையே பொதுப்பயன் தொழில்கள் பின்பற்ற வேண்டும். ஆனல், நியாய

*Chicago M. & St. P Rly. Co. *vs.* Minnesota (1899)

மான வருவாய்வீதம் எனப்படுவது யாது என்ற வினவிற்கு விடையளிப்பது மிகவும் எளிதான செயலன்று. இருப்பினும், மிகப் பிரபலமான ஒரு வழக்கின் தீர்ப்பினை நமது ஆராய்ச்சிக்கு எடுத்துக்கொள்வோம்.* இவ்வழக்கின் தீர்ப்பில் "எல்லா இடங்களுக்கும் எல்லா நிறுவனங்களுக்கும் ஏற்ற பொதுவான ஒரு வருவாய் வீதத்தினை ஏற்படுத்த இயலாது. ஆகவே, ஒரு தொழிலின் வருவாய் வீதம் எனப்படுவது,

(1) அத் தொழில் நடைபெறும் சூழ்நிலை
(2) சுற்றுப்புற இடவசதி
(3) தொழில் ஆபத்துகள்
(4) தொழிலின் நிலை
(5) எதிர்நோக்கும் வருவாய் அளவு
(6) தொழிலில் செய்யப்பட்டிருக்கும் முதலீடுகளுக்கான வட்டிகள்.

போன்ற பல விஷயங்களை அடிப்படையாகக் கொண்டு தீர்மானிக்கப்படுகின்றது. ஒரு தொழிலின் நியாயமான வருவாய் வீதத்தினைக் கணக்கிடுவதில் ப்ளு பீல்டு வாட்டர் ஒர்க்ஸ் என்ற வழக்கின் விபரம் மிகவும் பயன்படுகின்றது.** இவ்வழக்கின் தீர்ப்புப்படி,

"பிற வகைத் தொழில்களைப் போலவே, ஏராளமான நிதியையும், சொத்துகளையும், பொதுமக்களுக்குத் தொண்டாற்றுவதற்கென முதலீடு செய்திருக்கும் பொதுத் தொழில்கள், தங்களுக்கென நியாயமான முறையில் வருவாய் வீதம் ஒன்றினை நிருணயித்துக்கொள்ளும் உரிமை பெற்றுள்ளன. மேலும் பிற நிறுவனங்களுக்கும், பொதுப்பயன் தொழில்களுக்குமிடையே தொழிலில் ஏற்படக்கூடிய ஆபத்துகள் போன்ற செய்திகளில் வேறுபாடு எதுவும் காணப்படாவிட்டால், பொதுப்பயன் தொழில்களுக்கும் தங்களது வருவாயினைத் தீர்மானித்துக் கொள்ளும் உரிமை வழங்கப்பட வேண்டுமென்று வலியுறுத்தப் பட்டது. மேலும் இவ்வாறு ஈட்டப்பட்ட வருவாயினைக்கொண்டு, கடனீந்தோருக்குச் சேரவேண்டிய தொகை அளிக்கப்படுமே யானால், நிறுவனத்தின் நிதிபற்றி அனைவரும் நன்முறையில் அறிந்துகொள்ளும் வாய்ப்பு ஏற்படும். நிறுவனத்தின் உரிமை யாளர்கள் அல்லது பங்குதாரர்கள் மட்டுமின்றி வணிக உலகில்

*The Willcox vs. The Consolidated Gas Company 1909.

**Blue Field Water Works Improvement Co. vs. Public Service Company of West Virginia.

அனைவரும் ஒரு நிறுவனத்தைப் பற்றி உயர்ந்த கருத்தைக் கொள்ள வேண்டுமானல், அதனுடைய வருவாய் நிலை சரியாக இருக்க வேண்டும். ஆனல் இவ்வருவாய் தேவைக்கு அதிகமான தாகவோ, குறைவானதாகவோ இருக்கக்கூடாதெனினும், மாறிவரும் பொருளாதாரச் சூழலில் இவ்வாறு குறிப்பிட்ட மற்றும் நிலையான வருவாய் வீதத்தினை நம்மால் நிருணயிக்க முடியாது" என்ற கருத்து நிலவுகிறது.

ப்ளூ பீல்டு வழக்கிற்குப் பின்வந்த ஹோப் வழக்குபோன்ற வழக்குகளும் இதே கருத்தினை வலியுறுத்தின. இவ்வாறு எல்லாவித வழக்குகளின் கருத்துகளும் ஏறக்குறைய ஒன்ருக இருந்தமையால் அவற்றினைத் தொகுத்துக் கூறுவது நன்மை பயக்கும். ஆகவே, பொதுப்பயன் தொழில்களின் வருவாய் வீதம் நிருணயிக்கப்பட வேண்டிய முறையினைப் பற்றிய குறிப்பு களாகப் பின்வருவனவற்றைக் கூறலாம் :

(1) எந்த ஒரு தொழிலாயினும், அத் தொழிலில் முதலீடு செய்வோருக்கு நிறைவு அளிக்கும் வகையில் வருவாய் அளிக்கப் படவேண்டும். பொதுப்பயன் தொழில்களில் முதலீடு செய்வோ ருக்கும் இதுபோன்ற நல்ல வருவாய் கிடைக்கும் வகையில் வருவாய்வீதம் நிருணயிக்கப்பட வேண்டும். "குறிப்பிட்ட ஒரு நிறுவனம் பிற நிறுவனங்களைப் போலவே தொழிலின் ஆபத்து களையும், இன்னல்களையும் எதிர்நோக்கி இயங்குமேயாயின் பிற நிறுவனங்களில் கிடைக்கின்ற அதே வருவாய் இந் நிறுவனத் திற்கும் கிடைக்க வேண்டும். சுருங்கக் கூறின், தொழில் அமைப்பு களிலோ, தொழிலிலுள்ள சிக்கல்களிலோ அபாயங்களிலோ இரண்டு நிறுவனங்களுக்கிடையே வேறுபாடு இல்லையாயின், அவற்றின் வருவாய் வீதத்திலும் வேறுபாடு இருக்கலாகாது" என்பது கருத்து.

(2) சில நேரங்களில் வருவாய் வீதம் என்பது ஒரு நிறுவனம் அமைந்துள்ள இடத்தினைப் பொறுத்தும் அமைகின்றது. அதிக அளவில் விற்பனை உள்ள இடங்களில் அதிக அளவு வருவாயும், குறைந்த அளவு விற்பனை உள்ள இடத்தில் குறைந்த அளவு வருவாயும் இருப்பது இயற்கையே. எனினும், ஒரு குறிப்பிட்ட இடத்தில், குறிப்பிட்ட காலத்தில் அல்லது பகுதியில் இயங்கிக்கொண்டிருக்கும் பல நிறுவனங்களுக்கிடையே வருவாய் வீதத்தில் வேறுபாடு எதுவும் இருக்கக்கூடாது என்பது கருத்து.

(3) ஒரு நிறுவனத்தின் நிதிநிலையைப் பற்றிப் பொதுமக்க ளிடையே முழு நம்பிக்கை உண்டாகும் அளவிற்குப் போதுமான தாக, அதனுடைய வருவாய் வீதம் அமைந்திருக்க வேண்டும்.

(4) ஒரு நிறுவனத்தின் பல செயல்களைச் செய்வதற்கு, அதிக அளவில் நிதி தேவைப்படும். சொந்த நிதியை மட்டும் நம்பியிராமல், பெருமளவிற்குக் கடன் வாங்கியும் தொழிலை நடத்தவேண்டியிருக்கும். அந் நிலையில் கடனீந்தோருக்குரிய வட்டித் தொகையும் இயன்றால் கடன் தொகையையும் திருப்பித் தருமளவிற்கும் தேவைப்பட்டால் மீண்டும் இத் தொகையைத் திரும்பிப் பெறும் வகையில் ஒரு நிறுவனத்தின் வருவாய் வீதம் அமைய வேண்டும் என எதிர்பார்க்கப்படுகிறது.

(5) சில நேரங்களில், ஒரு சில தொழில்களுக்கு மிகுதியான இலாபம் கிடைக்கலாம். ஆனால், எப்போதும் இத்தகைய இலாபம் நிலையாகக் கிடைக்குமென எதிர்பார்க்க இயலாது. எனவே, ஒரு நிறுவனத்தின் வருவாய் வீதம், வழக்கமான சூழ் நிலைகளுக்கேற்பக் கணக்கிடப்பட வேண்டும்.

(6) ஒரு தொழிலின் வருவாய் வீதம் மாற்ற இயலாததாக வும், நிலையானதாகவும் இருக்க வேண்டியதில்லை. மாறாக, தொழிலில் முதலீடு (Investment condition) செய்வதற்கான சூழ்நிலையில் பணச்சந்தையின் சூழ்நிலைகள் (Money Market Conditions) மற்றும் தொழில் துறையின் பொதுவான நிலை இவற்றினைப் பொறுத்து மாறுவதாக, வருவாய் வீதம் அமைய வேண்டும். அப்போதுதான் தொழில் வளரும் நிலையில் உயரளவு வருவாய் வீதமும், தொழில் மந்த நிலையை அடையும்போது, வருவாய் வீதம் குறையவும் ஏதுவாகும்.

இறுதியாக, ஒரு நிறுவனத்தின் நிருவாகத்தைப் பொறுத்தும் அதனுடைய வருவாய் வீதம் அமைகின்றது. நிருவாகம் சீரியதா கவும், திறமை வாய்ந்ததாகவும் இருக்குமேயாயின், வருவாய் வீதமும் சிறப்புற அமைந்திருக்கும். மேற்காணும் கருத்துகள் ஒரு நிறுவனத்தின் வருவாய் வீதம் அமையும் முறையைத் தெள்ளென விளக்குகின்றன. பொருளாதார மற்றும் வாணிகச் சுழல்களினாலும், தொழிலறிவு மாற்றங்களினாலும், ஒரு சில தொழில்களின் வருவாய் வீதம் மாறி அமைந்தபோதிலும், பொதுவாக, மேற்காணும் கருத்துகளின் அடிப்படையில்தான் வருவாய்வீதம் நிருணயிக்கப்படுகின்றது என்பது முடிவான கருத்து.

**நடைமுறைச் சிக்கல்கள்**

சட்டத்தின் துணையோடு, அதாவது நீதிமன்ற வழக்குகளின் தீர்ப்புகளைக் கொண்டு, பொதுப்பயன் தொழில்களின் வருவாய் வீதம் எவ்வாறு நிருணயிக்கப்பட வேண்டுமென்பதைக் கண்டபின், நடைமுறையில் இக் கோட்பாடுகளைக் கடைபிடிப்பதிலுள்ள சிக்கல்களை இனிப் பார்ப்போம்.

**போட்டி நிலையில் வருவாயினை ஒப்பிடுதல்**

நியாயமானதொரு இலாபத்தினைப் பெறும் வகையில் பொதுப்பயன் தொழில்கள் பணியாற்ற வேண்டுமென்ற கருத்து முதலில் ஆராயத்தக்கது. சந்தையிலுள்ள பல நிறுவனங்களிடையே போட்டி ஏற்படும்போது, மக்களின் தேவைக்கேற்ப, பொருள்களின் அளிப்பும் (Supply) இருக்குமேயானால் கிடைக்கக் கூடிய இலாபம் மிகச் சொற்பமானதாக அமையும். இருப்பினும், இதனையே நியாயமான இலாபமாகக் கருத முடியும். எந்த ஒரு பொதுப்பயன் தொழிலும், இந்த நியாயமான இலாபத்தினை அடையத் தடையேதும் செய்தல் முறையாகாது என்று கருதப் படுகின்றது. பொதுப்பயன் தொழில்களுக்கும், ஏனைய நிறுவனங்களுக்குமிடையே உள்ள வேறுபாடு அவற்றின்மீதான கட்டுப் பாட்டினைப் பொறுத்து, அமைகின்றது. சந்தையில் உள்ள பல்வேறு நிறுவனங்களும் இந்த நியாயமான வருவாயினைப் பெற வேண்டுமாயின், அவற்றின் மீது சில கட்டுப்பாடுகளை விதிக்க வேண்டும் என்றும் கூறப்படுகின்றது. ஏனெனில், பொருள்களின் அளிப்பும், அவற்றிற்கான தேவையும் சரிசமமாக இருப்பதற்கு இவ்வகைக் கட்டுப்பாடுகள் பெரிதும் துணைபுரிகின்றன.

இனி, ஒரு தொழிலில் போடப்படும் மூலதனத்தின் அளவினைப் பார்ப்போம். எந்த ஒரு தொழில் அதிக அளவு அபாயத்தினை (Risks) கொண்டிருக்கின்றதோ, அத்தொழிலின் வருவாயும் அதிகமாக இருக்கும். அதற்கேற்ப, அத் தொழிலில் போடப்படும் தொகையும் அதிகமாக இருக்கும். இதற்கு மாறாக. இன்னல்களும், ஆபத்துகளும் அறவே இல்லாத ஒரு தொழிலை எடுத்துக் கொண்டால், அத் தொழிலில் கிடைக்கக் கூடிய வருவாய் குறைந்தாகவும் (அல்லது நிரந்தரமானதாகவும்) இருக்கும். ஆகவே. இத் தொழிலில் போடப்படும் மூலதனமும் குறைவாகவே இருக்கும். பொதுவாகவே, வாணிக உலகில் தங்களது சேமிப்பினை ஈடுபடுத்த விரும்பும் பலரும் அதிக அளவு இலாபத்தினைப்பெறவே விரும்புவர். இதற்காக ஒரு தொழிலுள்ள இன்னல்களை எதிர் நோக்கவும் அவர்கள் தயங்குவதில்லை. எந்த ஒரு தொழிலில் அதிக அளவு மூலதனத் தொகை கிடைக்கின்றதோ அதனை அறவே கட்டுப்பாடின்றி விட்டுவைக்க எவரும் துணிவதில்லை. ஏனெனில், ஒரு பக்கம் அதிக அளவு பேராபத்துகளையும் சந்திக்க நேரிடுகின்றது. எனவேதான், பெரும்பாலான தொழில்களின்மீது கட்டுப்பாடுகள் விதிக்கப்படுகின்றன. இக் கட்டுப் பாட்டிற்கு உட்பட்டு இயங்குகின்ற பொதுப்பயன் தொழில்களின் வருவாய்வீதத்தினை எவ்வாறு நிருணயிப்பது? இத் தொழிலினைப் பொறுத்த வரையில் என்னென்ன இன்னல்கள் ஏற்பட வாய்ப் புள்ளதோ அவற்றுக்கு ஏற்றவாறே வருவாய் வீதம் நிருணயிக்கப்

பட வேண்டும் என்று கருதப்படுகிறது. எனவே, பொதுப்பயன் தொழிலில் ஏற்படக் கூடிய இன்னல்கள் அல்லது அபாயங்களைப் பற்றி இனி ஆராய்வோம்.

ஏற்கனவே, கூறப்பட்டது போன்று, ஒரு பொதுப்பயன் தொழில் நிறுவனம், பிற நிறுவனங்களில் உள்ள குறிப்பிட்ட அதே இன்னல்களுக்கும், அபாயங்களுக்கும் உட்பட்டு இயங்கி வருமேயாயின் இவ்விரு தொழில் நிறுவனங்களுக்குமிடையே வருவாயினைப் பொறுத்த வரையில் வேறுபாடு இருக்கக்கூடாது. இதனை உறுதிப்படுத்தும் வண்ணம், முதலில் இரண்டு பொதுப் பயன் தொழில்களின் நிலையை ஒப்பிட்டும், பின்னர் ஒரு பொதுப் பயன் தொழில் நிறுவனத்தையும், பிற நிறுவனங்களையும் ஒப் பிட்டுப் பார்ப்போம். ஒரு குறிப்பிட்ட பொதுப்பயன் தொழில் நிறுவனம், பிற பொதுப்பயன் தொழில் நிறுவனங்களைப் போலவே சந்தை எல்லை, சந்தைநிலை, நிதிநிலை ஆகியவற்றைக் கொண்டு இயங்குகின்றது எனக் கொள்வோம். குறிப்பிட்ட நிறுவனம் பிற நிறுவனங்களைப் போலவே கட்டுப்பாடு செய்யப் பட்டும், குறைவான வருவாய்வீதத்தினைக் கொண்டுள்ளது என்றால் அதற்குக் காரணம் என்ன என்ற வினா எழுதல் இயற்கையே. மேலும், பொதுப்பயன் தொழில்களாகிய இரண்டிற்கும் ஏனிந்த வேறுபாடு எழ வேண்டும்? ஆகவே, இக் குறிப்பிட்ட நிறுவனத் திற்கும் ஒரேவிதமான (அதிகமாக) வருவாய் வீதத்தினை அனு மதிக்க வேண்டுமென வேண்டப்படுகின்றது. ஆனால், இவ் வேண்டுகோளுக்குச் செவிசாய்க்கு முன்னர் அதிலுள்ள குறை பாடுகளைக் காணவும் வேண்டியுள்ளது. முதலாவதாக, எல்லா விதமான, பொதுப்பயன் தொழில்களையும் ஒன்றாகக் கருத இய லாது. இரண்டாவதாக, ஒரு பொதுப்பயன் தொழில் நிறுவனம் மற்றொன்றினைப் போலவேதான் முறைசெய்யப்பட வேண்டு மென்பதில்லை. எனவே, வெவ்வேறு நிலையில் வெவ்வேறு முறை யில் முறைசெய்யப்பட்ட பொதுப்பயன் தொழில்களின் வருவாய் வீதமும் வெவ்வேறாகவே அமைந்திருப்பதில் வியப்பில்லை. மூன்றா வதாக, எடுத்துக்காட்டிற்காக நாம் எடுத்துக்கொண்ட நிறுவனம், மாறிவரும் சந்தையின் பொருளாதார நிலைக்கேற்ப மாறி அமைந் திருக்க வாய்ப்புண்டு. ஆனால், ஒப்பிடுவதற்காக எடுத்துக்கொண்ட பிறபொதுப்பயன் தொழில் நிறுவனங்கள் இப்போது அடிக்கடி மாறும் பொருளாதார மாற்றங்களுக்கேற்ப அமைந்திராமையால், அவற்றின் வருவாய்வீதமும் வேறாக அமைந்துள்ளது எனலாம். எனவே, சில பொதுப்பயன் தொழில்களின் வருவாய்வீதத்தினைக் குறிப்பிட்டு அவற்றின் வருவாய்வீதத்தினைப் போலவே மற்றொரு பொதுப்பயன் தொழிலின் வருவாயும் அமைய வேண்டும் என்று எதிர்பார்க்க இயலாது.

இனி, அதிக அளவு இலாபத்தினை உடைய ஒரு தனியார் நிறுவனத்தையும், முறைசெய்யப்பட்ட ஒரு பொதுப்பயன் நிறுவனத்தையும் ஒப்பிட்டுப் பார்ப்போம். முறைசெய்யப் படாத தொழில் நிறுவனங்கள் எந்தத் தடையுமின்றி சந்தையில் இயங்குவதால், பெருமளவிற்கு இன்னல்களைச் சமாளிக்க வேண்டியுள்ளது. ஆகவே, அவற்றின வருவாயும் அதிக அளவிலேயே நிருணயிக்கப்படுகிறது. ஆனால், அந் நிறுவனங் களின் அதிக அளவு வருவாயினைச் சான்று காட்டி, தங்களையும் அதே அளவு வருவாயினை ஈட்ட அனுமதிக்குமாறு பொதுப்பயன் தொழில் நிறுவனங்களால் கேட்க இயலாது. ஏனெனில், பொதுப் பயன் தொழில்கள் குறிப்பிட்ட சில கட்டுப்பாடுகளுடன் விளங்கு வதால், அவற்றிற்கான இன்னல்களும் அபாயங்களும் மிகவும் சொற்பமானவை. எனவே, அதிக அளவு அபாயங்களைச் சந்தித்துப் பின்னர் அவற்றையும் சமாளித்துக் கொண்டே இயங்கு கின்ற பிற நிறுவனங்களைப் போலவே இவற்றிற்கும் அதிக அளவு வருவாய் வீதத்தினை நிருணயிக்க வேண்டுமென்பதில்லை.

எவ்வித நிறுவனமும் வாழ்நாளில் பலவித இன்னல்களைச் சமாளிக்க வேண்டியுள்ளது. குறிப்பாகப் பொதுப்பயன் தொழில் நிறுவனங்களுக்கு ஏற்படுகின்ற இன்னல்களையும், அபாயங்களை யும் துல்லியமாக எடைபோடுவது என்பது இயலாத செயலா கும். ஒரு நிறுவனத்திற்கு ஏற்படக்கூடிய அபாயங்களைப் பொறுத்தே, அதனுடைய வருவாய்வீதம் அமைய வேண்டும் என்று கருதப்படுவதால் பொதுப்பயன் தொழில்களுக்கு ஏற்படக் கூடிய அபாயங்களைப்பற்றி (Risks) ஈண்டு நோக்குவோம்.

ஒவ்வொரு முறையும் தொழிலில் ஏற்படக்கூடிய அபாயம் எனக் குறிப்பிட்டது அத் தொழிலில் ஏற்படக்கூடிய எதிர்பாராத செயல்களைக் (Uncertainities) குறிப்பதாகும். பொதுவாகவே, அபாயம் (Risk) என்ற சொல் நீர், நெருப்பு, விபத்துகள் போன்ற வற்றிலிருந்து தோன்றக் கூடியதைக் குறிப்பதாகும்.

அவ்வாறெனில், மேற்கண்ட அபாயங்களைக் முன்கூட்டியே ஒருவர் தெரிந்துகொண்டு, அவை வருமுன் தடுக்க முடியும். ஒரு வேளை அப்படியே இத்தகைய இன்னல்கள் ஏற்பட்டாலும் அவற் றின் விளைவையும் நாம் மதிப்பிட முடியும். ஆனால் 'அபாயம்' என்ற சொல் தற்போது இப் பொருளை உணர்த்தவில்லை. மாறாக ஒரு தொழிலில் ஏற்படக்கூடிய 'எதிர்பாராத' முடிவுகளையே இது குறிக்கின்றது. மேலும் இவ்வித 'எதிர்பாராத முடிவு' களால்தான் ஒரு தொழிலின் இலாப நட்டங்கள் அமைகின்றன. பொதுப்பயன் தொழில்களைப் பொறுத்தமட்டில், நுகர்வோருக்

கான பொருள்களைத் தயார் செய்யும் தொழில்களில், இவ்வித 'எதிர்பாராத' விளைவுகள் மிகவும் சொற்பமாகவே ஏற்படுகின்றன எனலாம். மேலும், தங்களது வருவாய்த் தொகை மாறுபட்ட போதிலும் நுகர்வோர் பலர், தமது அடிப்படைத் தேவைகளை மாற்றி அமைத்துக்கொள்வதில்லையாகையால், நுகர்வோருக்கான பொருள்களைத் தயாரிக்கும் பொதுப்பயன் தொழில்கள் எவ்வித இன்னல்களுக்கும், எதிர்பாராத சங்கடங்களுக்கும் உள்ளாவதில்லை. ஆனால், சிலவகைப் பொதுப்பயன் சந்தையில் ஏற்படக் கூடிய பொருளாதார மாற்றத்தினைப் பொறுத்தே இயங்கக் கூடியனவாக இருக்கின்றன. இத்தகைய நிறுவனங்களின் அமைப்பு, வாழ்நாள், உற்பத்தி, செயல் திறன் போன்றவை சந்தையின் பொருளாதாரக் கோட்பாடுகளைப் பொறுத்தே அமைய வேண்டிருப்பதால், இந் நிறுவனங்கள் எதிர்நோக்கும் அபாயமும் அதிகமாகவே உள்ளது. சில நேரங்களில் நல்ல வருவாய் கிடைக்கும் வகையில் தொழில் சிறப்பாகவும் மற்றும் சில நேரங்களில் இந் நிறுவனங்கள் உற்பத்தியின்றி மூடிக்கிடக்கவும் நேரிடலாம். இத்தகைய எதிர்பாராத நிலைகளைச் சமாளிப்பதற்காக இந் நிறுவனங்களின் வருவாய் வீதம் அதிகரிக்கப்படலாமென்பதும் ஒரு கருத்து.

சந்தையில் செயற்படுகின்ற இரண்டு அல்லது இரண்டிற்கு மேற்பட்ட நிறுவனங்கள் ஒரேவிதமான பொருள்களையோ ஏறத்தாழ, இப் பொருள்களைப் போன்ற வேறொரு பொருளினையோ உற்பத்தி செய்யக்கூடும். இதன் காரணமாக இந் நிறுவனங்களிடையே கடுமையான போட்டியும், இறுதியில் ஒரு நிறுவனம் மற்றொரு நிறுவனத்தைச் சந்தையிலிருந்து வெளியேற்றும் நிலையும் ஏற்பட வாய்ப்புள்ளது. பொதுப்பயன் தொழில்களிலும் இந் நிலை ஏற்படும் அபாயம் உள்ளமையால் அதுகுறித்து இங்கு ஆராய்வோம்.

போட்டிமனப்பான்மையுடன் செயற்படுகின்ற நிறுவனங்களில் காணப்படும் முறைகள், பொதுப்பயன், தொழில்களில் காணப்படாவிடினும், ஒவ்வொரு நிறுவனமும், பிற நிறுவனத்தினின்று மேம்பட்டு விளங்கத் தனிவழிகளைப் பின்பற்றுகின்றன. இனி பொதுப்பயன் தொழில்களில் சில ஒன்றுக்கொன்று எவ்வாறு போட்டியிட்டுக்கொண்டு செயற்படுகின்றன என்று பார்ப்போம். எரிவாயு நிறுவனம், மின்திறன் வழங்கும் நிறுவனத்துடன் போட்டியிடுவதையும், நிலக்கரி நிறுவனம் எரிவாயு நிறுவனத்துடன் போட்டியிடுவதையும் நாம் அறிவோம். சில நாடுகளில் தனியார்துறை அஞ்சல் நிலையங்கள், அரசு தொலைபேசி நிறுவனத்துடன் போட்டியிடுவதையும் காணலாம். அரசுப் பேருந்துகள், தனியார்துறை பேருந்துகளுடன் போட்டி

யிட்டுக்கொண்டு இயங்குவது இயற்கையானது. இத்தகைய சான்றுகளைக் காட்டி பல்வேறு தொழில்களிலும் பொதுப்பயன் தொழில்கள் போட்டியிடவேண்டியிருக்கின்றன என்ற கருத்து வலியுறுத்தப்படலாம். எனினும். பொதுப்பயன் தொழில் நிறுவனங்களின் பணிஎல்லை (Area of Operation) இந் நிறுவனங்கள் தயாரிக்கும் பொருள்களுக்கு மாற்றுப் பொருள் களின்மை ஆகியவற்றைக் காணும்போது, போட்டியினால் தொழில் நசிந்துவிடும் அபாயம் பொதுப்பயன் தொழில்களுக்கு இல்லை என்ற முடிவிற்கு நாம் வருகின்றோம்.

ஒரு நிறுவனத்தின் வருவாய்வீதம், அந் நிறுவனத்தின் தொழிலறிவின் மாற்றங்களால் விளையக்கூடிய நன்மை தீமை களைப் பொறுத்தும் தீர்மானிக்கப்படலாம். சான்றாக, தொழில் துறையில் ஏற்படும் எண்ணற்ற மாற்றங்களின் காரணமாக, நுகர்வோரின் விருப்பத்திலும் அவர்களது தேவையிலும் மாற்றங்கள் ஏற்படக்கூடும். இதன் காரணமாக, குறிப்பிட்ட ஒருவகைப் பொருள்களையே தயாரிக்கக்கூடிய ஓர் இயந்திரம் காலத்திற்கு ஒவ்வாததாகப் போய்விடுகின்றது. இதனால், நிறுவனத்திற்கு நட்டம் ஏற்படுவதோடு, வேறோர் இயந்திரத்தினை உடனடியாக வாங்கவேண்டிய கட்டாயமும் உண்டாகின்றது. மேலும், புதிய இயந்திரம் வருவதற்குள் பல நுகர்வோரின் தேவையினை நிறைவேற்ற முடியாமல் போவதால், வருவாயும் குறைந்து போகின்றது. ஆகவே, தொழில் துறையில் ஏற்படும் மாற்றங்களின் காரணமாகப் பல நிறுவனங்களின் உற்பத்தி பாதிக்கப்பட்டுச் சந்தையில் அவை தங்களது நிலையினை இழந்து விடும் அபாயமும் ஏற்படுகின்றது. இதனையும் எண்ணத்தில் கொண்டு, ஒரு தொழிலின் வருவாய் வீதம் அதிகமாக அளிக்கப் படவேண்டும் என்று வலியுறுத்தப்படுகின்றது. அவ்வாறெனில், பொதுப்பயன் தொழில்களைப் பொறுத்தமட்டில் இவ்வருவாய் வீதம் அதிகமாக நிருணயிக்கப்பட வேண்டும். ஏனெனில், இந் நிறுவனங்களில் தான் மிகப் பெருமளவுத் தொகை இயந்திர சாதனங்களில் ஈடுபடுத்தப்பட்டிருக்கின்றது என்பதாகும். இதற்கு மாறாக, பொதுப்பயன் தொழில்கள், தொழில்துறையில் ஏற்படும் மாற்றங்களைக் கவனிக்கவும், கட்டுப்படுத்தவும் வல்லவை என்றும், ஆகவே அவற்றின் வருவாய்வீதம் உயர்த்தப்பட வேண்டிய அவசியம் ஏதுமில்லை என்றும் கூறப்படுகிறது. எதுவாயினும், அண்மைக்காலங்களில் பொதுப்பயன் தொழில் களிலும், தொழிலறிவு மாற்றங்கள் மோசமான விளைவை ஏற்படுத்த துவங்கிவிட்ட நிலையைக் காணும்போது, இதனால் ஏற்படும் நட்டத்தினைத் தவிர்க்கப் போதுமான வருவாய் கிடைக்க வழிசெய்ய வேண்டுமென்றே தோன்றுகின்றது.

பணவீக்க நிலை (Inflation) ஏற்படும்போது பொதுப்பயன் தொழில்களின்மீது கட்டுப்பாடுகள் விதிக்கப்படும் நிலையைப் பெரிதும் காணலாம். விலைகள் மிகவும் உயர்ந்து காணப்படும் போது (பணவீக்கநிலையில்) பொதுப்பயன் தொழில்களின்மீது பலவிதக் கட்டுப்பாடுகளை விதிப்பதன்மூலம், அவை மிகுந்த இன்னலுக்கு ஆளாக்கப்படுகின்றன. ஏனெனில், பணவீக்க நிலையில் உற்பத்திச்செலவு மிகுந்து இருக்கும். இதனோடு செயல் முறைச் செலவும் அதிகரித்துவிடுமேயானால், ஒரு நிறுவனத்தின் வருவாய் மிகவும் குறைந்து போய்விடும் என்பது உறுதி. இவ் வருவாய்க் குறைவினைச் சரிக்கட்ட இந் நிறுவனங்களின் பொருள் களின் மீதான கட்டணவீதத்தினை உயர்த்துவது ஒன்றே வழி யாகும். ஆனால், பணவீக்க நிலையிலும், ஒரு பொதுப்பயன் தொழிலின்மீது ஏராளமான கட்டுப்பாடுகள் விதிக்கப்படுவ தால், அதனுடைய கட்டணவீதத்தை உடனடியாக மாற்றி அமைக்க முடிவதில்லை. எனவே, பொதுப்பயன் தொழில்களின் வருவாய்வீதம் உயர்த்தப்பட வேண்டும் என வலியுறுத்தப்படு கின்றது. இக் கருத்திற்கு முரண்பாடான கருத்து ஒன்றினையும் இங்குக் கூறவேண்டியுள்ளது. பொதுப்பயன் தொழில்களின் கட்டண அடிப்படையை மாற்றி அமைப்பதில் அதிக நாள்கள் ஆவதால், பணவீக்க நாள்களில் உடனடியாகப் புதிய கட்டண வீதம் மாற்றி அமைக்கப்பட முடிவதில்லை ஒன்று கூறப்பட்ட கருத் தினையே நாம் நமக்கேற்றதாகச் செய்ய முடியும். விலைகள் சரிய, உற்பத்தி குறைய தொழிலில் மந்த நிலை ஏற்படும்போதும், கட்டண அடிப்படை உடனடியாக மாற்றப்படுவதில்லை. சிறிது கால அவகாசம் இத் தொழில்களுக்கே கொடுக்கப்படுகின்றது. இதற்குள் திறமைமிகுந்த நிறுவனங்கள் தங்களது உற்பத்தி முறையை மாற்றி அமைத்துக்கொண்டோ புதிய இயந்திரங் களைப் புகுத்தியோ சிக்கனமான முறையில் செயற் பட்டோ, உற்பத்திச் செலவினைக் குறைத்துக்கொள்ள முடியும். உற்பத்திச் செலவு குறைந்ததன் காரணமாக, இவற்றின் இலாப அளவு அதிகரிக்கும் வாய்ப்பும் உள்ளது. புதிய கட்டண முறை செயற்படுமுன்னர், திறமை வாய்ந்த இந் நிறுவனங்கள் இவ்வாறு இலாபமீட்டிக்கொள்வது குறிப்பிடத்தக்கது. எனவே, முன்னர் கூறிய கருத்துப்படி, பணவீக்க நிலையில் செயல்முறைச் செலவுகள் உயரும்போது, கட்டணவீதத்தையும் உடனடியாக உயர்த்த அனுமதி இல்லாத காரணத்தால், பொதுப்பயன் தொழில்கள் பெருமளவு இலாபத்தினை இழக்கின்றன என்ற வாதம் ஓரளவிற்குத்தான் பொருந்தும் எனலாம்.

மேற்காணும், பல்வேறு 'இன்னல்களையும்' எதிர்பாராத நிலையினையும் 'அபாயங்களையும்' குறிப்பிட்டு அவை காரணமாக,

பொதுப்பயன் தொழில்களின் வருவாய் வீதம் உயர்த்தப்பட வேண்டுமென்ற கருத்து ஆராயத்தக்கது. ஒவ்வொரு சந்தையிலும் நிலவக்கூடிய சூழ்நிலைக்கேற்ப வருவாய்வீதம் உயர்த்தவோ, தாழ்த்தவோ படலாம். எதுவாயினும், வருவாய் வீதத்தில் ஏற்படுகின்ற மாறுதலின் காரணமாகப் பொதுப்பயன் தொழிலில் முதலீடு செய்தோரும், அவற்றின் பொருள்களை நுகர்வோரும் பயன்பெற வேண்டும் என்பதை நினைவிற்கொள்ள வேண்டும்.

**மூலதனத் தொகை பெற ஏற்படும் செலவும், வருவாய்வீதமும் (Cost of Capital and Rate of Return)**

பொதுப்பயன் தொழில்களுக்குத் தேவையான மூலதனம் மிகப் பெருமளவில் இருப்பதால், இத் தொகையைப் பெறுவதில் மிகவும் இன்னலுற வேண்டியிருக்கும், இத் தொழில்கள் எப்போதும் தங்களது சொந்த மூலதனத்தைக் கொண்டே ஆரம்பிக்கப்படுவதில்லை. மாறாக, கடன் உதவி பெறும் தொழிலை நடத்துகின்றன. இக் கடன் தொகையைப் பெற்றுக்கொண்ட நிறுவனம், அதனை ஈந்தோருக்கு ஒரு குறிப்பிட்ட வருவாயினை அளிக்க வேண்டும். இவ்வருவாய் அதிகரிக்க, அதிகரிக்க, நிறுவனத்தின் நிதிநிலை பற்றியும், அதனுடைய செயல்முறை பற்றியும் கடனீந்தோரிடையே நல்லதோர் எண்ணத்தை உருவாக்க முடியும். எனவே, ஒரு தொழிலின் மூலதனத் தொகையை பெறுவதில் ஆகக்கூடிய செலவும், அதனை அடிப்படையாகக் கொண்டு தீர்மானிக்கப்பட வேண்டிய வருவாய் வீதமும், முதலில் ஆராயத் தகுந்த கருத்துகளாக அமைகின்றன.

**மூலதனத்தொகை பெற ஏற்பட்ட செலவு—இலக்கணம்**

சௌத் வெஸ்டர்ன் பெல் என்னும் வழக்கில் தீர்ப்பளித்த ஜஸ்டிஸ் புராண்டிஸ் என்பார் மூலதனச் செலவுத் தொகையின் தன்மையைப் பற்றி தெளிவுறப் பின்வருமாறு விளக்குகின்றார்.*

"மொத்தத்தில் மூலதனச் செலவு என்பதற்கும் செயல்முறைச் செலவு, என்பதற்குமிடையே எவ்வித வேறுபாடுமில்லை. தேய்மானம், வட்டி, வரிகள் போன்ற பலவகைச் செலவுகளும் இத்தன்மையனவாகும். நுகர்வோருக்கு வேண்டிய பொருள்களையும், பணிகளையும் அளிக்கும் பொருட்டே இவ்வகைச் செலவுகள் செய்யப்படுகின்றன. மேலும், இச் செலவுகள் நிறுவனத்தின் வருவாயிலிருந்து சரிசெய்யப்படுகின்றன. செயல்

*Justice Brandeis in South Western Bell case.

முறைச் செலவுகளைத் தவிர, குறுகிய காலக் கடன்களின்மீதான வட்டி நீண்ட காலக் கடன் பத்திரங்களின்மீதான வட்டி, பொது மற்றும் முன்னுரிமைப் பங்குதாரர்களுக்குச் சேர வேண்டிய பங்காதாயம் போன்ற செலவினங்களும், ஒரு நிறுவனத்தின் வருவாயிலிருந்துதான் அளிக்கப்படுகின்றன. குறித்த காலத்தில், மிக அதிக அளவில் பங்காதாயத்தினை அளிக்கின்ற நிறுவனத் திற்குப் பொதுமக்களிடையே நன்மதிப்பு உண்டாவது இயற் கையே. இந் நன்மதிப்பினைக் கொண்டு தங்களுக்கு வேண்டிய மூலதனத் தொகையை இந் நிறுவனங்கள் பெற்றுக்கொள்ள முடியும். எனவே, மூலதனத்தைப் பெறுவதற்காகச் செய்யப்படும் செலவுத் தொகை ஒரு நிறுவனத்தினுடைய வருவாய் வீதத்தை நிருணயிக்கும் தன்மை பெற்றுள்ளது என்பதை அறியலாம்."

ஜஸ்டிஸ் பிராண்டிஸ் அவர்களின் மேற்காணும் கூற்றினை ஆராய்வதன்மூலம் "மூலதனச் செலவுத் தொகை" என்பதன் உண்மைப் பொருளை நாம் உணர முடியும். அதன்படி "மூலதனச் செலவுத் தொகை எனப்படுவது குறிப்பிட்ட ஒரு நூற்றியமாகக் குறிக்கப்படுவது என்றும், இத் தொகையினை வருடந்தோறும் தொழில் நிறுவனங்கள் பெற்றாக வேண்டுமென்றும் கூறலாம். மேலும், ஒரு நிறுவனத்தின் நிதிநிலையைச் சமன்படுத்தவும், நிறுவ னத்தின் பங்குதாரர்களுக்குக் குறிப்பிட்ட அளவு வருவாயினை அளிக்கவும், செயல்முறைச் செலவுகளைச் செய்யவும், பிறரிட மிருந்து வாங்கிய கடன்தொகைமீதான வட்டியை அளிக்கவும் தேவைப்படுகின்ற தொகை இம் மூலதனச் செலவுத் தொகையாக (Cost of Capital) குறிப்பிடப்படுகின்றது". இம் மூலதனச் செலவுத் தொகை எனப்படுவது ஒரு நிறுவனத்தின் மூலதன அடிப்படையை ஆதாரமாகக் கணக்கிடப்படும்.

சான்றாக, ஒரு நிறுவனத்தின் மூலதன அடிப்படையைக் காண்போம். இதனுடைய மூலதனம் 50% நீண்டகாலக் கடனாக வும், 15% முன்னுரிமை பங்குத் தொகுப்பாகவும், (Preferred Stock) எஞ்சியுள்ள 35% பொதுப்பங்குத் தொகுப்பு (Common Stock) வடிவிலும் அமைந்துள்ளன எனக் கொள்வோம். இனி வெவ்வேறு வகையில் அமைந்துள்ள இம் மூலதனங்களுக்கு வெவ்வேறு அளவில் வழங்கப்படும் வருடாந்திர வருவாய் வீதத்தினைப் பார்ப்போம். சான்றாக, நீண்ட காலக் கடன்களுக்கு 4%, சலுகைப் பங்குத் தொகுப்புகளுக்கு 5·5%, பொதுப் பங்குத் தொகுப்புகளுக்கு 11% அவ்வாறாயின், குறிப்பிட்ட மூன்றுவகை மூலதனத் தொகைகளுக்கும் சேர்த்து ஒரு வருடத்திற்கு வட்டி என்ற வகையில், செலவாகும் தொகை 6·675% அமைவதைக் கணக்கிட்டு அறிந்துகொள்ளலாம்.

**எதிர்நோக்கப்படும் மூலதனத் தொகை பெற ஏற்படக்கூடிய செலவு**

| மூலதனவகை | மூலதன அடிப்படையின் விழுக்காடு | வருடாந்திர (வட்டி) செலவு | மொத்தச் செலவு |
|---|---|---|---|
| நீண்டகாலக் கடன் பத்திரங்கள் | 50% | 4·0% | 2·000% |
| சலுகைப் பங்குத் தொகுப்புகள் | 15% | 5·5% | 0·825% |
| பொதுப்பங்குத் தொகுப்புகள் | 35% | 11·0% | 3·850% |
| மூலதனத் தொகையின் மீதான மொத்தச் செலவு | 100% | — | 6·675% |

அட்டவணையில் குறிப்பிடப்பட்டுள்ள மூலதன வகைகளும் அவற்றை ஏற்படுத்துவதற்கு ஆகக்கூடிய செலவுத் தொகையும் எளிதாகக் கணக்கிடக் கூடியதாக அமைந்துள்ளன. ஆனால், உண்மையில் பொதுப்பயன் தொழில்கள் ஒவ்வொன்றும், இம் மூலதனச் செலவை நிருணயிப்பதில் ஏராளமான சிக்கல்களை எதிர்நோக்க வேண்டியுள்ளது. சுருங்கக் கூறின், மூலதனச் செலவு என்பது எளிதில் விடைகாண முடியாத ஒரு வினாவாகவே அமைந்துள்ளது என்ற கருத்தைப் பலரும் ஏற்றுக்கொண்டுள்ளனர். பலரும் உணரக்கூடிய சிக்கல்கள் பின்வருவனவாம்;

(1) மூலதனத் தொகை பெறுவதில் ஏற்படும் செலவு என்பது ஒரு நிறுவனத்தின் மூலதன அமைப்பை (Capital Structure) ஆதாரமாகக் கொண்டு தீர்மானிக்கப்படும். ஆகவே, முதலில் ஒரு நிறுவனத்தின் மூலதன அடிப்படையைச் சரியான முறையில் நிருணயிக்க வேண்டும். இஃது எளிதான செயலன்று.

(2) பங்குகளை விலைக்கு வாங்குவதன்மூலம் பங்குதாரர்கள் பெருமளவு நிதியினை ஒரு நிறுவனத்திற்கு அளிக்

1. Joseph R. Rose—"Cost of Capital in Public Utility Rate Regulation"

2. Fred. P. Morrissely—"A Reconsideration of the Cost of Capital and a Reasonable Rate of Return"

கின்றார்கள். இது போன்றே, இந் நிறுவனத்தின் நீண்டகாலக் கடன் பத்திரங்களைப் பெற்றுக் கொண்டு கடன் தொகையை வழங்குவோரும் உள்ளனர். இத்தகைய பங்குதாரர்களுக்கு இலாப ஈவும், கடனீந்தோருக்கு வட்டியும் எந்த அளவில் அளிக்கப்படவேண்டும் என்பதைத் தீர்மானிப்பதில் சிறிது சிரமம் ஏற்படலாம்.

(3) ஒரு நிறுவனத்தைத் திறமையான முறையில் நடத்த ஊக்கமளிக்கும் வகையில் இந் நிறுவனத்தின் வருவாய் அமைய வேண்டும் என்ற கருத்தும் ஏற்புடையது.

(4) பணவீக்கநிலை (Inflation) ஏற்படும்போது, எல்லா விதத் தொழில்களும் தங்களது செயல்முறைச் செலவுகளை அதிகரிக்க வேண்டியிருக்கும். பொதுப் பயன் தொழில்களும் இவ்வாறே தங்களது உற்பத்திச் செலவினை அதிகரிக்க நேரிடும். இந் நிலையில், முறைசெய்யப்படாத நிறுவனங்கள் தங்களது பொருள்களுக்கான கட்டணத்தை உயர்த்துவதன் மூலம் வருவாயை பெருக்கிக்கொள்ளும். ஆனல், பொதுப்பயன் தொழில்கள் உடனடியாகத் தங்களது கட்டணவீதத்தை உயர்த்த இயலாத நிலையில் உள்ளன. எனவே, பணவீக்க நிலையில், பொருள்களின் உற்பத்திச் செலவு உயரும்போது, இதனைச் சரிக்கட்டும் வகையில் இத் தொழில்களின் வருவாய்வீதமும் உயர்த்தப்பட வேண்டும்.

**மூலதன அமைப்பு (Capital Structure)**

மூலதன அமைப்பு என்பது ஒரு நிறுவனத்தை இயக்குவதற்குத் தேவையான நிதி எவ்வாறு பெறப்பட்டுள்ளது என்பதை விளக்குவதாக அமைகின்றது. ஏற்கனவே கூறியபடி, ஒரு நிறுவனம் முற்றிலும் தனது சொந்த முதலைக் கொண்டே தொழிலை நடத்த இயலாது. எனவே, பங்குதாரர்களிடமிருந்து நிதி பெற்றும், கடன் பத்திரங்களை வெளியிடுவதன் மூலம் கடனுதவி பெற்றும் ஒருவாறு தனது தொழிலுக்குத் தேவையான மூலதனத்தைத் திரட்ட வேண்டியுள்ளது. இவ்வாறு வெவ்வேறு வழிகளில் பெற்ற தொகை ஒரு நிறுவனத்தின் "மூலதன அமைப்பு" என்று குறிக்கப்படுகிறது. இவ்வாறு

3. Land Economics—229 (1955) Journal.
4. H. M. Somers—"Cost of Money" as the Determinant of Public Utility Rates.

அடைக்கப்படுகின்ற மூலதன அமைப்பைப் பொறுத்தே, ஒரு நிறுவனத்தின் வருவாய்வீதம் தீர்மானிக்கப்படுகின்றது என்பது நெடுநாள்களாக நிலவிவரும் கருத்தாகும்.*

இக் கருத்தினை, ஜோஸப் ரோஸ், டேவிட் டோரண்ட், அலெக்ஸாண்டர் பார்ஜஸ், பிரடரிக் வெஸ்டன் ஆகியோர் ஆதரிக்கின்றனர், எனினும் இக் கருத்தினை மறுத்து,பிராஸ்கோ (Frasco), மோடிக்னியானி (Modigniani) மெர்டன் மில்லர் (Merdon Miller) என்போர் தங்களது கருத்தினை வெளியிட்டுள்ளனர். எனினும், வெகுநாள்களாக ஏற்றுக்கொள்ளப்பட்ட கருத்தினை நாமும் ஏற்றுக்கொண்டு மேலே ஆராய்தல் நன்மை பயக்கும். ஒரு நிறுவனத்தின் சொந்த நிதியைத் திரட்டுவதில் ஏற்படும் செலவைவிட. அந் நிறுவனத்திற்காகக் கடன் நிதியைத் திரட்டும் செலவு குறைவாகவே இருக்கும். அதாவது, பங்குகளை விற்பதன்மூலமாக ஒரு நிறுவனம் அதிக அளவு மூலதனத் தொகையும், அதைவிடக் குறைந்த தொகையைக் கடனாகவும் பெறுகின்றது என்பது கருத்து. இவ்வாறு திரட்டப்பட்ட கடன் தொகைக்கும், சொந்த நிதிக்கும் இடையே உள்ள தொடர்பினை "கடன்-முதல் விகிதம்" (Debt-Capital Ratio) என்று அழைக்கப்படுகிறது. இக் 'கடன்-முதல் விகிதம்' அதிகமாக இருக்கும்போது, ஒரு நிறுவனத்தின் மொத்த மூலதனச் செலவுத் தொகை (Total Cost of Capital) குறைவாகவும், இவ்விகிதம் குறைவாக இருக்கும்போது, மூலதனச் செலவுத் தொகை அதிகமாகவும் இருக்கும். இவ்வாறு கணக்கிடப்பட்டு எதிர்பார்க்கப்படும் மூலதனச் செலவுத் தொகை, ஒரு நிறுவனத்தின் மூலதன அமைப்பைப் பொறுத்தே அமைகின்றது. எனவே, எந்த ஒரு தொழிலாயினும், அத் தொழிலின் மூலதன அமைப்பு முதன்முதலில் தீர்மானிக்கப்பட வேண்டும். இம் மூலதன அமைப்பு இரு வகைப்படும்.

மூலதன அமைப்பு

| மாதிரி அமைப்பு (Ideal or Typical Structure) | உண்மையான அமைப்பு (Actual Structure) |
|---|---|

என இரு வகைப்படும். சில நிறுவனங்கள் தங்களது மூலதனத் தொகையினை உண்மையான அடிப்படையில் அமைத்துக்கொள்

*Joseph R. Rose and David Durand—American Economic Review 1959
Alexander Berges J. Fred Weston—The Effect of the Capital Structure on the Cost Capital.
Frasco Modigli and Mer to H. Miller—A Test of Cost of Capital Proposition
The Cost of Capital Corporation Finances and the Theory of Investment.

கின்றன. மற்றும் சில நிறுவனங்கள். தங்களது தொழிலுக்குத் தேவையான அடிப்படை எதுவென்று கருதுகின்றனவோ அதனையே ஏற்றுக்கொள்கின்றன. இவ்விரண்டிற்குமுள்ள வேறுபாட்டினைச் சற்று ஆராய்வோம்.

ஒரு நிறுவனம் நல்ல முறையில் வெற்றிகரமாக இயங்க வேண்டுமானால், அதனுடைய நிதி, நிறைவுதரும் வகையில் அமைந்திருக்க வேண்டும். தேவைக்கு அதிகமான கடன் தொகை வாங்கியிருந்தாலும் அல்லது தேவையைவிடக் குறைவான அளவு கடன் பெற்றிருந்தாலும், இந் நிறுவனத்தின் நிலை சரிவர அமையாது. ஆகவே, நிதியியல் அறிஞர்களின் கருத்துப்படி, ஒரு நிறுவனத்திற்குத் தேவையான சொந்த முதல் (Equity Capital) எவ்வளவு என்றும் கடன் முதல் (Debt Capital) எவ்வளவு என்றும் முதலில் தீர்மானித்துக்கொண்டு, அதனுடைய மூலதன அமைப்பை (Capital Structure) அமைக்க வேண்டும். இவ்வாறு அமைக்கப்படுவதை, "முன்மாதிரியாக அமைக்கப்பட்ட மூலதன அமைப்பு" (Ideal Capital Structure) என்பர். சில நிறுவனங்கள் அதிக அளவுக் கடன் தொகையைப் பெற்றும், மற்றும் சில அதிக அளவு சொந்த முதலை நம்பியும் இருக்கலாம். சான்றாக, மின்திறன் வழங்கும் நிறுவனம் போன்ற ஒன்று பெரிதும் கடன் தொகையை நம்பியே இருக்கலாம். ஆகவே, இதனுடைய மூலதன அமைப்பில் கடன் தொகை அதிகமாகவும், சொந்த முதல் குறைவாகவும் காண்பிக்கப்படவேண்டும். அவ்வாறன்றிக் கடன் தொகையின் அளவு குறைக்கப்படுமேயானால், இந் நிறுவனத்தின் நிதிநிலை மிகவும் சீர்குலைந்துபோகும். எனவே, ஒரு தொழில் நிறுவனத்தின் மொத்த மூலதனத் தொகை 100% எனக் கொண்டால், அதில் எத்தனை விழுக்காடு கடன் தொகை என்றும், எத்தனை விழுக்காடு சொந்த முதல் என்றும் தீர்மானித்துக்கொண்டு அதன்படி தேவையான நிதியைத் திரட்ட வேண்டும். இதன் பின்னரே, இதற்கான மூலதனச் செலவுகள் எவ்வளவு என்பதை கணக்கிட முடியும். எனினும், முன்மாதிரியான மூலதன அடிப்படை எது என்று இதுநாள் வரை எவரும் வரையறுத்துச் சொல்லாத காரணத்தால் ஒவ்வொரு நிறுவனமும் தங்களுக்கே உரிய வழிகளில் இதனைத் தீர்மானித்துக்கொள்கின்றன. சில சமயம், நீதிமன்றங்களின் துணைகொண்டு, பல்வேறு வழக்குகளின் தீர்ப்புகளை ஆதாரமாகக் கொண்டு இம் மூலதன அடிப்படை தீர்மானிக்கப்படுவதும் உண்டு. சான்றாக, "அலபாமா சதர்ன் பெல் vs. டெலிபோன்-டெலிகிராப் கம்பெனி" என்னும் வழக்கில் ஒரு தொழில் நிறுவனம் 45% தொகையைத்

கடனாகவும், 55% தொகையை சொந்த முதலாகவும் வைத்திருப்பது அவசியம் என்று தீர்ப்பு வழங்கப்பட்டது.*

இத் தீர்ப்பு வழங்கப்படுமுன்னர், இந் நிறுவனம் 21·7% தொகையையே கடன் முதலாக வைத்திருந்தது. ஆனால், கடன்முதல் மிகவும் குறைந்து காணப்படுமேயானால், எஞ்சியுள்ள பெருந்தொகையைப் பங்குதாரர்களிடமிருந்துதான் பெறவேண்டியிருக்கும். பங்குகளை விற்பதன்மூலம் எஞ்சியுள்ள தொகை ஈடு செய்யப்படவில்லையானால் இந் நிறுவனத்தின் கட்டண வீதம் மிகவும் உயர்ந்த அளவில் நிருணயிக்கப்படும். இது நுகர்வோருக்கு இழைக்கப்படுகின்ற அநீதியாகும் என்று மிஸிஸிபி கமிஷன் கருதியதால், பெல் நிறுவனத்தின் மூலதன அமைப்பு 45% : 55% என்ற விகிதத்திற்கு மாற்றப்பட்டது.

முன் மாதிரியாக வரையறுக்கப்பட்ட ஓர் மூலதன அமைப்பை ஏற்றுக்கொண்டு தொழில் நிறுவனங்கள் தங்கள் பணியைத் தொடர்வதைப் பார்த்தோம். ஆனால், எல்லா நிறுவனங்களும் இக் கருத்தை ஏற்றுக்கொள்வதாயில்லை. சில நிறுவனங்கள், தங்களது தேவைக்கேற்ற மூலதனத்தைத் தாங்களே அமைத்துக் கொள்வதையே விரும்புகின்றன. ஒவ்வொரு நிறுவனமும் தனது தொழிலுக்காகப் பிறரிடமிருந்து எவ்வளவு தொகையை உண்மையில் பெற்றுள்ளதோ அதுவே உண்மையான மூலதன அமைப்பு எனப்படும்.

**உண்மையான மூலதன அமைப்பா? அல்லது கணக்கிடப்பட்ட மூலதன அமைப்பா?**

உண்மையான மூலதன அமைப்பைப் பின்பற்றுவதன்மூலம், ஒரு நிறுவனத்தின் நிருவாகத்தினர், எவ்வளவு தொகையினைப் பெற்றுள்ளோம், அவற்றிற்கான வருவாய் (இலாப ஈவு அல்லது வட்டி) எவ்வளவு அளிக்கப்படவேண்டும் என்ற விவரங்களை எளிதில் அறிந்துகொள்ள முடியும் இச் செய்திகளை அறிந்து கொண்டு அதற்கேற்பத் தங்களது வருவாய்வீதத்தினை மாற்றியமைக்கவும்முடியும். சுருங்கக்கூறின், தொழிலின் உண்மையான நிலைக்கேற்பஅமைக்கப்படும்உண்மையான மூலதனஅமைப்பினைக் கையாளுவதன்மூலம் கடன் மற்றும் சொந்த முதலுக்கான இலாப ஈவு மற்றும் வட்டித்தொகை கணக்கிடப்பட்டு, அதற்கேற்ப நிறுவனத்தின் வருவாய் வீதம் அமைக்கப்படுகின்றது எனலாம்.

*Alabama vs. Southern Bell Telegraph and Telephone Co. 47 Pur (1962)

இனி, இதற்கு எதிரான கருத்துகளையும் பார்க்கலாம். முதலாவதாக, லாக்லின் (Locklin) என்பவரின் கருத்துப்படி உண்மையான மூலதன அடிப்படை என்பது ஒரு தொழிலுக்குத் தேவையான மூலதனத்தினை அடைய வழிவகுப்பதில்லை. மாறாக எவ்வளவு தொகையை ஒரு நிறுவனம் பெற்றுள்ளதோ அதுவே உண்மையான மூலதனம் எனப்படும் என்றும், இத் தொகை தேவைக்கு அதிகமாகவோ குறைவாகவோ இருக்க முடியும் என்றும் கூறப்படுகின்றது. இத் தொகை தேவைக்குக் குறைவாக இருப்பின் நிறுவனம் நன்முறையில் இயங்க வாய்ப்பில்லை. ஏனெனில், நிதிநிலை சீர்கேடு அடைவதைத் தவிர்க்கும்பொருட்டு நுகர்வோரிடமிருந்து அதிக அளவுக் கட்டணத்தைப் பெற்றாக வேண்டிய கட்டாயத்திற்கு அவை உள்ளாக்கப்படுகின்றன. தேவைக்குமேல் கடன் முதலைப் பெற்றிருந்தாலும், இலாபத் தொகை, பெருமளவு வட்டியை அளிப்பதிலேயே கழிந்துவிடும் என்பதும் உணரத்தக்கது. இதற்குப் பதிலாக, ஒவ்வொரு நிறுவனத்திற்கும் அதன் தொழிலுக்கேற்ப, இவ்வளவு தொகை மூலதனமாகத் தேவைப்படுமென்றும், அத் தொகையில் கடன் முதல் எவ்வளவு இருக்கலாமென்றும், சொந்த முதல் எவ்வளவு இருக்கலாமென்றும் முன்கூட்டியே கணக்கீட்டு வைத்திருந்தால், அது முன்மாதிரியான மூலதன அடிப்படை எனப்படுகின்றது.

ஏற்கனவே, கணக்கிடப்பட்ட மூலதன அமைப்பினைப் பின்பற்றி, ஒரு நிறுவனத்திற்குத் தேவையான மூலதனத் தொகையை ஏற்படுத்துவதைப் பலர் ஆதரிக்கவில்லை. சான்றாக, பேராசிரியர் ரோஸ் அவர்களின் கருத்துப்படி, "ஒரு நிறுவனத்திற்குத் தேவையான மூலதனத் தொகையை, அந் நிறுவனத்தில் உள்ளவர்களே தீர்மானிக்க வேண்டும். நிருவாகக் குழு என்ற ஒன்றினை ஏற்படுத்தித் தந்த பின்னர், அதனுடைய உரிமைகளிலும், அதிகாரங்களிலும் தலையிடுவது சரியன்று. மேலும் தொழிலாளிகளின் கூலி, எரிபொருள் செலவு மற்றும் பல உற்பத்திச் செலவுகளைப் பல நேரங்களில் முறையற்றதென்று கூறி ஒரு தொழிலின் கட்டணவீதத்தை நிருணயிப்பதற்கு எவ்வாறு அனுமதி வழங்கப்படுவதில்லையோ, அதுபோன்றே மூலதன அமைப்பினை ஏற்படுத்துவதிலும் ஒரு தொழிலினுடைய நிருவாகக் குழுவின் அதிகாரம் பறிக்கப்படுகின்றது." *எனினும் பொருளாதார ஏற்றத் தாழ்வுகள் இல்லாத நேரங்களில் ஒரு நிறுவனத்தின் மூலதன அமைப்பு, ஏற்கனவே கணக்கிடப்பட்ட முன்மாதிரியான மூலதன அமைப்பைச் சார்ந்து அமைக்கப்படலாம். ஆனால், எது சரியான அமைப்பு என்ற வினாவிற்கு இதுவரை விடை காணப்படவில்லை.

*Rose "Cost of Capital in Public Utility Rate Regulations" pp.1088-89.

ஏனெனில், ஒரு தொழிலுக்கான மூலதன அமைப்பு, மற்றொரு தொழிலுக்கு ஏற்றதாக இருக்க வாய்ப்பில்லை. தவிர ஒரு குறிப்பிட்ட இடத்தில் (சான்றாக சென்னையில்) பணிபுரியும் ஒரு நிறுவனத்தின் மூலதன அமைப்பு, வேறொரு இடத்தில் (சான்றாக பம்பாயில்) இயங்குகின்ற அதேவகைத் தொழில் நிறுவனத்திற்கு ஏற்றதாக இருக்க முடியாது என்பதும் உண்மை. எனவே, எந்த ஒரு தொழிலுக்கும் ஏற்ற மூலதன அமைப்பு இன்னதென்று ஏற்கனவே நாம் கணக்கிட்டுச் சொல்ல இயலாது. பொருளாதார வல்லுநர்கள் பலரும், பலவித அமைப்பினை ஒரே நிறுவனத்திற்கு உள்ளதாகக் கூறுகின்ற வேடிக்கையும் சில நேரங்களில் நடைபெறும். ஆகையால், எந்த ஒரு தொழிலுக்கும் ஏற்ற மூலதன அமைப்பு,

(அ) சந்தையின் அமைப்பு

(ஆ) நிதி கிடைக்கக் கூடிய வாய்ப்பு

(இ) நிறுவனத்தின் நிதிநிலை.

போன்ற பல செய்திகளைப் பொறுத்தே அமையும் என்று அறியலாம். மேலும்; மேற்கண்ட இச் செய்திகள் அடிக்கடி மாறக் கூடும் தன்மை படைத்தவையாதலால், குறிப்பிட்ட ஓர் அடிப்படையை நம்மால் நிருணயிக்க முடியாது.

கடன்முதல், சொந்தமுதல் ஆகிய இருவகை மூலதனத்தைத் தொகைகளுக்குமான செலவு என்ன என்பதை ஒரு நிறுவனம் நன்கறிந்த பின்னரே அதனுடைய வருவாய்வீதம் தீர்மானிக்கப்படுகின்ற கருத்து உண்மையானால், இச் செலவுத் தொகை 'தற்போது' எவ்வளவு என்பதும் 'அண்மையில்' அத்தொகையில் ஏற்படக்கூடிய மாற்றங்கள் (ஏதுமிருப்பின்) என்ன என்பதும் தீர்மானிக்கப்பட வேண்டும். உடனடியாக நடைபெறக்கூடிய மாற்றங்களை மட்டுமே கணக்கில் எடுத்துக்கொண்டு ஒரு நிறுவனத்தின் மூலதன அடிப்படை தீர்மானிக்கப்பட வேண்டும். தவிர எப்போதோ பின்னாளில் நிகழக்கூடிய மாற்றத்திற்கு வகைசெய்து வாளாயிருத்தல் - கூடாது என்பது கருத்து. சுருங்கக்கூறின், நிகழ்காலச் செய்திகளைப்புறக்கணித்து, எதிர்காலச் செய்திகளைச் எதிர்நோக்கி நிற்பது பலனளிக்காது என்று பான்ப்ரைட் போன்றோர் கருதுகின்றனர்*. எனவே, நிறுவனத்தோடு நெருங்கிய தொடர்புகொண்ட, அதன் நிருவாகத்தினருக்கோ, மூலதன அமைப்பைத் தீர்மானிக்கும் உரிமை வழங்கப்பட வேண்டுமென்று கூறலாம்.

*Bonbright- pp. 243-244

**வருடாந்திர மூலதனச் செலவு** (The Annual Cost of Capital)

ஒவ்வொரு நிறுவனமும், ஆண்டுதோறும், தனது மூலதன அமைப்பை மாற்றி அமைத்துக் கொள்ள விரும்பலாம். இந் நிலையில் கடனாகவும், பங்குதாரர்களிடமிருந்தும் பெற்றுக் கொண்ட தொகைக்கு ஓராண்டிற்கு அளிக்கப்பட வேண்டிய வட்டி, இலாப ஈவு போன்றவற்றைக் கணக்கிட்டு அதற்கேற்பத் தங்களது நிதி நிலையை அமைத்துக் கொள்வது இந் நிறுவனங்களின் இயல்பு. இவ்வாறு ஓராண்டிற்கு, இந் நிறுவனங்கள் தங்களது மூலதனத் தொகையை அமைப்பதற்காகச் செலவிடும் 'வருடாந்திர மூலதனச் செலவு' என்று கூறுகின்றோம். இச் செலவுத்தொகை பல வகைப்படும் அவை பின்வருவனவாம் :

1. கடன் முதல்மீதான செலவு (Cost of Debt Capital)
2. சலுகைப்பங்கு முதல்மீதான செலவு (Cost of Preferred Stock)
3. பொதுப்பங்கு முதல்மீதான செலவு (Cost of Equity Capital)
4. புதிய மூலதனத்தை ஏற்படுத்தும் செலவு (Cost of Floating New Capital)
5. முதலாக்க விகிதங்கள் (Capitalization Ratios)
6. வெளிஅளிப்பு விகிதங்கள் (Pay out Ratios)
7. எச்சப்பாட்டு நிலை (The Level of Surplus)
8. பொதுப்பயன் தொழில் வளர முதலீடு செய்வோரைத் தூண்டும் வகையில், அமைக்க வேண்டிய தொகை (An Allowance which is first sufficient to induce the growth rate of the utility)
9. பணத்தின் மதிப்பில் ஏற்படக்கூடிய மாற்றங்களுக்கான சரிக்கட்டுதல்கள் (Adjustments for any change in the value of money)
10. நிருவாகத்தின் மிகச் சிறந்த திறமைகளை வெளிக்கொணரும் வகையில் வகைசெய்யப்படும் தொகை.

மேற்காணும், குறிப்புகள் ஒன்றிற்கொன்று தொடர்பு கொண்டுள்ளவை என்பது எளிதில் விளங்கும். இருப்பினும் ஒரு நிறுவனத்தின் உண்மையான மற்றும் சரியான வருடாந்திர மூலதனச் செலவைக் கணக்கிட வேண்டுமானல், இக் குறிப்புகள் ஒவ்வொன்றையும் சற்று விரிவாக ஆராய்தல் அவசியமாகிறது.

**கடன் முதல்மீதான செலவு (Cost of Debt Capital)**

ஒரு நிறுவனம் பற்றுக்குறை காரணமாக வெளியாரிடமிருந்து கடனைப் பெற்று தொழிலை நடத்தும் போது, அத் தொகை கடன் முதல் எனப்படுகின்றது. பெரும்பாலும், நீண்ட கால கடன்களே வணிக உலகினரால் விரும்பப்படுகிறது. இந் நீண்டகாலக் கடன்களைப் பெறுவதற்காக கடன்பத்திரங்கள் (Debentures and bonds) வெளியிடப்படுகின்றன. இக் கடன்பத்திரங்களுக்கு ஆண்டு தோறும், வட்டி அளிக்கப்பட வேண்டும். இவ்வாறு அளிக்கப் படும் வட்டி அக் கடன் பத்திரத்திலேயே குறிக்கப்பட்டிருக்கும். இதுவே கடன்முதல்மீதான செலவு என்று கருதப்படுகிறது. உண்மையான மூலதன அமைப்பினைக் கொண்ட ஒரு நிறுவனத் தின் நீண்டகால கடன் முதல்மீதான செலவினைக் கணக்கிடுவது மிகவும் எளிய செலவாகும். முதலில், ஏற்கனவே பெறப்பட்ட கடன்தொகையின் வட்டிவிகிதத்தைக் குறித்துக் கொள்ள வேண்டும். ஆனால், இவ்வட்டித் தொகை மட்டுமே இக் கடன்மீதான செலவு ஆகாது. ஏனெனில் கடன் பத்திரங்களை வெளியிடும் போது அதற்காகும் செலவு விற்பனைத் தள்ளுபடிகள், அழைப்புக் கழிவுகள் (Call Commission) போன்றவையும் சேர்த்துக்கொள் ளப்படவேண்டும். இவ்வனைத்தும் சேர்ந்து கணக்கிடப்பட்ட தொகையே கடன்முதல் மீதான செலவாகக் கருதப்படும். ஆனால் ஏற்கனவே (சில ஆண்டுகளுக்கு முன்னர்) பெறப்பட்ட இக் கடன் தொகைக்கான செலவு, நடப்பு வருடத்தில் பெறும் கடன் தொகைக்கு ஆகக்கூடிய செலவிலிருந்து வேறுபடும். ஏனெனில், வட்டிவீதங்கள், சந்தை நிலவரங்கள் போன்றவை அடிக்கடி மாறக்கூடியவையாதலால், ஒவ்வோர் ஆண்டும் கடன் முதல் பெறப்படும்போது அதன்மீதான செலவுத் தொகையும் வேறு படும். எனவே, கடந்த வருடங்களின் ஆன செலவு, நடப்பு வருடத்தில் ஆகக்கூடிய செலவு இரண்டையும் ஒப்பிட்டுப் பார்த்த பின்னரே ஒரு நிறுவனம் குறிப்பிட்ட ஒரு வருடத்திற்கான கடன் முதல்மீதான செலவுத் தொகையைத் தீர்மானிக்க இயலும்.

**முன்னுரிமைப் பங்குமுதல்மீதான செலவு (Cost of Preferred Stock)**

கடனீந்தோருக்கும் நிறுவனத்திற்குமிடையே ஒப்பந்தம் ஒன்றினை ஏற்படுத்திக்கொண்டு அதன்படி, குறிப்பிட்ட வட்டித் தொகை நீண்டகாலக் கடனுக்கு அளிக்கப்படுகிறது. இதே முறையில் ஒரு நிறுவனம் சலுகைப் பங்குகளை வெளியிடுவதன் மூலம் திரட்டுகின்ற முதலுக்கான இலாபஈவினை முதலிலேயே தீர்மானித்துக்கொள்கிறது. குறிப்பிட்ட அல்லது வரையறுக்கப் பட்ட இவ்விழுக்காட்டுத் தொகையுடன் இச்சலுகைப் பங்குகளை

வெளியிடும் செலவுத் தொகையும் சேர்க்கப்படுகின்றது. பின்னர் இச் சலுகைப் பங்குகளை தற்போதைய நடப்பு வருடத்தில் வெளியிட நேரிட்டால், அதற்கு ஆகக்கூடிய இலாபஈவுபோன்ற செலவுத் தொகை என்னவென்பது கணக்கிடப்படவேண்டும். இதனை அறியவேண்டுமானால், பிற நிறுவனங்கள் இதே வகைச் சலுகைப் பங்குகளை அளிக்க என்ன செலவினைச் செய்துள்ளன என்ற விபரத்தினை அறிதல் வேண்டும். இவ்விரண்டு குறிப்புகளையும் கொண்டு, தற்போது ஒரு நிறுவனத்திற்கு ஆகக்கூடிய வருடாந்திரச் செலவினைக் கணக்கிடுதல் எளிதாகும். பொருள்களுக்கான கட்டணவீதத்தை நிருணயிப்பதற்காக ஒரு பொதுப் பயன் தொழிலின் பொருள்களுக்கான சொத்துகளின் தோற்ற மதிப்பீட்டுமுறை கையாளப்பட்டால், சலுகைப்பங்குமீதான இலாபஈவினைக் கணக்கிட, ஏற்கனவே நிருணயிக்கப்பட்ட வட்டி வீதத்தைப் பயன்படுத்தவேண்டும். பொதுவாக, ஏற்கனவே தீர்மானிக்கப்பட்ட வட்டி அல்லது இலாபஈவு விகிதமே ஒரு நிறுவனத்தால் கையாளப்படுவது வழக்கமாகும்.

### பொதுப்பங்குமுதல்மீதான செலவு (Cost of Common Stock Capital)

முன்னுரிமைப் பங்குகளைப் போலவே பொதுப்பங்குகளையும் (Common Stock or Equity Stock) விற்று அதன்மூலம் கிடைக்கின்ற முதலினையும் தொழிலின் வளர்ச்சிக்காகப் பயன்படுத்துவது இயல்பு. இவ்வாறு விற்கப்பட்ட பொதுப் பங்குகளை வாங்குவோர், முன்னுரிமைப் பங்குதாரர்களைப்போன்று சில விசேட சலுகைகளை (உரிமைகளை) அனுபவிக்கவில்லையெனினும் இவர்களே ஒரு தொழில் நிறுவனத்தின் உரிமையாளராகக் கருதப்படுகின்றனர். ஓட்டுரிமை, தொழில் பற்றிய முடிவு செய்தல் போன்றவற்றில் இவர்களுக்கே முதலிடம் அளிக்கப் படுகின்றது. முன்னுரிமைப் பங்குதாரர்களுக்கு அளிக்கப்பட்டது போன்றே இவர்களுக்கும் பங்காதாயம் (dividend) அளிக்கப்படுகின்றது. ஆனால், முன்னுரிமைப் பங்குதாரர்களுக்குக் குறிப்பிட்ட விழுக்காட்டுத் தொகையே அளிக்கப்படுமென்றால், இவர்களுக்கு அளிக்கப்படும் தொகை அவ்வப்போது மாறும் தன்மை படைத்தது. அச் செலவு இலாபம் கிடைக்கும்போது அதிகமாகவும், குறைந்த அளவு இலாபம் கிடைக்கும்போது குறைவாகவும், பங்காதாயம் அளிக்கப்படும். இதனை ஒரு சிறந்த கருத்தாகவும் அதே நேரம் ஒரு குறைபாடாகவும் கருத முடியும். ஏனெனில், அதிக அளவு இலாபமோ இலாபமே கிடைக்காவிட்டாலுமோ, பொதுப்பங்குதாரர்கள் வாளாயிருப்பது இயற்கை. ஆனால், ஒரு முறை அல்லது இருமுறை வேண்டு

மாயின், பங்காதாயம் அளிக்காமல் ஒரு நிறுவனத்தால் இருக்க முடியும். தொடர்ந்து பல வருடங்களுக்குப் பொதுப்பங்குதாரர் களுக்குரிய பங்காதாயம் அளிக்கப்படாவிடில், நிறுவனத்தின் நன்மதிப்பு (goodwill) பெருகுவதுடன், அதனுடைய மூலதன அமைப்புச் சீர்குலையும் ஆபத்து நேரிடும்.

நீண்டகாலக் கடன்முதல் முன்னுரிமைப் பங்குமுதல் போன்ற வற்றிற்கு அளிக்கப்படும் வருவாய் இலாபத் தொகையில் ஒரு குறிப்பிட்ட விழுக்காடாகக் கணக்கிடப்படுவதால், சிரமம் ஏது மிருப்பதில்லை. ஆனால், பொதுப்பங்குகளின்மீதான வருவாயைக் கணக்கிட குறிப்பிட்ட அளவு ஏதுமில்லாதது ஒரு குறைவாகவே எண்ணப்படுகிறது. இக் குறையைப் போக்கும்வண்ணம், ஒரு நிறுவனத்தின் பொதுப்பங்குகளின்மீதான வருவாயைக் கணக்கிட வருவாய்-விலை விகிதத்தையோ பங்காதய-விலை விகிதத் தையோ பயன்படுத்தலாம். இவ்விரண்டு விகிதங்களைக் கண்டு பிடிக்க கடந்த காலக் குறிப்புகளைப் பயன்படுத்தலாம். "வருவாய் விலைவிகிதம் என்பது ஒரு பொதுப்பங்கு குறிப்பிட்ட ஒரு கால அளவில் (ஒரு வருடத்தில்) ஈட்டிய வருவாய்க்கும், அப்பங்கின் சந்தை விலைக்கும் இடையேயுள்ள தொடர்பினைக் குறிப்பதாகும்."

சான்றாக, பொதுப்பங்கின் சந்தைவிலை ரூ. 100 என்றும், அப் பங்கு ஒரு வருட காலத்தில் ஈட்டும் தொகை ரூ. 12% என்றும் கொள்வோமேயானால், அப் பங்கின் வருவாய்-விலை விகிதம் பின்வருமாறு,

$$\frac{\text{வருவாய்}}{\text{விலை}} = \frac{E}{P} = \frac{12}{100} = 12\%$$

நூற்றியமாக இஃது அமைகின்றது.

இனி, இப் பொதுப்பங்கின் "பங்காதாய-விலை" விகிதத்தைக் கணக்கிடும் முறையைப் பார்ப்போம். பங்கின் பங்காதாயம் வருடத்திற்குப் பத்து ரூபாய் எனக் கொள்வோம்.

பங்காதாய-விலைவிகிதம் = 10%ஆக அமைகின்றது.

இனி, இவ்விரண்டு குறிப்புகளையும் கொண்டு இப் பொதுப் பங்கின் வெளி-அளிப்பு (Pay-out) விகிதத்தினைக் காண இயலும்.

கொடுக்கப்பட்ட எடுத்துக்காட்டின்படி,

பொதுப்பங்கின் பங்காதாயம் = 10 ரூபாய் எனவும்,
வருவாய்த் திறன் = 12 ரூபாய் எனவும் நாம்

அறிவோம்,

அவ்வாறெனில், இதனுடைய வெளி-அளிப்பு விகிதம் =

$$\frac{\text{பங்காதாயம்}}{\text{வருவாய்வீதத்திறன்}} = \frac{10}{12} = 83 \cdot 33\%$$

என அமைகின்றது. இதன்படி, இப் பொதுப் பங்குகளின்மீதும் கிடைக்கின்ற வருவாயிலிருந்து 83·33% இலாபஈவாக அளிக்கப் படுகின்றது என்பதை அறிந்துகொள்ளலாம்.

வணிக நிறுவனங்களின் பொதுப் பங்குகளை வாங்குவதன் மூலம் தங்களுடைய நிதியை முதலீடு செய்ய விரும்புவோர், எந்நிறுவனங்களில் இப் பங்குகளை வாங்குவது என்ற வினவிற்கு உட்படுவது இயல்பு. எந்த நிறுவனம் அதிக அளவு இலாபத் தினைப் பங்குதாரர்களுக்குத் தருகின்றதோ, அந் நிறுவனங்களின் பங்குகளே பெரிதும் வாங்கப்படும். எனவே, ஒரு நிறுவனம் தனது பொதுப்பங்குகளுக்கான இலாபஈவினை எவ்வாறு அளித் துள்ளது என்பதை அறிதல் அவசியமாகிறது. கடந்த காலத்தில் எவ்வளவு இலாபஈவினை எவ்வாறு அளித்துள்ளது என்பதை அறிதல் அவசியமாகிறது. கடந்த காலத்தில் எவ்வளவு இலாப ஈவு அளிக்கப்பட்டது, தற்போது எவ்வளவு அளிக்கப்படுகிறது, வருங்காலத்தில் எவ்வளவு அளிக்கப்படவிருக்கிறது என்பவற்றை நன்கு அறிந்தபின்னர், முதலீடு செய்ய விரும்புவோர், ஒரு முடிவிற்கு வர இயலும். ஆகவே, குறிப்பிட்ட அளவு இலாப ஈவினை அளிக்கும் இப் பங்கினை பங்குதாரர்கள் எவ்வளவு விலை கொடுத்து வாங்குகிறார்கள் என்பதைக் கொண்டு பொதுப்பங்கு முதல் மீதான செலவுத்தொகையை அறிய முடியும். ஒவ்வொரு நிறுவனமும், தான் ஈட்டுகின்ற நிகர இலாபத்திலிருந்து குறிப்பிட்ட அளவினை இலாப ஈவாகப் பங்குதாரர்களுக்கு அளித்தபின்னர், எஞ்சியிருக்கும் தொகையை நிறுவனத்திற் காகவே தக்க வைத்துக்கொள்ளும். இவ்வாறு தக்கவைத்துக் கொண்ட தொகை மீண்டும் இந் நிறுவனத்தின் வளர்ச்சிக்காகவே முதலீடு செய்யப்படும். இதன் காரணமாக இந் நிறுவனத்தின் பங்குகளின் விலை அதிகரிக்கும். பொதுவாக, எந்த ஒரு நிறுவனத்தின் பங்குகளின் விலை அதிகரிக்கின்றதோ, அந் நிறுவனம் நன்முறையில் செழிப்புடன் இயங்குகின்றது என்பது கருத்து. இவ்வகையில், மேன்மேலும் பங்குதாரர்கள் இந் நிறுவனத்தில் முதலீடுசெய்ய விரும்புவர். இந் நிலையில் பொதுப்பங்குகளின் வருவாய்த் திறன்-விற்பனைவிலை விகிதத்தினைக் கணக்கிட்டு, அதன் மூலம் இப் பங்கு முதலுக்கான செலவு என்ன என்பதை நிறுவனத்தின் நிருவாகத்தினர் அறிந்துகொள்ள முடியும்.

பொருளாதார வல்லுநர்கள் சிலர் ஒரு நிறுவனத்தின் பொதுப்பங்குகளினுடைய கடந்த கால, நிகழ்கால மற்றும் வருங்

கால இலாபமீட்டும் திறனைக் கணக்கிட்டு, அதன்மூலம் இப் பங்குகளின் விலையைத் தீர்மானிக்கும் முறையை ஏற்பாரிலர். அவர்களின் கருத்தை அறவே புறக்கணிக்கமுடியாவிட்டாலும், இப் பங்குகளின் இலாபமீட்டும் தன்மையை ஒதுக்கிவிட இயலாது என்பதும் உணரப்பட வேண்டும்.

**வருவாய்த்திறன் - விலைவிகித முறையின் குறைபாடுகள்**

வணிக நிறுவனம் ஒன்றின் மூலதனத்திற்காக ஆகக்கூடிய செலவினைத் தீர்மானிக்கும்பொருட்டு, அந் நிறுவனத்தின் பொதுப்பங்குகளின் வருவாய்த் திறனையும், அவற்றின் சந்தை விலையையும் இணைத்து, 'வருவாய் விலை' விகிதத்தினைக்கண்டு பிடிக்கவேண்டுமென இதுகாறும் கூறப்பட்டது. ஆனால், இவ் வருவாய் விலை விகிதமுறையைக் கடைப்பிடிப்பதில் சில குறை பாடுகளும் இருக்கின்றன. அவை பின்வருவனவாம்:

1. வருவாய்-விலை விகிதத்தின்படி, ஒரு தொழிலில் முதலீடு செய்ய விரும்புவோர் அதனுடைய பொதுப்பங்குகளின் கடந்த கால மற்றும் நடப்பு வருடங்களின் இலாபமீட்டும் திறனைமட்டுமே அறிவதில் ஆர்வம் காட்டுவதாகக் கருதப்படுகிறது. இதனைக் கொண்டு, அப் பங்குகளின் எதிர்கால வருவாய்த் திறனைக் கணக்கிட்டு, அதன்பின்னர் இந் நிறுவனத்தில் அவர்கள் முதலீடு செய்வதாகவும் கருதப்படுகிறது. ஒரு நிறுவனத்தின் மூலதன அமைப்பு அந் நிறுவனத்தின் பொதுப்பங்குகளின் வருவாய்த்திறனைப் பொறுத்து அமைகின்றது. ஆனால், முன்னர் கூடியபடி முதலீடு செய்ய விரும்புவோர், பங்குகளின் கடந்தகால இலாப ஈவினை மட்டும் கருதுவார்களேயானால், இப் பங்குகளின் வருவாய்-விலை விகிதம் என்பதன் பொருள் உணரபடாமல் போய்விடும். ஏனெனில், வருங்காலத்தில் இப் பங்குகள் என்ன வருவாயினை அளிக்கும் என்பதைப் பொறுத்தே அத் தொழிலின் மூலதன அமைப்பு அமைகின்றபடியால், வருவாய் விலைவிகிதம் என்பது நடைமுறையில் இன்றியமையாததாகக் கருதப்படுவதில்லை. எனவே, பொதுப்பங்கு முதலுக்கு ஆகும் செலவு என்னவென்பதைக் கணக்கிடமுடியாத நிலைக்கு நாம் ஆளாகிறோம்.

2. ஒரு பொதுப்பயன் தொழிலின் கட்டண அடிப்படை அத் தொழிலினைச் சார்ந்த அனைத்துச் சொத்துகளின் மதிப்பினைப் பிரதிபலிப்பதாக நாம் அறிந்தோம். இதற்கு மாறாக, அந் நிறுவனத்தின் பொதுப்பங்குகளின் முதல், இப் பங்குகளின் வருவாய் விலை விகிதப்படி கணக்கிடப்படுகிறது. இவ் விகிதத்தின்படி, பொதுப் பங்குகளின் சந்தை மதிப்பே ஏற்றுக்கொள்ளப்

படுகின்றது. இவ்வாறு, ஏட்டு மதிப்பின்படி கணக்கிடப்பட்ட கட்டண அடிப்படையைக் கொண்ட ஒரு நிறுவனத்தின் மூலதனச் செலவினைக் கணக்கிட, சந்தை மதிப்பின்படி ஏற்றுக்கொள்ளப் பட்ட பங்குகளின் வருவாய் விலை விகிதத்தினைக் கையாளுவது என்று கருதப்படுகின்றது.* எனவே பங்குகளின் சந்தை மதிப் பிற்குப் பதிலாக, அவற்றின் ஏட்டுமதிப்பினை (Book Value) மட்டும் அடிப்படையாகக்கொண்டு காணப்பட்ட வருவாய் வீதத் தினையே ஏற்றுக்கொள்ளக்கூடியதாக இருக்கவேண்டுமாயின், ஏட்டுமதிப்பும், சந்தைமதிப்பும் ஒன்றாக இருக்கவேண்டும். சந்தை மதிப்பும், ஏட்டுமதிப்பும் வேறுபட்டிருப்பதற்குப் பின் வரும் காரணங்களைக் கூறலாம் :

(அ) தொழில் உலகில் உண்மையாகவே வளர்ச்சி இருக் கும்போதும், பணவீக்க நிலை (inflation) ஏற்படும் போதும் பொதுப்பங்குகளின் சந்தையில், ஏட்டு மதிப்பைவிட, அதிகரிக்க வாய்ப்புண்டு. (அல்லது)

(ஆ) ஒரு நிறுவனம் வளர்ச்சியடையும்போது, அந் நிறுவ னத்தின் பங்குதாரர்களுக்குக் கிடைக்கக்கூடிய இலாப ஈவு அதிகரிக்கும். இதன் விளைவாக, பொதுப்பங்குகளின் மதிப்பு, சந்தையில் உயர்வடை யும். (அல்லது)

(இ) நிறுவனத்தின் பங்குதாரர்கள், தங்களுடைய நிறுவனம் வருங்காலத்தில் நல்ல இலாப ஈவினை அளிக்கும் நிலையை அடையும் என்று எண்ணுவார் களேயானால் சந்தையில் இப் பங்குகளின் மதிப்பு அதிகரிக்கும்.

மேற்காணும் காரணங்களினால், தன் மதிப்பை உயர்த்திக் கொண்ட பங்குகள் அதிக அளவில், சிரமம் ஏதுமின்றி விற்பனை யாவதால், நிறுவனத்திற்குத் தேவையான மூலதனம் எளிதில் கிடைத்துவிடுகின்றது.

ஆனால், ஏட்டுமதிப்பிற்கும் சந்தை மதிப்பிற்கும் இத்தகைய வேறுபாடு இருக்குமேயானால் சில தீமைகளும் விளைய ஏதுவா கின்றது. குறிப்பாக, ஏட்டுமதிப்பின்படி கணக்கிட்டுப் பார்த் தால் ஒரு பொதுப் பங்கிற்குக் கிடைக்கும் இலாப ஈவை விட, அதனுடைய வருவாய் விலைவிகிதம் குறைவாகக் காணப் படும். மேலும், உண்மை மதிப்பீட்டுமுறையின்படி (actual cost

*It is inconsistent to apply a cost equity capital based on market values to a rate base reflecting book value.

Methed) கணக்கிடப்பட்ட கட்டண அடிப்படை கையாளப்படும் போது, பங்குகளின் சந்தையில் இப் பொதுப்பங்குகளின் வருவாய் விலை (Earnings-Price) தீவிரமாகப் பயன்படுத்தப்பட்டால், நிச்சயமாக நிறுவனம் வீழ்ச்சி அடையும் என்பதில் ஐயமில்லை. பொதுப்பங்குகளின் சந்தைவிலையைவிட, கட்டண அடிப்படையின் மதிப்புக் குறைவாகவே இருக்கும். மேலும், பொதுப்பங்கின் விலையைக் கட்டணவிதத்துடன் இணைத்துக் கணக்கிடும்போது இந் நிலை தெள்ளென விளங்கும்.

சிறிய சான்று ஒன்றினைக்காட்டி இதனை விளக்க முடியும். நிறுவனம் ஒன்றின் பொதுப்பங்கின் ஏட்டுமதிப்பு ரூ 10-00 எனக் கொள்வோம். ஒவ்வொரு பங்கும் தன் வருவாயாக ரூ 1-00-ஐ ஈட்டக்கூடியது என்றும் கொள்வோம். இதன்படி, ஒவ்வொரு பங்கும் 10% வருவாயைக் ஈட்டக்கூடியது என்று விளங்குகிறது. இதனைக் கருத்தில் கொண்டு, ஏற்கனவே நாம் ஒப்புக்கொண்ட வருவாயை இப் பங்குதாரர்களுக்கு அளிக்க இயலும். இவ்வாறு (இலாப ஈவினை) அளிப்போமேயானால், பங்குகளின் சந்தை மதிப்பு, ஏட்டு மதிப்பிற்கு ஏறத்தாழ சமமாகவே இருக்கும். இந் நிலையில், எதிர்பாராத வகையில் பங்குகளின் சந்தை விரிவடைந்ததன் காரணமாக, பொதுப்பங்குகளின் மதிப்பு ரூ 20 ஆக உயர்ந்ததெனக் கொள்வோம். இவ் விலை உயர்வால் பொதுப்பங்குகளின் வருவாய்-விலை விகிதமும் ஐந்து விழுக்காடாகக் குறைந்துபோக நேரிடுகின்றது. தொடர்ந்து நாம் பொதுப்பங்கு முதலின்மீதான செலவைக்காண, அவற்றின் வருவாய் விலை விகிதத்தைக் கடைப்பிடிக்க வேண்டுமானால், இப் பங்குகளின் வருவாயினைச் சரிபாதியாகக் குறைத்துவிடும் நிலைக்கு உள்ளாகிறோம். மேலும் இப் பங்குகளின் சந்தையில் மட்டும் உயர்ந்துபோகும் நிலையைத் தவிர வேறு எந்தவித மாற்றத்திற்கும் நிறுவனம் உள்ளாவதில்லை.

(ஈ) பொதுப்பயன்களின் முதலின்மீதான செலவினைக் காண, அவற்றின் "வருவாய்-விலை" விகிதத்தைக் கையாளுவதில் சில நடைமுறைச் சிக்கல்களும் உள்ளன. அவற்றுள் குறிப்பாக, இப் பங்குகளின் வருவாயினையும், விலையையும் ஒப்பிடுவது இயலாததாகிறது. ஏனெனில், "வருவாய்" என்ற சொல்மூலம் நாம், இப்போது பங்குகளின் கடந்தகால மற்றும் நிகழ்காலத்தின் வருவாயினைக் குறிப்பிடுகின்றோம். தவிர, எதிர்கால வருவாய் ஈட்டும் திறன்பற்றி அதிகக் கவலைப்படுவதில்லை. ஆனால், இப் பங்குகளின் "விலை" என்ற சொல்லின்மூலம் இவை எதிர்காலத்தில் என்ன விலைக்கு விற்கப்படும் என்பதை மட்டுமே கவனிக்கிறோம். மேலும், பங்குகளின் விலை எளிதில் தீர்மானிக்கக்

கூடியதன்று. நிறுவனத்தின் எதிர்கால வருவாய், இப் பொதுப் பயன் தொழில்மீது விதிக்கப்படக்கூடிய கட்டுப்பாடுகள், நாட்டின் பொருளாதாரத்தில் ஏற்படக்கூடிய பொதுவான மாற்றங்கள், பொருள்களின் விலையில் ஏற்படக்கூடிய மாற்றங்கள் எதிர்கால நிகழ்ச்சிகள், அவற்றின் வருவாய், கடந்தகால மற்றும் நிகழ்கால நிகழ்ச்சிகள் ஆகியவற்றைப் பொறுத்துச் சாதாரணப் பங்குகளின் விலை அமைந்திருப்பதால் இவற்றிற்கான வருவாய்-விலை விகிதத்தை அமைப்பது எளிதன்று. உண்மையில் பங்குமுதல்மீதான செலவினைக் கணக்கிட, இப் பங்குகளின் எதிர்கால வருவாய்த் திறன், அவற்றின் விலை இவற்றைக் கொண்டு காணப்பட்ட விகிதத்தையே கையாள வேண்டும். எனினும், ஒரு நிறுவனத்தின் பொதுப்பங்குகள் வருங்காலத்தில் எவ்வளவு வருவாயினை ஈட்டும் என்பதை எளிதில் தீர்மானிக்க இயலாது. எனவே, எதிர்பார்த்த வருவாயும் கிடைத்த வருவாயும் சமமாக இருப்பதற்கு வாய்ப்புகள் இல்லையென்றும், மாறாக அவையிரண்டும் சமமாக இருப்பின் அஃது அரிய செயலாகும் என்றும் நாம் உணர வேண்டும்.

வருவாய்-விலை விகிதத்தைப் பயன்படுத்துவதன்மூலம் ஒரு நிறுவனத்தின் மூலதனச் செலவுத் தொகையைக் கணக்கிடுவது சரியான முறையாகாது என்பதற்கு மற்றோர் ஆதாரத்தைக் குறிப்பிடலாம். திறமை வாய்ந்த நிருவாகத்தை உடைய ஒரு தொழில் நிறுவனத்தைப் பொதுமக்கள் மதிப்பதுடன், அவற்றின் வளர்ச்சியில் மிகுந்த நம்பிக்கையும் வைக்கின்றனர். மேலும், இந் நிறுவனத்தின் பங்குகளைப் போட்டியிட்டுக்கொண்டு அதிக விலை கொடுத்தாயினும் வாங்க முற்படுவர். இதன் விளைவாக பங்குகளின் விலை அதிகரிக்கும் நிலை ஏற்படுவதால், இவற்றின் வருவாய்-விலை விகிதம் குறைந்தும், நிறுவனத்தின் நிதிநிலை பெரிதும் சீர்குலையவும் நேரிடுகின்றது.

மேற்காணும் காரணங்களால், ஒரு நிறுவனத்தின் மூலதனச் செலவினைக் காண, வருவாய்-விலை கருத்து நம்மிடையே எழலாம். முற்றிலும் இக் கருத்து ஒவ்வொரு நிறுவனத்தின் தன்மையைப் பொறுத்தே இருக்கின்றது.

**கடன்பத்திரங்கள், பங்குகள் இவற்றை வெளியிடும் செலவு (Costs of Floatation of Bonds and Shares)**

ஒரு தொழிலின் மூலதனம் பலவிதங்களில் பெறப்பட்ட தொகையினைக் கொண்டதாகும். கடன்பத்திரங்கள் மூலமும், பங்குகள்,சிறப்புப் பங்குகள் ஆகியவற்றை வெளியிடுவதன்மூலமும் தேவையான மூலதனம் திரட்டப்படுகிறது. இவ்வாறு ஒரு

தொழில் நிறுவனத்தின் பத்திரங்களை வெளியிடும்போது ஏற்படக்கூடிய செலவுகளும், மூலதனத்தை ஏற்படுத்தும் செலவுகளாகவே கருதப்படும். கடன் பத்திரங்களுக்கு அளிக்கப்படும் வட்டி, பங்குகளுக்கான இலாப ஈவு போன்ற செலவுகளைத் தவிர கீழ்க்காணும் செலவுகளும் கணக்கில் சேர்க்கப்படுகின்றன.:-

(1) இப் பத்திரங்களை வெளியிடும்போது ஏற்பட்ட நிருவாகச் செலவுகள்

(2) இவற்றைப் பதிவு செய்யும் செலவு

(3) அரசுக்குச் செலுத்தவேண்டிய பிறவகைச் செலவுகள்.

(4) ஒப்புறுதி நிறுவனங்களுக்குக் (Underwriting Concerns) கொடுக்க வேண்டிய கழிவு (Commisson)

(5) இப் பத்திரங்களை வெளியிடுவதற்காகச் செய்யப்பட்ட சட்டச் செலவுகள்.

(6) இவை தவிர, சந்தையின் நிலை காரணமாக இப் பத்திரங்களைக் குறைந்த விலைக்கு விற்பனை செய்ய நேரிட்டால்அதனை ஈடு செய்யும் வகையில் அளிக்கப் பட்ட தொகை;

(7) பிறவகைச் செலவுகள்.

மேற்காணும் பல வகைச் செலவுகளும், ஒரு நிறுவனத்தின் புதிய மூலதனத்தை ஏற்படுத்தும் செலவுகளாகவே கருதப்படும். ஆனால், சராசரியாக இச் செலவு எவ்வளவு ஆகும் என்று கூற இயலாது. சில நிறுவனங்களுக்கு, இப் பத்திரங்களின் விற்பனைத் தொகையில் $1\frac{1}{2}$ பங்கும், மற்றும் சில நிறுவனங்களுக்கு இதைவிடச் சிறிது அதிகமாகவும், மூலதனச் செலவு ஏற்படலாம். நீண்ட காலப் பத்திரங்கள் முன்னுரிமைப் பங்குகள் மற்றும் சாதாரணப் பங்குகளை, தனியார் நிறுவனம் ஒன்று வெளியிடும் போது ஏற்படுகின்ற வெளியீட்டுச் செலவுகள் (Floatation cost) பொதுப்பயன் தொழில்களின் வெளியீட்டுச் செலவினைவிடக் குறைவாகவே இருக்கும். எனினும், பொதுப்பயன் தொழில்கள் வெளியிடும் பத்திரங்கள் எல்லையற்ற சந்தையில் விற்கப்படுகின்றன. இதனை வாங்க எவரும் தயங்குவதில்லை, ஆனால், தனியார் நிறுவனங்கள் ஒரு குறுகிய எல்லைக்குள் மட்டுமே வாங்கப்ப்டும் என்ற கருத்தினை நாம் நினைவிற்கொள்ளவேண்டும்.

## பொதுப்பயன் தொழில்களின் மூலதன அமைப்பு (Capital Structure of Public Utilities)

ஒரு பொதுப்பயன் தொழிலில் மூலதன அமைப்பு இருக்க வேண்டுமென்பதில் ஒருமித்த கருத்து ஏதும் இருப்பதாகத் தெரியவில்லை. பொருளாதாரம், நிதியியல், மற்றும் சட்ட வல்லுநர்களின் இதுபற்றிய கருத்துகள் வெவ்வேறாகவே அமைந்துள்ளன. மூலதனச் செலவுத் தொகை என்பது நிறுவனத்தின் மூலதன அமைப்பினைப் பொறுத்தே ஏற்படுகின்றது என்பதை நாம் அறிவோம். ஆனால், ஏற்கனவே கணக்கிட்டுத் தயாராக வைத்திருக்கும் ஓர் அமைப்பினையே எல்லா நிறுவனங்களுக்கும் பயன்படுத்துவதா அன்றி, ஒவ்வொரு நிறுவனத்திற்கும் தனித் தனியே மூலதன அமைப்பினை ஏற்படுத்துவதா என்ற வினாவிற்கு எளிதில் விடைகாண இயலாவிடினும், பொதுவாக, ஒவ்வொரு நிறுவனத்திற்கும் அதனுடைய தன்மைக்கேற்ற மூலதன அமைப்பினைச் செயற்படுத்துவதே நன்மை பயக்கும்.

பொதுப்பயன் தொழில்களின் கட்டண வீதத்தை ஒழுங்கு படுத்துவதற்காக ஏற்படுத்தப்பட்ட சட்டதிட்டங்கள் அவற்றின் மூலதன அமைப்பினை ஏன் வகைப்படுத்தக் கூடாது என்ற ஐயம் நம் மனதில் எழலாம். உலகெங்கிலுமுள்ள பொதுப்பயன் தொழில்களின் மூலதன அமைப்பை நாம் எளிதில் வகைப்படுத்தி முறைசெய்ய இயலாது. எனவே, ஒவ்வொரு நிறுவனமும் அதனுடைய பொருளாதார நிலையினை நன்ருக ஆராய்ந்து, சீரிய முறையில் தனது மூலதன அமைப்பினை ஏற்படுத்திக் கொள்ள வேண்டும்,

## பங்காதாய அளிப்பு விகிதம் (Dividend Payment Ratio)

ஒரு நிறுவனத்தின் வளர்ச்சிக்கேற்றவாறு அதன் வருவாய் அதிகரிக்க, இதன் காரணமாக, அந் நிறுவனம் தனது பங்குகளுக்கு அளிக்கின்ற பங்காதாயமும் அதிகரிக்கின்றது. பொதுப் பயன் பங்குகளின்மூலம் கிடைக்கக்கூடிய பங்காதாயம் அதிகரிக்கும்போது, அப் பங்குகளின் விலை சந்தையில் அதிகரிக்கின்றது. முடிவில் நிறுவனத்தின் வெளி அமைப்பு விகிதம் (Pay-out Ratio) குறைகின்றது. ஒரு நிறுவனம் வெளியிடுகின்ற பங்குகளின் வருவாய்-விலை விகிதத்தினைக் கையாளுவதன்மூலம், அதனுடைய மூலதனச் செலவினைக் கண்டுபிடிக்க முனையும்போதே இத்தகைய வெளி அளிப்பு விகிதம் குறைவாக அமைகின்றது. ஆனால், ஏற்கனவே நாம் ஆராய்ந்தபடி, வருவாய்-விலை விகிதம் எனப்படுவது மிகுந்த குறைபாடுகளை உடையதாகக் காணப்படுகின்றது. ஒரு நிறுவனத்தின் வெளி-அளிப்பு விகிதமும், அந் நிறுவனத்திலிருந்து

பங்குதாரர்கள் எதிர்பார்க்கும் பங்காதாயமும் ஒன்ருக இருப்பின் அது ஒரு சிறந்த நிறுவனமாக மதிக்கப்படுகின்றது.

**வளர்ச்சியும், எச்சப்பாட்டு விகிதமும்** (Growth and Rate of Surplus)

ஒரு நிறுவனம் தான் ஈட்டிய நிகர இலாபத்திலிருந்து ஒரு குறிப்பிட்ட தொகையைக் கடன்முதல் மற்றும் பங்கு முதல்களுக்கு வருமானமாக அளித்த பின்னர் சிறிது தொகை எஞ்சியிருக்கும். இத் தொகையை இலாப எச்சப்பாடு (Surplus Profit) என்று அழைக்கலாம். வாணிகச் சுழலின் (Trade cycle) காரணமாக இதே நிறுவனம் மிகவும் சீர்குலைந்து, அது தன்னுடைய பங்குதாரர்களுக்குப் பங்காதாயம் ஏதும் அளிக்க இயலாது போனல் அந் நிலையில் இலாப எச்சப்பாட்டுத் தொகையினைப் பயன்படுத்திக் கொள்ளலாம். இதன் காரணமாகப் பங்குதாரர் களுக்கும் பொதுமக்களுக்கும், நிறுவனத்தின்மீதிருந்த மதிப்பு அதிகரிக்க, மூலதனச் செலவு குறைந்து போகிறது. ஒரு நிறு வனம் வளர்ச்சி அடையும்போதுதான், இத்தகைய இலாப எச்சப் பாடு கிடைக்க வாய்ப்பு உள்ளது. ஆனல், ஒரு நிறுவனத்தின் வளர்ச்சியைக் கணக்கிடுவதைவிட, வளர்ந்திருக்கிரேமா, இல்லையா என்ற வினவிற்குக் குறிப்பிட்ட நிறுவனம் தனக்குத் தானே விடை காண இயலவில்லை. தன்னுடைய உற்பத்தித்திறன் என்ன, தன்னுடைய பொருள்களை விற்கும் திறனென்ன, என்பன போன்ற வினக்களுக்கு விடையளித்தாலேயே, ஒரு நிறுவனத்தின் வளர்ச்சியைக் கண்டுகொள்ளலாம். எனினும், பொதுப்பயன் தொழில்களின் வளர்ச்சி சீராக இருக்கவேண்டும். தேவைக்கு மேல் வளர்ச்சி ஏற்பட்டாலும், தேவையான வளர்ச்சி குன்றிவிட் டாலும், பொதுப்பயன் தொழில்கள் முறைசெய்யப்படுகின்றன.

**பணவீக்கம்** (Inflation)

பொதுப்பயன் தொழில்கள் அனைத்தையும் ஆட்டுவிப்பது, தொழில் உலகின் பணவீக்க நிலைதான். பணவீக்கத்தின் காரண மாக அனைத்துப் பொருள்களின் விலையும் உயர்ந்து கொண்டே போவது இயற்கையே. ஆனல், உண்மையான மதிப்பீட்டில் தேய்மானம் நீக்கிய முறையின்படி (Actual cost less depreciation Method) கட்டணவீதத்தை நிருணயித்து, அதன்படி தனது வரு வாயை ஈட்டிக்கொள்ளப் பொதுப்பயன்தொழில்களுக்கு அனுமதி அளிக்கப்பட்டுள்ளமையால் நுகர்வோரிடமிருந்து பெறப்படும் கட்டணம் மிகவும் சொற்பமாகவே இருக்கும். இக் குறைந்த தொகையினை வைத்துக்கொண்டு பணவீக்க நிலையில் நிறு வனத்தை நடத்துவதென்பது இயலாத செயலாகின்றது. இச்

சிக்கலைத் தீர்க்க, தொழில் முறையில் புதுமையான மாற்றங்கள் ஏதேனும் செய்யப்பட்டு அதன்மூலம் வருவாய் அதிகரிக்க வழி பிறந்தால் பணவீக்கத்தின் விளைவுகளை ஒருவாறு சமாளிக்க இயலும். இல்லாவிடில், பற்றுக்குறை என்ற காரணம் காட்டிப் புதிய மூலதனத்தினைப் பெறும் முயற்சியில் இந் நிறுவனங்கள் இறங்க நேரிடும். மேலும், நியாயமான மதிப்பீட்டு முறையினைக் (Fair value Method) கையாளுவதன் மூலமோ பொதுப் பங்குதாரர்களுக்கு அதிக அளவு இலாப ஈவு அளிப்பதன் மூலமோ, ஒரு நிறுவனத்தின் நிதிநிலையைச் சரிசெய்து, பண வீக்கத்தின் விளைவுகளைச் சமாளிக்கலாம்.

## நிருவாகத் திறன் (Efficiency of Management)

ஒரு நிறுவனத்தின் மூலதனச் செலவினைக் காண்பதில் இறுதியாகக் காணவேண்டியது அதனுடைய நிருவாகத்திறன் பற்றிய கருத்தாகும். ஓர் எடுத்துக்காட்டின்மூலம், நிறுவனத்தின் நிருவாகத் திறன் பற்றிய செய்தியினை எளிதாக விளக்க முடியும்.

எடுத்துக்காட்டாக,

A என்றும் B என்றும் இரண்டு நிறுவனங்கள் செயற்படுகின்றன என்று கொள்வோம். இரண்டினுடைய மூலதனம், தொழிலாளர் உற்பத்தித் திறன், கட்டண வீதம் ஆகிய அனைத்தும் ஒன்றாக இருப்பதாகக் கொள்வோம். ஒரு குறிப்பிட்ட கால அளவின் முடிவில், 'A' என்னும் நிறுவனம் 'B' என்னும் நிறுவனத்தைவிட அதிக அளவு இலாபத்தினை ஈட்டியிருக்குமேயானால், அதற்குக் காரணம் 'A' என்னும் நிறுவனம் திறமையாக நிருவகிக்கப்பட்டது என்பதுதான். அதிக அளவு இலாபம் ஈட்டியுள்ளது என்பதால் 'A' என்னும் நிறுவனம் தனது பொருள்களின் விலையைக் குறைத்துக் கொள்ள வேண்டும் என்பதில்லை. திறமையான நிருவாகம் காரணமாக, நிறுவனத்தின் இலாபஅளவு அதிகரிக்க, அதன் விளைவாக இலாபஈவு அதிகரிக்கின்றது. இறுதியில் மூலதனத்தின்மீது ஏற்படுகின்ற செலவு குறைகின்றது என்பதை அறிதல் வேண்டும்.

## சரியான வருவாய் வீதம் (A Proper Rate of Return)

ஒரு நிறுவனம் எவ்வளவு வருவாயினை ஈட்ட வேண்டும் என்பதைக் கணக்கிட வேண்டும். இந்த வருவாய்வீதம் அதிகரிக்க அதிகரிக்க, ஒரு நிறுவனத்தின் பங்குதாரர்களுக்குக் கிடைக்கக் கூடிய இலாபஈவுத் தொகையும் அதிகரிக்கின்றது. இதன் விளைவாகப் பங்குதாரர்களிடமும் பொதுமக்களிடமும் இந் நிறுவனத்தைப் பற்றிய நல்லெண்ணம் உருவாகின்றது. தேவைப்

படும்போது, இந் நல்லெண்ணத்தைப்பயன்படுத்தி எளிதில் கடன் முதலை ஏற்படுத்தவும் நிறுவனத்தால் முடியும். தேவையான பங்கு முதலும், கடன்முதலும் எளிதில் கிடைப்பதால் இத் தொழில்களின் உற்பத்தி தடைப்படாது. இவ்வாறு மேற்காணும் நன்மைகள் அனைத்தும் ஒரு நிறுவனத்திற்கும் அதனைச் சார்ந்த பங்குதாரர்களுக்கும் மட்டுமே கிடைக்கின்றனவே தவிர, நுகர்வோருக்குக் கிடைக்கும் பலன் என்ன என்றும் நாம் காண வேண்டும். ஒரு நிறுவனம் நன்றாக, செழிப்பாக வளர வேண்டுமாயின், அந் நிறுவனம் தயாரிக்கின்ற பொருள்களுக்கு நுகர்வோர் அந் நிறுவனத்தின் பங்குதாரர்கள் ஆகிய இருவருடைய நன்மதிப்பும் கிடைக்க வேண்டும். நிறுவனத்தின் இரண்டு கண்மணிகளாக இவ்விருவரும் கருதப்படுவதால், ஒரு தொழிலின் வருவாய்வீதம் இவர்கள் இருவருக்குமே நன்மை பயக்கும் வண்ணம் அமைய வேண்டுமென்பது குறிப்பிடத்தக்க ஒரு கருத்தாகும்.

## கருத்துக்கோப்பு

நிறுவனத்தின் மதிப்பும், அதனுடைய வருவாய் வீதமும்—பொதுப்பயன் தொழில்களும், இலாப நோக்கமும் கட்டண அடிப்படையும் — வருவாய்வீதமும் சட்டத்தின் துணையோடு வருவாய்வீதத்தினைத் தீர்மானித்தல்—சில நடைமுறைச் சிக்கல்கள்—போட்டிச் சந்தையில் வருவாயினை ஒப்பிடுதல்—மூலதனச் செலவும் வருவாய்வீதமும் — மூலதன அமைப்பு — உண்மையான அடிப்படையும், கணக்கிடப்பட்ட அடிப்படையும்-வருடாந்திர மூலதனச் செலவு கடன்முதல்மீதான செலவும், பங்குகளின் மீதான செலவும்—"வருவாய், திறன் விலை" விகிதமும் அதன் குறைபாடுகளும்—இலாப ஈவு அளிப்பு விகிதம்—வளர்ச்சியும் எச்சப்பாட்டு விகிதமும்—பணவீக்கநிலை—நிருவாகத் திறன்—சரியான வருவாய்வீதம்.

# 13. விலை நிருணயக் கொள்கைகள்
## (Pricing Policies)

"வாணிகம் என்னும் சகடத்தின் அச்சாணியே பொருள்களின் விலை பற்றிய குறிப்பாகும்......"

—டாக்டர் ஜான் பாயர் (Dr. John Bauyer)

ஒரு பொருள் என்ன விலைக்கு வாங்கப்படுகின்றதோ அதுவே அதனுடைய மதிப்பாகக் கருதப்படும். இவ்விலை உயர, குறிப்பிட்ட பொருளின் மதிப்பும் உயர்ந்துகொண்டே போகும் எனலாம். இன்றைய பொருளாதார அமைப்பில் ஏறக்குறைய எல்லாப் பொருள்களின் விலையும் உயர்ந்துகொண்டே போகும் போது, "விலை நிருணயக் கொள்கைகள்" என்னும் தலைப்பில் ஆராய்வது சிறிது வேடிக்கையாகவும் இருக்கிறதல்லவா? இதற்குக் காரணம், இன்றைய பொருளாதாரச் சீர்குலைவுதான் என்றால் மிகையாகாது. பொருளாதாரத் துறையை நன்கு கற்றுத் துறை போக விரும்பும் எவரும் மக்களால் நுகரப்படும் பொருள்கள், பணிகள் இவற்றின் விலை எவ்வாறு நிருணயிக்கப்படுகின்றது என்பதை அறிவதில் பெரிதும் ஆர்வம் காட்டுவர் என்பதில் ஐயமில்லை. தனியார் நிறுவனங்களின் விலை நிருணயக் கொள்கைகளை (Pricing Policies) அறிவதைவிட பொதுமக்களின் நன்மைக்காகப் பணிபுரிகின்ற பொதுப்பயன் தொழில்களின் விலை நிருணயக் கொள்கைகளை அறிதல் பயனுள்ள செயலாகும். பின்வரும் பகுதிகளில், பொதுப்பயன் தொழில்கள் தாம் உற்பத்தி செய்கின்ற பொருள்களுக்கும், பணிகளுக்குமான கட்டணத்தினை (விலையை) எவ்வாறு நிருணயிக்கின்றது என்பதைப் பார்ப்போம்,

ஒரு பொருளுக்கான கட்டணவீதத்தைத் தீர்மானிப்பதில் கடைசிச் செயலாக, அதனுடைய விலை நிருணயிக்கப்படுகிறது. பொதுப்பயன் தொழில்கள் பொதுமக்களுக்குத் தேவையான பொருள்களை அளிப்பதில் தீவிரமாக ஈடுபட்டிருக்கும்போது,

கூடிய செலவுத் தொகை, நியாயமான வருவாய் போன்றபல்வேறு செலவுகள் ஏற்படலாம். இவை அனைத்தையும் ஈடுகட்டும் வகையில், இந் நிறுவனத்தின் கட்டணவீதம் அமைய வேண்டும். பொருள்களின் விலையும் நல்ல முறையில் தீர்மானிக்கப்பட வேண்டும். பொதுப்பயன் தொழில்கள் அரசின் அனுமதியைப் பெற்று அதன் பின்னர் நிருணயிக்கப்படுவது நன்மை பயக்கும். பொருள் ஒன்றினைத் தயார் செய்த பின்னர், அல்லது வசதி ஒன்றினை வழங்கிய பின்னர், பொதுப்பயன் தொழில் நிறுவனம் இதற்காக வசூலிக்க வேண்டிய பல்வேறு விலைகளைப் பட்டியல் துறையில் தயாரித்து, அதனை அரசின் அனுமதிக்காக அனுப்புதல் மரபு. இக் கட்டணப் பட்டியல் (Rate Schedue), நன்றாக ஆராயப்பட்டவுடன், இதில் குறிப்பிட்டுள்ள பல்வேறு விலைகளில் ஒன்றினைத் தேர்ந்தெடுத்து, அதனையே பொருள்களுக்கான விலையாக நிருணயிப்பர். மேல்நாடுகளில் பொதுப்பயன் குழுக்களும், நம்நாடு போன்ற இன்னும் சில நாடுகளில் அரசும் இவ்விலைப்பட்டியலை ஆராயும் பணியினைச் செய்து வருகின்றன. சில நேரங்களில், பொதுப்பயன் தொழில் நிறுவனங்களால் தீர்மானிக்கப்படும் விலையை அப்படியே ஏற்றுக் கொள்ளவோ அதனை மாற்றி அமைக்கவோ அறவே ஒதுக்கிவிடவோ, அரசுக்கும், இப் பொதுப்பயன்குழுக்களுக்கும் அதிகாரம் உண்டு. இவை அனைத்தையும் செய்வதன் நோக்கம் ஒரு பொதுப்பயன் தொழிலின் பொருள்களுக்காக விதிக்கப்படும் விலை நியாயமானதாகவும், நியாயமான வருவாயினை அளிப்பதாகவும் இருக்க வேண்டும் என்பதே. ஆனால் இந் நியாயமான விலையின்மூலம் நிறுவனத்திற்குத் தேவையான வருவாய் கிடைக்குமா என்பது ஐயப்பாடாகவே உள்ளது. மேலும், நிறுவனத்திற்கு இந் நியாயமான விலையின்மூலம் நல்ல இலாபம் கிடைக்குமா என்றும் உறுதி கூற இயலாது. ஆனால், இதனைப் பயன்படுத்தி, நல்ல இலாபம் ஈட்ட இந் நிறுவனங்களுக்கு ஒரு வாய்ப்பு (Opportunity) அளிக்கப்படுகின்றது என்றே நாம் கொள்ள வேண்டும்.

தனியார் துறை நிறுவனங்கள் தங்களுடைய பொருள்களுக்கான விலையை எவ்வாறு நிருணயிக்கின்றன என்று பார்த்தால், இப் பொருள்களின் உற்பத்திச் செலவுடன், அப் பொருளை விற்பதற்காகும் செலவு, நிருவாகச் செலவுகள், விளம்பரச் செலவுகள், ஈட்ட எண்ணுகின்ற இலாப அளவு (நிறுவனத்தின் இயக்குநர் அவை தீர்மானிக்கின்ற இலாப அளவு) போன்ற பல்வகைச் செலவுகளையும் சரிக்கட்டுகின்ற ஒரு தொகையே பொருள்களின் விலையாக நிருணயிக்கப்படும். மேலும், இந் நிறுவனங்களின் விலை குறைந்தாலும் அல்லது, உயர்ந்தாலும், நிறுவனம் மிகப் பெருமள

வில் பாதிக்கப்படுகின்றது. ஆனால், ஒரு பொதுப்பயன் தொழில் தன் பொருளுக்கான விலையை மாற்றும்போது, சமுதாயத்தி லுள்ள எல்லா நுகர்வோரும் வெகுவாகப் பாதிக்கப்படுகின்றனர். எனவே, தனியார் நிறுவனம் ஒன்றின் விலைக் கொள்கையைவிட பொதுப்பயன் தொழில் நிறுவனத்தின் விலைக் கொள்கை தனித் தன்மை வாய்ந்ததாகக் கருதப்படுகிறது. மேலும், பேராசிரியர் இராமநாதம் (Pro. V. V. Ramanatham) அவர்களின் கருத்துப் படி கீழ்க்காணும் வேறு சில காரணங்களையும் கூறலாம்:—

(1) தனியார் நிறுவனத்தைவிட ஒரு பொதுப்பயன் தொழில் நிறுவனம் மிகப்பெருமளவில் தொழிலாளர் களை நியமித்து, நிருவகிக்கின்றது.

(2) பொதுப்பயன் தொழில்களில் போடப்படும் முத லீட்டுத்தொகையின் அளவு மிகவும் அதிகமானது.

(3) அரசின் மிகப்பெருமளவுப் பொதுச்செலவாக (Public Expenditure) இத் தொழில் நிறுவனங்கள் கருதப் படுகின்றன.

(4) இவையனைத்தையும்விட, பொதுப்பயன் தொழில் களின் நோக்கம், தனியார் நிறுவனங்களின் நோக் கத்தைவிட முற்றிலும் மாறுபட்டதாக இருக் கின்றது. “பொது நல ஈடுபாட்டுடன்” செயற்படு கின்ற தனியார் நிறுவனங்களின் விலைக் கொள்கை, “இலாப நோக்குடன்” செயற்படுகின்ற தனியார் நிறுவனங்களின் விலைக் கொள்கையிலிருந்து முற்றி லும் மாறுபட்டிருப்பதில் வியப்பொன்றுமில்லை.

ஒரு பொதுப்பயன் தொழிலின் கட்டணவீதம் அதனுடைய பொருள்களுக்கான வருவாயாக மட்டும் கருதப்படுவதில்லை. இப் பொருள்களை நுகர்வோர் அனைவரும் ஏற்றுக் கொள்ளக் கூடிய நியாயமான கட்டணமாக இது விதிக்கப்படுகிறது. அதன் மூலம் குறிப்பிட்ட தொழில் நிறுவனம் தயாரிக்கும் பொருள்களைச் சந்தையில் எளிதாக விற்கக்கூடிய நிலை உருவாகிறது. பொதுப் பயன் தொழில்களை முறைபடுத்துவதற்காக இயற்றப்பட்ட விதி கள் அனைத்தும், இவ்விலைக் கொள்கையைப்பற்றி ஒருமித்த கருத் தினைக் கொண்டுள்ளன. அதன்படி, மக்களின் நல்வாழ்விற்கென இயங்குகின்ற இத் தொழில்களின் தலையாய நோக்கம் இயன்ற அளவில் எல்லோருக்கும் இப் பொருள்களை நியாயமான விலைக்கு விற்பதாக இருக்க வேண்டும். தனியார் நிறுவனங்களைப் போன்று விலையை அதிகரித்து, (விற்பனை குறைந்தாலும்) இயன்ற அளவு இலாபத்தினை ஈட்டுவது என்ற கொள்கை இந் நிறுவனங்களுக்கு

ஏற்புடையதாகாது. எனவே 'நியாயவிலை' என்ற ஒன்றினை இத் தொழில்கள் ஏற்படுத்தும்பொருட்டு, இவை தயாரித்து அளிக்கின்ற பொருள்களின் (அல்லது பணிகளின்) உற்பத்திச் செலவு முதலில் கணக்கிடப்படுகின்றது. இவ்வுற்பத்திச் செலவுடன், இப் பொருள்களை நுகர்வோரிடம் சேர்ப்பிக்கும் வரை ஏற்படுகின்ற விற்பனைச் செலவும் ஓரளவிற்குச் சேர்க்கப்படுகின்றது. சுருங்கக் கூறின், பொதுப்பயன் தொழில்களின் பொருள்களுக்கான கட்டணமெனப்படுவது, அப் பொருள்களின் அங்கீகரிக்கப்பட்ட மதிப்பினைக் குறிப்பிடுவதாகும். ஆகவே, இலாப நோக்குடன் பொருள்களை விற்பது என்பது மறைத்து, பொருள்களுக்கான சந்தையை அதிகரிப்பது, அதிக அளவில் பொருள்களை விற்பது போன்ற குறிக்கோள் மேலோங்கி நிற்க வேண்டும். இதன் விளைவாக, இந் நிறுவனங்களை நிருவகிப்போர், சந்தையின் தன்மைகளை நன்கு அறிந்து கொள்ளும் வாய்ப்பினைப் பெறுகின்றனர் என்பது குறிப்பிடத்தக்கது.

**விலை நிருணயக் கோட்பாடுகளைத் தீர்மானித்தல்**

பொதுப்பயன் தொழில்களின் கட்டணஅடிப்படை தேய்மானம், வருவாய் வீதம் போன்றவற்றைத் தீர்மானிப்பதில் கருத்து வேறுபாடுகள் இருப்பதை நாம் அறிவோம். ஆனால், இவை தயாரிக்கும் பொருள்களுக்கான விலையை நிருணயிப்பதில் எவ்வித மாறுபாடான கருத்தும் இருப்பதில்லை என்பதையும் தெரிந்து கொள்ள வேண்டும். எனவே, இத் தொழில் நிறுவனங்களுக்கான விலை நிருணயக் கோட்பாடுகளை ஆராய்வதில் சிக்கல் ஏதுமில்லை என்பதை உணர்ந்து மேற்கொண்டு ஆராய்வோம்.

**வேறுபாட்டு விலைக் கொள்கை (Differential Price Policy)**

அன்றாட வாழ்க்கையில் ஒருவர் வாங்கி நுகரக் கூடிய பல்வேறு பொருள்களுக்கு விதிக்கப்படும் விலையிலிருந்து, ஒரு பொதுப்பயன் தொழில் நிறுவனம் அளிக்கும் பொருள்களுக்கும், பணிகளுக்கும் அவர் அளிக்கக் கூடிய விலை முற்றிலும் மாறுபடுகின்றது. சான்றாக, ஒரு கூட்டுறவுச் சிறப்பு அங்காடியில் (Super Market) விற்கப்படும் மளிகைச் சாமான்களுக்கோ உலர்சலவைப்பணிக்கோ (Dry Cleaning) நாம் அளிக்கும் விலை நிலையானது. அதாவது, ஏற்கனவே நிருணயிக்கப்பட்டு, மாற்ற இயலாததாக அமைகின்றது. இது போன்றே, மருந்துக் கடை ஒன்றில் சென்று மருந்து ஒன்று வாங்கினால், அதற்குரிய தொகையினை, பேரம் ஏதும் செய்யாமல் கொடுத்துவிட்டு வருகின்றோம். இதே மருந்தினை இராமன் என்பவர் வாங்கினாலும் இரஹீம் என்பவர் வாங்கினாலும் மருந்தின் விலை ஒன்றாகவே

இருக்கும். சுருங்கக்கூறின், பெரும்பாலான பொருள்களுக்கு நாம் அளிக்கக்கூடிய விலை ஒரே மாதிரியானதாகவும் மாறுபாடற்றதாகவும் இருக்கும். ஆனல், பொதுப்பயன் தொழில்கள் அளிக்கின்ற பொருள்களுக்கான விலை இவ்வாறு சீரானதாக மாறுபாடற்றதாக இருப்பதில்லை: மாருக (1) இப் பொருள்களின் நுகர்வோர், சில, தன்மைகளுக்கேற்ப பல பிரிவுகளாக வகைப் படுத்தப்படுகின்றனர். (2) ஒவ்வொரு பிரிவிற்கும் ஒரு குறிப் பிட்ட கட்டணமாக, வெவ்வேறுன கட்டணங்கள் (விலைகள்) விதிக்கப்படுகின்றன (3) ஒரு குறிப்பிட்ட பிரிவில் இருக்கக் கூடிய ஒருவர், இந் நிறுவனம் அளிக்கின்ற பொருளை நுகர்வது அதிகரிக்கஅதிகரிக்க, அவருக்கு விதிக்கப்படும் கட்டணம் குறைந்துகொண்டே போகின்றது. (4) இறுதியாக, ஒருபொதுப் பயன் தொழில் நிறுவனம், அளிக்கின்ற பலவகையான பணிகளுக்கும் வெவ்வேறுன (விலைகள்) கட்டணங்கள் விதிக்கப்படுகின்றன.

மேற்காணும் கருத்துகளிலிருந்து, பொதுப்பயன் தொழில் நிறுவனங்கள் தாம் அளிக்கின்ற பொருள்களுக்காக எல்லோரிட மிருந்தும் ஒரே வகையான கட்டணத்தைப் பெறுவதில்லை என்றும், தங்களுடைய நுகர்வோருக்காக வேறுபாட்டு விலைக் கொள்கை (Differential Price Policy) என்ற ஒன்றினைக் கடைப் பிடிக்கின்றன என்றும் அறியலாம். மேலும், இந் நிறுவனங்கள் தனி ஒருவனுக்காகத் தங்களது விலையை நிருணயிக்காமல் பலவகைப்பட்ட மக்களுக்காகவும் பணிகளுக்காகவுமே, விலையை நிருணயம்செய்கின்றன என்பதும் அறியப்படவேண்டும். கட்டணப் பட்டியல்கள் (Rate Schedules) தயார் செய்யப்பட்டு, ஒவ்வொரு பிரிவினைச் சார்ந்த நுகர்வோருக்கும் அதற்கேற்ற கட்டணப் பட்டியலில், கண்டுள்ளபடி, பொருள்களுக்கான விலை வசூலிக்கப் படுகின்றது என்பதும் குறிப்பிடத்தக்கது.

சான்ருக, ஒரு மின்திறன் வழங்கும் நிறுவனம் தனது வாடிக்கையாளர்களைப் பல பிரிவுகளாக வகுத்துள்ளதெனக் கொள்வோம்.

பொதுவாக அப்பிரிவுகள்:-

(1) குடியிருப்பு
(2) வாணிகம்
(3) தொழிற்சாலை
(4) போக்குவரத்து

(5) தெருவிளக்குகள்

(6) புறநகர்

என்று பலவகைப்படும்.

மேற்காணும் பலதரப்பட்ட நுகர்வோர் மின்திறனைத்தான் நுகருகின்றனர். எனினும் அவர்களது நோக்கங்கள் வெவ்வேருக இருக்கின்றன. மேலும், அவர்களது நோக்கங்களுக்குத் தக்கவாறு அவர்கள் நுகர்கின்ற மின்திறன் அளவும் வேறுபடுகின்றது. ஆகவே இவர்கள் அனைவருக்கும் ஒரேவிதக் கட்டணத்தை விதித்தல் முறையாகாதாகையால் வெவ்வேறு வகையான கட்டணத்தையே இவர்களுக்கு விதிக்கவேண்டும்.

பொதுப்பயன் தொழிலைப் பொறுத்தமட்டில், வேறுபாட்டு விலைக்கொள்கை எனப்படுவது பொருளாதார முறையில் சிறந்ததாகவும் சட்டத்திற்குட்பட்டதாகவும் காணப்படுகின்றது. ஆயினும், எல்லா நிலையிலும் இக் கொள்கையைக் கடைப்பிடிக்க இயலாது. மாருக, கீழ்க்காணும்நிலைகளில் மட்டும் இவ் வேறுபாட்டு விலைக்கொள்கையைக் கையாளலாம்:

(1) ஒரு சந்தையின் அளிப்பு நிலையில், முற்றுரிமை (Mono Poly) இருக்க வேண்டும்.

அதாவது, குறிப்பிட்ட ஒரு பொருளைத் தயாரித்து அளிக்க ஒரு சில நிறுவனங்களோ ஒரேயொரு நிறுவனம் மட்டுமோ இருக்கக்கூடிய முற்றுரிமைநிலை இருக்கவேண்டும்.

(2) ஒரு பொருளுக்கான மொத்த தேவையை (Demand) அதன் விலை நெகிழ்ச்சிக்கேற்ப (Elasticities of Demand) பல வகையாகப் பிரிக்கக்கூடிய விலை இருக்க வேண்டும். மேலும், ஒவ்வொரு வகைத் தேவையினையும், ஒவ்வொரு சந்தையாகக் கருதவேண்டும்.

(3) விலை நெகிழ்ச்சியினை அடிப்படையாகக் கொண்டு பிரிக்கப்பட்ட ஒவ்வொரு வகைச் சந்தையின் தேவைக்கேற்பப் பொருள்களின் விலை நிருணயிக்கப்படும். ஒருவகைச் சந்தையினருக்குக் குறைந்த விலையிலும், மற்றொரு வகையினருக்கு அதிக விலையிலும், இப் பொருள்கள் விற்கப்படும். ஆனால், குறைந்த விலையில் பொருளினை வாங்கியவர், இப் பொருளினை மறுவிற்பனை செய்யாதிருக்க ஏற்பாடு செய்யப்பட வேண்டும். இந்த மூன்ருவது கருத்தினைப் பேராசிரியர் ஸ்டிக்ளர் பெரிதும் வலியுறுத்துகின்ருர்.*

*Prof. George J. Stigler "The Theory of Price".

மேற்காணும், நிபந்தனைகள் பொதுப்பயன் தொழில்களுக்கும் ஏற்றவையாகவே இருக்கின்றன. ஒரே பொருளை விற்பதில் இரண்டு பொதுப்பயன் தொழில்களுக்குள் போட்டி ஏற்படா விட்டாலும், இப் பொருளைப் போன்றே இருக்கக்கூடிய பிற பொருள்களைத் தயாரிக்கும் நிறுவனங்கள், ஒன்றுக்கொன்று போட்டியிடக்கூடும். சான்றாக, மின்திறன் அளிக்கின்ற நிறுவனங்கள் இரண்டு இருந்தாலும், இருபது இருந்தாலும், அவை ஒன்றுடன் ஒன்று போட்டியிடுவதில்லை. மொத்தச் சந்தையைப் பல பகுதிகளாகப் பிரித்துக் கொண்டு அவை செயற்படும். எனினும், சந்தையிலுள்ள ஒரு மின்திறன் அளிக்கும் நிறுவனம், எரிவாயு அளிக்கும் மற்றொரு நிறுவனத்துடன் போட்டியிடக்கூடும். இது போன்றே, நிலக்கரியும், எண்ணெயும் இருப்பதால், இவற்றைத் தயாரித்து அளிக்கும் நிறுவனங்களிடையே போட்டி ஏற்படுவதில் வியப்பேதுமில்லை. பொதுப்பயன் தொழில்கள் அளிக்கின்ற பொருள்களை, ஒரு சந்தையில் பெற்றுக்கொண்டு அதனை மற்றொரு சந்தையில் விற்கும் நிலை அவ்வளவாக ஏற்படுவதில்லை ஆகையால், சந்தையினைப் பாதுகாக்க வேண்டிய அவசியம் ஏற்படுவதில்லை. மேலும், பொதுப்பயன் தொழில்கள் அளிக்கின்ற பொருள்களையும், பணிகளையும், பொதுமக்களின் நுகர்ச்சிக்காக வேறு எவரும் விற்பதற்கு உரிமை கிடையாது என்பதும் குறிப்பிடத்தக்கது. இத் தொழில்களின் நுகர்வோரை வகைப் படுத்தி அதன்பின்னர் ஒவ்வொரு பிரிவினருக்கும் தனித்தனி கட்டணங்கள் விதிக்கப்படுமென்று நாம் ஏற்கனவே அறிந்தோம். இத்தகைய தனிக்கட்டணங்களை விதிக்க வேண்டுமாயின் வாடிக்கையாளர்களை, அவர்களின் தேவைக்கேற்றவாறும் வகைப்படுத்தலாம். ஒரு பொருளின் விலைக்கேற்ப அப் பொருளுக்கான தேவை மாறுபடுமேயானால், அதற்குத் ''தேவை நெகிழ்ச்சி'' (Demand Elasticity) உள்ளது எனக் கருத வேண்டும். இக் கருத்தினைக் கொண்டு, பொதுப்பயன் தொழில்களின் விலைக்கேற்ப அதனது தேவை-நெகிழ்ச்சியினைக் கணக்கிட்டு, அதற்கேற்ப வாடிக்கையாளர்களைப் பலவகையாகப் பிரிக்கலாம். பொதுவாக, ஒரு பொருளின் விலை அதிகரிக்கும்போது, அப் பொருளை விரும்புவோரின் எண்ணிக்கை அல்லது அப் பொருள்களுக்கான தேவையில் மாற்றம் ஏதுமில்லையெனில், இப் பொருளுக்குத் தேவை நெகிழ்ச்சி ஏதுமில்லை எனலாம். மாறாக, பொருளின் விலை அதிகரிக்கும்போது, பொருளின் தேவை குறைந்தும், விலை குறையும்போது இதற்கான தேவை அதிகரித்தும் காணப் பட்டால் இப் பொருள் தேவை-நெகிழ்ச்சி உடையதாகக் கருதப் படும். இவ்வாறு. பொதுப்பயன் தொழில்கள் உற்பத்தி செய்து அளிக்கின்ற பொருள்களுக்கான தேவை-நெகிழ்ச்சியினைக் காண்

பதன்மூலம், ஒரு பொருளின் விலையில் ஏற்படக்கூடிய மாற்றங்களை முன்கூட்டியே கணக்கிடலாம். இவ்வாறு முன்கூட்டிக் கணக்கிடுவதால், இப் பொருள்களை வாங்கப் பொதுமக்கள் செலவிடத் தயாராக உள்ள மொத்தத் தொகையினையும் ஒருவாறு அறிந்து கொள்ளலாம். இத் தொழில் நிறுவனங்கள் அளிக்கின்ற பணிகளுக்கும், வசதிகளுக்குமான "தேவை நெகிழ்ச்சி" ஏதும் ஏற்படாதிருக்குமேயானால், அப் பொருளுக்காகச் செலவிடப்படும் மொத்தத் தொகை அப் பொருளின் விலைக்கேற்ப நேர்விகிதத்தில் மாறும். இதன்படி, ஒரு பொருளின் விலை அதிகரிக்கும்போது அதன்மூலம் கிடைக்கின்ற மொத்த வருவாயும் அதிகரிக்கும். ஆனால், இப் பொருளின் தேவையில் நெகிழ்ச்சி ஏதும் ஏற்படுமேயாயின், இப் பொருளின் விலைக்கேற்ப, இதற்கெனச் செய்யப்படும் மொத்தச் செலவுத் தொகை எதிர்விகிதத்தில் மாறும். இதன்படி பொதுப்பயன் தொழில் நிறுவனம் ஒன்று அளிக்கின்ற பொருளுக்கான அல்லது பணிக்கான கட்டணம் (விலை) உயர்த்தப்பட்டால், அப் பொருளின் தேவையில் மாற்றம் ஏற்படும். எடுத்துக்காட்டாக, விலை உயரும்போது, தேவை குறைவாகவும், விலை குறையும்போது தேவை அதிகமாகவும் அமையும். ஒரு பொருளுக்கான தேவை மாறி அமையும்போது, அப் பொருளின்மூலம் கிடைக்கக்கூடிய வருவாயும் மாறி அமையும். மேற்காணும் கருத்துகளாக, தனது பொருள்களுக்கான சந்தை நிலையையும் ஒரு பொதுப்பயன் தொழில் நிறுவனம் நன்கு அறிந்திருத்தல் வேண்டும். ஏனெனில், இத் தொழில்கள் பல்வகைப்பட்ட பொருள்களையும், பணிகளையும், அளித்திட்டாலும், இவற்றிற்கான மாற்றுப்பொருள்களை அளிப்பதில் பல போட்டி நிறுவனங்கள் தீவிரமாக இருப்பதாலும், தன்னுடைய பொருள்களுக்கான விலையை நிருணயம் செய்யவும், சந்தை விலைக்கேற்ப ஏற்படுகின்ற தேவை நெகிழ்ச்சி போன்றவற்றை இத் தொழில்களின் நிருவாகத்தினர் நன்கு அறிந்திருத்தல் அவசியம். இதுபற்றிப் பின்னர் விரிவாக ஆராய்வோம்.

பொதுப்பயன் தொழில்களின் வாடிக்கையாளர்கள் பின்வரும் இரண்டு வகைகளாகப் பிரிக்கப்படுகின்றனர் :—

(1) வாடிக்கையாளரின் அளவைப் பொறுத்து, முதலில் வகைப்படுத்தலாம். சான்றாக, மின்திறன் வழங்கும் நிறுவனத்தின் வாடிக்கையாளர்களை ஒரு மாதத்தில் அவர்கள் நுகரக்கூடிய கிலோவாட்களின் எண்ணிக்கையைக் கொண்டோ அவர்களது மிக அதிகமான தேவை அளவினைக் கொண்டோ இவை இரண்டினையும் அடிப்படையாகக் கொண்டோ, பிரிக்கலாம்.

(2) பொதுப்பயன் தொழில் அளிக்கக்கூடிய பொருளோ, பணியோ எந்த நோக்கத்திற்காகப் பயன்படுத்தப்படுகின்றது என்பதைப் பொறுத்தும் வாடிக்கையாளர்களைப் பிரிக்கலாம்.

மேற்காணும் இரண்டு கருத்துகளைத் தவிர,

(3) தேவைப்படும் பணியின் தன்மை

(4) பணிகளைப் பெறுவதில் உள்ள தடைகளின் தன்மை

(5) இப் பணிகள் வேண்டப்படுகின்ற காலம்

(6) ஆண்டுதோறும் நிலையாக இருக்கக்கூடிய இப் பொருளுக்கான தேவை

போன்ற குறிப்புகளைக் கொண்டும் வாடிக்கையாளரை வகைப் படுத்த இயலும், ஒவ்வொரு வகையினரைச் சார்ந்தவர் களும், கட்டண வசூலாலும் வெவ்வேறு நபர்களாகவே கருதப்படுகின்றனர். ஏற்கனவே நாம் கூறியபடி பல்வகை யான, கட்டணப் பட்டியல்கள் தயாரிக்கப்பட்டு, தனித் தனிப் பிரிவினைச் சார்ந்தவர்களுக்குத் தனித்தனிக் கட்டணம் விதிக் கப்படுகின்றது. இப் பட்டியல்கள், எந்தவகை வாடிக்கை யாளரைக் குறிப்பிடுகின்றன, அவருக்கு விதிக்கப்படும் கட்டணம் அவருக்கு அளிக்கப்படும் பணியின் தன்மை போன்ற விபரங்களை யும், இப் பொருள்களின் விற்பனை விதிமுறைகளையும் விரிவாகக் கொண்டிருக்கும் இக் குறிப்புகளை நன்றாக ஆராய்ந்து பார்ப்போ மேயானால் பொருள்களின் நுகர்வோரை அவர்களது நுகர்ச்சிக் கேற்பவும் வகைப்படுத்த முடியும் என்பது நன்கு விளங்கும்.

இனி, ஒரு பொதுப்பயன் தொழில் அளிக்கின்ற எல்லாப் பணிகளுக்கும் அல்லது இப் பணிகளைப் பெறுகின்ற நுகர்வோர் அனைவருக்கும் ஒரேவிதக் கட்டணத்தை விதிக்காதிருப்பது ஏன்? மாறுபட்ட கட்டணங்களை விதிப்பது ஏன்? என்ற வினாக்களுக்கு விடையளிக்க வேண்டும். இதற்குப் பதிலாக, இப்பொருள்களின் தேவையும், அளிப்பும் (Demand and Supply) இப் பல்வகைப் பிரிவினரிடையே, ஒன்றுபோல் இல்லாமல் மாறுபட்டிருப்பதைக் கூறலாம். மேலும், விலை ஒன்றாக இல்லாமல் பல்வகைப்பட்ட தாகவும், அதன்காரணமாக, இப் பொருள்களுக்கான தேவை, அளிப்புகள் மாறுபட்டிருப்பதாலும் நன்மை, நிறுவனத்திற்கே ஏற்படுகின்றது. ஏனெனில் அளிப்பு, தேவை இவ்விரண்டினையும் கொண்டு ஒரு தொழில் நிறுவனத்தின் முழு உற்பத்தித்திறனும் பயன்படுத்தப்படும். இந் நிறுவனங்கள் தயாரித்தளிக்கும் பொருள்களின் விலைகள் சீராக இருக்கும்போது இருக்கும் உற் பத்தி அளவைவிட சந்தையின் தேவை, அளிப்பு விதிகள் மாறும் போது ஏற்படும் உற்பத்தி அளவு அதிகமாகவே இருக்கும்.

பொதுப்பயன் தொழில்களின் மொத்த உற்பத்திச் செலவு மாறு மல் (நிலையானதாக) இருக்கும்போது, நிறுவனத்தின் முழு உற் பத்தித் திறனும் பயன்படுத்தப்பட்டால், ஒவ்வொரு பொருளையும் உற்பத்தி செய்ய ஆகும் சராசரி செலவு குறைந்துகொண்டே வரும். இவ்வாறு ஒரு பொருளின் சராசரி உற்பத்திச் செலவு குறைந்துகொண்டே போவது அந் நிறுவனத்திற்குக் கிடைக் கின்ற ஒரு பொருளாதார நன்மையாகும். ஆனல், இந் நிறுவ னத்தின் உற்பத்தித் திறனில் ஒரு பகுதி எப்போதுமோ எப்போ தாவது ஒரு சமயமோ பயன்படுத்தப்படாது இருக்குமேயானல் மேற்கண்ட நன்மைகளை இழக்க நேரிடும்.

**விலைநிருணயக் கொள்கையின் குறிக்கோள்கள்** (Objects of Pricing Policy) :

ஒரு பொதுப்பயன் தொழிலின் கட்டண அடிப்படை கீழ்க் காணும் குறிக்கோள்களை நிறைவேற்றுவதாக அமையவேண்டும் :

(1) இத் தொழில்களின் உற்பத்திச் செலவாகத் தொகை அனுமதிக்கப்பட்டுள்ளதோ அத் தொகையினை மட்டும் பொருள்களின் விற்பனை மூலம் வருவாயாகப் பெறவேண்டும்.

(2) நிறுவனத்திலுள்ள நிலையான சொத்துகளாகிய அனைத்து இயந்திரங்களும் அவற்றின் முழு திறமை யுடனும், ஆற்றலுடனும் இயக்கப்படவேண்டும்.

(3) நிலையான வருவாயை அளிப்பதாக இருக்க வேண்டும்.

(4) பொருள்களை உற்பத்தி செய்ய ஆகக்கூடிய மொத்த உற்பத்திச் செலவினை, நியாயமான முறையில் நுகர்வோர் அனைவரிடமும் சம அளவில் வசூலிக்க வேண்டும்.

(5) ஒரு பொருளுக்கான சந்தையை இயன்ற அளவில் விரிவாக்கி அதன்மூலம் கிடைக்கக்கூடிய பொருளா தார நன்மைகளைப் பெற்றுக்கொள்ளும் வகையில், கட்டணவீதம் தீர்மானிக்கப்பட வேண்டும்.

மேற்காணும் பல்வேறு நோக்கங்களும் நிறைவேறும் வகையில், பொதுப்பயன் தொழில்களின் விலை நிருணயக் கொள்கை அமைய வேண்டும். இவற்றுள், எல்லா நோக்கங் களையும் நிறைவேற்ற இயலாவிடினும், இயன்ற அளவில் பொது மக்களுக்கும், நிறுவனத்திற்கும் நன்மை கிடைக்கும்வண்ணம் பொருள்களின் விலை தீர்மானிக்கப்பட வேண்டும். இதற்கெனச்

சில வழிமுறைகள் உள்ளன. அவற்றின்படி, ஒரு பொதுப்பயன் தொழிலின் விலைக் கொள்கையைத் தீர்மானிப்பதற்குமுன் கீழ்க் காணும் இரண்டு கருத்துகளும் நன்றாக ஆராயப்படவேண்டும் :

(1) ஒவ்வொரு வகை வாடிக்கையாளருக்கும் அல்லது ஒவ்வொரு வகைப் பொருளையும் அளிப்பதற்குச் செய்யப்படுகின்ற மொத்த செலவும் அவற்றுள் ஏற்படுகின்ற வேறுபாடுகளும் (costs and differences, if any)

(2) அளிக்கப்படும் பணியின் மதிப்பு (Value of Service) இந் நிறுவனம் அளிக்கின்ற வசதியினைப் பெறுவதற்காக ஏற்படுகின்ற தேவையின் தன்மையே அவ்வசதியின் மதிப்பாகக் கருதப் படும். இவ்வாறு, பிறவகை நிறுவனங்களைப்போலவே, பொதுப் பயன் தொழில் நிறுவனங்களிலும், ஒரு பொருளின் விலை, சந்தையில் அப் பொருளுக்கான தேவை மற்றும் அப் பொருளை அளிப்பதில் உள்ள செலவு ஆகிய இரண்டு கருத்துகளையும் அடிப்படையாகக் கொண்டே தீர்மானிக்கப்படுகின்றது. இனி, பொதுப்பயன் தொழில்கள் அளிக்கும் பொருள்களுக்கான விலையைத் தீர்மானிப்பதன் இன்றியமையாமை, அது தீர்மானிக்கப் படவேண்டிய முறை, எவ்வகைக் கருத்துகள் அதில் இடம்பெற வேண்டும், போன்ற கருத்துகளை ஒருமித்துக் கூறும் ஓர் அறிக்கையின் சிறு பகுதி ஒன்றினைக் காண்போம்.

"ஒரு பொதுப்பயன் தொழிலின் கட்டணமெனப்படுவது கீழ்க்காணும் நோக்கங்களை நிறைவேற்றும் வகையில் தீர்மானிக்கப்பட வேண்டும்.

(1) இக் கட்டணவீதத்தால், தொழிலின் நடைமுறை நிலைமை பாதிக்கப்படக்கூடாது. சான்றாக, கட்டணத்தொகை சிறிது உயர்ந்தாலும், அதன் விளைவாகப், பெருமளவில் தேவை குறைந்துபோகாது பார்த்துக்கொள்ள வேண்டும்.

(2) நடைமுறை நிலைமை நல்ல நிலையில் இருக்கிறது என்பதற்காகத் தொழில் நிருவாகத்தினர் அலட்சியமாக இருக்கக்கூடாது. மாறாக, இக் கட்டணவீதத்தை அடிப்படையாகக் கொண்டு நிறுவனத்தின் வருங்காலம் நன்றாக அமைய வழிசெய்ய வேண்டும்.

(3) எக்காரணத்தை முன்னிட்டும், இக் கட்டணம், பொருளை நுகர்வோரின் நல்லெண்ணத்திற்கு ஊறுவிளைவிப்பதாக இருக்கக்கூடாது. நியாயமான அல்லது சரியான கட்டணம் விதிக்கப்பட்டால், நுகர்வோர் பெரிதும் மகிழ்ச்சியடைவர்,

(4) நன்மதிப்பைப் பெற்ற இந் நிறுவனம், தனது தொழில்களுக்குத் தேவையான புதிய மூலதனத்தை மக்களிடமிருந்து எளிதாகப் பெற முடியும். இதனை உபயோகித்துத் தொழிலின் வளர்ச்சியை மேன்மேலும் அதிகப்படுத்த முடியும்.

இந் நோக்கங்கள் அனைத்தும் ஈடேறும் வகையில், நிறுவனத்தின் விலைக்கொள்கை அமைய வேண்டும். இதற்கெனக் குறிப்பிட்டு வரையறுக்கப்பட்ட எந்த ஒரு சூத்திரமும் (Formula) இல்லையென்றாலும், எப்பொருள் விற்கப்படுகின்றதோ அதனுடைய விலை, அதற்குள்ள தேவை, அப் பொருளின் மதிப்பு என்ற இரண்டு கருத்துகளும் எப்போதும் நினைவிற்கொள்ளப்பட்டு அதற்கேற்றாற் போல், விலைக்கொள்கை நிருணயம் செய்யப்பட வேண்டும்.*

இனி, பொதுப்பயன் தொழில்கள் தயாரிக்கும் பொருள்களுக்கும், பணிகளுக்குமான விலையைத் தீர்மானிப்பதில் எவ்வளவு ஆழ்ந்த கவனம் செலுத்த வேண்டுமென்பதைக் காண்போம். ஏற்கனவே குறிப்பிட்ட முறைகளின்படி, நிறுவனத்திலுள்ள கணக்கு ஏடுகளில் காணப்படும் குறிப்பினைக் கொண்டு பொருள்களின் விலை கடந்த காலத்தில் எவ்வாறு இருந்தது, தற்சமயம் எவ்வாறு உள்ளது என்பதை உணர்ந்து, பின்னர், வருங் காலத்தில் எவ்வளவு இருக்க வேண்டும் என்று நிருணயிப்பது வழக்கமானதாகக் கருதப்பட்டாலும், நடைமுறையில் இச் செயல் சிறிது மாறும். ஒரு நிறுவனத்தின் கட்டணவீதம் எவ்வளவு இருக்கவேண்டும் என்றும், அந் நிறுவனம் தயாரிக்கின்ற பொருள்களின் விலை எந்த அளவில் நிருணயிக்கப்பட வேண்டும் என்பதும் அந் நிறுவனத்தைச் சார்ந்த இயக்குநரவை தீர்மானிப்பதே சிறந்ததாகும். தங்களது தொழிலின் மூலதனம் எவ்வளவு, அம் மூலதனத் தொகை எவ்வாறு பெறப்பட்டது, அதன்மீதான செலவுகள் எவ்வளவு, எவ்வகைப் பொருள்கள் தயாரிக்கப்படுகின்றன. அவற்றைத் தயாரிக்கச் செலவிடப்பட்ட தொகை போன்றவற்றை இத் தொழிலின் நிருவாகக் குழுவினரே நன்கு அறிவர். எனவே, மேற்காணும் குறிப்புகளைக் கருத்தில் கொண்டு, மேலும், அவ்வப்போது உருவாகும் சூழ்நிலைக்கேற்ப, நிறுவனத்திற்குக் கிடைக்கவேண்டிய வருவாய் என்ன என்பதை நிருவாகக் குழுவே சரியாகத் தீர்மானிக்க முடியும். வேறு எந்த முறையில் கணக்கிட்டபோதிலும், உண்மையான வருவாய்வீதத்தினை நாம் அறிய இயலாது. மேலும், பொதுப்பயன் தொழில்களின் விலை நிருணயக் கொள்கையை உருவாக்குவதென்பது ஓர் அரிய கலையாகவே கருதப்படவேண்டும். சில புள்ளிவிவரங்களைக் கொண்டு

*Report of Rate Committee (New York 1953)

ஆராய்ச்சி முறையில் கணக்கிட்டுக் காணவேண்டிய அறிவியலாக இதனை நாம் எண்ண இயலாது. ஒவ்வொரு சூழ்நிலைக்கும் ஏற்ற விலையை அமைக்கத் தனித் தேர்ச்சியும், ஆழ்ந்த அனுபவமும் தேவை. இவை இரண்டும் ஒரு தொழிலை நிருவகிக்கின்ற இயக்குநர் போன்றவர்களிடமே காணப்படும்.

**கட்டண எல்லை (Range of Rates)**

பொதுப்பயன் தொழில்கள் உற்பத்தி செய்து அளிக்கின்ற பொருள்களுக்கான கட்டணத்தை அல்லது விலையை ஒரு குறிப்பிட்ட எல்லைக்குள் (Range) மட்டுமே அமைக்க வேண்டும். அதாவது, இப் பொருள்களுக்கான உச்சவிலையையும், மிகக் குறைந்த விலையையும் முதலில் தீர்மானித்துக்கொண்டு, அதன் பின்னர் இவ்விரண்டிற்கும் இடையே ஒரு விலையைப் பொதுமக்களுக்கான விலையாகத் தீர்மானிக்க வேண்டும். இங்குக் குறிப்பிட்ட உச்சவிலை என்பது என்ன? முறை செய்யப்பட்ட தொழில்கள் அளிக்கின்ற பொருள்களின் அல்லது பணிகளின் மதிப்பு, நுகர்வோரிடையே என்னவோ, அதுவே உச்சவிலையாகக் கருதப்படும். அதாவது, பொதுமக்கள் தங்களது வசதிக்கேற்ப பொதுப்பயன் தொழில்களின் பொருள்களை என்ன விலை கொடுத்து வாங்க, முன்வருகின்றனரோ, அதனையே உச்ச அளவு விலையாகக் குறிப்பிடலாம். பொதுமக்களின் தேவைக்கேற்றவாறு (Demand) இப் பொருள்களின் மதிப்பு மாறுபடும். வாடிக்கையாளரின் தேவையைப் புறக்கணித்து மிக உயர்ந்த விலையை நிருணயிப்பதன்மூலம், அதிக அளவு இலாபத்தினைப் பெற்றுவிடலாம் என்று ஒரு நிறுவனம் நினைத்தால் அது முற்றிலும் தவறாகும். பொதுப்பயன் தொழில்கள் அளிக்கக்கூடிய பொருள்களும், வசதிகளும் இன்றியமையாதவை. எனினும், ஒரு குறிப்பிட்ட அளவுவரைதான் நுகர்வோர் இதற்கான கட்டணத்தைக் கொடுக்க முன்வருவர். பொருள்களின் இன்றியமையாமை, நுகர்வோரின் தேவை, அவர்களின் வாங்குந்திறன் என்ற மூன்று கருத்துகளும் ஒன்றுக்கொன்று தொடர்பு கொண்டவை. இவற்றுள், பொருள்களின் இன்றியமையாமையை ஒரு புறம் வைத்துவிட்டுப் பார்ப்போமாயின், நுகர்வோரின் தேவை, அவர்களின் வாங்கும் திறன் என்ற இரண்டு கோட்பாடுகள்தான், ஒரு பொருளின் விலையைத் தீர்மானிக்கின்றன என்பது விளங்கும். நுகர்வோரின் தேவை அளவு (Quantity of Demand) ஒரு பொருளின் பயன்பாடு, அதனுடைய விலை, அப் பொருளின் இன்றியமையாமை, அப் பொருளின் வாழ்நாள், அதனின்றும் கிடைக்கக்கூடிய பயன் இவற்றைப் பொறுத்தே அமைகின்றது. சில நேரங்களில் இப் பொருள்களுக்கான தேவையில், விலை

நெகிழ்ச்சியினால் ஏற்படுகின்ற மாறுதல்களைப் பொறுத்தும் அவர்களது கொள்முதல் அமைகின்றது. மேலும், இப் பொருள்களுக்கு மாற்றுப் பொருள்கள் எளிதாகக் கிடைக்குமேயானால், நுகர்வோரின் தேவையளவு குறைந்துபோகும். ஆகவே, நுகர்வோரின் தேவையினை நன்கு அறிந்துகொண்டு, அதற்கேற்பப் பொதுப்பயன் தொழில்களின் விலை நிருணயிக்கப்படவேண்டும். இதற்கு மாறாக, எவ்விலையை நிருணயித்தாலும் பொதுமக்கள் வாங்குவர் என்ற எண்ணத்துடன் விலைக்கொள்கையை அமைத்துக்கொள்ளக்கூடாது. அமெரிக்க நாட்டின் தலைமை நீதிமன்றத்தின் கருத்துப்படி, பொதுப்பயன் தொழில்கள் தங்களது வாடிக்கையாளரிடமிருந்து அவர்கள் பெற்றுக்கொண்ட பொருள்களின் சரியான மதிப்பினைமட்டும் விலையாகப் பெற்றுக்கொள்ளவேண்டும். ஆனால், தொலைபேசி நிறுவனம் ஒன்றின் கட்டணத்தைத் தீர்மானிக்கும்போது அந் நிறுவனம் அளிக்கின்ற பணியின் மதிப்பினைமட்டும் சரியான விலையாக ஏற்றுக்கொள்ள முடியாதென்று கூறப்பட்டது. மேற்கண்ட மாறுபட்ட இரண்டு கருத்துகளையும் ஆராயும்போது, பொதுப்பயன் தொழில் நிறுவனம் ஒன்றின் விலைக்கொள்கையை நிருணயிப்பது என்பது அவ்வப்போது ஏற்படுகின்ற தொழில் மாற்றங்களுக்கு ஏற்றவாறு அந் நிறுவனத்தின் நிருவாகத்தினரே செய்யவேண்டிய செயலாகும் என்பதை உணரலாம். இனி, இப் பொருள்களுக்கான குறைந்த விலை எவ்வாறு அமைகின்றது என்பதைப் பார்ப்போம். இக் குறைந்த விலையை ஈடுசெய்யும் விலை (Compensatory price) என்றும் கூறுவர். இவ்விலையை மேலும் இரண்டு வகைச் செலவுகளின் கூட்டுச்செலவு எனலாம். அதாவது,

ஈடுசெய்யும் (கட்டணம்) = கைச்செலவுகள் +
நிலையான செலவுகள்

என்று குறிக்கப்படலாம்.

ஒரு நிறுவனம் தான் தயாரிக்கின்ற பொருள்களைச் சந்தையிலோ, ஒரு குறிப்பிட்ட வாடிக்கையாளரிடமோ விற்பதாகச் செய்கின்ற செலவுகளை இவ்வாறு குறிப்பிடலாம். "பொருள்களை உற்பத்திசெய்த பின்னர் வெளியே எடுத்துச் சென்று விற்பனை செய்யும்போது ஏற்படும் செலவுகளே 'கைச் செலவுகள்' என்று கருதப்படும்". இதனை ஆங்கிலத்தில், அவுட் ஆப் பாக்கெட் (Out of Pocket) செலவுகள் அல்லது கைச்செலவு என்று குறிப்பிடுவர். சான்றாக, எரிவாயு தயாரிக்கும் ஒரு நிறுவனம், இவ்வாயுவைத் தயாரித்த பின்னர், வாடிக்கையாளரின் இல்லத்திற்கு எடுத்துச் சென்று, அதனை அங்கே வழங்கும்வரை ஏற்படும் செலவுகள் கைச்செலவுகள் எனப்படும். குறிப்பாக,

எரிவாயுவைக் குழாய்களில் அடைத்துவைக்கும் செலவு, இதனை ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்கு எடுத்துச்செல்லும் போக்கு வரத்துச்செலவுபோன்ற பல வகைச் செலவுகளையும் வெளிச் செல்லும் செலவுகள் எனக் குறிப்பிடலாம். ஒரு நிறுவனம் இச் செலவுத் தொகையினைத் தீர்மானித்த பின்னர், நிலையான செலவுகள் என்னென்ன என்பதைக் காணவேண்டும். பொது மக்களின் உபயோகத்திற்காக உற்பத்தி செய்யப்படும் பொருள்கள் அல்லது வழங்கப்படும் பணிகள் இவற்றின் அளவு எத்தன்மையதாக இருந்தாலும் இவற்றை அளிப்பதற்கெனச் செய்யப்படும் சிலவகைச் செலவுகள் மாறுவதில்லை. இச் செலவுத் தொகைகள் நிலையானதாகவே இருப்பதால், இவை நிலையான செலவுகள் என்று அழைக்கப்படும். சான்றாக, ஒரு நிறுவனம் செலுத்தவேண்டிய வரிகள், காப்பீட்டுத் தொகை (Insurance Premium), தேய்மானச் செலவு, முதலீடுகள்மீதான வருமானம் போன்றவை, நிலையான செலவுகளாகக் கருதப்படும்.

மேற்காணும் கருத்துகளைத் தொகுத்துப் பார்க்கையில் ஈடு செய்யும் கட்டணம் (Compensatary rate) எனப்படுவது, ஒரு நிறுவனத்தின் கைச்செலவுகள் மற்றும் நிலையான செலவுகள் என்ற இரண்டு வகைச் செலவுகளின் மொத்தமேயாகும் என்று அறியலாம். ஏற்கனவே நாம் கூறியபடி, ஒரு பொதுப் பயன் தொழில், தான் வழங்குகின்ற பொருள்களுக்கான கட்டணத்தை (அல்லது விலையை) அப் பொருள்களின் உயர்ந்த அளவு விலைக்கும், அவற்றின் ஈடுசெய்யும் விலைக்கும் இடையே தீர்மானிக்க வேண்டும் என்று அறிகிறோம். நிலையான செலவுகளை நாம் பொருள்களின் கட்டணத்தில் ஒரு பகுதியாக வசூலிப்பதால் சில நன்மைகளும் ஏற்படுகின்றன. குறிப்பாக, பொதுமக்கள் ஏற்க வேண்டிய நிலையான செலவுத் தொகை இதனால் பெரிதும் குறைகின்றது. அடுத்து, பொதுப்பயன் தொழில் ஒன்றால் நிருணயிக்கப்படும் நியாயமான கட்டணத்தை அளிப்போருக்கே பொருள்கள் விற்கப்படுகின்றன. இந்த நியாயமான கட்டணத்தை அளிக்க இயலாதோருக்கு, பொருள்களும், பணிகளும் வழங்கப்படுவதில்லை. இதனால் இந் நிறுவனங்கள் நட்டமடையும் அவலநிலைக்கு உள்ளாவதில்லை. பொது நல ஈடுபாட்டுடன் பணிபுரிய வேண்டிய இத் தொழில் நிறுவனங்கள் ஒரு சிலருக்கு மட்டுமே பொருள்களை வழங்குவதும், பிறருக்கு மறுப்பதும் முறையான செயலா என்ற வினாவினை ஒருவர் எழுப்புவது இயற்கையே. எனினும் பொது நல ஈடுபாடு என்ற கொள்கைக்காக, பொதுப்பயன் தொழில்கள் நட்டமடைய வேண்டும் என்ற கருத்தினை எவரும் ஏற்கமாட்டார்கள். எனவேதான், இந் நிறுவனங்கள் தாங்கள் விதிக்கின்ற குறை

வான மற்றும் நியாயமான கட்டணத்தை அளிப்போருக்கு மட்டுமே பணி புரிகின்றன என்பது விளங்கும்.

ஒரு நிறுவனம் தனது உற்பத்தித் திறன், அளிப்புத் திறன் போன்றவற்றை அதிகரித்துக்கொள்ள வேண்டுமென்று கருதினு லும், தொழில் மேலும், விரிவாக்கப்பட வேண்டுமென்று கருதினுலும், தேவைப்படும் கூடுதலான மூலதனத்தொகையைப் பெற வேண்டுமானுல் பொதுமக்களிடமும், கடன் வழங்கு வோரிடமும் நன்மதிப்பையும் பெற்றிருக்க வேண்டும். நல்ல வருவாயை ஈட்டுவதன்மூலம், சிறந்த நிதிநிலையை அமைத்துக் கொள்ளும் எந்த நிறுவனமும் பொதுமக்களிடையே நன்மதிப்பை எளிதாகப் பெற்றுவிடும் என்பதில் ஐயமில்லை. மேலும், நிதி நிலை சீர்குலைந்து காணப்படும் நிறுவனங்கள் இத்தகைய நன்மதிப்பைப் பெற முடியாது என்பதும் சொல்லாமல் விளங்கும். பொதுப்பயன் தொழில்களைப் பொறுத்தமட்டில் பெருமளவு இலாபம் ஈட்ட வேண்டும் என்ற கட்டாய நிலை ஏற்படா விட்டாலும் நிறுவனத்தின் நன்மதிப்பைப் பாதுகாப்பதற்கேனும் ஓரளவு இலாபத்தினை ஈட்ட வேண்டும். அவ்வாறு செய்தால் தான், விரிவாக்கப் பணிகளுக்குத் தேவையான மூலதனத்தை எளிதில் பெறமுடியும். எனவே, நியாயமான விலையை விதிக் கின்ற கொள்கையைச் சற்றே மாற்றி, குறைந்த அளவுக் கட்டணத்தோடு ஓரளவு இலாபத் தொகையையும் சேர்த்து பொருள்களுக்கான விலையாகத் தீர்மானிப்பது நன்மை பயக்கும். அல்லது நியாயமான விலையைச் சற்று உயர்த்தினுலும், கூடுத லான தொகை, வருவாயாகக் கிடைக்கும்.

### விலை ஆய்வு (Cost Analysis)

பொதுப்பயன் தொழில்களின் நிருவாகத்தினரின் பல அலுவல்களில் அத் தொழில்கள் விதிக்கின்ற விலையினை ஆராய்தலும் ஒன்ருகக் கருதப்படுகின்றது. பொதுநலஈடு பாட்டுடன் பணிசெய்கின்ற இந் நிறுவனங்களின் வாடிக்கை யாளர்கள் பல வகைப்பட்டவர்களாக இருப்பதால், ஒவ்வொரு வகையினைச் சார்ந்தவரிடமிருந்தும் எவ்வளவு கட்டணத்தை வசூலிக்கலாம் என்பதை ஆராயும்பொருட்டு, விலை ஆராய்ச்சி செய்யப்படுகின்றது. இவ்வித ஆராய்ச்சியைச் செய்வதன்மூலம், ஒவ்வொரு பிரிவினருக்கும் ஒவ்வொருவகைக் கட்டணம் விதிக்கப் படுகின்றது என்றும், அஃது அப் பிரிவினைச் சார்ந்த வாடிக்கை யாளரைப் பொறுத்தோ அவர்களுக்கு அளிக்கப்படுகின்ற வசதியின் தன்மையைப் பொறுத்தோ தீர்மானிக்கப்படுகிறது என்றும் அறியலாம். இதுவே 'வேறுபாட்டு விலைக்கொள்கை'

(Differential Pricing) எனப்படுகின்றது. விலை ஆராய்ச்சி செய்வதன் முதற்படியாக ஒரு நிறுவனத்தின் பலவகையான செலவுகளையும், சொத்துகளின்மீதான தேய்மானச் செலவுகளையும் அந் நிறுவனத்தின் வாடிக்கையாளரிடமிருந்து தனித்தனியே வசூலிக்க வேண்டும். அடுத்து, நிறுவனம் முழுவதையும் அடிப்படையாக எடுத்துக்கொண்டோ சந்தை எல்லை முழுவதையும் அடிப்படையாகக் கொண்டோ, விலையைத் தீர்மானிக்க வேண்டும். விலை பற்றிய ஆராய்ச்சியின்மூலம் சில நன்மைகளும் விளைகின்றன. சான்றாக, ஏற்கனவே இருக்கின்ற வாடிக்கையாளர்களைத் தவிர புதிய வாடிக்கையாளர்களுக்கும் இத்தகைய இன்றியமையாப் பொருள்களை வழங்குவதற்கு ஆகக்கூடிய உபரிச் செலவுத் தொகையை எளிதாகக் கண்டுபிடிக்கலாம். இரண்டாவதாக வாடிக்கையாளர்களின் எண்ணிக்கையில் மாற்றம் ஏதுமில்லாது இருப்பினும், அவர்களுக்குக் கூடுதலான வசதியை அளிப்பதற்கு ஆகக் கூடிய செலவுத் தொகையைக் காண இயலும். மூன்றாவதாக, இந் நிறுவனங்களின் நிலையான செலவுத் தொகையோடு வேறு ஏதாவது கூடுதலான செலவுத்தொகை சேர்க்கப்பட வேண்டுமா என்பது பற்றியும் நாம் அறிந்து கொள்ள விலை ஆராய்ச்சி பெரிதும் பயன்படுகிறது.

ஒரு நிறுவனத்தின் விலை பற்றிய ஆராய்ச்சியும், அந் நிறுவனத்தின் கட்டணத்தை நிர்ணயிப்பதும் ஒரேவிதமான செயல்களாகக் கருதப்படமாட்டா. இவ்விரண்டும் வெவ்வேறானவையே என்பதற்குக் கீழ்க்காணும் காரணங்களைக் கூறலாம்:-

(1) விலை ஆராய்ச்சி எனப்படுவது, ஒரு பொதுப்பயன் தொழிலின் அளிப்பு நிலையைப்பற்றிக் குறிப்பிடுவதாகும். ஆனால், கட்டணவீதத்தைத் தீர்மானிப்பதென்பது, ஒரு நிறுவனத்தின் தேவை, அளிப்பு இரண்டு நிலைகளையும் (Demand and Supply Conditions) ஆராய்வதாகும்.

(2) இரண்டாவதாக, விலை ஆராய்ச்சியின்மூலம், பயன் தரக்கூடிய எந்த ஒரு முடிவிற்கும் நாம் எளிதில் வர இயலாது. ஏனெனில், ஒரு நிறுவனத்திற்கு ஏற்படக்கூடிய மொத்தச் செலவினை, அதனுடைய பல்வேறு வாடிக்கையாளர்களுக்குப் பிரித்தளிக்கின்ற செயலை மட்டுமே விலை ஆராய்ச்சியின்மூலம் நாம் செய்ய முடியும். இஃது அவ்வளவு எளிதான செயலன்று என்பதையும் நாம் நினைவிற்கொள்ள வேண்டும்.

இவ்விரண்டு காரணங்களையும் சீர்தூக்கிப் பார்க்கும்போது ஒரு பொதுப்பயன் தொழிலின் விலை ஆராய்ச்சியும், அதனுடைய கட்டண அமைப்பும் ஒன்றல்ல என்ற முடிவினை நாம் உறுதிப் படுத்திக்கொள்ள வேண்டியிருக்கிறது.

இனி, முறைசெய்யப்பட்ட இத் தொழில்களின் கூட்டுச் செலவினைப் (Joint-Costs) பற்றிச் சிறிது ஆராய்வோம். குறிப்பிட்ட ஒரு பொருளைத் தயாரிக்கவும், அப் பொருளின் பல்வகைப்பட்ட வாடிக்கையாளரிடம் சேர்ப்பிக்கவும், ஒரு நிறுவனத்திற்கு ஆகக் கூடிய எல்லாவகைச் செலவுகளின் மொத்தமே, 'கூட்டுச் செலவு' எனக் குறிப்பிடப்படும். இக் கூட்டுச் செலவினை, நுகர்வோரிடமே வசூலிப்பதுதான் முறையாகும். ஆனால், எவ்வித வேறுபாடு மின்றி அனைவரிடமிருந்துப் ஒரேவிதத் தொகையை வசூலிப்பது என்பது முறையாகாதாகையால், ஒவ்வொரு வகை நுகர் வோரிடமிருந்தும், தனித்தனி கட்டணத்தைப் பெறவேண்டும். சொல்லளவிலும், ஏட்டளவிலும் இஃது எளியதொரு செயலாகத் தோன்றினும், செயலில் இதனைச் செய்வது எளிதன்று. சில வகை நிறுவனங்கள், பல்வகைப்பட்ட வசதிகளை நுகர் வோருக்கு அளிக்கும் பணியில் ஈடுபட்டிருக்கலாம். இவற்றின் கூட்டுத் தொகையை நுகர்வோரின் அடிப்படையில் பகிர்ந்தளிக் காமல், வழங்கப்பட்ட பணிகளின் அடிப்படையில் பிரிக்க வேண்டும். அதாவது, சில வகைப் பணிகளுக்கு, ஒருவிதக் கட்டணமும், மற்றொருவகைப் பணிகளுக்கு பிறிதொரு கட்டணமும் மூன்றாவது வகைப் பணிகளுக்கு வேறொரு வகைக் கட்டணமும் விதிக்கப்படும். இவ்வாறு ஒரு நிறுவனத்தின் கூட்டுச் செலவினைப் பலவகையாகப் பிரித்து அதனை வாடிக்கை யாளர்களின் ' அடிப்படையிலோ அளிக்கப்பட்ட பணி களின் அடிப்படையிலோ பகிர்ந்து கொள்ளுவது மிகவும் சிக்கலான ஒரு செயலாகும்.* இச் சிக்கல்களை நீக்கி, எளிய முறையில் இதனைச் செய்யவேண்டுமானால் ஏதேனும் ஒரு சூத்தி ரத்தைக் (Formula) கையாளுதல் நல்லது. இக் கருத்துக்கு எதிராக வெறும் கணக்குச் சூத்திரங்களை வைத்துக் கொண்டு ஒரு நிறுவனத்தின் நிதிநிலையினை ஒரு பகுதியான கட்டண வீதத்தை நிர்ணயிப்பதென்பது இயலாத செயலாகும் என்றும் கூறப்படுகிறது. கூட்டுச்செலவினை ஆராய்ந்து அதனைப் பலருக்கும் பிரித்தளிக்கும் செயலின் விளைவாக, ஒரு நிறுவனத் தின் கட்டணவீதத்தைத் தீர்மானிக்கும் செயல் எளிதாக்கப் படுகின்றது என்பதை உணரலாம். சுருங்கக்கூறின், ஒரு நிறு வனத்தின் விலைக்கொள்கையைத் தீர்மானிக்கும் பணியில்

* Prof. G. Glaser " Public Utilities in American Capitalism " p. 424

அதனுடைய விலை பற்றிய ஆராய்ச்சி ஒன்றினை நடத்துதல் இன்றியமையாததென்றும் இவ்விலை ஆராய்ச்சி எனப்படுவது அந் நிறுவனத்தின் பலவகைப்பட்ட பணிகளைப் போலன்றிப் பல்வேறு வாடிக்கையாளர்கள் பெற்ற பயன்களை அடிப்படையாகக் கொண்டு, அவர்கள் பெற்றுக் கொண்ட பணிகளுக்கான கட்டணத்தை வசூலிப்பதன்மூலம், கட்டணவீதம் நிர்ணயிக்கப்படுகிறதென்றும் அறியலாம்.

**பணிகளின் மதிப்பு** (Value of Services)

பொதுப்பயன் தொழிலொன்றின் விலைக்கொள்கையைத் தீர்மானிக்கும் பணியில், பணிகளின் மதிப்பு என்னும் சொல்லினைக் கையாளுகிறோம். இந் நிறுவனம் அளிக்கின்ற பொருள்களுக்காக, ஆங்காங்கே உள்ள சந்தைகளிலிருந்து பொதுமக்களின் தேவை எவ்வளவு உள்ளதோ அதுவே, அப் பொருளுக்கான மதிப்பாகக் கருதப்படும். பொருள்கள் மட்டுமின்றி, இந் நிறுவனங்கள் அளிக்கின்ற பணிகளுக்கும், செய்கின்ற பணிகளுக்கும் மதிப்புக் காண வேண்டுமாயின், நுகர்வோரிடமிருந்து அவற்றிற்கான தேவை எவ்வளவு உள்ளது என்பதைக் கணக்கிட வேண்டும். இவ்வாறு செய்யின், நுகர்வோரின் மொத்தத் தேவை = குறிப்பிட்ட பொருளின் மதிப்பு, என்று அமைவதைக் காணலாம். விலை ஆராய்ச்சி செய்வதன்மூலம் பொருள்களின் அளிப்பு நிலையைக் குறிப்பிடுவது போன்று, அவற்றின் மதிப்பினைக் காண்பதன் மூலம் தேவை நிலையைக் குறிப்பிடுவது வழக்கம். எனினும், ஒரு பொருளின் மதிப்பு இன்னதென்று துல்லியமாகக் கணக்கிட்டுச் சொல்ல இயலாது. ஒருவேளை, சந்தையில் நிலவுகின்ற தேவை விதிகளின்படி, இப் பொருளிற்கு உண்டான தேவை என்னவென்று கணக்கிட்டு அதனைக் கொண்டு, அப் பொருளின் மதிப்பினைக் காணமுடியுமென்றாலும், பெரும்பாலான நிறுவனங்களின் அனுபவமிக்க நிருவாகங்களே இத்தகைய முயற்சியில் ஈடுபடுதல் சிறப்பானதாகும்.

பொதுப்பயன் தொழில்கள் அளிக்கின்ற பணிகள் மிகவும் பயன்படக் கூடியதாகையால், நல்ல மதிப்புள்ளவையாகக் கருதப்படுகின்றன. ஆனால், உண்மையில் இவற்றிற்கு 'நல்ல மதிப்பு' என்று ஏதுமில்லை. ஏனெனில், நுகர்வோருக்கு அளிக்கப்படுகின்ற பொருள்களுக்கும் அல்லது பணிகளுக்கும் பதிலாகக் குறிப்பிட்ட கட்டணம் ஒன்று வாங்கப்படுவதால், பொருள்களுக்கென 'நல்ல மதிப்பு' என்ற ஒன்று ஏற்பட வாய்ப்பில்லை. தங்களுடைய சில தேவைகளையும், எண்ணங்களையும், விருப்பங்களையும் பூர்த்தி செய்யக்கூடிய பொதுப்பயன் தொழில்களின் பொருள்களுக்கென, நுகர்வோர் ஒரு விலையைத் தாமாகவே முன்வந்து அளிப்பர்.

அவர்களுடைய விருப்பத்தைத் தெரிவிக்கும் வகையில் அமைந்துள்ள இத் தன்மையே, பொருள்களின் மதிப்பாகக் கருதப்படுகின்ற, வாடிக்கையாளரின் தேவையை நிர்ணயிக்கின்றது. ஒரு பொருள் நுகர்வோரால் அதிக அளவில் விரும்பப்படுமேயானால் அப் பொருளுக்கான தேவை மிகுந்தும், குறைந்த அளவில் விரும்பப்படுமேயானல் அதற்கான தேவை குறைந்தும் காணப்படும். இவ்வாறு பொருள்களின் மதிப்பினை, அப் பொருள்களுக்கான நுகர்வோரின் தேவையினைக் கொண்டு கணக்கிடுவது போன்று, விலை ஆராய்ச்சியின் மூலம் கணக்கிட முடியாது.

வாடிக்கையாளர்கள் பல்வகைப்படுவது போன்று அவர்களின் தேவையும் பலவிதமாக அமைந்து காணப்படுவதால் அதற்கேற்பவே, அவர்களிடமிருந்து கட்டணங்கள் வசூலிக்கப்படும். இக் கட்டணங்கள், நுகர்வோரின் செலுத்தும் திறன் (Paying Capacity), அவர்களது விருப்பம் போன்ற பல குறிப்புகளின் அடிப்படையில் வேறுபடும். குறிப்பிட்ட ஒரு பொருளுக்கு அதிகவிலை அளிக்க ஆவல் கொண்டாலும், இயன்ருல்தான் நுகர்வோரால் உயர்ந்த அளவு கட்டணத்தை ஏற்றுக்கொள்ள இயலும். அதுபோன்றே அதிக அளவுக் கட்டணத்தைச் செலுத்தக்கூடிய திறன் படைத்த நுகர்வோராயினும், அதனைச் செலுத்துவதற்கு இசைந்தவராக இருக்க வேண்டும். இவ்விரண்டு கருத்துகளும் ஒன்ருகக் கூடிய நிலையில்தான் பொருள்களின் கட்டணத்தை எளிதாக வசூலிக்க முடியும். இனி, எவ்விதக் கட்டணத்தை இவர்களிடமிருந்து வசூலிப்பது என்ற வினவிற்கு விடை காண்போம். இன்றியமையாப் பொருள்களையும், பணிகளையும், உற்பத்தி செய்வதற்காகச் செய்யப்படும் செலவுகளின் கூட்டுத்தொகையை நாம் 'கூட்டுச் செலவு' என்று குறிப்பிடுகிருேமல்லவா? இக் கூட்டுச் செலவினை ஒவ்வொரு வகை வாடிக்கையாளர்களிடமிருந்தும் அவர்களின் செலுத்தும் திறனுக்கு ஏற்பப் பொருள்களின் கட்டணம் என்ற பெயரால் வசூலிக்க வேண்டும். இவ்வாறு செய்வதன் மூலம், எந்தெந்த வகை வாடிக்கையாளருக்கு என்னென்ன கட்டணவீதம் விதிக்கப்பட்டுள்ளது என்பதையும் ஒரு நிறுவனத்தின் கூட்டுச் செலவில் இக் கட்டணத்தின் பங்கு என்ன என்பதையும் நாம் அறிந்து கொள்ளமுடியும்.

வேறுபாட்டு விலைக்கொள்கையைப் பொதுப்பயன் தொழில்கள் கடைப்பிடிப்பதற்குக் காரணங்கள் பின்வருவனவாம் :

(1) நிறுவனத்தின் முழு உற்பத்தித் திறனையும் பயன்படுத்தக்கூடிய அளவிற்கு, அதனுடைய விற்பனை

அளவு இருக்கவேண்டும். வேறுபாட்டு விலைக் கொள்கையைக் கடைப்பிடிப்பதன்மூலம் பலதரப் பட்ட வாடிக்கையாளர்களின் தேவைக்கேற்றவாறு உற்பத்தியை அதிகரிக்க நேரிடும். இதன் மூலம், நிறுவனத்தின் உற்பத்தித்திறன் முழு அளவிற்குப் பயன்படுத்தப்படும் வாய்ப்பு உள்ளது.

(2) உற்பத்தித்திறனை முழு அளவிற்குப் பயன்படுத்தப் படுவதன்மூலம், பொருள்களின் சராசரி உற்பத்திச் செலவினைக் குறைப்பது வேறுபாட்டு விலைக் கொள்கையின் இரண்டாவது குறிக்கோளாகும்.

(3) மேற்கூறப்பட்ட, முழு உற்பத்தித்திறன், குறைவான உற்பத்திச் செலவு என்னும் இரண்டு நன்மைகளை யும் பயன்படுத்தி, அந் நிறுவனம் முழு அளவிற்கு வருவாய் ஈட்டுவது வேறுபாட்டு விலைக்கொள்கை யின் மூன்றாவது கருத்தாகும்.

பொதுவாகப் பார்ப்போமேயானால், எந்த ஒரு நிறுவனத் திற்கும், அதனுடைய தேவை சில நேரங்களில் மலைபோல் மிகுந்தும், மற்றும் சில நேரங்களில் மடுபோலக் குறைந்தும் போகலாம். தேவை மிகுந்து காணப்படும் நேரங்களில் நிறுவ னத்தின் முழு உற்பத்தித் திறனும்பயன்படுத்தப்பட்டு,பொருள்கள் மிகுந்த அளவில் சந்தைக்குக் கொண்டு செல்லப்படவேண்டும். ஒரு சந்தையின் பல்வேறு பாகங்களிலிருந்தும் ஏற்படுகின்ற இப் பொருள்களுக்கான தேவை அளவு கணக்கிடப்பட்டால், அதற்கேற்றவாறு, நிறுவனத்தின் முழு உற்பத்தித்திறனையும் பயன்படுத்தலாம். டாக்டர் ஜி. பி. வாட்கின்ஸ் அவர்களின் கருத்துப்படி ஒரு பொதுப்பயன் தொழிலில் முதலீடு செய்யப் பட்ட நிலை முதலை மிகச்சிறந்த முறையில் பயன்படுத்தி அதன் மூலம் நிறுவனத்தின் வளர்ச்சியை ஏற்படுத்துவதே, வேறுபாட்டு விலைக்கொள்கையின் அடிப்படைப் பொருளாதாரக் கோட் பாடாகும். ஒரு நிறுவனத்தின் வளர்ச்சி அதனுடைய விற்பனை யைப் பொறுத்து அமையும். இவ்விற்பனையை அதிகரிக்க வேண்டுமானால்,மிகக் குறைந்த கட்டணத்தை விதிக்க வேண்டுவது இன்றிமையாததாகும். ஏறத்தாழ இக் கருத்தினை ஒட்டியே பேராசிரியர் கிளேசர் அவர்களின் கருத்தும் அமைவதைக் காணலாம். பொதுப்பயன் தொழிலொன்றின் விலைக்கொள் கையை ஆராய்ந்து பார்ப்போமேயானால், அத் தொழிலின் கட்டணவீதம் எனப்படுவது, நுகர்வோருக்கு வழங்கப்படும் பொருள்களின் விலையினைக் குறிப்பிடுகிறதென்றும், இவ்விலை

யானது கூட்டுச் செலவின் ஒரு பகுதியையே குறிக்கின்றதென்றும் கூறலாம். வாடிக்கையாளர்கள் தேவைக்கேற்றவாறே பொருள்களின் மதிப்பும் தீர்மானிக்கப்படுமென்பதையும் அறிதல்வேண்டும். இவ்வாறு தீர்மானிக்கப்பட்ட பொருள்களின் விலையில் அவ்வப்போது ஏற்படுகின்ற மாறுதல்கள், ஒரு நிறுவனத்தால் மிக உன்னிப்பாகக் கவனிக்கப்பட்டு, பின்னர் ஏற்றதொரு விலை நிர்ணயிக்கப்படுமாதலால் தொழிலை நடத்துகின்ற நிர்வாகத்தினரிடமே இவ்விலைக் கொள்கையை விட்டுவிடவேண்டும்.*

பொதுப்பயன் தொழில்களின் கட்டணவீதம் பற்றி ஆராய்ச்சி செய்வதற்கென நியமிக்கப்பட்ட வணிகக்குழு ஒன்றின் கருத்துப்படி, "ஒரு நிறுவனத்தின் நிலையான மற்றும் கூட்டுச் செலவுகள் என்னும் பளுவினை, அதனுடைய வாடிக்கையாளர்கள் பலரும் குறிப்பிட்ட கட்டணத்தை அளிப்பதன்மூலம் பகிர்ந்து கொள்வர். பொருள்களின் அல்லது பணிகளின் உண்மையான மதிப்பினை அதனுடைய தேவைக்கேற்றவாறு கணக்கிட்டு அறிதல் நிறுவனத்தின் நிருவாகத்தைச் செவ்வனே செய்யப் பெரிதும் உதவும்" என்று நம்பப்படுகிறது.

டாக்டர் ஜான் பாயர் (John Bauer) கருத்தின்படி, "ஒரு பொதுப்பயன் தொழிலின் பொருள்களுக்கான கட்டணம் அவற்றின் உற்பத்திச் செலவினையும் ஏனைய பிற கூட்டுச்செலவினையும் பொறுத்தே தீர்மானிக்கப்பட வேண்டும். மேலும் வாடிக்கையாளர்களின் தேவையை (நுகர்ச்சி அளவினை) அதிகப்படுத்துவதே கூட்டுச் செலவுத் தொகைப் பகிர்வின் முக்கிய குறிக்கோளாக இருத்தல் வேண்டுமென்றும் அவர் எண்ணுகிறார். விலைக்கேற்றவாறு தங்களது தேவையின் அளவினை மாற்றிக் கொள்ளாத நுகர்வோரிடமிருந்து, அதிக அளவுக் கட்டணத்தை வசூலித்தல் முறையானதேயாகும். டாக்டர் பாயர் மேலும் கூறுகையில், "வாடிக்கையாளர்களின் தேவைக்கேற்றவாறு விதிக்கப்படும் வெவ்வேறு கட்டணங்களின் மூலம் (1) ஒரு நிறுவனம் உயர்ந்த அளவு வருவாயை எட்டவேண்டும் என்றும் (2) நிறுவனத்தின் உற்பத்தியில் மிகச்சிறந்த முறைகளைக் கடைப்பிடிப்பதன் மூலம், தேவையற்ற செலவுகளைக் குறைத்து, அதன் மூலமாக அதிக அளவு இலாபத்தினை ஈட்டவேண்டு"மென்றும் கருதுகின்றார். இக் கருத்துகளை ஒட்டியே, டாக்டர் ஜி.பி. வாட்கின்ஸ் (Watkins) அவர்கள் 1821ஆம் ஆண்டு, தமது நூலில் "வேறுபாட்டு விலைக்கொள்கையின்மூலம், ஒரு நிறுவனத்தின்

* 1. G. P. Watkins—Elastical Rates - p - 191.
* 2. Professor Glaeser—Outlines of Public Utility Economics

விற்பனையை மிக எளிதாக அதிகரிக்க முடியும்" என்று குறிப்பிட்டுள்ளார். மேற்காணும் கருத்துகளைத் தொகுத்துப் பார்க்கும் போது, பொதுப்பயன் தொழில்களின் கட்டணவீதம், அவற்றின் மொத்த செலவுத் தொகையினையும், நுகர்வோரின் தேவையளவைப் பொறுத்தும் நிர்ணயிக்கப்படுகின்றது என்ற கருத்தினை ஏற்றுக் கொள்கின்றோம். மேலும், வேறுபாட்டு விலைக்கொள்கையைப் பயன்படுத்துவதன்மூலம், பலவகை நுகர்வோரிடமிருந்து, அவர்களுக்கான கட்டணத்தை வசூலித்து உயர்ந்த அளவு வருவாயினை ஈட்ட முடியும் என்ற உண்மையையும் நாம் உணருகின்றோம்.

**கட்டணப் பட்டியலும் சட்டக்கோட்பாடுகளும் (Rate Schedules and Legal Requirements)**

பொதுமக்களுக்கு அளிக்கப்படும் பல வகையான பொருள்களுக்கும், பணிகளுக்கும் வெவ்வேறு கட்டணங்களை விதித்து அவற்றினை ஒரு பட்டியலாகத் தயார் செய்ததும், அப் பட்டியலை எவரும் பார்வையிட அனுமதி வழங்கப்படுவதுண்டு. ஒவ்வொரு கட்டணப்பட்டியலும், பின்வரும் குறிப்புகளைத் தன்னுள் கொண்டதாக அமையும் :

(1) வசதியின் தன்மை.

(2) அதனை வாங்குகின்ற வாடிக்கையாளரின் பிரிவு.

(3) சந்தையில் விற்கப்படுகின்ற பொருள்களின் அல்லது பணிகளின் அளவு.

(4) எங்கெந்தச் சந்தைகளில் இது விற்கப்படுகின்றது என்ற குறிப்பு.

(5) விதிக்கப்பட்ட குறைவான கட்டணம்.

(6) நுகர்வோருக்கு விதிக்கப்பட்ட கட்டணத்தில் அவ்வப்போது ஏற்படும் மாறுதல்கள்.

சட்டத்தின் கோட்பாடுகளுக்கேற்பப் பார்ப்போமேயானால், ஒரு நிறுவனத்தின் கட்டணம் "நியாயமானதாகவும், முறையானதாகவும்," இருக்கவேண்டும். அவ்வாறன்றி, வாடிக்கையாளர்களை அவர்களது இனத்தின் பெயராலோ, நிதிநிலையின் அடிப்படையிலோ வேறு எந்தக் காரணத்திற்காகவோ, வேறுபடுத்துவதும், முறையற்ற கட்டணங்களை அவர்களிடமிருந்து வசூலிப்பதும் தவறானது. பொதுப்பயன் தொழில்கள் பலவும், அவற்றை முறைப்படுத்துவதற்கென ஏற்படுத்தப்பட்ட 'கட்டுப்பாட்டுக் குழுக்க'ளால் ஒழுங்குபடுத்தப்படுகின்றன

இந் நிறுவனங்களின் கட்டணவீதமும், இக் குழுக்களால் முறை செய்யப்பட்டபின்னர் அனுமதிக்கப்படுகின்றன. எனவே, ஒரு நிறுவனம் தனது வாடிக்கையாளர்களுக்கென விதிக்கின்ற கட்டணத்தை, அரசின் அல்லது கட்டுப்பாட்டுக் குழுக்களின் முன்அனுமதியின்றி மாற்றி அமைக்க இயலாது. பொருள்கள் மிகவும் இன்றியமையாதவையாதலால், எத்தகைய விலையையும் நிர்ணயிக்கலாம் என்ற மனப்பாங்கினை இந் நிறுவனங்கள் கொள்ளலாகாது. மேலும், இக் கட்டணவீதத்தினை மாற்றி அமைக்கும்போது (குறிப்பாக உயர்த்தும்போது) குறைந்தது 30 நாள்களுக்கு முன்னரே, கட்டண உயர்வுபற்றி வாடிக்கையாளர்களுக்குத் தெரிவிக்க வேண்டும். அதன் பின்னர், அதிகாரிகளின் அனுமதி கிடைத்ததும், புதிய கட்டணவீதத்தை அமுலுக்குக் கொண்டுவர எவ்விதத் தடையுமிராது. சில சமயங்களில், இந் நிறுவனங்களின் புதிய கட்டணவீதங்கள் பொது நலனுக்கு ஊறு விளைவிப்பதாக இருக்குமென்று கருதப்பட்டால், அவற்றினை அமுலாக்க அனுமதி வழங்கப்படமாட்டாது. மேலும் எது நியாயமான கட்டணம் என்பதைத் தீர்மானிப்பதில், குறிப்பிட்ட நிறுவனத்திற்கும் அதனை முறைப்படுத்தும் அதிகாரிகளுக்குமிடையே ஒருமித்த கருத்து ஏற்பட சிறிது அவகாசம் வழங்கப்படும். இக் கால இடைவெளிக்குள் இரு சாராருக்குமிடையே, ஒருமித்த கருத்து ஏற்படாதுபோனால், நிறுவனத்தின் புதிய கட்டணவீதத்தை அமுலாக்குவதில் தடையேதுமில்லை. இருப்பினும், இது குறித்துப் பின்னாள்களில் ஏதேனும் கருத்து வேறுபாடோ சட்டபூர்வமான சிக்கல்களோ எழுமேயானால் அப்போது புதிய கட்டணவீதம் ரத்து செய்யப்படும். இதைத் தவிர முன்கூறியவாறு, அரசின் அனுமதி பெற்றுப் புதிய கட்டணத்தை அமுலாக்கும்போதும், வாடிக்கையாளர்களில் எவரேனும், இதற்குத் தம்முடைய எதிர்ப்பினைத் தெரிவிக்க முயன்றால், அவர் நீதிமன்றத்தில் தமது கருத்தினை எடுத்துரைக்கலாம்.

ஒரு பொதுப்பயன் தொழிலின் வருவாய்த் தேவையினையும், அதனுடைய உற்பத்திச் செலவினையும் கணக்கிட்டு அதற்கேற்ப அத் தொழிலின் கட்டணவீதம் நிருணயிக்கப்படும். அதற்கெனக் குறிப்பிட்ட ஒரு முறையும் உண்டு. அதன்படி, ஒரு நிறுவனத்தின் புதிய கட்டணவீதத்தை அமுலாக்குவதற்கு,

(1) முதலில், நிறுவனத்தின் புதிய பட்டியல் தயார் செய்யப்பட்டு, அதனை அரசிடமோ பொதுப்பயன் தொழில்களை முறைப்படுத்தும் குழுவினிடமோ, தாக்கல் செய்யவேண்டும். இதற்கான உத்தரவை அரசே வழங்கும். தாக்கல் செய்யப்பட்ட இப் பட்டியலில் கண்டுள்ள கட்டணம், நிறுவனத்தால்

வழங்கப்படுகின்ற பொருள்களின் மதிப்பிற்கு ஈடானதாக இருத்தல் வேண்டும்.

(2) இரண்டாவதாக, இப் பட்டியலைத் தாக்கல் செய்ததும், (அரசின் அல்லது) கட்டுப்பாட்டுக்குழுக்களிலுள்ள, அலுவலர்கள், இதனை நன்கு ஆராய்ந்த பின்னர் ஒரு குறிப்பிட்ட காலம் வரை, இக் கட்டணங்கள் அமுலாக்கப்படும். இதனோடு தொடர்பு கொண்ட எவரேனும், தங்களது கருத்தினைத் தெரிவிக்கவே இவ்வாறு ஒரு குறிப்பிட்ட காலம்வரை புதிய கட்டணங்கள் அமுலாக்கப்படுகின்றன.

(3) இக் கட்டணங்களுக்கு எந்தவித மறுப்பும் இல்லாது போனால், அவை நடைமுறையில் செயலாக்கப்படுகின்றன என்று அறிவிக்கப்படும். எதுவாயினும் கட்டுப்பாட்டுக் குழுவினைச் சார்ந்தோர் எந்த நேரத்திலும், எந்தக் கருத்துப்பற்றியும் தங்களது முரண்பாட்டினைத் தெரிவிப்பதற்குத் தடையேதுமில்லை.

(4) பொதுமக்களிடமிருந்தோ, கட்டுப்பாட்டுக் குழுவினரிடமிருந்தோ ஏதேனும் கருத்து முரண்பாடு தோன்றினால், முதலில் சட்டத்தின் துணையை நாடாது தீர்ப்பு வழங்க ஏற்பாடு செய்யப்படும். அதன் பின்னரும். எவ்வித சமரசமும் ஏற்படவில்லையானால் சட்டத்தின் துணையை நாடுவதைத் தவிர வேறு வழியில்லை.

(5) இறுதியில் தீர்மானம் கட்டணவீதம், கட்டுப்பாட்டுக் குழுவின் (அல்லது அரசின்) ஆணைமூலம் அமுலாக்கப்படும்.

மேற்கண்ட வழிகளைக் கையாளுவதன்மூலம் ஒரு பொதுப் பயன் தொழிலின் புதிய கட்டணவீதம் பொதுமக்களிடையே அமுலாக்கப்படும்.

வாணிகச் சுழல்களின் காரணமாகப் பொருள்களின் விலையில் மாற்றங்கள் ஏற்படும்போது, பொதுப்பயன் தொழிலின் கட்டணவீதங்களும் மாறுபடுகின்றன. மின்திறனை வழங்கும் நிறுவனங்கள், எரிவாயு வழங்கும் நிறுவனங்கள் போன்றவற்றில் விலை மாற்றத்தின் காரணமாக ஏற்பட்ட கட்டண மாறுதல்களைச் சரிவரக் கணக்கிட முடிகின்றது. இத்தகைய தொழில் நிறுவனங்கள் தங்களது கட்டணப்பட்டியலில் சிலவகைப் புதிய கட்டணங்களைத் தெரிவித்திருக்கும். சந்தையில் ஏற்படும் மாற்றம், விலை ஏற்ற இறக்கங்கள், அவற்றின் கால அளவு போன்றவற்றைப்பொறுத்து,

அதற்கேற்ற ஒரு கட்டணம் (இப் பட்டியலிலிருந்து தேர்ந் தெடுத்து) அமுலாக்கப்படும்.

**பொருளாதாரக் கோட்பாடுகளும், பொதுப்பயன் தொழில் களின் கட்டணமும்**

பொதுப்பயன் தொழில் நிறுவனங்களின் கட்டணவீதத்தை அமைப்பதுபற்றி இதுகாறும் விரிவாக ஆராய்ந்தபின்னர், அக் கட்டணத்தின் பொருளாதார விளைவுகளையும் ஆராய்தல் நன்மை பயக்கும். ஆனால், குறிப்பிட்டுச் சொல்லக்கூடியதும், வரையறுக் கப்பட்டதுமான எவ்விதப் பொருளாதாரக் கோட்பாட்டினையும், இத் தொழில்களின் கட்டணவீதம் குறித்து, நாம் ஏற்றுக்கொள்வ தற்கில்லை. ஏனெனில், பொதுநலத்துடன் இயங்குகின்ற இந் நிறுவனங்களின் கோட்பாடு மற்ற நிறுவனங்களிலிருந்து தனித்தும், மாறுபட்டதுமாக இருக்கின்றது. மேலும், அவ்வப் போது அந் நிறுவனத்தில், வாணிகச் சகடத்தின் காரணமாக ஏற்படுகின்ற மாறுதல்களுக்கேற்பக் கட்டணவீதக் கொள்கை களும் மாறுபடவே செய்கின்றன. எனவே, இத் தொழில்களின் கட்டணவீதம் பற்றிய வரையறுக்கப்பட்ட பொருளாதாரக் கொள்கைகள் ஏதுமில்லை. இந் நிலை வருந்தத்தக்கதெனினும், தவிர்க்க இயலாத ஒன்றாகும். இதற்குக் காரணமாகப் பெரு மளவில் முதலீட்டினைச் செய்து, ஏராளமான கருவிக்கலன்களைப் பயன்படுத்தி, உற்பத்தி செய்கின்ற பொதுப்பயன் தொழில் களின் அன்றாட நிறுவனம், பொருளியல் துறை வல்லுநர்களால் இயக்கப்படுவதைக் காட்டிலும், பொறியியல் துறையினரால் இயக்கப்படுவதைக் கூறலாம்.

பேராசிரியர் ஜேம்ஸ், சி. பான்பிரைட்* என்பவரின் கருத்துப் படி, ஒரு நிறுவனத்தின் கட்டணவீதத்தை நிருணயிப்பதில் கீழ்க்காணும் இடையூறுகள் அல்லது சிக்கல்கள் ஏற்படுகின்றன :

(1) கட்டணப்பட்டியல்களைத் தயார் செய்வதிலும், அவற்றை அமுலாக்குவதிலுமுள்ள சிக்கல்கள்

(2) ஒரு பொருளுக்கான தேவை, அளிப்பு என்னும் இவ் விரண்டு குறிப்புகளையும் சரிவர அறியாதிருப்போர் கட்டண அளவினைத் தீர்மானிக்கும்போது ஏற்படு கின்ற குழப்பம்.

(3) பல்வேறு வகையான நுகர்வோருக்கும் அவரவர்களின் நுகர்ச்சிக்கு (Consumption) ஏற்ப, வெவ்வேறு

*Professor James C. Bonbright, "Principles of Public Utility."

வகையான கட்டணங்களை விதிப்பது நடைமுறையில் அவ்வளவு எளிதான செயலாக இருப்பதில்லை.

ஒரு பொதுப்பயன் தொழிலின் பொருள்களுக்கான விலையை நிருணயிப்பதில் ஏற்படக்கூடிய சிக்கல்களுக்கு மேற்குறிப்பிட்ட செய்திகளும் காரணங்களாக இருக்கின்றன. அவற்றுள், இறுதியாகக் குறிப்பிடப்பட்டுள்ள காரணம் நன்கு ஆராயத் தகுந்தது.

பொருளாதாரக் கோட்பாடுகளின்படி இந் நிறுவனங்களின் விலைக் கொள்கையை ஆராய்வோமேயானல், நமது முடிவு மிகச் சரியானதாக அமைவதில்லை. இருப்பினும், சில ஒப்பீட்டு முடிவுகளை (Comparative Conclusion) யாவது நாம் ஏற்படுத்த முடிகிறது. சான்ருக, ஒரு நிறுவனத்தின் விலைக்கொள்கை 'நியாயமானது' என்ரே 'நியாயமற்றது' என்ரே 'சிறந்தது' என்ரே 'சிறந்ததன்று' என்ரேதான் கூறமுடியுமே தவிர, எவ்வகையில் சிறந்தது என்ற விஞக்களுக்கெல்லாம் விடையிறுக்க முடியாது. பொருளாதார வல்லுநர் ஒருவர், தம்முடைய நிறுவனத்தின் கட்டண அமைப்பையும், விலைக்கொள்கையையும் பொதுவாக ஆராய முடியுமே தவிர, இந்த முறைதான் பின்பற்றப்படவேண்டும் என்று குறிப்பிட்டுக் கூறமுடியாது. இது ஒரு குறைபாடாகவே கருதப்பட்டாலும், இக் குறைபாட்டினைப் போக்கும்வண்ணம் பேராசிரியர் பான்பிரைட் (Bonbright) அவர்களின் ஆராய்ச்சி அமைந்துள்ளது. அதன்படி, ஒரு நிறுவனத்தின் விலைக்கொள்கை சில குறிக்கோள்களைக் கொண்டிருக்க வேண்டும். அவை,

(1) நிறுவனத்தை எவ்வித நிதிபற்ருக்குறையுமின்றிச் செவ்வனே நடத்தும் வகையில் விலைக் கொள்கையின்மூலம் வருவாய் கிடைக்கவேண்டும்.

(2) நிறுவனத்தின் உற்பத்திச் செலவினை நுகர்வோர் அனைவரிடமும் நியாயமான முறையில் பகிர்ந்தளிக்க வேண்டும்.

(3) நிறுவனத்தின் தேவையற்ற செலவுகளைக் குறைப்பதுடன், அதனுடைய பணியினைத் தீர்மானிக்கும் முறையில் இக் கட்டணமுறை (விலைக்கொள்கை) அமைந்திருக்கவேண்டும்.

பொருளாதாரக் கோட்பாடுகளைப் பயன்படுத்தி, ஒரு பொதுப்பயன் தொழிலின் கட்டணத்தை (விலையை)த் தீர்மானிப்பதன் நோக்கங்களாக மேற்காணும் கருத்துகளைக் கூறினேம். இதன்மூலம் நல்லதொரு கருத்தினை முடிவாக ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று நாம் எண்ணியபோதும், நமது நோக்கம் நிறைவேறுவதில்லை. ஏனெனில், ஏட்டளவில் இருக்கக்கூடிய

இப் பொருளாதாரக் கோட்பாடுகளைப் பயன்படுத்தி, நடைமுறையில் ஒரு நிறுவனத்தின் இலாப, நட்டத்தினைத் தீர்மானிப்பதென்பது அவ்வளவு எளிதான கருத்து அன்று. மேலும் இம் முயற்சியில் சில குறைபாடுகளும் காணப்படலாம். குறிப்பாக விலைக்கொள்கையைத் தீர்மானிக்கும் முயற்சி சமுதாயத்தின்மீது தேவையற்ற கட்டணத்தை விதிப்பதாக அமைகின்றது. மேலும், பொருளாதார வல்லுநர்களின் கருத்துப்படி, ஒரு பொருளுக்கான விலை அப் பொருளின் "இறுதிநிலைச் செலவினைப்" (Marginal Cost) பொறுத்து அமையவேண்டும் என்பதாகிறது. அதாவது, ஒரு நிறுவனம் தனது உற்பத்திச்செலவு, இறுதிநிலைச்செலவு, அளவினை எட்டும் வரையில் உற்பத்தியைப் பெருக்கிக் கொண்டே போகவேண்டும். ஏனெனில், 'இறுதிநிலைச்செலவு' எட்டியதும், ஒரு பொருளை விற்பதன்மூலம் கிடைக்கக்கூடிய இலாபத்தொகை அப் பொருளை உற்பத்தி செய்யும் செலவுத்தொகைக்குச் சமமாகக் காணப்படும். இதற்கு மேலும், இப் பொருளை உற்பத்தி செய்தால், உற்பத்திச் செலவு மட்டும் அதிகரித்து, இலாபத்தொகை ஏதும் கிடைக்காமற் போகக்கூடிய நிலை ஏற்படும். எனவே, இலாபத்தொகையும் இறுதிநிலைச்செலவும் சமமாக இருக்கும் நிலைவரை பொருள்களின் உற்பத்தி தொடரலாம். இந் நிலையில், நிறுவனத்தின் வருவாய் பாதிக்கப்படுவதில்லையா என்ற ஐயம் ஒருவர் மனத்தில் எழலாம். ஆம், உற்பத்திச் செலவும், கிடைக்கின்ற இலாப அளவும் ஒன்றாக இருக்கும்போது நிறுவனத்தின் வருவாய் குறைந்து போய்விடும். இதனைச் சரிக்கட்டும் வகையில், பொதுப்பயன் தொழில்களின் நட்டத்தில் ஒரு பங்கினை அரசே ஏற்றுக் கொள்ளும். அதாவது, இத் தொழில் நிறுவனங்களின் உற்பத்திச் செலவில் ஒரு பகுதியை உதவித்தொகை (Subsidy) ஒன்றினை அளிப்பதன்மூலம் அரசு சரிக்கட்டுகின்றது. இருப்பினும், தொடர்ந்து பொருள்கள் உற்பத்தி செய்யப்படும்போது அரசு அளிக்கின்ற உதவித்தொகையைக் காட்டிலும், இறுதிநிலை செலவின் அளவு மிகுந்துபோய்விடும் நிலை ஏற்படலாம்.

இக் கருத்தினை பேராசிரியர் ஹெரால்டுஹோட்டலிங் போன்றோரும் ஒப்புக்கொள்கின்றனர்.* மேற்காணும் இறுதிநிலைச் செலவுக்கொள்கையைப் பயன்படுத்துவதில் எவ்வித நன்மையும், சிறப்புச்சலுகையும் ஏற்படுவதில்லை என அமெரிக்க-பிரிட்டிஷ் நாடுகள் கருத்துத் தெரிவிக்கையில், இக் கொள்கையைக் கடைப்பிடிப்பதால் நிர்வாகத்தின் சுமை வெகுவாகக் குறைகின்றது

*Professor Harold Hotelling— 'The General Welfare in Relation to Probelms of Taxation and of Railway and Utility Rates

என ஐரோப்பிய நாடுகளின் தொழில் நிறுவனங்கள் எண்ணு கின்றன*

பொதுப்பயன் தொழில்களின் விலைக்கொள்கையைப்பற்றிப் பொதுவாக ஆராய்ந்தபின்னர், குறிப்பிட்ட சில நிறுவனங்களில் அவை எவ்வாறு செயற்படுத்தப்படுகின்றன என்று பார்ப்போம். இம் முயற்சியில் முதலாவதாக மின்திறன் வழங்கும் நிறுவனங் களைப்பற்றிக் காண்போம்.

**மின்திறன் வழங்கும் நிறுவனத்தின் கட்டணம்** (Electricity Rates)

நாள்தொடங்கி, மாலைவந்து, இரவுபடர்ந்து, மீண்டும் வைகறை வரும்வரையிலும், உலகின் எல்லா நாடுகளிலும் எல்லா இடங்களிலும் மின்திறன் பயன்படுத்தப்பட்டுக்கொண்டே இருக்கின்றது. வணிகர், வேதியர், மருத்துவர், பேராசிரியர், அமைச்சர், உள்ளவர், இல்லாதவர் என்ற எத்தகைய வேறு பாடுமின்றி அனைவரும் தங்களது அன்றாட வாழ்க்கையில் பயன் படுத்தும் மின்திறன் அளவு மிகவும் கணிசமானது. அதிக அளவில், அதிக எண்ணிக்கையினரால் பயன்படுத்தப்படும் இம் மின்திறன் நியாயமான கட்டணத்தில் வழங்கப்படவேண்டும். எனவே; மின்திறன் வழங்கும் நிறுவனங்களின் கட்டணம் பற்றிய அல்லது விலைக்கொள்கை பற்றிய ஆராய்ச்சி மிக்க பயனுள்ள தாகும் என்பதில் ஐயமில்லை.

உலகெங்கிலுமுள்ள மின்சக்தி நிறுவனங்களின் செயல் முறை, அவற்றின் கட்டண அமைப்புமுறை நுகர்வோரால் நுகரப் படும் மின்திறன் கணக்கிடப்படுகின்றமுறை, மின்சக்தியின் மதிப்பு தீர்மானிக்கப்படும் முறை ஆகியவைபற்றிப் பின்வரும் பகுதிகளில் காண்போம். இந்தியாவிலுள்ள மின்திறன் நிறுவனங்கள் எவ்வாறு இயங்குகின்றன என்பதுபற்றிப் பின்னர் இந் நூலின் வேறொரு பகுதியில் காண்க.

**மின்திறன் நிறுவனங்களின் தோற்றமும் வளர்ச்சியும்**

மின்சக்தியை உலகிற்கு அறிமுகப்படுத்திய பெருமை மைக்கல் பாரடே என்பவரையே சாரும். இவர் 1831ஆம் ஆண்டு டைனமோ என்ற கருவியின்மூலம் மின்திறனை வெளிக் கொணர்ந்தார். எனினும், 1879ம் ஆண்டு வெற்றிடம் கொண்ட பல்புகள் தாமஸ் எடிசனால் கண்டுபிடிக்கப்படும்வரை மின்திறன்

* C.J. Oorb "Decreasing Costs as Problem of Welfare Economics,

வழங்கும் தொழில் நிறுவனங்கள் அவ்வளவாகப் பிரபலமடைய வில்லை. இதனையடுத்து, 1880ஆம் ஆண்டு அமெரிக்கநாட்டின் நியூயார்க் நகரில் எடிசன் எலெக்ட்ரிக் இலுமினேடிங் கம்பெனி (Edison Electric Illuminating Company) என்னும் நிறுவனம் ஒரு மில்லியன் டாலர் முதலீட்டுடன் நிறுவப்பட்டது. இதனைத் தொடர்ந்து உலகின் முதலாவது மின்சக்தி வழங்கும் நிறுவனம் 1882ஆம் ஆண்டு பர்ல் ஸ்ட்ரீட் ஸ்டேஷன் (Pearl Street Station) என்னும் பெயருடன் இயங்கத்தொடங்கியது. அதன்பின்னரே, உலகெங்கும் மின்திறன் வழங்கும் நிறுவனங்கள் தோற்றுவிக்கப் பட்டன.

தொடக்கநிலையில், இந் நிறுவனங்கள் அளவில் மிகச்சிறிய தாகவும், ஒரு சில நகரங்களை மட்டுமே பணி எல்லையாகவும் கொண்டு இயங்கின. எடிசன் நிறுவனம்மட்டும் நேரடி மின் திறனை வழங்குவதாகவும், ஏனைய நிறுவனங்கள் மாற்று மின் திறனை (Alternative Current) அளிப்பதாகவும் இருந்தன. நேர் மின்திறனை உற்பத்திசெய்து, அதனை மாற்றி அனுப்புவதில் (Transmission) கணிசமான மின்சக்தி வீணாகியது. இக் குறையைப் போக்கும்வண்ணம் மாற்றுமின்சக்தி முறை அமைந் துள்ளது. ஏனெனில், மின்சாரம்மாற்றும்கருவி 1898ஆம் ஆண்டு கண்டுபிடிக்கப்பட்டதுடன் இக் கருவி மாற்று மின்சக்தியில் மட்டுமே இயங்குவதாக அமைந்ததுவே ஆகும். மேலும், இம் மின்சக்தியை உயர்ந்த அளவு அழுத்தத்துடன் (voltage) வெளிப்படுத்தி, அதனை வழங்கும்போது குறைந்தஅளவு விரயமே ஏற்படுகிறது. எனவே, மாற்றுமின்சக்தியை ட்ரான்ஸ்பார்ம்கள் மூலம் அதிக அழுத்தத்துடன் வழங்கும்போது, இந் நிறுவனங்கள் தமது பணிஎல்லையை விரிவாக்க முடிகின்றது. இது போன்றே, மின்திறன் உற்பத்தியில் ஏற்பட்ட ஏனைய சிக்கல்களும் 19ஆம் நூற்றாண்டின் இறுதிக்குள் நீக்கப்பட்டன. எனினும், இந் நிறுவனங்கள் தங்களது தொழிலறிவில் தொடர்ந்து ஆராய்ச்சி செய்வதையும் அதன்மூலம் நல்ல கருத்துகளைக் கண்டறிவதையும் நிறுத்தவில்லை. சான்றாக, நிலக்கரியைக் கொண்டு நீராவியை வெளிப்படுத்தி அதன்மூலம் மின்திறனை உற்பத்தி செய்யும்முறை வெகுவாகக்குறைந்துவிட்டது. 1902ஆம்ஆண்டு ஒரு கிலோவாட் மின்திறனை உற்பத்திசெய்ய 6·7பவுண்டு நிலக்கரி தேவைப் பட்ட நிலைமாறி 1960ஆம் ஆண்டு அதே அளவு மின்திறனை உற்பத்திசெய்ய ஒரு பவுண்டுக்கும் குறைவான நிலக்கரி போதும் என்ற நிலை ஏற்பட்டது. இதற்குக் காரணமாக, தொழிலறிவில் ஏற்பட்ட மாற்றங்களையும் முன்னேற்றத்தையும் கூறலாம்.

மேலைநாடுகளில் ஆங்காங்கே இயங்கிவந்த இந் நிறுவனங்கள் பலவும், காலப்போக்கில் ஒன்ருெடொன்று இணைந்து செயற் படத் துவங்கின. குறிப்பாக, முதல் உலகப்போருக்கு முன்னரும், அதன் பின்னரும் மின் திறன் வழங்கும் நிறுவனங்கள் பல ஒன்று சேர்ந்து, தங்களது தொழிலறிவு, கருவிக்கலன்கள் ஏனைய பிற சொத்துகளையும் ஒன்றுசேர்ந்து உற்பத்திச் செய்துவந்தன. போருக்குப்பின்னர், உலகெங்கிலும் ஏற்பட்ட நிதிப்பற்ருக் குறையும், இச் சிறு நிறுவனங்கள் மறைந்து, பெரிய நிறுவனங்கள் உருவாகக் காரணமாயிற்று. இதன் பயனுக, நுகர்வோருக்குக் குறைந்த செலவில் மின்சக்தியை வழங்கிட இந் நிறுவனங்களால் முடிந்தது.

**மின்திறன் நிறுவனங்களின் சிறப்புத் தன்மைகள்**

பொதுப்பயன் தொழில்கள் பலவற்றையும் போலவே, மின் திறனை உற்பத்திசெய்து வழங்கும் நிறுவனம் பொதுநல ஈடு பாட்டுடன் செயற்படுகிறதெனினும், இத் தொழில்களுக்கெனச் சில சிறப்புத்தன்மைகள் உள்ளன. பிற நிறுவனங்களின் கட்டண அடிப்படை, கட்டணவீதம், வருவாய்வீதம் போன்றவற்றைத் தீர்மானிப்பது எளிதான செயல் இல்லையென்ருலும், மிகவும் சிக்கலானதுமில்லை. ஆனல், மின்சக்தியை உற்பத்தி செய்த பின்னர், அதனை, மாற்றியனுப்புவதில் (Transmitting) ஏற்படு கின்ற செலவு, நுகர்வோருக்கு அதனை வழங்குகின்ற செலவு, குறிப்பிட்ட கால முடிவில் வாடிக்கையாளரின் நுகர்ச்சியள விற்கான கட்டணம் போன்றவற்றைத் துல்லியமாகக் கணக் கிடுவது மிகவும் சிக்கலான செயலாகும். வாடிக்கையாளர் பல வகைப்பட்டவர்களாக இருப்பதாலும், வெவ்வேறு பயன் பாட்டிற்காக, மின் திறன் வழங்கப்படுவதாலும் இந் நிறுவனங் களில் வேறுபாட்டு விலைக்கட்டணத்தை (Differential Pricing) அமுலாக்க வேண்டியுள்ளது. இரண்டாவதாக, இந் நிறுவனங் களின் நிலையான செலவுகள் (Fixed costs) மிகவும் உயர்ந்து காணப்படுகின்றன. அதிக அளவில் முதலீட்டினைச் செய்து நிலையான சொத்துகளை வாங்கி, இந் நிறுவனத்தில் மின் உற்பத்தி செய்யப்படுவதால், இதற்கான நிலையான செலவுத் தொகையும் அதிகரிக்கநேரிடும். சான்ருக, சொத்துகளின் மீதான தேய்மானம், வரிகள் போன்ற பல்வகைச் செலவுகளைக் குறிப்பிடலாம், இவற்றைத்தவிர, பொருளினை (மின் திறனை) நுகர்வோருக்கு வழங்கிட ஏற்படும் செலவும், நுகர்வோரின் இருப்பிடங்களில் ஏதேனும் கருவிகள் அமைக்கப்பட்டால், அதற்கான செலவும், நிலையான செலவுத்தொகையுடன் சேர்க்கப் படும். இனி, அனைத்தையும் நுகர்வோரிடமிருந்து வசூலிக்கும்

கட்டணத்திலிருந்து சரிசெய்தாகவேண்டும். எனவே, நுகர்வோருக்கு அளிக்கப்படும் மின்திறனுக்கான கட்டணம் நிறுவனத்தின் செலவுத்தொகைக்குச் சமமாக இருப்பதுடன் அதனுடைய வளர்ச்சிக்கு வழிசெய்யும் வகையில் ஓரளவு இலாபத்தொகையும் கிடைக்கும்வண்ணம் இருக்கவேண்டும்.

இனி, இந்நிறுவனங்களின் நிலையான செலவிற்கும், உற்பத்திச் செலவிற்குமிடையேயுள்ள தொடர்பினைப் பார்ப்போம். நிலையான செலவு என்பது, இந்நிறுவனத்தின் உற்பத்தி அளவைச் சார்ந்து இருப்பதில்லை. அதாவது, தேய்மானம், வரிகள் போன்ற நிலையான செலவுத் தொகையின் அளவு, பொருள்களின் உற்பத்தி அளவு கூடினாலும், குறைந்தாலும் பாதிக்கப்படுவதில்லை. இதன் பொருள் என்னவெனில், ஒரு நிறுவனத்திலுள்ள நிலையான சொத்துகளின் (இயந்திரங்கள் போன்று) மதிப்பினைப்பொறுத்தே நிலையான செலவுத் தொகையும் மாறுபடுகின்றது என்பதாகும். தொழில் நிறுவனத்திலுள்ள சொத்துகள் அனைத்தும் அவற்றின் இறுதித் தகுதிவரை உபயோகிக்கப்பட்டால், அதன் விளைவாக நிறுவனத்தின் உற்பத்திச் செலவும் குறைந்து போகக்கூடும். இது மின்திறன் வழங்கும் நிறுவனத்தின் இரண்டாவது சிறப்புத் தன்மையாகும். இதனையொட்டி இந்நிறுவனங்களில் நிலையான சொத்துகள் பெருமளவில் வைக்கப்பட்டிருப்பதன் அவசியத்தைப் பார்ப்போம்.

(1) முதலாவதாக, வாடிக்கையாளரின் தேவையை அறிந்த பிறகே, அவர்களுக்குத் தேவையான அளவு மின்திறன் வழங்கப்பட வேண்டும். நுகர்வோரின் தேவைக்கேற்ப அவ்வப்போது மின்திறன் வழங்கப்படாவிடில், இந்நிறுவனம் இயங்குவதில் பயனில்லை.

(2) இரண்டாவதாக நுகர்வோரின் தேவையளவு சரிவர கணக்கிடப்பட வேண்டும். ஏனெனில், இவர்களது தேவையின் அளவு நாள்தோறும், வாரந்தோறும், ஏன், மாதந்தோறும்கூட மாறக்கூடியது. இம் மாற்றத்தினை 'லோட் கர்வ்' (Load Curve) மூலம் அறியலாம். இதன்மூலம், ஒரு குறிப்பிட்ட காலத்தில் நுகர்வோருடைய தேவையின் அளவினையும், மிகக் குறைந்த அளவினையும் சரிவரக் கணக்கிட்டு வைக்க வேண்டும். அப்போது தான் இதற்கேற்றாற்போல், உற்பத்தி அளவைச் சரிசெய்து நுகர்வோருக்கு வழங்க முடியும்.

(3) மூன்றாவதாக, மின்திறன் வழங்கும் நிறுவனங்களின் உற்பத்திமுறையைக் குறிப்பிடலாம். பிற பொருள்களைப் போன்று

இந் நிறுவனங்கள் தங்களது பொருளினை (மின்திறனை) முன் கூட்டியே தயாரித்துச் சேமித்து வைத்துப் பின்னர், நுகர்வோரின் தேவைக்கேற்றவாறு வழங்க இயலாது. நுகர்வோரின் தேவை எப்போதும் ஒரே சீராக இருப்பதில்லை. சில நேரங்களில் அவர்களது தேவை மிகுந்தும், மற்றும் சில நேரங்களில் குறைந்தும் காணப்படும். தேவை அதிகரிக்கின்ற நேரங்களில் உற்பத்தியை அதிகரித்தும், தேவை குறையும் நேரத்தில், உற்பத்தியைக் குறைத்தும், மின்திறனை வாடிக்கையாளர்களுக்கு வழங்க வேண்டும். உற்பத்தியைக் குறைப்பது என்பது எவராலும் எளிதாகச் செய்யக்கூடியதுதான். ஆனால், ஒரு நிறுவனத்தின் உற்பத்தியைத் தேவைக்கேற்றவாறு உடனடியாகப் பெருக்குவது என்பது அவ்வளவு எளிதான செயலன்று. நிறுவனத்தில் இதற்கான இயந்திரங்களும், கருவிகளும் இன்ன பிறவும் தயாராக இருந்தால்தான் உற்பத்தியைப் பெருக்க முடியும். எனவே, மின்திறன் வழங்கும் நிறுவனங்களின் நிலையான சொத்து அதிக அளவில் வைத்திருக்கப்படவேண்டுமென எண்ணுகின்றோம்.

மேற்காணும், சிறப்புத் தன்மைகளோடு இன்னும் சிலவற்றையும் கூறலாம். சான்றாக, மின்சக்தியை வழங்கும் நிறுவனங்கள், எவருக்கும் எந்த நேரத்திலும் பணி செய்யத் தயங்கக் கூடாது. மின்சக்திக்கான கட்டணத்தை அளிக்கத் தயாராக இருக்கும் வாடிக்கையாளர் ஒருவர், எந்நிலையைச் சார்ந்தவராயினும், அவருக்கு மின்திறன் வழங்கப்பட வேண்டும். இவ்வாறு தனது பணியினை அனைவருக்கும் செய்துவரும்போது, மின்உற்பத்திக் கருவிகள் பழுதடைதல் போன்ற தடங்கல் ஏற்பட்டால் உடனடியாக அவை பழுது பார்க்கப்பட்டோ, வேறு ஏற்பாடுகள் செய்யப்பட்டோ, நுகர்வோரின் தேவை கவனிக்கப்பட வேண்டும். இதற்கான 'ஆயத்த நிலையில்' இந் நிறுவனங்கள் எப்போதும் இருக்க வேண்டியுள்ளது. அடுத்து, மின்திறன் வழங்கும் நிறுவனங்களின் கட்டண வீதத்தை நிருணயிப்பதில் சில சங்கடங்கள் ஏற்பட வாய்ப்புள்ளது. ஏனெனில், இவற்றின் பெரும்பான்மையான நிலையான சொத்துகள், பெரும்பாலான நேரங்களில் இயக்கமற்று இருப்பதும், அவற்றின் நிலையான செலவு மிகுந்திருப்பதுந்தான் இதற்கான காரணமாகக் கருதப்படுகின்றது.

**சில சொற்றொடர்கள்**

இந் நிறுவனங்களின் விலைமதிப்புக் கொள்கையைப்பற்றி ஆழ்ந்து படிக்கும் முன்னர், அவற்றின் அன்றாட இயக்கத்தில்

கையாளப்படும் சில சொற்றொடர்களையும், அவற்றின் பொருளினையும் தெரிந்து கொள்வது இன்றியமையாதது.

முதலில் 'மின்சக்தி', 'மின்திறன்' என்ற இரண்டிற்குமுள்ள வேறுபாட்டினைக் காண்போம். இதுகாறும், இவ்விரண்டு சொற்களுமே ஒன்றாகக் கையாளப்பட்டதையும் நினைவிற்கொண்டு மேலே பார்ப்போம். 'மின்சக்தி' எனப்படுவது (Electricity Energy) மின் நிறுவனங்களிடமிருந்து பெறப்படும் பொருளையே 'மின்சக்தி' என நாம் குறிக்கின்றோம். இதனைக் கணக்கிட வேண்டுமானால், ஒரு மணிக்கு இத்தனை கிலோவாட் (kilowatt—hour( kwh) எனக் குறிப்பிட வேண்டும். 'மின் திறன்' என்பது ஆங்கிலத்தில் (Electric Power) எனப்படும். மின்சக்தியைப் பயன்படுத்தி, என்ன விகிதத்தில் வேலைகள் செய்யப்படுகின்றன என்பதைக் குறிக்கவே—மின்திறன்—என்ற சொல் கையாளப்பட்டது. அதாவது மின்சக்தியின் வேலை செய்யும் திறனையே இவ்வாறு குறிக்கின்றோம். இம் மின்திறனைக் கணக்கிட 'கிலோவாட்' (kilowatt—kw) என்ற அளவினைக் கையாள வேண்டும். பொதுவாக, 1 கிலோவாட் மின்திறன் (1000 வாட்டிற்குச் சமமானது) 1.34 குதிரைத் திறனைக் கொண்டது. இதனைக் கொண்டு ஒரு பவுண்டு எடையை ஒரு நிமிடத்தில், 33,000 அடி உயரத்திற்குத் தூக்கமுடியும் எனக் கணக்கிடப்பட்டுள்ளது.

அடுத்து, மின்சக்தி வழங்கும் நிறுவனம் ஒன்றிடமிருந்து மிக உயர்ந்த அளவுத்தேவையைக், குறிப்பிட்ட ஒரு நேரத்தில் எதிர்பார்க்கும்போது, அதனை 'பீக்ஃலாட்' (Peak load) அல்லது பீக் தேவை (Peak Demand) எனக் குறிப்பிடுவர். ஒரு வருடத்தின் பன்னிரண்டு மாதங்களுள், எந்த மாதத்தில், எந்த வாரத்தில், எந்தத் தேதிகளில் நுகர்வோரின் தேவை மிகஉச்சநிலையை எட்டும் என எதிர்பார்ப்பதே 'பீக்லோட்' என்ற முறையின் குறிக்கோளாகும். சான்றாக, திருவிழா நாள்களிலும், கிறிஸ்துமஸ், தீபாவளி போன்ற பண்டிகை நாள்களிலும் மின்சக்தி மிகுந்த அளவில் செலவழிக்கப்படும். இதற்கேற்ப, இந் நிறுவனம் தனது உற்பத்தியைச் சரிசெய்து கொள்ளும்.

**மின்திறன் கட்டணங்கள்**

ஏற்கெனவே குறிப்பிட்டது போன்று மின்சக்தி வழங்கும் நிறுவனங்கள் தங்களது பொருள்களுக்கென ஒரே விதமான கட்டணத்தை விதிக்க முடியாது. ஏனெனில், நுகர்வோர் பல விதமாகப் பிரிக்கப்பட்டு அவர்களுக்கு மின்திறன் வழங்கப்படுவதாலும், மற்றும் சில நேரங்களில், பலவிதமான நோக்கங்களுக்கு

மின்திறன் வழங்கப்படுவதாலும், மற்றும் சில நேரங்களில், பல விதமான, நோக்கங்களுக்கு மின்திறன் வழங்கப்படுவதாலும், இவ்வேறுபாடுகளுக்கு ஏற்றவாறே கட்டணம் விதிக்கப்பட வேண்டும். எனவே, இந் நிறுவனங்களின் கட்டணங்கள்

(1) மின்சக்தியின் மொத்த அளவினைப் பொறுத்தும்,

(2) சில நேரங்களில் நுகர்வோரின் எண்ணிக்கையைப் பொறுத்தும்,

(3) மற்றும் சில சமயங்களில், நிறுவனத்தின் உற்பத்தித் திறனைப் பொறுத்தும் மாறுபடும். இதனைத் தொடர்ந்து, நிறுவனத்தின் மொத்த உற்பத்திச் செலவினை மேற்குறிப்பிட்ட மூன்று வகைகளில் வேறுபடுத்திக் காட்டவேண்டும். இதற்கேற்பச் சில வகைச் செலவுகளையும் பார்ப்போம். எரிவாயு அல்லது தண்ணீர் கட்டணங்களைப்பற்றிக் குறிப்பிடும் முறையில், 'மின்சக்திக் கட்டணம்' என்றும் நாம் குறிப்பிடலாம். இதனைப் "பொருளுக்கான அடக்கம் அல்லது கட்டணம்' (Commodity Costs) என்றும் கூறலாம். அடுத்து, வாடிக்கையாளர் கட்டணம் எனப்படுவது (Customer Costs) அவர்களது இருப்பிடங்களிலுள்ள மீட்டரைக் கணக்கெடுக்கும் செலவு, கட்டணப் பட்டியல் தயார் செய்யும் செலவு, இப் பட்டியலிலுள்ள தொகையினை வசூலிக்கும் செலவு, நிறுவனத்திலுள்ள இயந்திரங்கள், கருவிகள் இவற்றைப் பழுது பார்க்கும் செலவு போன்றவற்றைத் தன்னடக்கியதாகும். மின் சக்தியை உற்பத்திசெய்யும்பொருட்டு இந் நிறுவனத்தால் பயன்படுத்தப்பட்ட எரிபொருளின் மதிப்பு, எரிபொருளைக் கையாளுவதற்காகும் செலவு, நிறுவனத்தை நிருவகிப்பதற்கு ஆகக் கூடிய செலவு போன்றவற்றையும் மொத்தமாக '(மின்)சக்திக் கட்டணம்" (energy costs) என்று குறிப்பிடுவர். இறுதியாக, நிறுவனத்தின் வருவாய்வீதம், இன்றியமையாத வரித்தொகைகள், வருடாந்திரத் தேய்மானச் செலவுகள், சிலவகை நிருவாகச் செலவுகள் போன்றவற்றின் கூட்டுத் தொகையைத் தேவையளவு அல்லது திறனளவுக் கட்டணம் (Demand or Capacity costs) என்று குறிப்பிடலாம். மின்சக்தி வழங்கும் எல்லா நிறுவனங்களிலும் மேற்காணும் பல்வகைக் கட்டணங்களும் தனித்தனியே கணக்கிடப்படவேண்டும். கட்டணப் பட்டியல்கள் வெவ்வேறு வாடிக்கையாளர்களுக்கு வெவ்வேறான கட்டணங்களை விதிக்க வேண்டியிருப்பதால், அதற்கான கட்டணப் பட்டியல்களும் தனித் தனியாகவே தயாரிக்கப்பட வேண்டும். இவற்றைத் தயாரிக்கும் முறைபற்றி, பின்வரும் பகுதியில் காண்போம் :

**குறிப்பிட்ட கட்டணப் பட்டியல் (Flat-Rate Schedule)**

இது மின்சக்தி வழங்கும் நிறுவனங்களால் முதன்முதலாகப் பயன்படுத்தப்பட்டுவந்த முறையாகும். இதன்படி, வாடிக்கையாளர் ஒருவரின் நுகர்ச்சி அளவினைப் பொருட்படுத்தாமல், குறிப்பிட்ட ஒரு கட்டணம், குறிப்பிட்ட ஒரு காலத்திற்கு வசூலிக்கப்படும். சான்றாக, ஒரு மாதத்திற்கு ஒருவரிடமிருந்து ரூ. 30-ஐ மின்சாரக் கட்டணமாக வசூலிக்கலாம். அவரால் உண்மையாகப் பயன்படுத்தப்பட்ட மின்சக்தியின் அளவு, இம் முப்பது ரூபாய் மதிப்பைக்காட்டிலும், குறைவாகவோ கூடுதலாகவோ இருக்கலாம். இதுவே குறிப்பிட்ட கட்டணப்பட்டியல் முறையாகும். இக் குறிப்பிட்ட கட்டணம், வாடிக்கையாளர் அனைவருக்கும் ஒன்றாக விதிக்கப்படமாட்டாது. மாறாக, வேறுபாடான கட்டணமே விதிக்கப்படும். ஆனால், நடைமுறையில் இதனை எவ்வாறு செயற்படுத்துவது என்ற வினா எழலாம். இதனை எளிதாகச் செய்யவேண்டுமெனில், வாடிக்கையாளர் ஒருவரின் இருப்பிடத்தில் எத்தனை மின்சார விளக்குகள் உள்ளனவென்றும், எத்தனை மின்சாரக் கருவிகள் இருக்கின்றனவென்றும் கணக்கெடுக்கவேண்டும். அதற்கேற்றாற்போல் அந் நபருக்கு விதிக்கப்படும் 'குறிப்பிட்ட கட்டணத்'தின் அளவு மாறுபடும். இம் முறை தற்போது அநேகமாக வழக்கிலில்லை. ஏனெனில், வாடிக்கையாளரால் பயன்படுத்தப்பட்ட மின்சக்தியின் சரியான அளவினைக் கணக்கிட இம் முறையில் வாய்ப்பேதுமில்லை. எனவே, தெரு விளக்குகளின் மின்சாரப் பயன்பாட்டினைக் கணக்கிடமட்டுமே இம் முறை பயன்படுத்தப்படுகின்றது என்பது குறிப்பிடத்தக்கது.

**நேரடி-மீட்டர் கட்டணப்பட்டியல் (Straight-Line-Metre-Rate Schedule)**

இம் முறையில், வாடிக்கையாளரால் பயன்படுத்தப்படும் மின்சக்தியின் அளவு எத்தகையதாக இருப்பினும், ஒரு குறிப்பிட்ட மீட்டர் அளவிற்கு உண்டான கட்டணம் இவ்வளவு என்று தீர்மானித்து அதன்பின்னர், நுகர்வோரால் பயன்படுத்தப்பட்ட மொத்த அளவு மின்சக்திக்கான கட்டணம் கணக்கிடப்படும். சான்றாக, (1) யூனிட் மின்சக்திக்கு, 30 பைசா வீதம் கணக்கிடப்படும் தற்போதைய முறையைக் கூறலாம். இம் முறையில் ஒரு குறைபாடும் உண்டு. அதாவது குறைந்த அளவில் மின்சக்தியைப் பயன்படுத்துவோருக்கும் அதிக அளவில் பயன்படுத்துவோருக்குமிடையில் எவ்வித வேறுபாடும் காணப்படுவதில்லை. உண்மையில், அதிக அளவில் ஒரு நிறுவனத்தின் பொருள்களைப் பயன்படுத்துவோருக்கு சில விசேட சலுகைகள் காண்பிப்பது

இயல்பு. அச் சலுகைகள் மின்சார நிறுவனங்களின் வாடிக்கையாளர்களுக்கு (இம் முறையின்படி) அளிக்கப்படுவதில்லை.

**கட்டமுறை மீட்டர் பட்டியல்** (Block System Metre Schedule)

குறைந்த அளவில் மின்சக்தியைப் பயன்படுத்துவோருக்கும், குடியிருப்புகளில் மின்சக்தியைப் பயன்படுத்துவோருக்கும், இம் முறை மிகவும் ஏற்றது. இதன்படி, குறிப்பிட்ட ஓர் அளவு வரை, மிகக் குறைந்த கட்டணம் வசூலிக்கப்படும். அதன்பின்னர், மின்சாரத்தின் அளவு பலவிதக் கட்டங்களாகப் (Blocks) பிரிக்கப்படும். ஒவ்வொரு கட்டங்களுக்கும் தனித்தனியே கட்டணம் விதிக்கப்படும். பயன்படுத்தப்படும் மின்சாரத்தின் அளவு அதிகரிக்க, அதிகரிக்க இக் கட்டணம் குறைந்துகொண்டே போகும். சான்றாக,

| | |
|---|---|
| முதல் 10 கிலோ வாட்டிற்கும் அதற்கும் குறைவான அளவிற்கும் | ரூ. 10 எனவும் |
| அடுத்து 30 கிலோ வாட்டிற்கு | 80 பைசா எனவும் |
| அதற்கடுத்த 60 கிலோ வாட்டிற்கு | 60 பைசா எனவும், |
| அடுத்த 100 கிலோ வாட்டிற்கு | 40 பைசா எனவும், |
| அடுத்த 201 கிலோ வாட்டிற்கு | 25 பைசா எனவும் |

விதிக்கப்படும்.

இம் முறை கணக்கிட எளிதாகவும், எவராலும் உடனடியாகப் புரிந்துகொள்ளக் கூடியதாகவும் உள்ளது. அதிக அளவில் மின்சக்தியைப் பயன்படுத்துவோரை ஊக்குவிப்பதன் மூலம் நிறுவனத்தின் விற்பனையை அதிகரிக்கும்பொருட்டு, இம் முறை கையாளப்படுகின்றது. இக் கட்டமுறை மீட்டர் பட்டியலில், மின்சக்தியின் உண்மையான மதிப்புடன், 'குறைந்த அளவுக் கட்டணம்' (Minimum Charge) ஒன்றையும் சேர்த்துக் கொள்வர். குறைந்த அளவுக் கட்டணமென்பது (சான்றாக 2 ரூபாய்) ஒவ்வொரு வாடிக்கையாளரிடமிருந்தும் கண்டிப்பாக வசூலிக்கப்படும். அவர் ஒரு மாதம் மின்சக்தியைப் பயன்படுத்தினாலும், பயன்படுத்தாதுபோனாலும் இக் குறைந்த அளவுக் கட்டணம் வசூலிக்கப்படும். நுகர்வோரின் இல்லங்களில் உள்ள மீட்டர்களைப் பரிசீலனை செய்வதற்கும், இதுபோன்ற பல்வகைப் பணிகளுக்குமாக, இக் குறைந்த அளவுக் கட்டணம் வசூலிக்கப்படும்.

**ஹாப்கின்ஸன் தேவையளவு கட்டணப் பட்டியல்** (Hopkinson Demand Rate Schedule)

பெருமளவில் மின்சக்தியைப் பயன்படுத்தும் வணிக மற்றும் தொழில் நிறுவனங்களுக்கென இம்முறை சிறப்பாகத் தயாரிக்கப் பட்டது. 1892ஆம் ஆண்டு டாக்டர் ஜான் ஹாப்கின்ஸ் என்பவர் இம் முறையைக் கண்டுபிடித்தார். இதன்படி, நுகர்வோரின் உச்ச அளவுத் தேவைக்கென ஒரு கட்டணமும், அவர்களால் பயன் படுத்தப்பட்ட மின்திறனின் அளவிற்கென மற்றொரு கட்டணமும், ஆக, இரு வகைக் கட்டணங்கள் விதிக்கப்படும். மேலும், அதிக அளவில் மின்திறன் பயன்படுத்தப்படும்போது, அதற்கென விதிக்கப்படும் கட்டணம் குறைந்துகொண்டேபோகும். எடுத்துக் காட்டாகப் பின்வரும் கட்டணப் பட்டியலைக் கூறலாம்:

தேவையளவிற்கான கட்டணம்.

முதல் 2 கிலோவாட் தேவைக்கு,
ஒரு கிலோவாட்டுக்கு 15 ரூபாய்

அடுத்த 18 கிலோவாட் தேவைக்கு,
ஒரு கிலோவாட்டுக்கு 14 ரூபாய்

அடுத்த கிலோவாட் தேவைக்கு,
ஒரு கிலோவாட்டுக்கு 10 ரூபாய்

அதற்கடுத்த 100 கிலோவாட் தேவைக்கு,
ஒரு கிலோவாட்டுக்கு 8 ரூபாய்

தேவைக்கும் விதிக்கப்படலாம்.

**மின்திறனுக்கான கட்டணம்**

முதல் 1,000 கிலோவாட்டுக்கும்
ஒவ்வொரு கிலோவாட்டுக்கு 50 பைசா

அடுத்த 4,000 கிலோவாட்டுக்கும்
ஒவ்வொரு கிலோவாட்டுக்கு 40 பைசா

அடுத்த 5,000 கிலோவாட்டுக்கும்
ஒவ்வொரு கிலோவாட்டுக்கு 30 பைசா

அடுத்த 10,000 கிலோவாட்டுக்கும்
ஒவ்வொரு கிலோவாட்டுக்கு 20 பைசா

அடுத்த 15,000 கிலோவாட்டுக்கும்
ஒவ்வொரு கிலோவாட்டுக்கு 15 பைசா

அடுத்த 20,000 கிலோவாட்டுக்கும்
ஒவ்வொரு கிலோவாட்டுக்கு 10 பைசா

அடுத்த 1,50,000 கிலோவாட்டுக்கும்
ஒவ்வொரு கிலோவாட்டுக்கு 8 பைசா

அதற்கு மேலும்
ஒவ்வொரு கிலோவாட்டுக்கும் 3 பைசா

விதிக்கப்படலாம்.

ஹாப்ஹின்ஸன் முறையை ஒட்டி, ரிட் டிமாண்ட் பட்டியல் முறையும் (Wright Demand Rate Schedule), டார்ட்டி-மூன்று வகைப் பட்டியல் முறையும் (Doherty-Three-Part Schedules) உருவாக்கப்பட்டன. ஒவ்வொரு முறையும், அதற்கேற்ற வாடிக்கையாளர்களுக்கென உருவாக்கப்பட்டதால், மின்திறன் வழங்கும் நிறுவனங்கள், தங்களது பணி எல்லைக்குட்பட்ட வாடிக்கையாளர்களுக்கேற்ற பட்டியல்முறையினைத் தேர்ந் தெடுத்து அதன்மூலம் கட்டணத்தை வசூலிக்கலாம்.

**புகைவண்டிப் போக்குவரத்து நிறுவனங்களுக்கான கட்டணம்**

ஒரு நாட்டின் போக்குவரத்து முறைகளில் இருப்புப் பாதை வழியின் சிறப்புத் தன்மை அனைவராலும் ஏற்றுக்கொள்ளப்பட்ட தேயாகும். தினந்தோறும், ஆயிரக்கணக்கான கிலோமீட்டர் தொலைவுள்ள இருப்புப்பாதைகளில், பல்லாயிரக்கணக்கான பயணிகளைப் பலநகரங்களுக்கும் சிற்றூர்களுக்கும் ஏற்றிச்செல்லும் பயணிகள் புகைவண்டிகளும், ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற் குப் பல்வேறு பொருள்களை ஏற்றிச்செல்லும் சரக்கு வண்டிகளும், இருப்புப் பாதை வழியே செல்லுகின்றன. வாணிகம் மலரவும், பொதுமக்களின் இடமாற்றத்திற்காகவும், தனது பணியினைத் தொடர்ந்து செய்துவரும் இருப்புப்பாதை நிறுவனம் ஒன்று, செலவுக் கட்டணத்தை எவ்வாறு வசூலிக்க முடியும் என்பதை ஈண்டு ஆராய்வோம்.

இருப்புப்பாதை போக்குவரத்து நிறுவனங்களின் கட்ட ணங்களை ஆராய்வதற்கு முன்னர், அந் நிறுவனங்களின் சிறப்புத் தன்மைகள் சிலவற்றை ஆராய்தல் நன்மை பயக்கும். குறிப்பாக, வேறுபாட்டுக் கட்டணக் கொள்கை, இந் நிறுவனங்களில்தான் மிகவும் பயன்படுத்தப்படுகின்றது என்று கூறலாம். இதனைத் தொடர்ந்து மேலும் சில கருத்துகளைப் பார்ப்போம்.

(1) (தானியங்கள், நிலக்கரி, மரக்கட்டை, தாதுப் பொருள்கள், சிமெண்ட் போன்ற) சில வகைப் பொருள்கள் பெருமளவு இடத்தை அடைத்துக்கொள்கின்றன. எனவே, இதற்கான கட்டணம் தனிப்பட்டதாக இருக்க வேண்டும்.

(2) (பழம், பூ, காய்கறிகள் போன்ற) சில வகை அழியக் கூடிய பொருள்களும், சரக்கு வண்டிகளில் அனுப்பப்படுகின்றன. இவை நாளடைவில் அழிந்துபோய்விட்டால், அதற்கான அபராதத்தையும் போக்குவரத்து நிறுவனமே கொடுக்கவேண்டிவரும். எனவே, இத்தகைய பொருள்களுக்கான கட்டணத்தை நிருணயிக்கும்போது, மேற்குறிப்பிட்ட அபராதத் தொகையினையும் சேர்த்தே நிருணயிக்க வேண்டும்.

(3) பெருமளவில் பொருள்கள் ஏற்றிச் செல்லப்படும்போது குறைவான கட்டணம் விதிக்கப்படலாம்.

(4) வருடம் முழுவதும் சராசரியாகக் கணிசமான அளவில் பொருள்கள் ஏற்றிச் செல்லப்பட்டால், அதற்கான கட்டணம் குறைவாகவும் எப்போதோ ஒருமுறை இப் பொருள்கள் அனுப்பப்பட்டால், கட்டணம் அதிகமாகவும் விதிக்கப்படலாம்.

(5) இவற்றைத் தவிர, சிலவகைப் பொருள்களுக்குச் சில சிறப்பான வசதிகள் செய்துதர வேண்டிருக்குமாதாலால், அதற்கான செலவுத் தொகையையும், கட்டணமாகச் சேர்த்துக் கொள்ளலாம்.

சரக்குகளை ஏற்றிச் செல்லும்போது விதிக்கப்பட்ட கட்டணங்களைப்பற்றி பார்த்த பின்னர், பயணிகளுக்கான கட்டணத்தைப் பற்றிப் பார்ப்போம். பொதுவாக, புகைவண்டிப் போக்குவரத்து நிறுவனங்கள், தொலைவுக்கேற்றாற்போல், தங்களது கட்டணத்தைத் தீர்மானிக்கும் வழக்கம் கொண்டவை. குறைந்த தூரத்திற்குக் குறைவான கட்டணமும், அதிக தூரத்திற்கு அதிகமான கட்டணமும் வசூலிக்கப்படுவது முறையே. எனினும், இவ்வாறு அதிகரித்துக்கொண்டே போகும் கட்டணமும், தனது அளவில் படிப்படியாகக் குறைந்து கொண்டேபோகும் என்பதையும் அறிதல் வேண்டும். மேலும், பயணிகளுக்கு அளிக்கப்படும் வசதிகள் மாறுபடுமாகையால், அவ்வசதிக்கேற்ப வெவ்வேறான கட்டணம் வசூலிக்கப்படும். இதுபோலவே மெல்லச்செல்லும் பாசஞ்சர் வண்டிகளுக்கு ஒரு கட்டணமும், துரிதமாகச் செல்லும் வண்டிகளுக்கு வேறொரு கட்டணமும் விதிக்கப்படுகின்றது.

இருப்புப் பாதை போக்குவரத்து நிறுவனங்கள் பயன்படுத்துகின்ற சொத்துகளின் மதிப்பு மிகமிக உயர்ந்தது. எனவே, அவற்றின் மீதான தேய்மானமும் அதிகமாகவே இருக்கும். இந் நிறுவனங்களின் கட்டண அடிப்படையைக் கொண்டு கட்டண வீதத்தைத் தீர்மானித்தால், கிடைக்கக்கூடிய வருவாய் அதிக

மாகவே இருக்கும் என்ற அவசியமில்லை. ஏனெனில், பெரும்பாலான புகைவண்டி நிறுவனங்கள் பொதுப்பயன் தொழில்களாக நடைபெறுவதால் இலாபநோக்கத்தினைத் தவிர்த்து, தொண்டுமனப்பான்மையுடன், பணிபுரிகின்றன. எனவே, இவற்றின் கட்டணமும் மிகவும் குறைந்ததாகவே இருக்கும். மேலும், விபத்துகளிலும், வன்முறைச் செயல்களிலும் பாழாகும் சொத்துகளின் மதிப்பினை அறவே இழக்க முடியாதாகையால் இவற்றையும் வருவாய்க் கொள்கையில் சேர்த்துக் கொண்டு இந் நிறுவனங்களுக்கான கட்டணத்தை நிர்ணயிக்க வேண்டியுள்ளது.

இருப்புப் பாதை போக்குவரத்து நிறுவனங்கள் தங்களது கட்டணத்தை விதிக்குமுன்னர், பயணத்தின் தொலைவு, பயணம் செய்யக்கூடிய பொருள்களின் அளவு, இவ்விரண்டையும் சரக்குக் கட்டணமாகத் தீர்மானித்துக் கொள்கின்றன. இது போன்ற பயணியர் கட்டணத்தை வசூலிக்கும் போதும், செல்ல வேண்டிய தூரம், அளிக்கப்படும் வசதி இவையிரண்டும் பரிசீலிக்கப்படுகின்றன. நம் நாட்டில் உள்ளதைப் போன்று ஒரே ஒரு நிறுவனம் மட்டும் இப் போக்குவரத்தை நடத்துமேயானால் போட்டி ஏதும் ஏற்பட வாய்ப்பில்லையாதலால், கட்டணத்தை விதிப்பதில் தடங்கல் ஏற்படுவதில்லை. மாறாக, இருப்புப்பாதை போக்குவரத்தினை இரண்டு அல்லது இரண்டிற்கு மேற்பட்ட நிறுவனங்கள் நடத்துமேயானால், அவற்றினிடையே போட்டி ஏற்பட வாய்ப்பு உண்டு. இதன் விளைவாக, ஒரு நிறுவனம் தனது கட்டணத்தைக் குறைத்துக் கொள்வதன்மூலம் அதிக அளவு பயணியரையும், சரக்குகளையும் இடமாற்றம் செய்து அதன்மூலம் வருவாயினைப் பெருக்கிக் கொள்ள விழையும். போட்டி ஏற்படும்போது, இந் நிறுவனங்களுக்கான கட்டணம் பொதுவாக மூன்று வகைப்படும். அவை,

## 1. தொலைவுக் கட்டணங்கள்

ஓரிடத்திற்கும், மற்றோரிடத்திற்கும் இடையேயுள்ள தொலைவினைப் பொறுத்து இக் கட்டணங்கள் விதிக்கப்படும்.

## 2. குழுக் கட்டணங்கள்

புகைவண்டி ஒன்று புறப்படும் இடங்களைப் பொறுத்தோ சேரும் இடங்களைப் பொறுத்தோ, கட்டணம் விதிக்கப்படும். இவ்வாறு, இடங்களை ஒரு குழுவாக ஒன்று சேர்த்து அதன் பின்னர் விதிக்கப்படும் கட்டணத்திற்குக் குழுக் கட்டணம் என்று பெயர்.

### 3. வேறுபாட்டுக் கட்டணங்கள்

அடிப்படைக் கட்டணம் ஒன்றை அமைத்துக் கொண்டு அதன் பின்னர், வெவ்வேறு இடங்களுக்கு வெவ்வேறான கட்டணம் நிர்ணயிக்கப்படுமேயானால், அது வேறுபாட்டுக் கட்டணம் எனப்படும். ஏட்டளவில் இம் மூன்றுவகைக் கட்டணங்கள் இருப்பினும், நடைமுறையில் இம் மூன்றுவகைக் கட்டணங்களும் ஒன்றாகவே இருக்கின்றனஎன்பது குறிப்பிடத் தக்கது. இனி, சான்று காட்டி, இக் கட்டணமுறையை விளக்க முயற்சிப்போம். தொலைவுக் கட்டணம் என்பதுதான் மிகவும் எளிதாகக் கணக்கிடப்படக் கூடியது. ஏற்கனவே, கூறியபடி குறைந்த தொலைவிற்குக் குறைவான கட்டணமும், அதிகமான தொலைவிற்கு, அதிகமான கட்டணமும் விதிக்கப்படும். ஆனல், தொலைவு அதிகரிக்க அதிகரிக்க அதற்கான கட்டண விகிதம் குறைந்துகொண்டே போகும் என்பதும் குறிப்பிடத்தக்கது. மேலும், குறிப்பிட்ட கட்ட முறையில் (Block Systems) கட்டணங்கள் தீர்மானிக்கப் படுகின்றன என்பதும் நாம் அறிய வேண்டிய செய்தியாகும்.

புகைவண்டி நிறுவனங்களிடையே ஏற்படும் போட்டிபற்றிச் சற்று ஆராய்தல் நன்மை பயக்கும். மேலைநாடுகளில், இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட நிறுவனங்கள் ஒரே தடத்திலோ ஒரே சந்தையை நோக்கியோ இயங்கி வருமேயானல், அவற்றினிடையே போட்டி ஏற்படுகின்றது. இதன் காரணமாக அதிகக் கட்டணத்தை வசூலிக்கின்ற நிறுவனம், தனது கட்டண அளவினைக் குறைத்துக் கொண்டு, தனது வாடிக்கையாளரைத் தங்க வைத்துக்கொள்வது அவசியமாகிறது. அவ்வாறன்றி, ஒரு நிறுவனம் குறைவான கட்டணத்தை விதிக்கும்போது மற்றென்று அதிக கட்டணத்தை விதிக்குமேயானல், இரண்டாவது நிறுவனம், தனது வாடிக்கையாளர்களை இழப்பதன்மூலம் நட்டத்தை நாடிச் செல்லும் நிலை ஏற்பட்டு விடும். எனவே,




வரைபடம் 1

போட்டி ஏற்படும்போது, கட்டண அமைப்பில் ஏற்படும் மாறுதல்களை வரைபடம்மூலம் காண்போம்.

வரைபடம் ஒன்றின் படி X, Y என்ற இரண்டு நிறுவனங்கள் போக்குவரத்தில் ஈடுபட்டுள்ளன. இவற்றுள் 'Y' என்னும் நிறுவனத்தை விட 'X' என்னும் நிறுவனம் சுற்றுப்பாதையில் செல்ல வேண்டியுள்ளது. இருப்பினும், இவ்விரண்டு நிறுவனங் களுக்கிடையே கட்டண வேறுபாடு ஏதுமிருக்க இயலாது. அப் போதுதான் இரண்டு நிறுவனங்களுமே சந்தையில் நிலைத்து நிற்க முடியும். இல்லாவிடில், போட்டியின் காரணமாக, அதிகக் கட்டணத்தை விதிக்கின்ற நிறுவனம், சந்தையிலிருந்து வெளி யேற்றப்பட்டு விடும்.

அடுத்து, ஒரு சந்தையைப் பொறுத்து ஏற்படும் போட்டி யினைப் பார்ப்போம்.




வரைபடம் 2

வரைபடம் இரண்டின்படி, சில நேரங்களில், 'Y' என்னும் நிறுவனம் 'X' என்னும் நிறுவனத்தின் கட்டணத்தை எட்டு வதற்காகத் தனது கட்டணத்தை ரூ. 2.00லிருந்து, ரூ 1. 50 ஆகக் குறைத்துக் கொள்ள வேண்டியிருக்கும். அப்போதுதான் 'M' என்னும் சந்தையை (M) இரண்டு நிறுவனங்களாலும் தங்க வைத்துக் கொள்ள முடியும்.




வரைபடம் 3

வரைபடம் மூன்றின்படி இரண்டுவிதச் சந்தைகள் ஒரே ஒரு பொருளுக்காகப் போட்டியிடுமேயானல் அதன் விளைவாக

இரண்டு போக்கு வரத்து நிறுவனங்களின் சரக்குக் கட்டணமும் ஒன்றுக்கப்படும் என்பதைக் காணலாம்.

இவ்வரைபடத்தில் A, B என்னும் இரண்டு சந்தைகள் 'C' என்னும் ஒரே ஒரு பொருளை பெறுவதற்காகப் போட்டியிடு கின்றன என்று கொள்வோம். மேலும் X, Y என்னும் இரண்டு போக்குவரத்து நிறுவனங்களும் செயற்படுகின்றன என்றும் கொள்வோம். இந் நிலையில் சரக்குக் கட்டணத்தைப் பொறுத்தே 'C' என்னும் பொருள்கள் 'A' என்னும் சந்தைக்கோ 'B' என்னும் சந்தைத்கோ அனுப்பப்படும். எனவே, இரண்டு நிறுவனங்களும் ஒரேவிதக் கட்டணத்தை விதிப்பது அவசிய மாகிறது. மாருக, X என்னும் நிறுவனம் (தொலைவு அதிகமாக இருப்பதால்) அதிக கட்டணத்தை விதித்தால், அத்தனை பொருள்களும் 'B' என்னும் சந்தைக்கே அனுப்பப்பட்டுவிடும். இவ்வாறு இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட நிறுவனங் களிடையே சந்தை குறித்தோ தொலைவு குறித்தோ போட்டி ஏற்படுமேயானல் அந் நிறுவனங்களின் கட்டணம் சமமாக்கப் படும் என்று அறிகின்றோம்.

**குழுக்கட்டணம் (Group Rate)**

இம் முறையில், ஒரே இடத்திலிருந்து, புறப்படுகின்ற பல்வேறு போக்குவரத்து வாகனங்களும், ஒரேவிதக் கட்டணத் தையே விதிக்கும் தன்மையைக் காணலாம். இதனைப்போன்றே, ஒரே இடத்திற்குப்போய்ச் சேருகின்ற அனைத்துப் போக்கு வரத்து வாகனங்களும், ஒரேவிதக் கட்டணத்தை வசூலிக்கலாம். இவ்விரண்டு முறைகளிலும், போக்குவரத்து நிறுவனங்களால் கடந்து செல்ல வேண்டிய தொலைவு குறைவாக இருந்தாலும், கூடுதலாக இருப்பினும், பொருட்படுத்துவதில்லை.

வேறுபாட்டுக் கட்டணங்கள் எனப்படுவது ஒரே இடத்தி லிருந்து வெவ்வேறு இடங்களுக்கு வேறுபட்ட கட்டணத்தை விதிப்பதைக் குறிக்கும். இவ்வாறே, தொலைபேசி நிறுவனங் களின் கட்டணவீதத்தை நிருணயிக்கலாம். இல்லங்களிலும், அலுவலகங்களிலும் தொலைபேசி அழைப்புகள் (Calls) அதிகமாக இருக்கலாம். எனவே, குறிப்பிட்ட ஓர் எண்ணிக்கை வரை, இவ்வழைப்புகள் இலவசமாகவும், அதற்குமேல் குறிப்பிட்ட கட்டணமும் விதிக்கப்படுகின்றது. தவிர, பொதுத் தொலைபேசிக் கருவிகளின் மூலம், நாம் தொடர்பு கொள்ளும்போது, குறிப்பிட்ட ஒரு கட்டணம் (30 பைசா) வசூலிக்கப்படுகிறது. இல்லங்களி லும், அலுவலகங்களிலும் தொலைபேசிக்கருவியினை வாடிக்கை

யாளர்கள் அன்றாடம் பயன்படுத்துகின்றனர். சிலர் ஒரு நாளில் குறைவான அழைப்புகளையும் விடுக்கலாம். இருவருக்கும் ஒரே வீதக் கட்டணத்தை விதிப்பது முறையாகாது. எனவே, வேறு பாடான கட்டணங்கள் விதிக்கப்படுகின்றன.

எடுத்துக் காட்டாக, சென்னையிலுள்ள தொலைபேசி உப யோகிப்போரை இரு வகையாகப் பிரிக்கலாம்: (1) குறிப்பிட்ட ஒரு பிரிவைச்சார்ந்தவர் குறிப்பிட்ட ஒருதொகையைக் காப்புத் தொகையாகவும் (Deposit) அதன் பின்னர் வாடகைக் கட்டண மாகவும் சிறிது தொகையைச் செலுத்த வேண்டும். இவருக்குக் குறிப்பிட்ட எண்ணிக்கை வரை அழைப்புகள் (Calls) இலவசமாக அனுமதிக்கப்படும். அதன் பின்னர், ஒவ்வோர் அழைப்பிற்கும் ஒரு கட்டணம் வசூலிக்கப்படும். இம் முறை பொது–தனியார் தொலைபேசிகள் (Public–Private Telephones) என்றழைக்கப் படும்.

இரண்டாவது முறைப்படி குறிப்பிட்ட (அதிக அளவுள்ள) தொகையைக் கட்டும் ஒருவர்க்குத் தொலைபேசிக் கருவி ஒன்று இலவசமாக வழங்கப்படும். இவர் மாத வாடகை ஏதும் தர வேண்டியதில்லை. ஆனல், இவர் விடுக்கும் அழைப்பு ஒவ்வொன் றிற்கும் கட்டணம் உண்டு. இதுபோன்றே தூரத் தொலைபேசி அழைப்புகளுக்கான கட்டணமும் வெவ்வேருக விதிக்கப்படு கின்றது. இவற்றுள்,

(1) சாதாரண, தூரத் தொலைபேசி அழைப்பு (Ordinary Trunk-call)

(2) துரிதத் தூரத் தொலைபேசி அழைப்பு (Express Trunk-call)

(3) மின்னல்வேகத் தொலைபேசி அழைப்பு (Lightning Trunk-call)

மூன்றுவகை அழைப்புகள் உள்ளன. இம் மூன்றிற்கும் தனித்தனி கட்டணங்கள் வசூலிக்கப்படுகின்றன. (இதுபற்றிய முழு விவரங்கள் இந் நூலின் வேருெரு பகுதியில் தரப்பட்டிருக் கின்றன).

**விமானப் போக்குவரத்துக் கம்பெனிகளின் கட்டணங்கள்**

விமானவழிப் போக்குவரத்து மிகுந்த அளவில் பயன்படுத்தப் படும் இந் நாளில், அதற்கான கட்டணமும் உயர்ந்துவிட்டது. பொதுவாக, விமானக் கம்பெனிகள் தனியார் துறையிலும், அரசின் சார்பில் பொதுத்துறையிலும் நடத்தப்படுவதுண்டு

ஆனல், நம் நாட்டைப் பொறுத்தவரை, அரசே 'கார்ப்பரேஷன்' என்ற ஓர் அமைப்பினை ஏற்படுத்தி, விமானவழிப் போக்கு வரத்தினை நடத்துகின்றது. அவை ;

(1) இந்தியன் ஏர்லைன்ஸ் கார்ப்பரேஷன்

(2) ஏர் இண்டியா

இதில் முதலாவது பிரிவினைச் சார்ந்த விமானங்கள் உள் நாட்டுப் போக்குவரத்திற்கும், இரண்டாவது வகையினைச்சார்ந்த விமானங்கள் பன்னாட்டுப் போக்குவரத்திற்கும் பயன்படுத்தப் படுகின்றன. இனி, ஒரு விமானப் போக்குவரத்து நிறுவனத்தின் கட்டணம் எவ்வாறு நிர்ணயிக்கப்படுகின்றது என்பதைக் காண் போம். பொதுவாக, கீழ்க்காணும் செய்திகளைப் பொறுத்தே கட்டணம் அமைகின்றது.

(1) விமானத்தின் இருப்பிட அளவு

(2) கடக்க வேண்டிய தூரம்

(3) விமானம் சுமக்கக்கூடிய பாரம்

(4) ஒரு நாளைக்கு பறக்கவேண்டிய மணிநேரம்

(5) ஒரு விமானம் பறக்கவேண்டிய முறைகள் (தடவைகள்)

(6) பருவநிலை (Weather)

(7) இயந்திரத் தகுதி

(8) இயங்குவதற்கென நல்ல வசதிகள்

(9) போட்டியிடும் கம்பெனிகளின் எண்ணிக்கை

(10) விமானத்தின் வேகம்

(11) விமானக் கம்பெனியைச் சார்ந்த சொத்துகள்

இவற்றையும், இவைபோன்ற பிறவற்றையும் பொறுத்தே, விமானக் கட்டணங்கள் தீர்மானிக்கப்படுகின்றன.

மேலும், விமானங்களில் சிக்கன வகுப்பு (Economy Class), முதல் வகுப்பு (First Class) என்று இருவகைப் பிரிவுகள் உள்ள படியால், அவற்றிற்கான கட்டணமும் தனித்தனியாகவே உள்ளன. அடுத்து, விமானப் பயணத்தின்போது வழங்கப்படும் உணவு, மனமகிழ் வசதிகள் போன்றவற்றிற்கும் கட்டணம் வசூலிக்கப் படுகின்றது. விமானப் போக்குவரத்தில், அமெரிக்க நாட்டின் லாஸ் ஏஞ்சலுக்கும், சான்பிரான்சிஸ்கோவுக்குமிடையே 1940ஆம்

ஆண்டு ஏற்படுத்தப்பட்ட 'கோச் சர்வீஸ்' மிகவும் குறிப்பிடத் தக்கதாகும்.

இவ்வாறு புகைவண்டி மற்றும் போக்குவரத்துக் கம்பெனி களின் கட்டணவீதத்தைப் போலவே, இதர, பொதுப்பயன் போக்குவரத்துக் கம்பெனிகளின் கட்டணவீதத்தையும் மின்சக்தி வழங்கும் நிறுவனத்தின் கட்டணத்தைப் போலவே, இதரப் பொருள்களை வழங்கும் நிறுவனங்களின் கட்டணங்களும் நிர்ண யிக்கப்படும். தீர்மானிக்கப்படும் கட்டணம் எதுவாயினும், அஃது எம்முறையில் கணக்கிடப்பட்டாலும், பொதுமக்களின் நலனுக்கு ஊறுவிளைவிப்பதாக இல்லாமல், அமைய வேண்டுவது அவசிய மாகிறது.

## கருத்துக்கோப்பு

பொதுப்பயன் தொழில்களும், கட்டண முறையை அமைப்ப திலுள்ள சிக்கல்களும்—இலாப நோக்கும், தொண்டு மனப்பான் மையும்—பொதுப்பயன் தொழில்களின் விலைக் கொள்கை—மின் சக்தி வழங்கும் நிறுவனம் — இருப்புப்பாதைப் போக்குவரத்து நிறுவனம், விமானப் போக்குவரத்து நிறுவனம் — தொலைபேசி வசதி அளிக்கும் நிறுவனம்—போன்றவற்றின் விலைக்கொள்கையும் அவற்றின் நிறைகளும், குறைகளும்.

# 14. பொதுப்பயன் தொழில்களின் வகைகள்

'சமுதாயமென்னும் தோட்டத்தில் பூத்த வண்ண மலர்களே பொதுப்பயன் தொழில்கள் ஆகும்.''

—பண்டிட் ஜவஹர்லால் நேரு

மனிதரை மனிதர் சுரண்டி வாழ்கின்ற அவலமான பொருளாதார நிலை உலகெங்கும் பரவி வருவது அனைவரும் அறிந்த செய்தியாகும். பணம்படைத்தோர் பகட்டான வாழ்க்கையைத் தமதாக்கிக் கொள்வதும், பணமற்றோர் அவல வாழ்வை மேற்கொள்வதும் இன்று பழகிப்போன காட்சிகள். தனியார் துறையினைச் சார்ந்த வணிக நிறுவனங்கள், தாங்கள் விற்கக்கூடிய பொருள்களின் விலையினை அன்றாடம் உயர்த்திக் கொண்டே போகின்றன. மக்களுக்கு வாங்கும் சக்தி (Purchasing Power) என்பது இருக்கும் வரையிலும் இத்தகைய நிலை இருந்து கொண்டே இருக்கும். நிலையான வருவாயை மாதந்தோறும் ஈட்டுகின்ற நடுத்தரக் குடும்பத்தினைச் சார்ந்தோர், தங்களது வருவாய்க்கும் உணவை எதிர்பார்க்கும் வெறும் வாய்க்கும் தொடர்பினை ஏற்படுத்தப் படாதபாடுபடுகின்றனர். இத்தகைய பரிதாப நிலையை மேலும் தீவிரப்படுத்தும் வகையில், கள்ளச் சந்தை, பதுக்கல் போன்றவையும் உருவாகின்றன. இவற்றைத் தவிர, மக்களுக்குத் தேவைப்படும், அன்றாட வாழ்க்கைக்கு இன்றியமையாத, சில பொருள்களும் பணிகளும் நியாயமான விலையில் தொடர்ந்து கிடைப்பதில்லை. இவற்றை அளிக்கவே பொதுப் பயன் தொழில்கள் தொடங்கப்படுகின்றன. இப் பொதுப்பயன் தொழில்கள் :

(1) மைய அரசினாலோ

(2) மாநில அரசினாலோ

(3) நகராட்சி மன்றங்களாலோ

தொடங்கப்படலாம். இனி எந்தெந்தத் தொழில்களைப் பொதுப் பயன் தொழில்களாகக் கருதலாம் என்று பார்ப்போம்.

அன்றாட வாழ்வில் மக்களுக்கு நல்ல குடிநீர், மின்திறன், போக்குவரத்து வசதிகள், தொலைபேசி, அஞ்சல் போன்ற வசதிகள் தேவைப்படலாம். இவற்றைத் தவிரப் பலவிதமான பொருள்களும் தேவைப்படலாம். இவையனைத்தையும் பார்க்கும் போது, அரசால் பொதுமக்களின் நன்மைக்காகத் தொடங்கப்படும் நிறுவனங்களை (1) பொதுத்துறை நிறுவனங்கள் (Public Sector Undertakings) என்றும், (2) பொதுப்பயன் தொழில் நிறுவனங்கள் (Public Utility Undertakings) என்றும் இருவகையாகப் பிரிக்கலாம். இவற்றுள் முதலாவது வகையினைச் சார்ந்த நிறுவனங்களை விடுத்து, இரண்டாவது பிரிவினைச் சார்ந்த பொதுப்பயன் தொழில்களைப்பற்றி மட்டுமே ஈண்டு ஆராய்வோம். ஏனெனில், மேற்கூறிய அன்றாட வாழ்க்கைக்குத் தேவையான இன்றியமையாப் பொருள்களை உற்பத்தி செய்யும் பணியில் இவைகள் ஈடுபட்டுள்ளன. எனவே, பொதுப்பயன் தொழில்களின் வகையினை, அவை வழங்கும் பொருள்கள் அல்லது பணி இவற்றை அடிப்படையாகக் கொண்டு பிரிக்கலாம்.




இவற்றை ஒன்றன்பின் ஒன்றாக ஆராய்வோம்.

**மின்திறன் வழங்கும் நிறுவனங்கள்**

தன் சிந்தையின் திறத்தால் விந்தைகள் பல புரிந்திடும் இன்றையச் விஞ்ஞான உலக மனிதன் தன் வாழ்க்கையின் அன்றாடத் தேவைகளில் மின்திறனையும் ஒன்றாக சேர்த்துக் கொண்டுள்ளான். மின்திறன் மனிதனது அன்றாட அலுவல்களோடு மிகவும் ஒன்றிவிட்ட ஒரு பொருள் ஆகும்.

கிடைத்தற்கரிய பொருளாகிய மின்திறன், நீர், நிலக்கரி, அணுச்சக்தி ஆகிய மூன்று வகைகளில் உற்பத்தி செய்யப்படுகிறது. இவ்வாறு உற்பத்தி செய்யப்பட்ட மின்சக்தி தனியார்துறை, அரசுதுறை ஆகிய இருவகை நிறுவனங்களாலும் நுகர்வோருக்கு அளிக்கப்படுகிறது. பொதுவாக, மின்திறனை உற்பத்தி செய்து பங்கீடு செய்யும் உரிமை வட்டார அரசுகளுக்கு (Local Govts.) அளிக்கப்படுகிறது. சில நேரங்களில், இவர்களின் அனுமதியோடு தனியார்துறைக் கம்பெனிகளும் மின்திறனை உற்பத்திசெய்து விற்கலாம். நம் நாட்டில் மின்திறனை உற்பத்திசெய்யவும் அதனைப் பகிர்ந்து அளிக்கவும் ஏராளமான பொதுப்பயன் தொழில் நிறுவனங்கள் உள்ளன. இந் நிறுவனங்களின் அமைப்பு, கடமை, உரிமை மற்றும் இவைபோன்ற பல செய்திகளையும் விரிவாகக்கூறும் வகையில் சில சட்டங்கள் இயற்றப்பட்டன. எடுத்துக்காட்டாக,

1. இந்திய மின்சாரச் சட்டம் (*1910*) (The Indian Electricity Act, 1910)
2. மின்திறன் வழங்கும் சட்டம், *1948* (The Electricity Supply Act, 1948).

என்னும் இருவகைச் சட்டங்கள் இயற்றப்பட்டுள்ளன. இவை தவிர 1956ஆம் ஆண்டு இச் சட்டங்களின் திருத்தப்பட்ட அமைப்பும் வெளிக்கொணரப்பட்டது.

**1. மத்திய மின்சார ஆணைக்குழு (The Central Electricity Authority)**

இவ் வாணைக்குழு மத்திய அரசால் அமைக்கப்படுகிறது. இக் குழுவின் கடமைகள் பலவாயினும், கீழே குறிக்கப்பட்டுள்ளவை சிறப்பானவை. (1) நாட்டின் மின்திறன் பங்கீட்டுக்காகச் சிறப்பான ஒரு கொள்கையை வகுத்துக் கொடுத்தல், (2) நாட்டின் மொத்த மின்சக்தியினை உபயோகிப்பதை முறைசெய்தல், (3) மாநில அரசுகளுக்கும் மாநில மின்சார வாரியங்களுக்கும் இடையே ஏற்படுகின்ற கருத்து வேறுபாட்டினைத் தீர்த்தல், (4) மின்திறனை அதிக அளவில் உற்பத்தி செய்யவும், சீரிய முறையில் பங்கீடு செய்யவும், மற்றும் சிக்கனமான முறையில் செலவழிக்கவும் உண்டான வழிகளை ஆராய்ச்சியின்மூலம் கண்டுபிடித்தல், (5) பொதுமக்களிடம் தொடர்பு கொள்ளுதல்.

மேற்கண்ட இக் குழுவிற்கான ஆறு உறுப்பினர்களை மத்திய அரசே நியமிக்கும். இவர்களுள் ஒருவர் இக் குழுவின்

தலைவராக இருப்பார். மத்திய அரசின் விருப்பத்திற்கு ஏற்ற வகையில் இவர்களின் பதவிக்காலம் நீடிக்கும். இக் குழுவிற்காக ஒரு செயலாளரும் நியமிக்கப்படுவார்.

ஒவ்வொரு மாநிலத்திலும் இருக்கக்கூடிய மாநில மின்சார வாரியமும், மாநில அரசின் மின்சாரத்துறையும் மற்றும் தனிப் பட்ட அல்லது பொதுப்பணிகளுக்கு மின்திறனை வழங்கும் உரிமைபெற்ற எவரும் மேலே குறிப்பிட்ட மின்சார ஆணைக் குழுவிற்குத் தாங்கள் உற்பத்திசெய்த மின்சார அளவு, பங்கீடு செய்யப்பட்ட மின்சார அளவுபோன்ற புள்ளிவிவரங்களை அனுப்பவேண்டும்.

**மாநில மின்சார வாரியங்களின் அமைப்பு**

ஒவ்வொரு மாநிலமும் ஒரு மின்சார வாரியத்தினை (Electricity Board) ஏற்படுத்திக்கொள்ளும் உரிமை பெற்றுள்ளது. தங்களது அரசிதழில் (official gazette) இதற்கான செய்தியினை வெளியிட்டுப் பின்னர் மாநில வாரியத்தினை அமைக்கலாம்.

இவ் வாரியத்தின் தலைமை ஆட்சிக்குழுவில் மூன்றிற்குக் குறை யாமலும் ஏழுக்கு மேற்படாமலும், மாநில அரசினால் நியமிக்கப் பட்ட உறுப்பினர்கள் இருப்பர். இவர்களுள் (1) ஒருவர் வியாபாரத்துறையிலும், நிர்வாகத்துறையிலும், நல்ல அனுபவம் மிக்கவராக இருப்பார். (2) இரண்டாமவர் மின்சாரப் பொறியியல் வல்லுநராகவும் ஆழ்ந்த அனுபவம் உடையவராகவும் இருப்பார். (3) மூன்றாமவர் பொதுப்பயன் தொழில்களின் (குறிப்பாக மின் திறன் நிறுவனங்களின்) பொருளாதாரத்துறையில் வல்லுநராக இருப்பார். இவர்களுள், மின்சாரப் பங்கீட்டுச் சட்டத்தின் நான்காவது துணைப்பிரிவில் கண்டுள்ள தகுதிகளைப்பெற்றுள்ள ஒருவர் இவ் வாரியத்தின் தலைவராக மாநில அரசால் நியமிக்கப் படுவார். நகராட்சி மன்றங்களிலோ, சட்டமன்றத்திலோ, பாராளுமன்றத்திலோ உறுப்பினராக இருக்கும் ஒருவர் இவ் வாரியத்தின் உறுப்பினராக நியமிக்கப்படமுடியாது. இவ் வாரியத்தின் தலைவரும் ஏனைய உறுப்பினர்களும் மின்சாரச் சட்டத்தில் குறிப்பிடப்பட்டுள்ள காலம் வரையில் பதவியில் இருக்கலாம். இவ் வாரியத்தினைச் சார்ந்த உறுப்பினர்கள் தங்களது சொந்த நலன் கருதி எக்காரியத்திலும் ஈடுபடுதலும் அதற்காகத் தங்களது பதவியை உபயோகித்தலும் கூடாது. இவ் வாரியத்திற்கென நிரந்தரவாழ்வும், நிலையான அலுவலக முத்திரையும் உண்டு. இதன் உறுப்பினர்கள் அடிக்கடி தாங்கள் எடுக்கவேண்டிய முடிவுகளைப்பற்றி ஆராய்வர்.

**மாநில மின்சார ஆலோசனைக்குழு** (State Electricity Consultative Council)

இந்திய மின்திறன் வழங்கும் (1948) சட்டத்தின் ஆறு, ஏழாவது பிரிவுகளின்படி ஒவ்வொரு மாநில அரசும் தனக்கென ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட மாநில மின்சார ஆலோசனைக் குழுவை அமைத்துக்கொள்ளலாம். இக் குழுவில் எட்டிற்குக் குறையாமலும், பதினைந்திற்கு மேற்படாமலும் உறுப்பினர்கள் இருப்பர். இவர்களில் சிலர் மாநில மின்சார வாரியத்தினைச் சார்ந்தவராகவும், மற்றும் சிலர் வெளிநபர்களாகவும் இருக்கலாம். மின்சார வாரியத்தின் தலைவரே இக் குழுவிற்கும் தலைவராக இருப்பார்.

**இக் குழுவின் வேலைகள்**

(1) கொள்கைகளிலும், திட்டங்களிலும் தங்களது கருத்தினையும், ஆலோசனையையும் மின்சார வாரியத்திற்குத் தெரிவித்தல், (2) மின்சாரவாரியத்தின் செயல்முறையையும் முன்னேற்றத்தையும் அவ்வப்போது கண்காணித்தல், (3) மாநில வாரியம் தெரிவிக்கின்ற எந்த ஒரு செய்தியினையும் ஆராய்தல் மற்றும், (4) மாநில அரசு தெரிவிக்கும் எச் செய்தியினையும் ஆராய்தல் போன்றவையாகும்.

மாநில வாரியங்கள் தங்களது ஆண்டு வரவுசெலவுத் திட்டத்தையும், மற்றும் துணைத்திட்டங்களையும், மேற்கண்ட ஆலோசனைக் குழுவின் முன்வைத்து இக் குழுவின் கருத்தினைத் தெரிந்துகொண்டபின், மாநில அரசுக்குத் தெரிவிக்கும்.

**வட்டார ஆலோசனைக்குழு** (Local Advisory Committee)

தேவைப்படுமாயின் ஒவ்வொரு வட்டாரத்திற்கும் இக் குழுவை அமைக்கலாம். மின்சார வாரியத்தின் தலைவரோ அவரால் நியமிக்கப்பட்ட ஒருவரோ இந்த ஆலோசனைக் குழுவின் தலைவராக இருப்பார்.

**மின்சார வாரியத்தின் கடமைகளும் உரிமைகளும்**

வாரியத்தின் பொதுக் கடமைகள்: ஒவ்வொரு மாநிலத்திலும் அமைக்கப்படுகின்ற மின்சார வாரியங்கள், அம் மாநிலத்திற்குத் தேவையான மின்திறனை உற்பத்தி செய்து சீரிய முறையில் அதனைப் பங்கீடு செய்வதையே தங்களது பொதுக் கடமையாகக் கருதுகின்றன. இதைத் தவிர,

(1) மின்திறனை உற்பத்தி செய்வதற்கான திட்டங்களை வகுத்தல்,

(2) அனுமதி பெற்றுள்ள மின்நிலையங்களுக்கு மின்திறன் வழங்குதல்.

(3) அனுமதி கோரி விண்ணப்பித்துள்ள எவருக்கும் கால தாமதமின்றி மின்திறன் வழங்க ஏற்பாடு செய்தல்,

என்னும் மூன்று கடமைகளும் உள்ளன.

அரசினைச் சார்ந்த மின்நிலையங்களைத் தவிர அனுமதி பெற்று இயங்கும் தனியார்த்துறை நிறுவனங்களும் பொது மக்களுக்கு மின்திறனை வழங்குவதில் காலதாமதம் ஏற்படாது மின்வாரியம் கவனிக்கின்றது.

**உரிமைகள்**

(1) மின்திறனை உற்பத்தி செய்வதற்காகத் தேவைப் படுகின்ற இயந்திரங்கள், கருவிக் கலன்கள், மின் கம்பிகள், உஷ்ணப்படுத்தும், மற்றும் குளிர்ப் படுத்தும் கருவிகள் போன்றவற்றை உற்பத்தி செய்யவும், விலை கொடுத்து வாங்கவும், மற்றும் வாடகைக்குவிடவும் மாநில வாரியத்திற்கு உரிமை யுண்டு.

(2) மின்திறனைப் பொதுமக்கள் பல விதங்களில் ஆனால் சீரிய முறையில் உபயோகிக்க வேண்டும் என்ப தனை விளம்பரங்கள் செய்தும், காட்சிச்சாலைகள் அமைத்தும் செயல்முறையில் விளக்கியும் தெரிவிக் கின்றன,

(3) தனக்கென ஒரு தனிக் கணக்கினை ஏற்படுத்தி, வரவு செலவுக் கணக்கினைக் காட்ட மாநில வாரியத்திற்கு உரிமை உண்டு.

(4) மின்திறனை உற்பத்தி செய்வதற்காகவும் அதனை மாற்றி அனுப்புவதற்காகவும் தேவைப்படுகின்ற எந்த ஒரு சொத்தினையும் மாநில அரசின் உதவி யோடு பெற்றுக்கொள்ளும் உரிமையுண்டு.

(5) மாநில அரசின் அனுமதியைப் பெற்றபின்னர் மின் திறனை உற்பத்தி செய்வதற்காகச் செலவிடப்படும் எரிபொருள், நீர்ச்சக்தி போன்றவற்றைக் கணக்கிட உரிமையுண்டு.

(6) மாநில அரசின் அனுமதியை முன்கூட்டிப் பெற்ற பின்னர், ஒரு மாநிலத்தில் உள்ள நீர்சக்தியினைக் (water power) கணக்கிடவும், அதனை அதிகரிக்கவும் இவற்றிற்கு உரிமையுண்டு.

(7) தன்னிடம் அனுமதி பெற்று மின்திறனை வழங்கிடும் பணியில் ஈடுபட்டுள்ள நபர்களுக்குக் கடன் வழங்கிட இவ் வாரியங்களுக்கு உரிமையுண்டு.

(8) குறிப்பிடப்பட்டுள்ள நிபந்தனைகளுக்குட்பட்டு, ஆலோசனைக்கெனத் தகுதிவாய்ந்த மின்சாரப் பொறியியல் வல்லுநர்களை நியமிக்கவும், அவர்களுக்கு ஊதியம் அளிக்கவும் வாரியத்திற்கு அதிகாரம் உண்டு.

(9) மேலே குறிப்பிடப்பட்டுள்ள அதிகாரங்களைத் தவிர அவ்வப்போது ஏற்படும் தேவைக்கேற்றவாறு வாரியங்களுக்கு மேலும் பல அதிகாரங்களும் வழங்கப்படும்.

**மின்சார வாரியத்தின் செயல்முறையும், வணிகக் கோட்பாடும்**

I. **திட்டங்களைத் தயார் செய்தல்:** சீரிய முறையில் மின்திறனை உற்பத்தி செய்து வழங்கும்பொருட்டுத் தேவையான திட்டங்களை ஒவ்வொரு மின்வாரியமும் தீட்டுகின்றது. இத் திட்டத்தில் கீழ்க்காணும் செய்திகள் இடம் பெறும் :

(1) வாரியத்திற்குச் சொந்தமான மின்உற்பத்தி நிலையங்களை நிறுவுதல்.

(2) ஏற்கெனவே நிறுவப்பட்ட மின்நிலையங்கள் அன்றிப் புதிதாகத் தோற்றுவிக்கப்பட்டவையா என்ற செய்தி விவரம் சேகரித்தல்.

(3) மின்திறனை மாற்றி அனுப்ப ஆங்காங்கே நிறுவப்பட்டுள்ள கம்பித் தொடர்களோடு தொடர்பு அமைத்தல் பற்றிய குறிப்புகளைத் திரட்டுதல்.

(4) ஒரு குறிப்பிட்ட இடத்திற்கெனத் தயாரிக்கப்பட்ட திட்டத்திற்கு மின்திறனை வழங்கிடச் செய்ய வேண்டிய ஏற்பாடுகள் செய்தல்.

(5) தன்னிடம் அனுமதி பெற்று மின்திறனை வழங்கும் பணியில் ஈடுபட்டுள்ளவரின் கம்பித் தொடர்புகளையும், இணைப்புகளையும் உபயோகித்தல்

போன்ற செய்திகள்' ஆகியவை இத் திட்டத்தில் இடம் பெறும்.

II. ஒரு குறிப்பிட்ட பகுதிக்கான மின்சாரத் திட்டத்திற்குத் தனது அனுமதியை வழங்கிய பின்னர் இச் செய்தியினை அரசிதழ் (Govt's Official Gazette), தேவையானால் வட்டாரச் செய்தித் தாள்களிலும் வெளியிடுதலை மின்வாரியம் செய்கின்றது. ஆனால், இருபத்தைந்து இலட்ச ரூபாய் முதலீட்டிற்குக் குறைவான செலவில் உருவாக்கப்படும் திட்டங்கள் இவ்வாறு வெளியிடப் படுவதில்லை.

ஒரு கோடிக்கும் அதிகமான மூலதனச் செலவில் நிறைவேற் றப்படவேண்டிய திட்டங்களைச் செயற்படுத்தும்முன்னர் சில வகை நடைமுறை விதிகள் கடைப்பிடிக்கப்பட வேண்டும். அதன்படி இத் திட்டத்தின் ஒரு நகலை மாநில அரசின் பார்வைக் கும், மத்திய மின்சார ஆணைக்குழுவிற்கும் மாநில வாரியம் அனுப்பிவைக்கும். இந் நகலில் குறிப்பிடப்பட்டுள்ள செய்திகள் மாநில அரசிதழிலும், வட்டாரச் செய்தித்தாள்கள் சிலவற்றிலும் வெளியிடப்படும். இவ்வாறு வெளியிடுகையில் இத் திட்டத்தின் தொடக்கச் செலவு, இறுதிச் செலவு, நிகர வருவாய் போன்ற செய்திகளைக் குறிப்பிட்டு இவைபற்றித் தங்களது கருத்தினைக் தெரிவிப்போர் ஒரு குறிப்பிட்ட தேதிக்குள் மாநில வாரியத் திற்குத் தெரிவிக்கவேண்டுமென்று அறிக்கை ஒன்றும் வெளியிடப் படும். இதற்கென, இந்த அறிக்கை வெளியிடப்பட்டுள்ள தேதியிலிருந்து இரண்டு மாதத்திற்கு முறையாக அவகாசம் கொடுக்கப்படும். இத் திட்டத்தைப்பற்றி நடத்தப்பட்ட விசா ரணைகளுக்குப் பின்னர் முழுமையாகவோ பகுதியாகவோ இத் திட்டம் அமலாக்கப்படுவதற்கான அனுமதியை மாநில வாரியம் வழங்கும். ஆனால், மத்திய மின்சார ஆணைக்குழுவின் அனுமதி யைப் பெற்ற பின்னரே மாநில மின்வாரியத்தின் அனுமதி வழங் கப்படும்.

மின் திறனை உற்பத்தி செய்யும் நிலையத்தினை ஓரிடத்தில் புதிதாகத் தோற்றுவிக்கும் உரிமை மின்சார வாரியத்திற்கு அளிக்கப்பட்டுள்ளது. தவிரவும், மாநில அரசின் அனுமதியோடு பிற நபர்களின் ஒத்துழைப்பினைப் பெற்று இத்தகைய புதிய உற்பத்தி நிலையத்தினைத் தொடங்கவும் மாநில மின்சார வாரியத் திற்கு அதிகாரம் உண்டு.

மாநில வாரியத்தின் அனுமதி பெற்ற நிறுவனங்கள், பொது மக்களுக்குத் தாம் அளிக்கின்ற மின்திறனுக்கு விலையாகக் குறிப் பிட்ட ஒரு கட்டணத்தை விதிக்கவும், அதனை வசூலிக்கவும் உரிமை பெற்றுள்ளன. இக் கட்டணம், 'நியாயமான' கட்டணம்

தானு என்பதனைக் கண்டறிந்து பின்னர் அதனை விதிக்குமாறு ஆணை பிறப்பித்தல் வாரியத்தின் கடமைகளுள் ஒன்ருகும்.

அனுமதி பெற்ற நிறுவனங்கள் விதிக்கும் கட்டணம் நியாய மற்றதாகத் தோன்றினல், அதுபற்றி விசாரணை செய்யும் உரிமை வாரியத்திற்கும், வாரியம் தோற்றுவிக்கப்படாதபோது, மாநில அரசுக்கும் உண்டு.

**வாரியத்தின் கணக்குப் பதிவியல், தணிக்கை மற்றும் நிதிநிலைக் கோட்பாடுகள்**

நடைமுறைச் செலவினை ஈடுசெய்யும் வகையில் ஒரு மின்வாரியத்தின் வருவாய் அமைந்திருக்க வேண்டுமென்பது பொதுவான பொருளாதாரக் கருத்து. குறிப்பாக, மாநில அரசிடமிருந்து உதவித்தொகை பெற்றுக்கொண்ட பின்னர் எக்காரணத்தை முன்னிட்டும் நட்டத்தில் மின்சாரவாரியம் நடைபெருது பார்த்துக்கொள்ளுதல் வாரியத்தின் கடமையாகும். மேலும், மாநிலஅரசின் சார்பில் ஏற்றுக்கொண்ட எவ்விதச் செலவு, நட்டங்களையும், இவ் வாரியம் தன் சொந்தச் செலவு அல்லது நட்டத்தினைப் போன்று ஏற்றுக்கொள்ளும். இதுபோன்றே மாநில அரசால் அனுமதிக்கப்பட்டு அங்கீகரிக்கப்பட்ட எந்தவிதத் திட்டமும் பின்னளில் வாரியத்திற்கு மாற்றப்படுமேயானல், அத் திட்டத்தினைத்தானே உருவாக்கியதாக வாரியம் கருதும்.

**வருடாந்தர நிதிநிலை அறிக்கை (Annual Financial Statement)**

ஒவ்வோர் ஆண்டும் பிப்ரவரி மாதத்தில், மாநில வாரியம் தனது அடுத்த வருடத்திற்கான மூலதனம், எதிர்பார்க்கும் வரவு செலவினங்கள் போன்றவற்றை ஓர் அறிக்கை வடிவில் தயார் செய்து, அதனை மாநில அரசுக்குப் பணிந்தனுப்பும். இவ்வறிக்கையில் குறிப்பிட்ட செலவினத்தில், மாநில வாரியத்தின் உறுப்பினர்கள், அதிகாரிகள் மற்றும் பணியாளர்களின் ஊதியத் தொகையும் சேர்க்கப்பட்டிருக்கும். இதனைப் பெற்றுக்கொண்ட பின்னர், மாநில அரசானது, சட்டமன்ற உறுப்பினர்களின் பார்வைக்காக இவ் வறிக்கையை அனுப்பும். சட்டமன்ற உறுப்பினர்களின் கருத்தினை மாநில வாரியம் ஏற்றுக்கொள்ளும். மாநில அரசிடம் வருடாந்தர அறிக்கையைப் பணிந்தனுப்பிய பின்னர், தேவையானல் உபரிப்பட்டியல் ஒன்றினையும் தயார் செய்து அதனையும் சட்டமன்றத்தின் கருத்திற்காக அனுப்பும் உரிமை மாநில வாரியத்திற்கு வழங்கப்பட்டுள்ளது. சில அவசரகாலங்களில் உடனடியாகச் சில வகைச் செலவினங்களைச் செய்ய

வேண்டிய நிலை மாநில வாரியத்திற்கு ஏற்படலாம். இப்படிப் பட்ட அவசர நிலையில், மாநில அரசிற்குத் தெரிவித்து, சட்ட மன்றத்தின் கருத்தினைப் பெற்று, பின்னர் அரசின் அனுமதியுடன் நிதியினையும் பெற்றுச் செலவு செய்வதற்குள் காலம் கடந்துவிடும். ஆகவே அவசர நேரங்களில், வியாபாரச் செலவிற்காக ரூபாய் 25,000-க்கு மேற்படாமலும், முதலாக்கச் செலவிற்காக ரூபாய் மூன்று இலட்சத்திற்கு மேற்படாமலும் செலவு செய்யும் உரிமையும் மாநில வாரியத்திற்கு வழங்கப்பட்டுள்ளது. இவ்வாறு செலவிடப்படும் தொகை, எவ்வழியில் திரட்டப்பட்டது என்பதற் காக ஒரு குறிப்பும், காலதாமதமின்றி மாநில அரசிற்கு அனுப்பப் படுதல் நியதியாகும்.

மின்சாரப் பங்கீட்டுச் சட்டம் 1948-ன், 64ஆவது பிரிவின்படி, தேவைப்படும் நேரத்தில், மாநில மின்சார வாரியத்திற்குக் கடனுதவி செய்யும் உரிமை மாநில அரசுக்கு வழங்கப்பட்டுள்ளது.

**மின்வாரியத்தின் கடன் திட்டங்கள்**

பொதுப்பயன் தொழில்களனைத்திற்கும் பொதுவான ஒரு குறைபாடு நிதிப்பற்றுக்குறைதான். இவற்றின் இயந்திர, மூல தனச் செலவுகள் மிக அதிகமாகையால், இத் தொழில் நிறுவ னங்களை ஆரம்பிக்கவும், செயற்படுத்தவும், மிகவும் அதிகமான மூலதனம் தேவைப்படும். இதனைச் சரிக்கட்டும் வகையில், சட்டத்திற்குட்பட்ட வகையில், கடனாகப் பிறரிடமிருந்து நிதியைப் பெற்றுக் கொள்ளும் உரிமை மின்வாரியத்திற்கு அளிக்கப் பட்டுள்ளது. பொதுமக்களிடமிருந்து இக் கடனுதவியைப் பெற் றுக் கொள்ளும்பொருட்டுக் கடன்பத்திரங்களை வெளியிடுவது மின்வாரியத்தின் வழக்கம். பொதுவாக ஒரு குறிக்கப்பட்ட நேரத்தில், ரூபாய் பத்துக் கோடிக்கு மேற்படாத வகையில் கடனைப் பெற்றுக்கொள்ளும் உரிமையை மாநில வாரியங்கள் பெற்றுள்ளன. இத் தொகைக்கு மேலும் தேவைப்படுமேயானால், சட்டமன்றத்தின் அனுமதியோடு, மாநில அரசின் விசேட அனு மதியையும் பெறவேண்டும் [Sec. 65].

**கடன் தொகைக்கான உத்தரவாதம்**

ஒரு மாநிலத்தின் மின்வாரியம் ஏற்படுத்த எண்ணுகின்ற கடன் தொகை திருப்பித் தரப்படுமென்று மாநில அரசு உத்தர வாதம் (Guarantee) அளிக்கக்கூடும். மின்வாரியத்தின் கடன் தொகை எனப்படுவது, அது பெற்றுக்கொண்ட அசல்தொகை யையும், அதன்மீதான வட்டியையும் குறிப்பதாகும். இத் தொகை திருப்பித்தரப்படுமென்று மாநில அரசு உத்தரவாதம்

அளிக்குமேயானல், பொதுமக்கள் எவ்விதத் தயக்கமுமின்றிக் கடன்பத்திரங்களை வாங்க முன்வருவர். இத்தகைய உத்தர வாதத்தை அளிக்க விரும்பும் மாநில அரசு, தனது ஆட்சிக்குட் பட்ட மேல்சபை, கீழ்சபை (சட்டமன்றம்) என்னும் இரு அவை களிலும் தனது கருத்தினை அறிவிக்க வேண்டும். அதாவது, மக்களின் பிரதிநிதிகளுக்கு அரசின் கொள்கைகள் தெரிவிக்கப்பட வேண்டுமென்பது இதன் கருத்து. மின்சார வாரியத்தினல் ஈட்டப் பட்ட மொத்த வருவாயிலிருந்து நிறுவனத்தின் நடைமுறைச் செலவுகளும், உற்பத்திச் செலவுகளும் செய்யப்பட்ட பின்னர், நிறுவனத்திற்காக வாங்கப்பட்ட மூலதனத்துக்கான வட்டியும், இலாபஈவும் அளிக்கப்படவேண்டும் [Sec 67].

**கணக்குப் பதிவேடுகளும் தணிக்கையும் (Books of Accounts and Auditing)**

ஒரு மின்சாரவாரியத்தின் நிதிநிலையைச் சரிவர அறிந்து கொள்ள வேண்டுமானல், அதனுடைய கணக்குப் பதிவேடுகள் சரிவர வைத்திருக்கப்படவேண்டும். எத்தகைய கணக்குப் பதிவேடுகள், என்னென்ன முறையில் வைத்திருக்கப்படவேண்டு மென்ற குறிப்புகளுக்கு, இம் மின்சார வாரியம், மாநில அரசையோ, கம்ட்ரோலர் அண்ட் ஆடிட்டர் ஜெனரல் ஆப் இந்தியா (Comptroller and Auditor General of India) என்பவரையோ நாடலாம். இவ்வாறு தயாரிக்கப்பட்ட கணக்கு கள் கம்ட்ரோலர் அண்ட் ஆடிட்டர் ஜெனரல் அவர்களாலோ அவரால் நியமிக்கப்பட்ட வேறு எவராலோ, தணிக்கை செய்யப்படும். இத் தணிக்கையைச் செய்வதற்கான செலவுத் தொகையை மின்சார வாரியமே ஏற்றுக்கொள்ளும். ஆடிட்டர் ஜெனரல் அவர்களுக்குப் பதிலாக அனுப்பப்பட்ட நபருக்கு மின்சார வாரியத்தின் தணிக்கையைத் தன்னிஷ்டம்போல் செய்வதற்கான எல்லா உரிமையும் உண்டு. சட்டத்தின் கோட் பாடுகளுக்குட்பட்டும், தணிக்கையைச் செய்தபின்னர், இத் தணிக் கையாளர் தமது குறிப்புகளையும், ஆலோசனைகளையும் குறிப் பிட்ட மாநில அரசின் பரிசீலனைக்கு அனுப்பி வைப்பார். அவர் கூறியுள்ள ஆலோசனைகள் ஏற்றுக்கொள்ளத் தக்கதாக இருக்கு மேயானல், அவற்றைச் செயற்படுத்துமாறு, மின்சார வாரியத் திற்கு மாநில அரசு உத்தரவளிக்கும் [Sec 69].

இதன் பின்னர், மின்சார வாரியத்தின் தணிக்கை அறிக் கையைச் சட்டமன்ற உறுப்பினர்களின் பார்வைக்கு வைப்பதற் கான அனைத்து ஏற்பாடுகளையும் செய்ய வேண்டிய பொறுப்பு மாநில அரசினைச் சார்ந்தது. மேலும், மின்சார வாரியத்தின்

நிதிநிலைபற்றிய புள்ளிவிவரங்களை அச்சடித்து, மலிவான விலைக்கு அவற்றின் படிவங்கள் கிடைக்குமாறு செய்யவேண்டிய பொறுப்பும் மாநில அரசினையே சார்ந்தது [Sec. 69-Sub-Sec. (5) (a) and (b) ].

**சில சிறப்புக் குறிப்புகள்**

ஒரு மாநிலத்தின் மின்திறன் உற்பத்தியையும், அதன் பங்கீடு செய்யும் மாபெரும் பணியினையும் ஏற்றுக்கொண்டுள்ள மாநில மின்வாரியங்களுக்கும் சில சிறப்புச் சலுகைகள், மாநில அரசால் வழங்கப்படலாம்.

எடுத்துக்காட்டாக,

(1) மாநிலத்திலுள்ள நீர்நிலைகள், நீர்வீழ்ச்சிகள், நீர்த் தோற்றுவாய்கள் போன்றவற்றைப் பயன்படுத்தி, மின்திறனை உற்பத்தி செய்கின்ற உரிமை, மின்சார வாரியத்திற்கு மட்டுமே அளிக்கப்படுகின்றது.

(2) இரண்டாவதாக, மாநிலத்திலுள்ள கால்வாய்கள், ஆறுகள், ஏரிகள் போன்றவற்றை விரிவுபடுத்தும் எண்ணத்துடன், மாநில அரசினால் அறிமுகப்படுத் தப்படும் எத்தகைய பன்னோக்குத் திட்டங்களும் (Multi-Purpose Projects), மின்சார வாரியத்தின் விரிவுத் திட்டங்களுடன் இணைக்கப்பட்டு, இவ் விரண்டு திட்டங்களும் ஒன்றாகச் செயலாக்கப்படும்.

(3) மின்வாரியத்தினைச் சார்ந்த எந்த ஓர் அதிகாரியும், அல்லது அலுவலரும், மின்திறனைப் பயன்படுத்து கின்ற எவ்வித வாடிக்கையாளரின் இருப்பிடங் களுக்குள் நுழைந்து மின்திறனை அளக்கும் கருவி களைப் பார்க்கவும், கணக்கெடுப்புச் செய்யவும் உரிமை பெற்றவராகிறார்.

**கருத்து வேறுபாடுகளும் அவற்றைத் தீர்த்துவைக்கும் முறையும்**

எந்த ஒரு நிறுவனத்திலும் அதனைச் சார்ந்தோரிடையே கருத்து வேறுபாடு ஏற்பட வாய்ப்புண்டு. குறிப்பாக, நாள் தோறும் பல்லாயிரக்கணக்கானோருடன் தொடர்புகொள்ள வேண்டிய மின்சார நிறுவனத்திற்கு ஏராளமான சிக்கல்களைத் தீர்த்துவைக்கவேண்டிய பொறுப்பு ஏற்படுகின்றது. வாடிக்கை யாளரிடமிருந்து, நிறுவனத்தின் கட்டணமுறைபற்றியோ அவர்களது சொத்துகளுக்கு அளிக்கப்படும் நட்டஈடுபற்றியோ

வேறு செய்திகள் குறித்தோ கருத்து வேறுபாடுகளும் அதனை யொட்டிப் புகார்களும் தோன்றலாம். இவற்றை ஆராய்ந்து நல்லதொரு தீர்ப்பினை வழங்குவதற்காக, நடுநிலையாளர் (Arbitrator) ஒருவரை நியமிக்கச் சட்டம் வழிசெய்கின்றது.

(இந்திய) மின்சாரச் சட்டம் 1940, (இந்திய) மின்சாரம் வழங்கும் சட்டம், 1948 என்ற இரு சட்டங்களும், நடுநிலையாளரை நியமிப்பதுபற்றியும், அவரது பணியினைப்பற்றியுமான கருத்துகளைத் தெரிவிக்கின்றன. அவற்றின்படி கருத்து வேறுபாடு கொண்ட இரு நபர்களும், இதற்கென உள்ள ஓர் உயர்அதிகாரியிடம் சென்று முறையிட அவரால் நியமிக்கப்பட்ட நடுநிலையாளர் இதனைப் பரிசீலிக்கும் பணியை ஏற்றுக்கொள்வார். இவ்வாறு நியமிக்கப்பட்டவரை நடுநிலையாளராக ஏற்றுக்கொள்ள, வழக்கில் தொடர்புகொண்டோர் இசையவில்லையென்றால், இருதரப்பினராலும், இரண்டு நடுநிலையாளர்கள் நியமிக்கப்படலாம். அவர்கள் கூறும் முடிவே இறுதியானதாகக் கருதப்படும். இச் சமரச உடன்பாட்டைக் காணும்வகையில் செலவு செய்யப்பட்ட தொகை வழக்குத் தொடர்ந்த நபரிடமிருந்து வசூலிக்கப்படும். அந்த நபர் இச் செலவுத் தொகையை ஏற்க மறுத்தால், நிலவரியை வசூலிக்கும் முறையினைக் கையாண்டு அவரிடம் இத் தொகை வசூலிக்கப்படும்.

### அபராதங்கள்

பொதுமக்களுக்கு மின் திறனை வழங்கும் பணியினை ஏற்றுக் கொண்டிருக்கும், தனிநபரோ தனியார் நிறுவனமோ வேறு யாரேனும் இந்திய மின்சாரச் சட்டத்தின் கோட்பாடுகளை மீறுபவர்களாகக் கருதப்படுவார்களேயானால், அவர்கள் அபராதத் தொகையைச் செலுத்தநேரிடும். அபராதமாக விதிக்கப்படும் தொகை ரூபாய் 500 வரை உயர்த்தப்படும். இத் தொகை குறித்த காலத்திற்குள் செலுத்தப்படாவிட்டால், தாமதமாகும் நாள் ஒன்றுக்கு ரூபாய் 50 வீதம் கூடுதல் அபராதம் வசூலிக்கப்படும்.

### அரசால் உருவாக்கப்படும் விதிகள்

மின்வாரியத்தின் செயல்முறைகளை முறைப்படுத்தும் நோக்கத்தோடு, ஒரு மாநில அரசு அவ்வப்போது சில விதிகளை உருவாக்குவதோடு, அதனை அரசு பதிவேட்டிலும் (Official Gazette) வெளியிடுகிறது. பெரும்பாலும் பின்காணும் செய்திகளைக் குறித்தே, விதிகள் உருவாக்கப்படும்:

(1) வாரியத் தலைவரது பதவிக் காலமும் அவருடைய அதிகாரங்களும்

(2) தலைவர் மற்றும் பிற உறுப்பினர்களுடைய பதவிக் காலம் முடிவடைந்தபின்னர், அவர்கள் மீண்டும் பதவியேற்பதற்கான விதிகள்

(3) மின்வாரியத்தால் அதனுடைய நிதிநிலையை வெளிப் படுத்துவதற்கெனத் தயாரிக்கவேண்டிய அறிக்கை களும், அவற்றில் இடம்பெறவேண்டிய செய்திகளும்.

(4) வாரியத்தின் சொந்த முதல் மற்றும் கடன்முதல் இவற்றைப் பெறுவதற்கென வெளியிடப்பட வேண்டிய பத்திரங்களின் வகைகள், அவற்றின் எண்ணிக்கை, அவற்றை உரிமைமாற்றம் செய்வதற் கான முறை போன்ற விதிகள்

(5) வாரியத்தின் வாணிகக் கொள்கை

(6) ஏனைய கோட்பாடுகளும், விதிகளும், மின்வாரியங் களைப்பற்றியும் அவற்றின் நடைமுறைவிதிகளைப் பற் றியும், அரசோடு மின்வாரியம் அமைத்துக்கொள்ள வேண்டிய தொடர்புபற்றியும், கருத்து வேறுபாடு கள் ஏற்படின், உடன்பாடு காண பின்பற்ற வேண்டிய முறைகள்பற்றியும் இதுகாறும் பொதுவாக நாம் ஆராய்ந்தோம். [தமிழ்நாட்டின் மின்சார வாரியத்தைப் (TNEB) பற்றிய சிறப்புச் செய்திகளைத் திறனாய்வுப் பகுதியில் காண்க ]

இறுதியாக, நம் நாட்டின் மின்திறன் 1973-74ஆம் ஆண்டின்படி எந்நிலையில் இருந்தது என்பதுபற்றிப் பார்ப்போம்.

**மின்திறன்—1973-74ஆம் ஆண்டுநிலை**

மத்தியப் பிரதேசம், கேரளம்போன்ற ஓரிரு மாநிலங்களைத் தவிர இவ்வாண்டு எல்லா மாநிலங்களிலும் மின்திறன் அளவு குறைந்ததுபோன்று வேறெந்த வருடத்திலும் குறைந்துபோக வில்லை எனலாம். நாளுக்குநாள், மின்திறனை உபயோகிப் போரின் தேவை அதிகரித்துக்கொண்டேபோனாலும், மின்திறன் உற்பத்தியளவு அதிகரிக்கவேயில்லை. மாறாக, அனைத்து மாநிலங்களையும் மின்சக்திப் பற்றாக்குறை என்னும் கொடிய நோய் தொற்றிக்கொண்டுள்ளது. இந்நிலையை உறுதிசெய்யும் வண்ணம், தினசரி பற்றாக்குறை 25 மில்லியன் யூனிட்டிலிருந்து தற்சமயம் 35 மில்லியன் யூனிட்டிற்கு அதிகரித்துள்ளதைக் குறிப்

பிடலாம். அண்மையில் எடுக்கப்பட்ட கணக்கின்படி, நான்காவது ஐந்தாண்டுத் திட்டத்தின் இறுதியில் முன்னேற்றமடைய வேண்டிய மின்சக்தி அளவு, எதிர்பார்த்ததைவிட மூன்று மில்லியன் கிலோவாட்டுகள் குறையலாம் என்றும் தெரியவருகிறது. நான்காவது ஐந்தாண்டுத் திட்டத்தின் முதல் மூன்று வருடங்களில் 23 மில்லியன் கிலோவாட் கூடுதலான மின்திறன் கிடைக்குமெனக் கணக்கிடப்பட்டது. ஆனால், இது 20 மில்லியன் கிலோவாட்டிற்கும் அதிகமாகச் செல்லாது எனத் தற்சமயம் தெரியவருகிறது. பிராந்திய வாரியாக மின்சக்தித் திறனின் உண்மை நிலையை இனிக் காண்போம். வடக்குப் பிராந்தியம்: நான்காவது ஐந்தாண்டுத் திட்டத்தின் முடிவில் இப் பிராந்தியத்தின் மொத்த மின்சக்தி உற்பத்திநிலை 3·3 மில்லியன் கிலோவாட்டுகளிலிருந்து 6·2 மில்லியன் கிலோவாட் அளவிற்கு உயருமென எதிர்பார்க்கப்பட்டது. ஆனால், தற்சமயம் அது 1·1 மில்லியன் கிலோவாட் அளவில் குறைந்துபோகுமென எதிர்பார்க்கப்படுகிறது.

#### மின்பிராந்தியங்கள்

உத்திரப்பிரதேசத்தினைத் தவிர, வடக்குப் பிராந்தியம் முழுவதிலும் 1973-74ஆம் ஆண்டு, மின்சக்தி அளவு உயருமென நம்பப்படுகிறது. இதற்கான காரணம், அணுச்சக்தி நிலையம் (230 MW), பாதர்பூர் மின்நிலையம் (Badarpur Thermal Station 300 MW), பாண்டிடா மின்நிலையம் (Batinda Thermal Station 110 MW) என்னும் மூன்று நிலையங்கள் செயற்பட இருப்பதுவேயாகும்.

#### தென்பிராந்தியம்

1973-74ஆம் ஆண்டுவரை, இப் பிராந்தியத்தின் மின்சக்தி நிலை திருப்திகரமாக இருந்தது. ஆனால் இவ்வாண்டில், மழை நீர்த்தேக்கப் பகுதிகளான சாராவதி, மாட்கண்ட் (Matkandh) போன்ற இடங்களில் ஏற்பட்ட வறட்சியின் காரணமாக, மைசூர், ஆந்திர மாநிலங்களிலிருந்து உற்பத்தி செய்யப்படும் மின்சக்தி அளவு குறைந்துவிட்டது.

#### இப் பிராந்தியத்தின் மின்னளவைக் கூடுதலாக்கக் கீழ்க்காணும் ஏற்பாடுகள் செய்யப்படுதல்வேண்டும்

(1) தமிழ்நாட்டிலுள்ள எண்ணூர் மின்சக்தி நிலையத்திற்குத் தேவையான குளிர்நீர் வசதியினைச் (cooling water) செய்துகொடுத்தல்.

(2) நெய்வேலி மின்சக்தி நிலையத்திற்குத் தேவையான அதிக அளவு பழுப்பு நிலக்கரி கிடைக்க வழி செய்தல் (அண்மையில், இரண்டாவது பழுப்பு நிலக்கரிச் சுரங்கம் ஒன்றினை இங்குத் தோண்ட அனுமதி கிடைத்துள்ளது).

(3) போதுமான அளவு நிதியை ஒதுக்கீடு செய்வதன்மூலம் கேரளத்திலுள்ள இடிக்கி அணுமின்சக்தி நிலையத்தினையும், ஆந்திர மாநிலத்திலுள்ள லோயர் சிலி அணுமின்சக்தி நிலையத் திட்டத்தினையும், கர்நாடக மாநிலத்திலுள்ள காளிந்தி அனுமின்சக்தி முதற் பகுதியினையும் 1974ஆம் ஆண்டிற்குள் தொடங்கல்.

**மேற்குப் பிராந்தியம்**

இப் பிராந்தியத்தின் மின் திறன்நிலை, மற்ற மாநிலங்கள், மின் சக்தி நிலையங்களை அமைத்து அவற்றை இயக்குவதில் காட்டும் வேகத்தினைப்பொறுத்து அமைகின்றது. இங்குக் கிடைக்கும் சிறிதளவு உபரி மின்திறனும் மத்தியப் பிரதேசத்திற்கு அனுப் பப்பட்டுவிடுகிறது. 1973-74ஆம் ஆண்டில் கோர்பா (Korba) விஸ்தரிப்புத் திட்டத்தினையும், அமர்கண்டக் விஸ்தரிப்புத் (Amarkantak Extension) திட்டத்தினையும், மத்தியப் பிரதேச மாநில அரசு துவக்கியது. இதே ஆண்டு ஜுகாய் (Jukai) மின் சக்தி நிலையத்தினையும், சபர்மதி திட்டத்தினையும் குஜராத் மாநிலம் துவக்கியது. ஆனால், ஐந்தாவது ஐந்தாண்டுத் திட்டத் தின்போது பயனளிக்கக்கூடிய எவ்விதப் புதிய திட்டத்தினையும் மகாராட்டிர மாநிலம் இவ்வாண்டில் தயாரிக்கவில்லை.

**கிழக்குப் பிராந்தியம்**

இப் பிராந்தியத்தின் முன்னேற்றம் மிகவும் சொற்பமானது. பல ஆண்டுகள் தாமதித்த பின்னர், 1973-74ஆம் ஆண்டில் சாண் டல் டீ (Santal dih) சர்ந்தேர்புரா (Chanderpura) மின்திட்டம் துவக்கப்படும் நிலைக்கு வந்துள்ளது. சந்தேர்புரா (Chanderpura) மின்திட்டத்தின் விஸ்தரிப்புக்குப் போதுமான இயந்திரங்கள், கருவிக்கலன்கள், கிடைக்காத காரணத்தால், தடைப்பட்டு நிற்கின்றது. பத்ரதாவு (Batratau) திட்டத்தின் விஸ்தரிப்பு, அங்குள்ள அதிகாரிகள் செய்யவேண்டிய கட்டட வேலைகளைச் சரிவரச் செய்யாத காரணத்தால் தடைப்பட்டு நிற்கின்றது.

**வடகிழக்குப் பிராந்தியம்**

இப் பிராந்தியத்தின் பல பகுதிகளுக்கு மின்சக்தி கிடைக்கப் பெருவிடினும், இங்குள்ள மின்திறன் நிலை திருப்திகரமாக உள்ளது. மின் உற்பத்தியில், சந்தேர்ப்புராத் திட்டம், நாம்ருப் (Namrup) திட்டம், குமாதி (Gumathi) அணுமின்சக்தித் திட்டம் போன்றவை போதிய கவனம் செலுத்தப்பட்டு வருகின்றன. இருப்பினும் குறிப்பிடத்தக்க வேகத்தில் இவற்றின் முன்னேற்றம் அமையவில்லை.

மேலே குறிப்பிடப்பட்டுள்ள பிராந்தியங்களின் நிலையிலிருந்து அங்குள்ள திட்டங்களைச் சரிவர நிறைவேற்றாத காரணத்தாலேயே மின்சக்திப் பற்றாக்குறை நாடெங்கிலும் ஏற்பட்டுள்ளதெனக் கூறலாம்.

## தொலைப்பேசி நிறுவனங்கள்

காலத்தோடு போட்டியிட்டுக் கொண்டு அன்றாட வாழ்க்கையை நடத்தி வருகின்ற இன்றைய மனிதனுக்கு விஞ்ஞானக் கருவிகள் பலவும் தேவைப்படுகின்றன. ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்குத் துரிதமாகச் செல்ல மோட்டார் வண்டிகளையும் இருப்புப் பாதை வண்டிகளையும், ஆகாயவிமானங்களையும் கண்டு பிடித்த மனிதன், ஓரிடத்திலிருந்து கொண்டே தனது செயல்களை முடிக்கும் திறமையையும், வளர்த்துக்கொள்ள விரும்பினான். நண்பர்களுடன் அளவளாவுவதும், அன்றி அரசியல் கருத்துகளைப் பரிமாறிக் கொள்ளவும், அல்லது வாணிகப் புள்ளிவிவரங்களைத் தெரிவித்தும், தெரிந்து கொண்டும், அதற்கேற்ப முடிவுகளைச் செய்யவும், ஆபத்து ஏற்படும்போது உதவிக்குப் பிறரை அழைக்கவும், இவைபோன்ற எண்ணற்ற பல்வேறு செயல்களுக்கும் அவன் கையாளக்கூடிய கருவியே "தொலைபேசி"யாகும். ஒரு நாட்டிற்குள் உள்ள மனிதர்களுடன் மட்டுமின்றிப் பன்னாடுகளில் வாழ்வோருடனும் தொடர்பு கொள்ள, தொலைபேசிக் கருவியின் இன்றியமையாமையை உணர்ந்த நாம், இவ்வசதியை அளிக்கின்ற நிறுவனங்களைப் பற்றியும், அறிந்துகொள்ள வேண்டாமா?

கிரகாம்பெல் என்னும் மேனாட்டு விஞ்ஞானி கண்டறிந்த தொலைபேசிக் கருவியினைப் பயன்படுத்தும் முறையினைச் சீரிய முறையில் செய்ய உலகெங்கிலும் வெவ்வேறு முறைகள் (Systems) கையாளப்பட்டன, ஏன், இன்றளவும், தொலைபேசி முறையில் பல புதிய வசதிகள் அறிமுகப்படுத்தப்பட்டு வருகின்றன. அமெரிக்க நாட்டினர் முதன்முதலாகத் தொலைபேசி வசதியை

அறிமுகப்படுத்தியபோது, இக் கருவியைக் கண்டுபிடித்த விஞ்ஞானியின் நினைவாக, 'பெல்-முறை' (Bell-system) என்ற பெயருடன் துவக்கினர். இதனைத் தொடர்ந்து, உலகெங்கிலும் பலவித நிறுவனங்கள் தோன்றியுள்ளன.

**நிறுவனங்கள் செயற்படும் முறை**

எந்த ஒரு பொருளையும் சந்தையில் விற்பதுபோன்றே, தொலைபேசி வசதியும், சந்தையில் விற்கப்படுகின்றது. இதற்கெனப் பல நிறுவனங்கள் தோற்றுவிக்கப்பட்டு, ஒவ்வொன்றும் ஒரு குறிப்பிட்ட பகுதியில் தனது பணி எல்லையை அமைத்துக் கொண்டு செயற்படத் தொடங்கின. இவை (1) தனியார் நிறுவனங்கள் என்றும் (2) அரசு நிறுவனங்கள் என்றும் இருவகைப் படும். நம் நாட்டைப் பொறுத்த வரையில், தனியார் துறையினருக்குத் தொலைபேசி நிறுவனங்கள் நடத்த அனுமதி வழங்கப் படவில்லை. மாறாக, ஒவ்வொரு மாநில அரசும், தனது மாநில எல்லைக்குள் தொலைபேசி நிறுவனங்கள் அமைத்துக் கொள்ளுகின்றன. ஒவ்வொரு நகரத்திலும் இதற்கென ஓர் அலுவலகம் (Exchange) நிறுவப்பட்டு, அதன் மூலம், ஒருவர் மற்றொருவருடன் தொடர்பு கொள்ள ஏற்பாடு செய்யப்படுகிறது. இத்தகைய தொலைபேசி நிறுவனங்கள் அனைத்தும், மத்திய-மாநில அரசுகளின் கூட்டுக்கண்காணிப்பில் இயங்குகின்றன. நம் நாட்டிலுள்ள அஞ்சல் துறையினைக் கண்காணிக்கும் அமைச்சரவையே தொலைபேசி நிறுவனங்களையும் முறைப்படுத்தி வருகின்றது.

**தொலைபேசி இணைப்புகளின் வகைகள் (Kinds of Telephone Connections)**

தொலைபேசி இணைப்புகள் கீழ்க்காணும் முறையில் அளிக்கப் படுகின்றன.

(1) வாடிக்கையாளருக்குச் சொந்தமான தொலைபேசிக் கருவிகள்.

(2) வாடகைக்கு அளிக்கப்படும் தொலைபேசிக் கருவிகள்.

முதல்வகையில், வாடிக்கையாளர் ஒருவர் குறிப்பிட்ட ஒரு தொகையினை முன்கூட்டியே செலுத்த வேண்டும். அதன் பின்னர், அவருக்கு ஒரு தொலைபேசிக் கருவி இலவசமாக அளிக்கப்படும். இக் கருவியினை உபயோகித்து, அவர் விடுக்கின்ற அழைப்பு (Calls) ஒவ்வொன்றிற்கும் குறிப்பிட்ட கட்டணம் வசூலிக்கப்படும். சில நேரங்களில் வாடிக்கையாளருக்குத் தொலைபேசிக் கருவியைச் சொந்தமாக வாங்கிக் கொள்ள வசதி

யில்லாதிருக்கலாம். அந் நிலையில் அவர் குறிப்பிட்ட தொகையைக் காப்புத் தொகையாகக் (Deposit Money) கட்ட வேண்டும். பின்னர், ஒவ்வொரு மூன்று மாதங்களுக்கு ஒருமுறை தொலைபேசி நிறுவனத்திற்குக் குறிப்பிட்ட தொகையை வாடகைக் கட்டணமாக அவர் கட்ட நேரிடும். தமது தொலைபேசிக் கருவியைப் பயன்படுத்தி அந் நபர் ஓர் எண்ணிக்கை வரையிலும் அழைப்புகளை இலவசமாக விடுக்கலாம். இதன் பின்னர் விடுக்கின்ற ஒவ்வொரு அழைப்பிற்கும் குறிப்பிட்ட கட்டணத்தைச் செலுத்த வேண்டும்.

**தொலைபேசி நிறுவனங்கள் அளிக்கின்ற வசதிகள்**

இந் நிறுவனங்கள் அளிக்கின்ற வசதிகள் எண்ணற்றவை. சமுதாயத்தின் பொருளாதார முன்னேற்றத்திற்கும், பண்பாட்டு வளர்ச்சிக்கும், இன்னும் இவைபோன்ற பல செயல்களுக்கும் தொலைபேசி நிறுவனங்கள் துணைபோகின்றன. இந் நிறுவனங்கள் கீழ்க்காணும் அழைப்புகளுக்குத் தொடர்பு ஏற்படுத்தித் தருகின்றன :

(1) **உள்ளூர் அழைப்புகள்** (Local calls)

ஒரு நகர எல்லைக்குட்பட்ட அல்லது ஒரு தொலைபேசி நிறுவனத்தின் பணி எல்லைக்குட்பட்ட இடங்களுக்குத் தொடர்பு ஏற்படுத்திக் கொடுக்கப்பட்டால் அஃது உள்ளூர் அழைப்பாகக் கருதப்படும். இத்தகைய ஒவ்வொரு அழைப்பிற்கும் சாதாரண கட்டணமே விதிக்கப்படும்.

(2) **வெளியூர் அழைப்புகள் அல்லது தொலைதூர அழைப்புகள்** (Trunk-calls)

ஒரு நகரத்தில் வசிக்கும் ஒருவர் மற்றொரு நகரத்தில் வசிப்பவருடன் தொலைபேசிமூலம் தொடர்புகொள்ள விழைந்தால் இத்தகைய வெளியூர் அழைப்புகள் அளிக்கப்படும். இதற்கான கட்டணம், தொலைபேசிமூலம் தொடர்பு கொள்ளும் நேரத்தையும், சிலநேரங்களில் அழைக்கப்படும் நபர் வசிக்கும் நகரத்தின் தூரத்தையும் பொறுத்து அமைகின்றது.

வெளியூர் அழைப்புகளை, (1) அஞ்சல் அலுவலங்கள் மூலமும், (2) நேரடித்தொடர்புமுறைமூலமும் ஏற்படுத்தலாம். (3) வெளிநாட்டு அழைப்புகள். இவற்றை ஆங்கிலத்தில் " International Calls" என்றும் "Cable" என்றும் கூறுவர்.

**கட்டண முறை**

பொதுப்பயன் தொழில்களில், தொலைபேசி நிறுவனங்களின் கட்டணமுறை தனித்து அமைகின்றது. ஏனெனில் இந் நிறுவனங்

களின் கட்டண அடிப்படையும், மற்றத் தொழில்களின் கட்டண அடிப்படையைவிட வேறுபட்டதாக காணப்படுகின்றது. இவற்றின் நிலையான சொத்துகளின் மதிப்பும், செயல்முறைச் செலவும் மிக அதிகமானதாகக் காணப்படுவதே, இதற்கான காரணமாகும். இந் நிறுவனங்கள் தாங்கள் அளிக்கின்ற பணிக்கான கட்டணத்தை மட்டும் வசூலிக்க இயலாது. நிலையான சொத்துகளின்மீது ஏற்படுத்தப்பட்ட தேய்மானம், மற்றும் அளிக்கவேண்டிய வரிகள் போன்றவற்றையும் சரிக்கட்டும் வண்ணம், வருவாய்வீதம் அமையவேண்டும்.

**இயக்கத்தில் ஏற்படும் இன்னல்கள்**

ஒரேயொரு கட்டடத்திற்குள் தனது அலுவலகத்தை அமைத்துக் கொண்டு இயங்கி வருகின்ற பல நிறுவனங்களைப் போன்று, தொலைபேசி நிறுவனங்கள் இயங்க முடியாது. ஏனெனில், ஆங்காங்கே தொலைபேசித் தூண்களை நட்டு அவற்றின் துணைகொண்டுதான் செய்திகளை அனுப்ப வேண்டியிருக்கின்றது. இந் நிலையில், இத் தூண்கள் சரிவர அமையாவிட்டாலோ புயல், மழை, பூகம்பம் போன்ற இயற்கையின் கொடூரமான விளையாட்டுக்களினாலோ, இத் தூண்களோ அன்றி, செய்தியைத் தாங்கிச்செல்லும் கம்பிகளோ பழுதுபட்டுப் போகலாம். இவற்றைத் தவிர சாலைகளில் ஏற்படும் விபத்துகளின் காரணமாகவும், தொலைபேசிக் கம்பிகளைத் தாங்கி நிற்கும் தூண்கள் சீர்குலைந்து போகும். இவையனைத்தும் மீண்டும் சரிசெய்யப்படும்வரை, தொலைபேசி அழைப்புகளுக்கான தொடர்புகளை ஏற்படுத்த முடியாது. இன்னும் சில வேளைகளில், மிகவும் உள்ளடங்கிய குக்கிராமங்களில் உள்ளவருக்குச் செய்தி தெரிவிக்க வேண்டிய நிலை ஏற்பட்டால், பெரும் காலதாமதம் ஏற்படுகிறது. இதனால் தொடர்புகொள்ள எண்ணுவோர் பெரிதும் துன்புற நேரிடும்.

மேற்காணும் குறைகள் போன்று எத்தனை ஏற்பட்டாலும், பொதுமக்களின் அன்றாட வாழ்வுடன் தொடர்பு கொண்டுள்ள தொலைபேசி நிறுவனங்கள் சேவையை எவராலும் புறக்கணிக்க முடியாது. இந் நிறுவனங்கள் அனைத்தும் ஒன்றுபோலவே செயற்படுவதால், இவற்றுள் ஒரு நிறுவனத்தின் இயக்க முறையினை ஆராய்ந்து பார்த்தால், அனைத்து நிறுவனங்களைப் பற்றியும் நன்கு அறிந்த நிலை ஏற்படும். எனவே, திறனாய்வுப் பகுதியில் கொடுக்கப்பட்டுள்ள சென்னை மாநிலத்தின் தொலைபேசி நிறுவனங்களின் பணிபற்றிய செய்தியினை நன்கு ஆராய்தல் பலனளிக்கும்,

**போக்குவரத்து நிறுவனங்கள்**

மனிதனது நாகரிகம் வளரவும், தொழில்வளம் பெருகவும் வாணிகம் தழைத்தோங்கவும் போக்குவரத்துச் சாதனங்கள் இன்றியமையாதவையாகக் கருதப்படுகின்றன. விஞ்ஞான அறிவின் முதிர்ச்சியால் இன்றைய தினம் ஏராளமான போக்குவரத்துச் சாதனங்கள் பல்கிப் பெருகியுள்ளன. அவற்றை நிலம், நீர், விண்வழி என்னும் மூன்று வகைகளாகப் பிரிக்கலாம். ஒவ்வொரு வகையிலுமுள்ள போக்குவரத்துச் சாதனங்களைத் தனியார் நிறுவனங்களும், சிற்சில சமயங்களில் அரசு நிறுவனங்களும் எடுத்து நடத்துகின்றன. தனியார் துறையில் சிறப்புற இயங்காத நிறுவனங்களை அரசுடைமையாக்கியும் இப் போக்குவரத்து வசதி பொதுமக்களுக்கு அளிக்கப்படுகிறது. 'பொதுநல ஈடுபாட்டுடன்' செயற்படாவிடினும், 'பொதுமக்களின் வசதிக்' கெனவே பணிபுரிகின்ற இம் மூன்று வகை நிறுவனங்களையும், பொதுப்பயன் தொழிலாகவே கருதலாம். அவற்றைப்பற்றி இனி ஈண்டு ஆராய்வோம்:-

**இருப்புப்பாதை போக்குவரத்து நிறுவனங்கள்**

ஜேம்ஸ்வாட்டின் (James Watt) நீராவி அழுத்தத்தின் கருத்தினைப் பெற்று அதற்கேற்பத் தயாரிக்கப்பட்ட நீராவி என்ஜின் இரயில் வண்டி முதல், இன்று விண்ணில் செல்லும் ட்யூப் இரயில் முதல் மோனோ இரயில் வரை, பலவிதமான இரயில் வண்டிகள் போக்குவரத்தில் இயங்கியுள்ளன. இவற்றை வெளிநாடுகளில் பலவிதத் தனியார் துறை நிறுவனங்கள் நடத்துகின்றன. ஆனால், இந்தியாவைப் பொறுத்தவரை, ஒரே ஒரு இரயில் நிறுவனமே இயங்குகின்றது. இஃது அரசால் நடத்தப்படுகின்றது.

சரக்கு இரயில் வண்டிகளின் எண்ணிக்கையும், ஓட்டநேரமும் அதிகரிக்கப்பட்டுள்ளது. சாலைப்போக்குவரத்தில் அனுப்ப முடியாத பளுவான பொருள்களும், அரிசி, கோதுமை போன்ற உணவுப் பொருள்களும், தொழிற்சாலைகளுக்குத் தேவையான நிலக்கரி, சிமெண்ட் போன்ற பொருள்களும் தினந்தோறும், ஆயிரக்கணக்கான மைல்கள் பயணம் செய்கின்றன. இவை தவிர, இராணுவத்திற்குத் தேவையான தளவாடங்களும் மற்றும் இதர கருவிகளும், எல்லைப் புறங்களுக்கும் முன்னணிப் பகுதிகளுக்கும் அனுப்பப்படுகின்றன. இத்தகைய கடுஞ்செயலைச் சற்றும் பொருட்படுத்தாது தனது பணியினைச் செய்துவரும் இந்திய இரயில்வே ஒரு மாபெரும் நிறுவனமாகத் திகழ்கின்றது என்பதில் ஐயமில்லை,

மோட்டார்வண்டிப் போக்குவரத்து கண்டுபிடிக்கப்பட்டு அது வளர்ச்சியடையும் வரை, இரயில் வண்டிப் போக்குவரத்துத் தனியுரிமை நிலை பெற்றிருந்தது என்றாலும், அதன் பின்னரும் இரயில் வழிப்போக்குவரத்தின் சிறப்புக் குன்றி வந்துள்ளது. பெருமளவில் பயணியரை ஏற்றிச் செல்வதோடு, வணிக நிறுவனங்களின் பொருள்களை ஏற்றிச்செல்லும் பணியிலும் புகை வண்டிப் போக்குவரத்து ஈடுபட்டுள்ளது. சரக்கு இரயில்களின் உதவியால், குறிப்பிட்ட ஒரு பொருளைத் தயாரிப்பவரும், அவருடைய கிடங்கும் மிகவும் நெருக்கமாகச் சேர்க்கப் பட்டு அதன் காரணமாகப் பொருள்களை அதிக அளவில் வாங்கி வைத்துக்கொள்ளும் பழக்கமோ, மிகக் குறைவாக வாங்கிச் சேமிக்கும் பழக்கமோ ஏற்படலாம். இதனைத் தொடர்ந்து பலவிதப் பொருளாதார நன்மைகளும் ஏற்படுகின்றன.

இந்திய இரயில் நிறுவனம் உலகிலேயே மிகச் சிறந்த இரயில் நிறுவனங்களில் ஒன்றாக விளங்குகின்றது. இதனுடைய மொத்த தூரம் 59,684 கிலோ மீட்டர் எனக் கணக்கிடப்பட்டுள்ளது. தனிப்பட்ட முறையில் இயங்குகின்ற உலக நிறுவனங்கள் அனைத் துள்ளும் இந்திய இரயில் நிறுவனம் மிகவும் பெரியதாகவும், இந்தியாவில் இயங்குகின்ற அரசுடைமையாக்கப் பட்ட நிறுவனங் களுள் முதன்மையானதாகவும், விளங்குகின்றது. இந்திய இரயில்வேயின் மொத்த சொத்துகளின் மதிப்பு ரூ. 3,928 கோடியாகும். மேலும், இதில் 16. 6 இலட்சம் பேர் பணிபுரிகின் றார்கள் என்றும், சொந்தமாக 11, 300 என்ஜின்கள் உள்ளன வென்றும் கணக்கிடப்பட்டுள்ளது. இவற்றைத் தவிர, இந்திய இரயில்வேயில், 34,700 கோச் வண்டிகளும் (பயணியர் வண்டிகள்) 3. 84 இலட்சம் சரக்கு இரயில்களும் உள்ளன. சராசரியாக ஒரு நாளைக்கு விடப்படுகின்ற 10,000 இரயில்கள் 7000 இரயில் நிலையங்களைக் கடக்கின்றனவென்றும், சுமார் 64 இலட்சம் பயணியரையும், 5·7 இலட்சம் டன் நிறையுள்ள சரக்குகளையும் ஏற்றிச் செல்லுகின்றன என்றும் தெரியவருகின்றது. இதன் மூலம், வருடத்திற்குச் சுமார் 950 கோடி ரூபாய் வருவாய் கிடைக் கின்றது. இருப்பினும், அமெரிக்க ஐக்கிய நாடு இரயில்வேயின் அளவினைப் பார்க்கும்போது, இந்திய இரயில்வே மிகச் சிறிய தாகவே தோன்றுகிறது. ஏனெனில், இந்திய இரயில்வேயை விட, சுமார் ஆறு மடங்குப் பெரியதாகவும், 2,22,000 மைல் நீளமுள்ள இரயில் பாதையை உடையதாகவும், மிகப் பெருமளவு சரக்கினை ஏற்றிச் செல்வதாகவும், அமெரிக்க ஐக்கிய நாட்டு இரயில்வே உள்ளது. இந்திய இரயில்வேயினால் ஏற்றிச் செல்லப்படும் பயணியரின் எண்ணிக்கை மிகக் கணிசமானது என்பதும் குறிப்பிடத்தக்கது.

**இரயில்வே நாட்டுடைமையாக்கப்படுதல் (Nationalisation of Railways)**

உலகெங்கிலும், இரயில் போக்குவரத்தின் இன்றியமையாமை பெருமளவில் உணரப்பட்டு வருவதால், இத் துறையை விரிவுபடுத்தவும், பன்னாடுகளின் அரசுகள் முடிவு செய்துள்ளன. இரயில்வே போக்குவரத்தினை நடத்த மிகப் பெருமளவு முதலீடு தேவைப்படுகிறது. ஆனால், இதிலிருந்து கிடைக்கும் வருவாய் மிகவும் குறைவாகவே இருக்கின்றது. மேலும், நிலையான சொத்துகளை மிக அதிகமான அளவில் வாங்கி வைத்திருக்க வேண்டிய இருக்கிறது. எனவே, வருவாய் மிகக் குறைவாகக் கிடைப்பினும், அதனைப் பொருட்படுத்தாது, பொதுநல ஈடுபாட்டுடன் இரயில்வே பணிபுரிய வேண்டுமானால், அதனை அரசுதான் ஏற்று நடத்தவேண்டும். மேலும், தனியார் நிறுவனங்கள் இரண்டோ மூன்றோ இருப்புப்பாதை போக்குவரத்தை ஏற்று நடத்துமாயின், அந் நிறுவனங்களிடையே போட்டி ஏற்படும். ஒவ்வொரு நிறுவனமும் தனது வாடிக்கையாளருக்குத் தேவையான போக்குவரத்து வசதியை அளிக்கும்பொருட்டு, தனித்தனியே இருப்புப்பாதைகளும், அதற்கேற்பத் தனித்தனி பயணியர், சரக்கு வண்டிகளும் வாங்குமேயானால், வீணான செலவு ஏற்படும். இது ஒரு நாட்டின் பெருமளவு முதலீட்டுத் தொகையினை, ஒரே இடத்தில் முடக்குவதற்கு ஒப்பாகும். இந் நிலை நாட்டின் பொருளாதாரத்தையே பாதிக்கக் கூடியது. எனவேதான், நம் நாட்டைப் பொறுத்தமட்டில், தனியார் துறையில் இரயில் போக்குவரத்தை நடத்தாமல், அரசுத் துறையில் ஏற்றுநடத்த முடிவு செய்யப்பட்டது.

**இரயில்வே போர்டு (Railway Board)**

இரயில் போக்குவரத்தினை முறைபடுத்தவும், இத் துறையினை நன்கு நிருவகிக்கவும், ''இரயில்வே போர்டு'' என்ற ஓர் அமைப்பு 1905 ஆம் ஆண்டு ஏற்படுத்தப்பட்டது. இரயில்வே துறையின் கடமைகளை வலியுறுத்தவும் உரிமைகளை அளிக்கவும், ஏனைய நடைமுறைச் சிக்கல்களுக்கு வழிகாணவும் ஏனைய பொறுப்புகளை ஏற்கவும் ''இரயில்வே போர்டு'' கடமைப்பட்டுள்ளது. இத் தகைய கொள்கைகளை வரையறுப்பதும், இப் போர்டு நன்முறையில் இயங்க உறுதுணை புரியவும், இதற்கான தனி அமைச்சர் ஒருவர் இருக்கிறார்.

**இரயில்வே போர்டில் உள்ள உறுப்பினர்கள் பின்வருவோராவர்:**

1. ஒரு தலைவர்—இவர் இரயில்வே அமைச்சரின் தலைமைச் செயலராக இருப்பார்,

2. ஒரு நிதிநிலைக் கண்காணிப்பாளர்.

3. மற்றும் மூன்று உறுப்பினர்கள்—இம் மூவரும் இரயில்வே அமைச்சரின் செயலராக இருப்பார்கள். எளிதான மற்றும் திறமையான நிருவாகத்தினை உண்டாக்கும் வண்ணம், நம் நாட்டின் இரயில்வே, ஒன்பது வகைகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. அவை :–

(1) தென்னிந்திய இரயில்வே (சென்னை).

(2) மேற்கிந்திய இரயில்வே (பம்பாய்).

(3) மத்திய இரயில்வே (பம்பாய்).

(4) வடக்கிந்திய இரயில்வே (டில்லி).

(5) கிழக்கிந்திய இரயில்வே (கல்கத்தா).

(6) வடகிழக்கு இரயில்வே (கோரக்பூர்).

(7) வட-கிழக்கு எல்லைப்புற இரயில்வே (மால்காவ் கௌஹாதி).

(8) தென்-மத்திய இரயில்வே (செகந்திராபாத்).

(9) தென்-கிழக்கு இரயில்வே (கல்கத்தா).

மேற்காணும் ஒன்பதுவகை இரயில்வேக்களின் தலைமை அலுவலகங்களுள், அடைப்புக்குறிகளில் கண்டுள்ள நகரங்களில் அமைந்துள்ளன. இவற்றை வட்டாரப் பிரிவுகள் (Zonal Divisions) என்று கூறலாம். ஒவ்வொரு வட்டாரத்திற்கும் ஒரு ஜெனரல் மானேஜர் பொறுப்பு ஏற்கிறார். இரயில்வே போர்டு நன்முறையில் இயங்கும் வண்ணம், அதனுடைய கொள்கைகளை வரையறுப்பதுடன், முறைப்படுத்துவதையும் ஜெனரல் மானேஜர் செய்கிறார். நம் நாட்டில் தற்போது மூன்று உற்பத்தித் தொழிற்சாலைகள் உள்ளன. அவை:–

(1) சித்தரஞ்சன் லோகோமோடிவ் ஒர்க்ஸ் (மே. வங்கம்) [Chitharanjan Locomotive Works (W. Bengal)].

(2) டீசல் லோகோ மோடிவ் ஒர்க்ஸ் (வாரணசி, உ. பி).
[Diesal Locomotive Works (Varanasi U. P)].

(3) இணைப்புப் பெட்டி தொழிற்சாலை (பெரம்பூர், சென்னை)
[Intergal Coach Factory, (Permbur, Madras).]

அன்றுடம் பொதுமக்களுடன் தொடர்புகொண்டிருந்த இரயில்வே துறை நன்கு இயங்க வேண்டுமென்ற எண்ணத்துடன் கீழ்க்காணும் குழுக்கள் அமைக்கப்பட்டுள்ளன. அவை:

(1) டிவிஷனில் இரயில்வே உபயோகிப்போர் ஆலோசனைக் குழுக்கள்.

(2) ஒவ்வொரு இரயில்வே வட்டாரத்திற்குமான (Zones) அதனுயை தலைமை அலுவலகத்தில் நுகர்வோரின் ஆலோசனைக் குழு என ஒன்பது குழுக்கள்.

(3) மத்திய, தேசிய இரயில்வே உபயோகிப்போர், ஆலோசனைக் குழு என்ற மூன்று வகைக் குழுக்கள் அமைக்கப்படுகின்றன.

மிகப் பெருமளவில் செயல் திறனைக் கொண்டு விளங்கும் இந்நிறுவனத்திற்கான நடைமுறைச் சிக்கல்கள் ஏராளமாக இருப்பினும், அவ்வப்போது, திறமையாக அவை சமாளிக்கப்படுகின்றன. சமுதாயத்தில் ஏற்படுகின்ற குழப்பங்களாலும், கொந்தளிப்புகளாலும் பல இரயில் பெட்டிகள் தீக்கு இரையாக்கப்பட்டிருந்தாலும், தனது பணியினைத் தொடர்ந்து செய்துவரும் இந்திய இரயில்வே மிகவும் பாராட்டுக்குரியது.

## போக்குவரத்து முறைகள்



## சாலைப்போக்குவரத்து நிறுவனங்கள்

எல்லாக் கிராமங்களுக்கும் செல்லக் கூடியதாகவும், அனைவராலும் எளிதில் ஏற்றுக்கொள்ளக் கூடியதாகவும், சாலைப் போக்குவரத்து உள்ளது. குறிப்பாக மோட்டார் வண்டிகளைப் பயன்படுத்தி, போக்குவரத்து வசதியினை அளிப்பதற்கென ஏராளமான நிறுவனங்கள் தனியார் துறையில் தோன்றியுள்ளன. இவை இருப்புப்பாதைப் போக்குவரத்துடன் கடுமையான போட்டியை ஏற்றுக்கொண்டு பயணியரையும், சரக்குகளையும், ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்கு எடுத்துச் செல்லும் பணியில் ஈடுபட்டுள்ளன. மிகுதியான வருவாயை ஈட்டும் பொருட்டு மோட்டார் வண்டிகளில் நெரிசல் ஏற்படுவதையும் பொருட்படுத்தாது, இவை பயணியரை ஏற்றிச் செல்லுகின்றன. இதுவரை, நம் நாட்டிலுள்ள மோட்டார் போக்குவரத்தின்மூலம் 6,083 மில்லியன் ரூபாய் வருமானம் கிடைத்துள்ளது என்பது குறிப்பிடத் தக்கது.

இரண்டாம் உலகப் போருக்குப் பின்னர், சாலைப் போக்குவரத்தில் முன்னேற்றம் காணவேண்டுமென்ற கருத்துடன், 1—4—1947-ல், தேசிய நெடுஞ்சாலைகளை அமைக்கும் பொறுப்பினை, மத்திய அரசு ஏற்றுக் கொண்டது. தற்போதுள்ள தேசீய நெடுஞ்சாலைகளின் மொத்த தூரம், 24,143 கிலோ மீட்டராகும். தற்போது இதில் 21 வகை சாலைகள் உள்ளன. எனினும் இவற்றுள் இன்றியமையாதவையாக, "கிராண்ட் டிரங்க் ரோட்ஸ்" (Grand Trunk Roads) என்னும் நெடுஞ்சாலைகள் கருதப்படுகின்றன. இவற்றில் கீழ்க்காணும் நான்கு நெடுஞ்சாலைகளும் மிகவும் குறிப்பிடத்தக்கவை:-

i. டில்லி—கல்கத்தா செல்லும் பாதை.

ii. கல்கத்தா—சென்னை செல்லும் பாதை.

iii. சென்னை—பம்பாய் செல்லும் பாதை.

iv. பம்பாய்—டில்லி செல்லும் பாதை.

### ஐந்தாண்டுத்திட்ட காலத்தில் சாலைப்போக்குவரத்தின் முன்னேற்றம்

சாலைப் போக்குவரத்து நிறுவனங்கள் நன்முறையில் செயற்பட வேண்டுமானால், நாட்டிலுள்ள சாலைகள் சிறந்ததாகவும், அடிக்கடி செப்பனிடப்பட்டதாகவும் இருக்கவேண்டும். கடந்த ஐந்தாண்டுத் திட்டங்களில், நம் நாட்டின் சாலைகளைச் சீரமைக்கும் பணி எவ்வாறு இருந்ததென்பதைப் பார்ப்போம்.

**முதலாம் ஐந்தாண்டுத் திட்டம்**

இத் திட்ட காலத்தில் சாலைகளைச் சீரமைக்க ரூபாய் 150 கோடி செலவிடப்பட்டது.

**இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம்**

ரூபாய் 244 கோடி செலவிடப்பட்டது.

**மூன்றும் ஐந்தாண்டுத் திட்டம்**

முதலில் 271 கோடி ரூபாய் இத் திட்ட காலத்திற்காக ஒதுக்கீடு செய்யப்பட்டது. ஆனால், உண்மையில் சாலைகளின் சீரமைப்பிற்காக ரூபாய் 324 கோடி செலவிடப்பட்டது. இவற்றைத்தவிர 300 மைல் நீளத்திற்கு விட்டுப்போன பாதைகள் சரிசெய்யப்பட்டதுடன், 60 பெரிய பாலங்களும் கட்டப்பட்டன.

**நான்காவது ஐந்தாண்டுத் திட்டம்**

இத் திட்டத்தின் போது, ஏற்கனவே இருக்கும் நெடுஞ்சாலைகளைச் செப்பனிட ஆகக்கூடிய 2,390 மில்லியன் ரூபாயையும் சேர்த்து மொத்தம் 3,284.5 மில்லியன் ரூபாய் ஒதுக்கீடு செய்யப்பட்டது. ஆசியாவிலேயே மிகவும் ஒருங்கிணைந்த சாலைப் போக்குவரத்தை இந்தியநாடு பெற்றுள்ளதற்குக் காரணம், ஐந்தாண்டுத் திட்டங்களினால் ஏற்பட்ட வியக்கத்தக்க முன்னேற்றமாகும்.

மோட்டார் வண்டிகள் வேகமாகச் செல்லத்தக்க ஐந்து எக்ஸ்பிரஸ் நெடுஞ்சாலைகள் தற்போது அமைக்கப்பட்டுள்ளன. முதல் இரண்டு சாலைகளும், பம்பாய் புறநகர்ப் பகுதிகளில் அமைந்துள்ளன. இவற்றை மேற்கத்திய, மற்றும் கிழக்கிந்திய எக்ஸ்பிரஸ் நெடுஞ்சாலைகள் என அழைப்பர். மூன்றுவது நெடுஞ்சாலை கல்கத்தாவிலிருந்து டம்டம் (Dum Dum) விமான நிலையம் வரை அமைந்துள்ளது. நான்காவது ஒரிசாவிலுள்ள சுகிண்டா (Sukinda) சுரங்கப் பகுதியிலிருந்து, பாரதீப் (Paradip) துறைமுகம் வரையிலும், ஐந்தாவது எக்ஸ்பிரஸ் நெடுஞ்சாலை துர்காபூரிலிருந்து கல்கத்தா வரையிலும் உள்ளது.

பொதுமக்களுக்கும் சிறந்த முறையில் போக்குவரத்து வசதியை அளிக்கவேண்டுமென்று எண்ணத்துடன், 1946ஆம் ஆண்டுமுதல், போக்குவரத்து நிறுவனங்களை அரசுடைமையாக்க அனைத்து மாநிலங்களும் எண்ணிவந்துள்ளன. இதன் விளைவாக சாலைப் போக்குவரத்து கார்ப்பொரேஷன் சட்டம் 1950-ன்படி (Road Transport Corporation, 1950) சட்டத்தின்மூலம் தனி

கார்ப்பொரேஷன்கள் ஆந்திரா, பீஹார், மைசூர், மத்திய பிரதேசம், மகாராட்டிரம், குஜராத், பஞ்சாப், ராஜஸ்தான், மேற்கு வங்காளம், கேரளா மற்றும் ஒரிஸ்ஸா போன்ற மாநிலங்களில் துவக்கப்பட்டன. இவையனைத்தும் பயணியரை மட்டுமே ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்கு ஏற்றிச் செல்பவையாக இருந்தன. சரக்குகளை ஏற்றிச்செல்லும் சரக்கு வண்டிகளையும் அரசுடைமையாக்கும் வண்ணம் முயற்சிகள் எடுக்கப்பட்டன. முதலில் அஸ்ஸாம், வடக்கு வங்காளம் ஆகிய இரண்டு பகுதிகளுக்கும் பொதுவாக, "சென்ட்ரல் ரோட் டிரான்ஸ்போர்ட் கார்ப்பொரேஷன்" என்ற நிறுவனம், 150 வண்டிகளுடன் இயங்கி வருகிறது. ஒரு மாநிலத்திற்கும், மற்றொரு மாநிலத்திற்குமிடையே சரிவரப் போக்குவரத்து அமையவேண்டுமென்பதற்காக, "இன்டர்-ஸ்டேட் டிரான்ஸ்போர்ட் கார்ப்பொரேஷன்" (Inter-State Transport Corporation) என்ற ஓர் அமைப்பு ஏற்படுத்தப்பட்டது. சாலை வழி மற்றும் உள்நாட்டு நீர்வழிப் போக்குவரத்து முறைகளிடையே ஏற்படும் வேறுபாட்டினைப் போக்கி இரண்டையும் ஒருமித்து இயங்குமாறு செய்வதற்காகப் "போக்குவரத்து அபிவிருத்திக் கழகம்" (Transport Development Corporation) என்ற ஒன்று ஏற்படுத்தப்பட்டது. இதனைத் தொடர்ந்து 1963ஆம் ஆண்டுச் சாலைப்போக்குவரத்து நிறுவனங்களின் கழகம் (Association of Road Transport Undertakings) என்பது ஏற்படுத்தப்பட்டது.

இவ்வாறு சாலைப் போக்குவரத்தினை ஏற்படுத்தும் வகையில் மத்திய அரசு செய்துள்ள பணிகளைப் பார்த்தோம். சென்னை மாநகரில் சீரிய பணியினைச் செய்துவரும், 'பல்லவன் போக்குவரத்துக் கழக'த்தின் பணிகளைப்பற்றித் திறனாய்வுப் பகுதியில் காண்க. இதனைப் போன்றே பம்பாய் நகரில் இருக்கக்கூடிய BEST (Bombay Electric Supply and Transport) நிறுவனமும் வெற்றிகரமாக இயங்கி வருகின்றது. சுருங்கக்கூறின், பொதுப் பயன் தொழில்களுள் ஒருவகையான சாலைப்போக்குவரத்து நிறுவனங்களைப்பற்றி மேற்காணும் கருத்துகளைக் குறிப்பிடலாம். தமிழ்நாட்டில் வெற்றிகரமாக இயங்கி வந்த T.V.S. போன்ற நிறுவனங்கள் தற்போது அரசுடைமையாக்கப்பட்டதன் நோக்கம், பொதுநல ஈடுபாடு என்பதால்தான். இவற்றைத் தவிர மோட்டார் வண்டிகளின் பாகங்களைத் தயாரித்து அளிக்கும் நிறுவனங்களான லேலண்ட், பென்ஸ் போன்ற நிறுவனங்களும், T.V.S., L.G.B. போன்ற கட்டுமான நிறுவனங்களும் நன்முறையில் இயங்கிவருகின்றன. அரசுடைமையாக்கப்பட்ட பல்லவன் போக்குவரத்து நிறுவனம் தற்சமயம் பலவகையான மகளிர் ஸ்பெஷல்கள், குழந்தை ஸ்பெஷல்கள் போன்றவற்றை ஏற்பாடு

செய்துள்ளது. இதன்மூலம், அலுவலக நேரங்களில் ஏற்படக் கூடிய நெரிசலைச் சமாளிக்கமுடியும் என்று கருதப்படுகிறது. [பல்லவன் போக்குவரத்துக் கழகத்தின் ஏனைய பணிகளுக்குத் திறனய்வுப் பகுதியைக் காண்க].

பொதுப்பயன் தொழில்கள் பொதுநல ஈடுபாட்டுடன் பணி புரிய வேண்டுமென்ற கொள்கையை ஏற்றுக்கொண்டு, சாலைப் போக்குவரத்தில் ஈடுபட்டுள்ள நிறுவனங்களை அரசுடைமை யாக்கும் பணி தற்போது தீவிரமாக நடைபெற்று வருகின்றது என்பது குறிப்பிடத்தக்கது.

## வான்வழிப் போக்குவரத்து

காலத்தோடு போட்டியிட்டுக்கொண்டு முன்னேறி வருகின்ற மனிதனது வாழ்வில் ஓய்வு என்று சொல்லுக்குப் பொருளில்லை. எண்ணத்தில் வேகம், எடுத்துக்கொண்ட செயலில் வேகம் என்று இன்றைய மனிதன் தனது வாழ்க்கையை மிகவும் துரித மாக்கிக் கொண்டுள்ளான். அதிலும் குறிப்பாக, வாணிகத்தில் ஈடுபட்டுள்ளோரின் வாழ்க்கை, காலச்சக்கரத்தின் சுழற்சியுடன் போட்டியிடுவதாகவே அமைந்துள்ளது. பெருமளவு முதலீடு செய்து தொழில் நடத்துகின்ற தொழிலதிபர்கள் பலர் காலையில் தங்களது சிற்றுண்டியை முடித்துக்கொண்டு வியாபார நிமித்தம் புறப்படுவார்களேயானல், நண்பகலில் டோக்கியோவிலோ ஏதாவது கீழை நாட்டிலோ உணவை முடித்துக்கொண்டு மாலைக்குள் அமெரிக்காவிலோ வேறு ஏதாவது நாட்டிலோ, வேறு ஒரு நபருடன் தொழில் முன்னேற்றம் குறித்துப் பேசிக் கொண்டிருக்கும் காட்சியைக் காணலாம். இஃது இன்றைய விஞ்ஞான உலகத்தில் புதிய காட்சியன்று. வணிகர் மட்டுமின்றி வாணிகம் செய்யப்படும் பொருள்களும் தினந்தோறும் வெகு தூரம் அனுப்பப்படுகின்றன. வைகறைப்போதில் கூடைகூடை யாக மதுரையிலிருந்து ஏற்றியனுப்பப்படும் மலர்கள், காலையில் 9 மணியளவில் பம்பாய் மாநகரின் கடைவீதிகளிலே விற்கப்படுவது மிகவும் இயல்பான காட்சி! இதுபோன்றே ஆஸ்தி ரேலியாவில் ஏற்றப்படும் பழவகைகள் மறுநாள் சென்னை மாநகரின் பழக்கடைகளில் கொலுவீற்றிருப்பதைக் காணலாம். பயணியரையும், பொருள்களையும் மட்டுமின்றி, கால்நடைகளும் இன்றையதினம் விமானங்களின் மூலம் பன்னடுகளுக்கும் அனுப்பப்படுகின்றன. நாம் அனுப்பும் யானைக்குட்டி ஜப்பான் நாட்டுக் குழந்தைகளுக்குப் போய்ச்சேர சில மணி நேரங்களே போதும். டென்மார்க்கிலிருந்து அனுப்பப்படும் கொழுகொழு

எருமைகளும், ஆடுகளும், இந்தியாவில் சிலமணி நேரத்திற்குப் பின்னர் உலவக்கூடும். இதற்கெல்லாம் உறுதுணைபுரிவது வேகம் நிறைந்த வான்வழிப் பயணம்தான் என்பதைச் சொல்லவும் வேண்டுமோ ?

பல்வகையிலும் வசதி நிறைந்த வான்வழிப் போக்குவரத்தினைப் பன்னாடுகளில் பலரும் நடத்துகின்றனர். இந்தியாவைப் பொறுத்த மட்டிலும், இந் நிறுவனங்களை இந்திய அரசே ஏற்று நடத்துகின்றது. ஏர் இண்டியா, இண்டியன் ஏர்லைன்ஸ் கார்ப்பொரேஷன் இரண்டு நிறுவனங்களும் வான்வழிப் பயணத்தை இனிதாக்கிவருகின்றன.

வேகம்மட்டுமின்றி. மிகவும் வசதி நிறைந்ததாயும் விண்வெளிப் பயணம் அமைகின்றது. விமானத்திற்குள் முதல் வகுப்பு என்ற ஒன்றும், சுற்றுலா வகுப்பு என்று ஒன்றும் உள்ளன. இவற்றின் கட்டணம் வெவ்வேறாக இருக்கின்றன. எனவே, உணவு, உபசரிப்பு ஆகியவற்றிலும் வேறுபாடு உள்ளது. பயணம் செய்யும்போதே, இசைக் கருவிகளின் ஒலிகேட்டு மகிழவும், திரைப்படங்களைப் பார்த்து மகிழவும் இன்றைய தினம் வசதி செய்யப்பட்டுள்ளது. மேற்காணும் காரணங்களால், விமானக் கட்டணம் மிகவும் அதிகமாகவே உள்ளது. ஏர்லைன்ஸ் ஆப் இடாலி, (Alitalia அலிடாலியா), ஸ்விட்ஸர்லாந்து ஏர்லைன்ஸ் (Swizzair-சுவிஸ்ஸேர்), பான் அமெரிக்கன் ஏர்லைன்ஸ் கார்ப்பொரேஷன் (Panam - பானம்), பி.ஓ.ஏ.சி. (B.O.A.C.) போன்ற விமானப் போக்குவரத்து நிறுவனங்கள் உலகப் புகழ்பெற்றவை.

விமானப் போக்குவரத்திற்கான கட்டணம் மிகவும் உயர்ந்து காணப்படுவதன் காரணமாக, (1) அவற்றின் வேகம் (2) கடக்கும். தூரம் (3) அளிக்கப்படும் வசதிகள் (4) ஏற்படக்கூடிய அபாயங்கள் (5) விபத்து நடந்தால் அளிக்கப்படும் நட்ட ஈட்டுத் தொகை போன்றவற்றைக் குறிப்பிடலாம். மேலும், சாதாரண மோட்டார் வண்டிகளுக்குப் பயன்படுத்தும், பெட்ரோல் அல்லது டீசலைக்கொண்டு விமானத்தை இயக்க இயலாது. மாறாக, கேசலின் என்னும் தனியொரு பொருளைக் கொண்டுதான் இயக்க முடியும். மேலும், ஒரு விமானம் ஆபத்தின்றி நன்முறையில் கீழே இறங்கவும், மீண்டும் விண்ணில் பறந்துசெல்லவும், விமானத்தளம் நன்றாக அமைந்திருக்கவேண்டும். விமானம் வந்து தங்கிச் செல்லவும், பயணியர் இளைப்பாறவும், மற்றும் இவைபோன்ற பல வசதிகளை ஏற்படுத்தவும், மிகப்பெருமளவில் முதலீடு செய்யப்படவேண்டும். விமானக் கட்டணமாக வசூலிக்கப்படும் தொகையிலிருந்து கிடைக்கும் வருவாய் மேற்

காணும் செலவினங்களைச்சரிக்கட்டும் வகையில் அமையவேண்டும். விமானப் போக்குவரத்திற்காக நிறுவப்படுகின்ற இத் தளங்களின் நடைமுறை மற்றும் பராமரிப்புச் செலவுகள் நாள்தோறும் உயர்ந்துகொண்டே போவதால், விமானக் கட்டணமும் உயர்ந்து கொண்டே போகிறது.

**1. விமானப் போக்குவரத்தினை நாட்டுடைமையாக்கல்**

அமெரிக்க நாட்டினைத் தவிர, ஏறக்குறைய உலகெங்கிலுமுள்ள விமானப் போக்குவரத்து நிறுவனங்கள் அனைத்தும், அரசுடைமையாக்கப்பட்டுச் சட்டப்பதிவு பெற்ற நிறுவனங்களாக இயங்கி வருகின்றன. எடுத்துக்காட்டாக 1946ஆம் ஆண்டிலேயே இங்கிலாந்து நாட்டிலுள்ள விமானப் போக்குவரத்து நிறுவனங்கள், சிவில் ஏவியேஷன் சட்டத்தின் (Civil Aviation Act) கீழ் அரசுடைமையாக்கப்பட்டுவிட்டன. இந்தியாவில் ஏர் கார்ப்பொரேஷன் சட்டத்தின்கீழ் 1953ஆம் ஆண்டு ஆகஸ்டுத் திங்கள் முதலாம் நாள்முதல் விமான நிறுவனங்கள் நாட்டுடைமையாக்கப் பட்டன. மேலும் இவை, (1) ஏர் இண்டியா இண்டர்நேஷனல் என்றும், (2) இண்டியன் ஏர்லைன்ஸ் என்னும் இருவகையாகப் பிரிக்கப்பட்டன.

1953ஆம் ஆண்டு ஏர் கார்ப்பொரேஷன் சட்டம் இயற்றப் படுவதற்கு முன்னர், பல தனியார் நிறுவனங்கள் இந்தியாவில் செயற்பட்டு வந்தன. சான்றாக, ஏர் இண்டியா லிமிடெட், டெக்கான் ஏர்வேஸ் லிமிடெட், ஹிமாலயன் ஏவியேஷன் லிமிடெட், இண்டியன் நேஷனல் ஏர்வேஸ் லிமிடெட், கலிங்கா ஏர்லைன்ஸ், ஏர் இண்டியா இண்டர் நேஷனல் லிமிடெட் போன்றவை இயங்கி வந்தன. இவையனைத்தும் ஒன்றுக்கப்பட்டு, "இண்டியன் ஏர்லைன்ஸ்", "ஏர் இண்டியா இண்டர்நேஷனல்" என்ற இரண்டு நிறுவனங்களும், நிறுவப்பட்ட பின்னர், 'பத்திரமான' திறமையான, பொருளாதார முறையில் செலவு குறைந்த போக்குவரத்தினை அளிப்பதுவே, அவற்றின் கடமைகளாகக் கருதப்பட்டன. மேலும், விமானப் போக்குவரத்து எவ்விதத்திலும் தடைபடாதிருக்கவேண்டிய ஏற்பாடுகளைச் செய்வதும், விமானிக்கும் மற்றுமுள்ளோருக்கும் சிறப்பான பயிற்சியினை அளிப்பதும், போக்குவரத்து நன்முறையில் அமைய சீரமைப்புப் பணிகளைச் செய்யவும் இவ்விரண்டு நிறுவனங்களுக்கும் முழு உரிமை அளிக்கப்பட்டுள்ளது.

1971ஆம் ஆண்டில் எடுக்கப்பட்ட கணக்கின்படி, இந்திய விமானங்கள் 7·23 கோடி கிலோ மீட்டர் தூரம் பறந்துள்ளன,

அதன்மூலம் 28·93 இலட்சம் பேர் பயணம் செய்துள்ளன ரென்றும், 5,475 இலட்சம் கிலோ கிராம் எடையுள்ள சரக்கு களும், தபால்களும் இடமாற்றம் செய்யப்பட்டனவென்றும் தெரிய வருகிறது. மேலும், 1969-70ஆம் ஆண்டில், இண்டியன் ஏர் லைன்ஸ் நிறுவனத்திற்குச் சொந்தமாக 7 காரவல்லி ஜெட்களும், 14 வைகௌண்ட்களும், 3 ஸ்கை மாஸ்டர்களும், 14 ஃபோக்கர் பிரண்ட்ஷிப்களும் மற்றும் 32 டகோடா விமானங்களும் இருந்தன. ஆனால், தற்போது இவற்றின் எண்ணிக்கை கணிசமான அளவில் உயர்ந்துள்ளதோடு, போயிங் 747, ஜெம்போ ஜெட் விமானங்கள் போன்றவைகளும் வாங்கப்பட்டுள்ளன. "அசோகா" "ஷாஜஹான்", இராஜராஜா" போன்றவை சில ஜெம்போ ஜெட் வகை விமானங்களின் பெயர்களாகும்.

1969ஆம் ஆண்டில் ஏர் இண்டியா நிறுவனத்திற்குச் சொந்த மான 10 போயிங் ஜெட் விமானங்கள், 24 நாடுகளுக்குச் சென்று வந்தவண்ணமிருந்தன. குறிப்பிட்ட இக் காலத்தில் அவை சுமார் 4 இலட்சம் பயணியர்களை ஏற்றிச்சென்றும், 266 இலட்சம் கிலோ மீட்டர் தூரத்தைக் கடந்துமிருக்கின்றன. உலகிலுள்ள பிறநாடு களின் விமானப்போக்குவரத்தைவிட, நமது நாட்டு விமானப் போக்குவரத்து இன்னும் வளர்ச்சியுருத நிலையிலும், பின்தங்கிய நிலையிலும் உள்ளதென்று அனைவரும் கருதலாம். இருப்பினும், உலகிற்கே விமானப் போக்குவரத்தில் ஒரு புதிய முறையைக் கண்டுபிடித்தளித்த பெருமை இந்தியாவையே சாரும் எனக் கூறலாம். அதாவது விமானவழிக் கடிதப் போக்குவரத்தினை வெற்றிகரமாக நடத்தமுடியும் என்று 1911ஆம் ஆண்டு பிப்ரவரித் திங்களில் அலகாபாத்தில் நடைபெற்ற ஒரு கண்காட்சியில் நிரு பிக்கப்பட்டது. இங்குதான் விமானக் கடிதங்களை ஏற்றிச் செல் லும் விமானப் பைகளை அனைவரும் கண்டு வியந்தனர். அலகா பாத்திலுள்ள இக் கண்காட்சித் திடலிலிருந்து நைனி என்னும் இடத்திற்கு முதலாவது விமானக் கடிதப் போக்குவரத்துப் பயணம் நடைபெற்றது. இதற்குப் பல வருடங்களுக்குப் பின்னரே, இலண்டன் மாநகரில் இம் முறை பின்பற்றப்பட்டது. எனவே, உலகிற்கு ஒரு புதிய முறையை அளித்த பெருமை இந்தியா வையே சாரும் என்பதில் ஐயமில்லை.

அரசுடைமையாக்கப்பட்ட விமானங்களைத் தவிர, தனியாருக் குச் சொந்தமான விமானங்களும் இன்று பெருமளவில் காணப் படுகின்றன. பெரும் செல்வந்தர்களும், தொழிலதிபர்களும், திரைப்பட நட்சத்திரங்களும் தமக்கெனச் சொந்தமாகவே விமா னங்களை வைத்துள்ளனர். இன்றைய இளைஞர்களுக்கு விமானம் ஓட்டும் பயிற்சியினை அளிப்பதற்குப் பெரிய நகரங்கள் பலவற்றில்

விமானப்பயிற்சி நிலையங்கள் பல தோன்றியுள்ளன. இவற்றைத் தவிர, இராணுவத்தினரின், உபயோகத்திற்காகவும், பல விமான நிலையங்கள் உள்ளன.

இவ்வாறு, குறுகிய காலத்தில் நெடுந்தொலைவிலுள்ள இடங்களுக்குப் பயணியரையும், சரக்குகளையும் ஏற்றிச் செல்லுகின்ற விமானப் போக்குவரத்து, மனிதனுடைய வாழ்க்கையோடு ஒன்றி விட்டதாகக் கருதப்படுகின்றது. தனியார்துறையிலும், மற்றும் அரசுத்துறையிலும் ஏற்படுத்தப்பட்டுள்ள விமானப் போக்குவரத்து நிறுவனங்கள் அனைத்தும், ஒன்றோடொன்று போட்டியிட்டுக்கொண்டு பொதுமக்களின் நன்மதிப்பைப்பெற பாடுபடுகின்றன.

## கருத்துக்கோப்பு

மத்திய மின்சார ஆணைக்குழு—மாநில மின்சார ஆலோசனைக்குழு—வட்டார ஆலோசனைக் குழு—மின்வாரியத்தின் செயல்முறையும் வாணிகக் கோட்பாடுகளும்—வருடாந்திர நிதிநிலை அறிக்கை—மின்வாரியத்தின் கடன்திட்டங்கள்—கடன் தொகைக்கான உத்திரவாதம்—சில சிறப்புக் குறிப்புகள்—அரசால் உருவாக்கப்படும் விதிகள்—1973-74ஆம் ஆண்டின் மின்திறன் நிலை—மின்பிராந்தியங்கள்—தொலைபேசி நிறுவனங்கள் செயற்படும் முறை—போக்குவரத்து நிறுவனங்கள்—இரயில்வே போர்டு—சாலைப்போக்குவரத்து நிறுவனங்களும் வான்வழிப் போக்குவரத்து நிறுவனங்களும்.

# 15. பொதுப்பயன் தொழில்களை முறைப்படுத்துதல்

பொதுநல ஈடுபாட்டுடன் பணிபுரிந்துவரும் பொதுப்பயன் தொழில்கள், தமது குறிக்கோளிலிருந்து வழுவாதவண்ணம் இருக்கவேண்டும். தனியார் தொழில்களைப் போன்று அதிக இலாபம் ஈட்டவும், பொருள்களைப் பதுக்கிவைத்துக் கறுப்புச் சந்தையில் அவற்றை விற்கவும் இன்னும் இவைபோன்ற முறையற்ற செயல்களில் ஈடுபடவும், பொதுப்பயன் தொழில்கள் விழையலாகாது. ஒரு நாட்டு மக்களின் வாழ்க்கைத்தர மேன்மைக்கோ அதன் சீர்குலைவிற்கோ, இப் பொதுப்பயன் தொழில்கள் பெரிதும் காரணமாகின்றன. எனவே, இத் தொழில்கள் நன்முறையில் தங்களது முழுத் திறனையும் வெளிப்படுத்திச் செயலாற்றவேண்டும். மேலும் இவற்றின் கட்டணவிகிதங்கள் விலைக்கொள்கைகள், கணக்கியல் முறைகள் ஆகியவற்றை முறைப்படுத்துவதன்மூலம், பொதுநல ஈடுபாட்டுடன் இவை என்றும் செயற்படுமாறு செய்யவேண்டும். அவற்றைப்பற்றி இங்கு ஆராய்வோம்.

**விலைகளையும் கட்டணங்களையும் முறைப்படுத்துதல்** (Controlling the Price Rates)

பொதுப்பயன் தொழில் ஒன்றின் விலைக்கொள்கை எவ்வாறு தீர்மானிக்கப்படுகின்றது என்பதனை ஏற்கனவே இந் நூலின் வேறொரு பகுதியில் ஆராய்ந்தோம். இனி, இத் தொழில்களின் விலை எவ்வாறு முறைப்படுத்தப்படுகின்றது என்பதுபற்றி ஈண்டுக் காண்போம். சில சிறப்புரிமைகளைப் பெற்றும், சந்தையில் முற்றுரிமை பெற்றும் பணிபுரிகின்ற பொதுப்பயன் தொழில்களின் பொருள்களும், பணிகளும் சமுதாயத்திற்கு இன்றியமையாதனவாயிருக்கின்றன என்ற எண்ணத்தில் தம்முடைய விருப்பப்படி விலையை நிருணயித்துக்கொள்ளமுடியாது. அவ்வாறு

நிருணயித்துக்கொள்ளும் உரிமையை இந் நிறுவனங்கள் பெற்று விட்டால் சமுதாயத்திற்கே ஊறு விளைவிக்கப்படும் என்பதில் சற்றும் ஐயமில்லை. எனவே பொதுப்பயன் தொழில்கள் மக்களின் நலனுக்காகவே பாடுபட்டபோதிலும் அவற்றின் விலையையும் அரசே முறைசெய்து வரவேண்டுமென்பது அவசியமான செயலாகும். இதன்படிஉலகெங்கிலும் இத் தொழில்களுக்கான நியாய விலையைக் காணுவதற்கென்று விலைக்குழுக்கள் (Price Tribunals) அமைக்கப்பட்டுள்ளன. ஒரு குறிப்பிட்ட பொதுப் பயன் தொழிலின் சிறப்புத் தன்மைகளை நன்கு ஆராய்ந்தபின்னர், எவ் வகைக் கட்டணத்தை அந் நிறுவனம் விதிக்கலாம் என்பதைத் தீர்மானிக்கும் விலைப்பட்டியலைத் தயாரித்தளிப்பதே இக் குழுக்களின் தலையாய பணியாகும். இந்தியா, மற்றும் இங்கிலாந்து போன்ற நாடுகளில் அமைக்கப்பட்ட இரயில்வே கட்டணக்குழுவும் (Railway Rates Tribunal) அமெரிக்க நாட்டில் ஏற்படுத்தப்பட்ட " இன்டர்-ஸ்டேட் காமர்ஸ் கமிஷனும் ",. (Inter-State Commerce Commission) அரசால் அமைக்கப்படும் நியாயவிலைக் குழுக்களுக்கான சான்றுகளாகும். பொதுநல ஈடுபாட்டுடன் பணிபுரிகின்ற நிறுவனங்கள் தங்களின் பொருள்களுக்கு என்ன விலையை நிருணயிக்கலாம் என்ற வினவிற்கு விடை காணும் முயற்சியில் இக் குழுக்கள் பெரும் ஆராய்ச்சியே நடத்தவேண்டியுள்ளது. ஏனெனில், அவ்வப்போது தோன்றக்கூடிய நடைமுறைச் சிக்கல்கள் எளிதில் தீர்க்க முடியாதவையாக இருக்கின்றன. சான்றாக, இத் தொழில்களில் கூட்டுச்செலவுகள் ஏதும் ஏற்படுமேயானால் அவற்றை எளிதில் பிரித்துணர முடியாது. இரண்டாவதாக, இந் நிறுவனங்களுக்கான இறுதிநிலை இலாபம் (Marginal Profit) அல்லது வரைநிலை இலாபம் எவ்வளவாக இருக்கவேண்டுமென்பதை எளிதில் கணக்கிட முடியாது. மேலும், கிடைக்கக்கூடிய வருவாய் இத்தொழிலைத் தோற்றுவிக்கும்போது இருந்த மூலதன மதிப்பினை அடிப்படையாகக் கொண்டு அமையவேண்டுமா அன்றிஅதே சொத்துகளின் தற்போதைய மதிப்பினை அடிப்படையாகக்கொண்டு அமையவேண்டுமா என்பதும் சர்ச்சைக்குரிய செய்தியாகவே உள்ளது. இறுதியாக பொதுப்பயன் தொழில்களின் இலாபகரமான வருடங்களையும், நட்டமேற்படும் வருடங்களையும் இணைத்து அதற்கேற்ப விலைக்கொள்கையை அமைப்பதும் கடினமான செயலாகும். ஏனெனில் நட்டமேற்படும்போது பொதுப்பயன் தொழில்கள் மிகவும் நசித்துப்போகாதவண்ணம் பாதுகாப்பு அளிக்கப்படவேண்டும். இச் செயல் கைகூட வேண்டுமானால், இத் தொழில்கள் நன்கு இலாபமீட்டும் வருடங்களில் சிறிதளவு இலாபத்தினை ஒதுக்கீடு செய்யவேண்டும் சுருங்கக் கூறின், இலாபம் கிடைக்கும்போதே, ஓரளவுத்

தொகையினைத் தனியே எடுத்துவைத்தால்தான், இத்தொழில்கள் மந்த நிலையினை அடையும்போது, நிதிநிலைப் பாதுகாப்பினை அளிக்கமுடியும். மேற்கூறிய நடைமுறைச் சிக்கல்களை நன்கு ஆராய்ந்து அவற்றிற்கு விடைகண்டபின்னரே இத்தொழில்களுக்கான நியாயமான விலையைத் தீர்மானிக்கமுடியும் என்பது விளங்கும். இதனை வரைபடம் ஒன்றின்மூலம் சான்றுகாட்டி விளக்கலாம்.

சந்தையில் முற்றுரிமை பெற்றுத் திகழும் நிறுவனம் தன்னுடைய பொருள்களுக்காக எத்தகைய விலையினையும், (கட்டணத்தையும்) விதிக்கமுடியும் என்பதைப் பொதுப்பயன் தொழில்களை முறைப்படுத்தும் குழு நன்கு அறியும். அதற்கேற்றாற்போல், நியாயமான கட்டணமொன்றைத் தீர்மானித்து அதனையே பொதுப்பயன் தொழில்களனைத்தும் ஏற்றுக்கொள்ளவேண்டுமென்று வலியுறுத்தும். கீழ்க்காணும் வரைபடம் இதனை நன்கு விளக்கும்.




வரைபடம்–4

அரசின் தலையீடும், கட்டுப்பாடும் இல்லாதபோது, Q, $Q_1$ என்ற அளவுள்ள பொருளின் விலை $Q_1P_1$ என்று உள்ளது. சந்தையில் போட்டி ஏற்படும்போது $QQ_2$ அளவுள்ள பொருளுக்கு விலை $Q_2P_2$ என்று அமையும். இதே விலையை அரசு பொதுப்பயன் தொழில்களுக்கான விலையாக நிருணயிக்கின்றதென்று கொள்வோம். இந்நிலையில் முறைசெய்யப்பட்ட அல்லது வரையறுக்கப்பட்ட விலை ஒரு படுக்கைக்கோடாக அமையும்.

இதன்படி பொதுப்பயன் தொழில் ஒன்று எவ்வளவு வேண்டுமானலும் தன்னுடைய உற்பத்தியைப் பெருக்கிக்கொண்டே போனலும், வரையறுக்கப்பட்ட நிலைக்குமேல் தன்னுடைய விலையை உயர்த்தமுடியாது. எனவே இவ்விலை OR ($=Q_2P_2$) என்பதே நிறுவனத்தின் MR ஆக அமைகின்றது. MC = MR என்ற கொள்கையினைப் பின்பற்றித் தனது இலாபத்தினை அதிகப் படுத்த எண்ணுகின்ற இந் நிறுவனம் $QQ_4$ அளவுள்ள பொருள்களைக் தயாரிக்கமுனையும். படத்தில் 'F' என்ற புள்ளிநிலை இதனைக் குறிக்கின்றது. (இந் நிலையில் MC = MR என்று அமைவதையும் காண்க). மேலும், இரண்டு கருத்துகள் இப்போது குறிப்பிடத்தக்கவையாகத் தோன்றுகின்றன. முதலாவதாக, வரையறுக்கப்பட்ட விலையில் பொருள்களை விற்றபோதிலும், ஓரளவு இலாபத்தை இத் தொழில் நிறுவனங்கள் ஈட்டமுடியும். (F என்ற புள்ளிநிலையில், சராசரி விலையைவிட, வரையறுக்கப் பட்ட விலை அதிகமாகக் காணப்படுவதைக் காண்க). இரண்டாவதாக இப் பொதுப்பயன் தொழில்நிறுவனம் சந்தையின் போட்டியளவிற்குப் பொருள்களை உற்பத்தி செய்வதில்லை என்பதையும், அதனைவிடக் குறைவாகவே உற்பத்தி செய்கின்றதென்பதையும் ($OQ_1$) அறியலாம். எனவே, பொதுப்பயன் தொழில் நிறுவனங்களை முறைசெய்யும் அதிகாரத்தைப் படைத்த குழுவினரே, இந் நிறுவனங்கள் சந்தையில் நிலவுகின்ற போட்டியளவிற்குப் பொருள்களை உற்பத்தி செய்தலையும் அதற்கேற்றாற் போல் விலையினைத் தீர்மானித்தலையும் வரையறுக்கவேண்டும்.

**கணக்குகளைப் பரிசிலனை செய்தல்**

பொதுப்பயன் தொழில்கள் தயாரித்து அளிக்கின்றபொருள்களுக்கான விலையைத் தீர்மானிக்கும்போது இத் தொழில்களின் உற்பத்திச் செலவினை ஒப்பிட்டுப் பார்த்தல் வழக்கம். எனவே, உயர்ந்த அளவு விலையினைத் தங்களது பொருள்களுக்குப் பெற்றிட வேண்டுமென்பதற்கென, இந் நிறுவனங்கள் தங்களது உற்பத்திச் செலவினை, மிகவும் கூடுதலாகவே காண்பிக்கக்கூடும். உயர்ந்த அளவு தேய்மானம், இயந்திரங்கள் மற்றும் கருவிக் கலன்கள் ஆகியவற்றை அதிக அளவுத் தொகை கொடுத்து வாங்கியதாகக் காண்பித்தல் போன்ற தவறான முறைகளைக் கொண்டு இந் நிறுவனங்கள் உற்பத்திச் செலவினையும் உயர்த்திக் காட்டவல்லவை. எனவே, உண்மையான உற்பத்திச் செலவினைக் காண வேண்டுமானல் இந் நிறுவனங்களின் கணக்கு ஏடுகளை நன்ருக ஆராய்ந்த பின்னர், அவற்றில் கொடுக்கப்பட்டுள்ள பதிவுகள் முறையானதுதான என்பதைத் தீர்மானிக்க வேண்டும். இதற்கான உரிமை, "விலைக்கட்டுப்பாட்டுக் குழுவிற்கு"

அளிக்கப்படும். "இண்டர் ஸ்டேட் காமர்ஸ் கமிஷனுக்கு" இத்தகைய உரிமை ஏற்கெனவே வழங்கப்பட்டுள்ளது என்பதும் குறிப்பிடத்தக்கது.

**அளிக்கப்படும் பணிகளை நெறிப்படுத்துதல்**

பொதுப் பயன் தொழில் நிறுவனங்கள் இலாபத்தை ஈட்டினு லும் அன்றி நட்டத்தைப் பெற்றிட்டாலும், பொதுநல ஈடு பாட்டுடன் செயற்பட வேண்டிய நிலையிலுள்ளன: தங்களது பொருள்களை விற்பனை செய்வதன்மூலம் இலாபம் கிடைக்காது போனல், தங்களது விற்பனையையே நிறுத்திவிடக்கூடிய நிலை ஏற்படலாம். இதனுல், பொதுமக்கள் பெரிதும் இன்னலுறலாம். இந் நிலை ஏற்படாவண்ணம் பாதுகாப்பது விலைக் குழுக்களின் தலையான கடமையாகும். மேலும், இந் நிறுவனங்கள் தங்களது பொருள்களை அளிக்கும்போது பொதுமக்களின் பாதுகாப்பினை யும் நன்கு கவனிக்கவேண்டும். அவ்வாறு செய்யத் தவறினல் தக்க நடவடிக்கை எடுக்க விலைக் குழுவினருக்கு முழு அதிகாரம் உண்டு.

மேற்காணும் பலவிதக் கட்டுப்பாடுகளின்மூலம் பொதுப் பயன் தொழில்களை முறைப்படுத்த முயன்றபோதிலும், நடை முறையில் பலவிதச் சிக்கல்கள் தோன்றலாம். குறிப்பாக இந் நிறுவனங்கள் தங்களது பொருள்களுக்காக, அதிக விலையினை நிருணயித்துக் கொள்வதற்காக விலைக்குழுவினரைத் தவருன முறையிலும் அணுகவும் கூடும். சான்ருக, அமெரிக்காவில் இவ் வாறு அரசைத் திருப்திசெய்யத் தவருனமுறைகளைக் கையாண்டு அதன்மூலம் தங்களது பொருள்களுக்கான விலையை மிகவும் அதிக மாக நிருணயித்துக்கொள்ள பொதுப்பயன் தொழில்கள் முனை கின்றன. எனவே, பொதுமக்களின் நலனுக்காகப் பாடுபடும் இப் பொதுப்பயன் தொழில்கள் தனியே இயங்குவதைத் தவிர்த்து அவற்றை அரசுடைமையாக்குதலே நன்மை பயக்கும் என்பது கருத்து.

**அரசுடைமையாக்கல்**

உற்பத்தி செய்யப்படுகின்ற பொருள்கள் அவற்றின் விலை ஆகிய இவ்விரண்டு கொள்கையிலும் சரியான முடிவினை எடுக்க இயலாத பொதுப்பயன் தொழில்கள், சமுதாயத்திற்கு நலன் ஏதும் விளைவிக்கமாட்டா. எனவே, இத் தொழில்களை அர சுடைமையாக்குதலே சிறந்த முடிவாகும். ஏனெனில், இத் தொழில்களின் கட்டணவீதம், வருவாய்க் கொள்கை தேய்மான அளவு போன்ற பலவகைக் கருத்துகளையும் நன்கு ஆராய்ந்து

அரசே ஏற்றுக்கொள்ளும். எனவே, பொதுப் பயன் தொழில்கள் அரசுக்குச் சொந்தமானதாகவும் அதனால், நிருவகிக்கக்கூடிய தாகவும் இருக்கவேண்டும்என்ற கருத்துப் பெரிதும் வலியுறுத்தப் பட்டு வருகின்றது. இன்றளவில், இரயில்வே நிறுவனங்கள், மின்சாரம் மற்றும் தொலைபேசி நிறுவனங்கள் ஆகியவற்றை அரசு எடுத்து நடத்துவதைக் காண்கிறோம். மேலும், சிலவகைத் தொழில்களை மாநில அரசுகளும், உள்ளூராட்சி மன்றங்களும் நடத்தி வருவதும் இயல்பானதே. பெரும்பாலும், அரசினால் இயக்கப்படுகின்ற வணிக நிறுவனங்கள் மிகவும் திறம்பட இயங்குவதாயும் அமையலாம். அவ்வாறெனில் பொதுப்பயன் தொழில்கள் மட்டுமின்றி எல்லா வகை வணிக நிறுவனங்களும் அரசுடைமையாக்கப்படலாம். சான்றாக, இரஷ்யாவில் அரசே வாணிகத்தை ஏற்று நடத்துவதைக் கண்கூடாகக் காண்கிறோம். எனினும், இக் கருத்திற்கு முரண்பாடான கருத்துகளும் நிலவு கின்றன. சான்றாக, அமெரிக்க நாட்டு மக்கள், சுதந்திரப் பறவைகளாக அரசின் எவ்விதக் கட்டுப்பாடுமின்றி வாணிகம் செய்ய விரும்புகின்றனர். இவ்விரண்டு வகைக் கருத்துகளையும் ஆராயும்போது, பொதுப்பயன் தொழில்களை அரசுடைமை யாக்கும் முயற்சிக்குப் பெரும் ஆதரவு இருப்பதைக் காண்கிறோம். முதலாவதாக, தனியார் துறையினைச் சார்ந்தும் ஆனால், அரசின் கட்டுப்பாடுகளுக்குட்பட்டும் ஒரு நிறுவனம் இயங்க முடியாத நிலையில் தவிப்பதைத் தவிர்க்க அந் நிறுவினம் அரசுடைமை யாக்கப்படலாம்.

(1) அரசுடைமையாக்கப்பட்ட நிறுவனங்கள் இலாப நோக்கினைத் தவிர்த்து, தொண்டு மனப்பான்மை யுடன் பணிபுரிய வல்லவை.

மேலும், சமுதாய நலனைக் கருதி, தரமான பொருள்களை மக்களுக்குத் தொடர்ந்து அளிக்க அரசினால் மட்டுமே முடியும்.

(2) பொதுப் பயன் தொழில்களின்மூலம் ஈட்டப்படு கின்ற வருவாய் அரசின் கருவூலத்திற்கே செல்வ தால் நாட்டு மக்களின்மீது விதிக்கக்கூடிய வரிச் சுமை பெரிதும் குறையலாம்.

(3) அடுத்து, இந் நிறுவனங்களுக்குத் தேவையான நிதி யைப் பெறுவதில் தொல்லை ஏதும் ஏற்படுவதில்லை. ஏனெனில், இக் கடன் தொகை அரசினாலே திருப் பித் தரப்படுமாதலால் பலர் தாமாகவே . நிதி உதவி செய்ய முன்வரலாம். இறுதியாக, அமெரிக்க

நாட்டில் உள்ளதைப் போன்று, தனியார் துறையில் இப் பொதுப்பயன் தொழில்கள் இயங்குமானல் தமக்குச் சாதகமான சூழ்நிலையை உருவாக்கிக் கொள்ள இவை கையூட்டுக் கொடுத்தல் போன்ற முறையற்ற செயல்களில் ஈடுபடலாம். இதனைத் தவிர்க்கவேண்டுமானல், பொதுப் பயன் தொழில்கள் அரசுடைமையாக்கப்படவேண்டும்.

(1) பொதுப் பயன் தொழில்களை அரசுடைமையாக்குவதற்கு ஆதரவாக மேற்கூறிய கருத்துகளை கூறியபோதும், ஒரு சில மாறுபாடான கருத்துகளையும் கூருதிருக்க இயலாது. முதலாவதாக, தனியார் துறையில் ஒரு நிறுவனம் இயங்கும் போது அதனிடமிருந்து அரசிற்குக் (வரிகள் மூலம்) கிடைக்கக் கூடிய வருவாய், அதே நிறுவனம் அரசுடைமையாக்கப்படும் போது கிடைப்பதில்லை.

(2) அரசுடைமையாக்கப்பட்ட பெரும்பாலான நிறுவனங்கள் செயல் திறனற்று விளங்கின்றன. இதனல், அன்ருட அலுவல்களில் வீணை காலதாமதம் ஏற்படுதல் போன்ற குறைபாடுகள் வளரக்கூடும்.

அடுத்து, ஓர் அரசை அமைக்கின்ற அரசியல் கட்சிகளின் விருப்பத்திற்கேற்றவாறே இத் தொழில் நிறுவனங்கள் செயற்படவேண்டியிருக்கும். மேற்காணும், காரணங்களால் பொதுப்பயன் தொழில்களை அரசுடைமையாக்கலாகாது என்ற முடிவிற்கு நாம் வரமுடியாது. ஏனெனில், வளர்ந்து வருகின்ற இந்தியா போன்ற நாடுகளின் பொருளாதார மேம்பாட்டிற்குப் பொதுப் பயன் தொழில்கள் பெரிதும் துணைபுரிகின்றன. எனவே, குறைபாடுகளை நீக்கி இத் தொழில் நிறுவனங்களை நடத்த அரசு முன்வர வேண்டும் என்பது முடிவான கருத்தாக அமைகின்றது.

**அரசுடைமையாக்கப்படும் நிறுவனங்களின் நிருவாக அமைப்பு**

பொதுப் பயன் தொழில்களை அரசே ஏற்று நடத்தவேண்டும் என்ற கருத்தினை ஏற்றுக்கொண்ட பிறகு, அதனுடைய நிருவாக அமைப்பினைப்பற்றிச் சற்றுச் சிந்தித்தாக வேண்டியுள்ளது. பொதுவாக, இத் தொழில்களை மூன்று வகைகளில் நிருவகிக்கலாம். அவை,

(1) அரசுத் துறை.

(2) பொதுக்கார்ப்பொரேஷன்.

(3) ஊராட்சி மன்றங்கள்,

மேற்காணும் மூன்று வகை நிருவாக அமைப்பினை எடுத்துக் கொண்டு பொதுப் பயன் தொழில்களை எவ்வாறு இயக்கமுடியும் என்பதை விரிவாகக் காண்போம்.

## அரசுத்துறையின் மூலம் நிருவகித்தல்

பொதுநல ஈடுபாட்டுடன் பணிபுரியும் நிறுவனங்களை நிருவகிப்பதில் இம்முறையே தொன்றுதொட்டு கையாளப் படுகிறது. பன்னாள்களாகவே மக்களின் வாழ்க்கையோடு இணைந்து வருகின்ற தபால், தந்தி நிறுவனங்கள், இரயில்வே மற்றும் தொலைபேசி நிறுவனங்கள் போன்றவை அரசின் ஒரு துறையைச் சார்ந்தவையாகக் கருதப்பட்டு இயங்கி வருகின்றன. வருவாய், கல்வி, மருத்துவம் போன்ற பிரிவுகளுக்கு அரசு எவ்வாறு தனியாகவே ஒரு துறையை ஏற்படுத்தி, அவற்றின் நிருவாகத்தினை நடத்தி வருகின்றதோ அதுபோன்றே, பொதுப் பயன் தொழில்கள் ஒவ்வொன்றிற்கும் ஒரு துறையினை ஏற்படுத்தி அதனையும் அரசுத்துறை என்ற முறையில் இயக்கி வருதலும் உண்டு. மேலும், ஏனைய அரசுத் துறைகளுக்குத் தேவையான நிதிஉதவி எவ்வாறு அளிக்கப்படுகின்றதோ,அதுபோன்றே பொதுப்பயன் தொழில்களுக்கும் அளிக்கப்படும். இவ்வாறு அரசுத்துறையில் இந் நிறுவனங்களை நடத்துவதன் முக்கிய நோக்கம், அரசின் வருவாயை அதிகரிப்பதுவேயாகும். மேலும், பாதுகாப்புத் தொழில்கள் (Defence Industries) போன்றவற்றின், செயல்முறைகள் மிகவும் இரகசியமாக வைத்திருக்கப் படவேண்டியுள்ளதால் அத்தொழில்களையும் அரசின் பாதுகாப்புத்துறையின் மூலம் நிருவகித்தல் மரபு. அரசுத்துறையில் நடத்தப்படும் இந் நிறுவனங்களின் வாணிகக்கொள்கைகள், பட்ஜெட்டுகள், கணக்கியல் முறைகள், மற்றும் கட்டுப்பாட்டு விதிகள் ஆகியவை அரசாலேயே விதிக்கப்படும். இவற்றில் பணிபுரிவோர் மற்றத் தனியார்துறை நிறுவனங்களில் உள்ளதைப் போன்றே தேர்ந்தெடுக்கப்பட்டுப் பணிபுரிய அமர்த்தப்படுவார்கள். எனவே, அரசுத்துறையில் இயங்கும் நிறுவனங்களில் பொதுமக்கள், அவற்றின் ஏனைய வாணிகக் கொள்கைகளை அரசு தீர்மானிக்கின்றது என்ற கருத்து விளங்குகிறதல்லவா? இவை அரசின் பெரியதுறை ஒன்றின் உட்பிரிவாக, சிறிய துறையாக இயங்கக்கூடியவை என்பதும் குறிப்பிடத்தக்கது. சான்றாக, 'ராடார்' கருவியைத் தயாரிக்கும் நிறுவனம் ஒன்று பாதுகாப்புத் துறையின்கீழ் இயங்குவதையும், தொலைபேசிக் கருவியைத் தயாரிக்கும் நிறுவனங்கள், தொழில் மற்றும் வணிகத்துறையின் கீழ் இயங்குவதையும் குறிப்பிடலாம்.

அரசுத் துறையில் இயங்கக்கூடிய பொதுப்பயன் தொழில்களுக்குச் சில நன்மைகள் ஏற்படுகின்றன. முதலாவதாக, அரசியல் தொடர்புடைய பொறுப்பான அதிகாரிகளால், இந்நிறுவனங்களின் இயக்கமுறை நன்கு கண்காணிக்கப்படும், வாய்ப்பு உள்ளது. இரண்டாவதாக, இந்நிறுவனங்களின் வாணிகக் கொள்கையோ அவை செயற்படும் முறையோ, பொதுமக்களுக்கு மனநிறைவு அளிக்கவில்லையென்றால் பாராளுமன்றத்தில் அது பற்றிய விவாதத்தை எழுப்பமுடியும். ஏனெனில், அரசே நடத்துகின்ற தொழில்கள் அனைத்தும் பாராளுமன்றத்தின் நேரடிக் கண்காணிப்பில் உள்ளவை. அதுபோன்றே, அரசுத்துறையில் நடத்தப்படுகின்ற தொழில்களும் கண்காணிப்பில் வைக்கப்படும். மூன்றாவதாக, பொதுமக்களின் விருப்பத்திற்கு ஏற்றவாறே இத்தொழில்களை நடத்த இம்முறை பெரிதும் பயன்படுகின்றது.

நிறைவுகளை மட்டும் அரசுத்துறை தொழில்முறை பெற்றிடாமல், சிலவகைக் குறைபாடுகளையும் பெற்றுள்ளது. அவை பின்வருவனவாம்:

(1) அரசுத் துறையால் நடத்தப்படும் இத் தொழில்களை நிருவகிக்கும் அதிகாரிகள் நிருவாகத் துறையில் சிறந்த பயிற்சி பெற்றவர்களாக இருந்தும், வாணிகக் கோட்பாடுகளில் தேர்ந்தவர்களாயிருப்பதில்லை. இதனால், அவர்கள் பொறுப்பேற்றிருக்கும் நிறுவனங்கள் நன்கு இயங்குவதில்லை.

(2) ஏராளமான அலுவலகக் காகிதத் தொகுப்புகளைப் பார்த்து அவற்றின்மீதான முடிவுகளை எடுப்பதற்குத்தான் இவ்வதிகாரிகளுக்கு அவகாசம் கிடைப்பதால், வாணிகக் கோட்பாடுகளைப் பற்றிச் சிந்திப்பதோ, நிறுவனங்களை நன்முறையில் இயக்குவதற்கான வழிமுறைகளைக் கண்டறிவதோ, இவர்களால் இயலாத செயலாகிவிடுகின்றது.

(3) மூன்றாவதாக, அரசே இந்நிறுவனங்களை ஏற்று நடத்துவதால், இவற்றின் வாடிக்கையாளருக்கும், பிற பொதுமக்களுக்கும் வரி அளிப்பதில் எவ்வித வேறுபாடும் இருப்பதில்லை.

(4) அரசுத்துறை நிறுவனங்களுக்கெனச் சிலவகை விதிகள் நிருணயிக்கப்பட்டுள்ளன. இவ் விதிகளுக்குட்பட்டே, இந் நிறுவனங்கள் இயங்கவேண்டிய நிலையிலுள்ளன. மேலும், அரசால் நியமிக்கப்பட்ட அதிகாரி தன்னிச்சையாக எவ்வித முடிவினையும் எடுக்க இயலாத நிலையிலுள்ளார். எனவே, இந் நிறுவனத்தைப் பொறுத்த அளவில், அதனுடைய முன்னேற்றத்திற்குத் தேவை

யான எந்தவிதச் செயலையும் தானே செய்யமுடியாத இவ்வதிகாரியால் நிறுவனத்திற்கு எவ்விதப் பயனுமில்லை.

(5) பொருளாதார மற்றும் நிருவாகச் சுதந்திரமற்று அரசு அதிகாரிகள் பணிபுரிய வேண்டியிருப்பதாலும், பாராளுமன்றத்தில் எழுப்பப்படும் வினாக்களுக்குப் பதிலளிக்க வேண்டிய நிலையிலிருப்பதாலும், இவர்கள் உற்சாகமற்றுச் செயலாற்றவேண்டியுள்ளது. இதன் விளைவாக, இந்நிறுவனங்களின் இலாபமீட்டும் தன்மையும் வெகுவாகப் பாதிக்கப்படுகின்றது.

மேற்காணும் கருத்துகளைச் சீர்தூக்கிப் பார்க்கும்போது பொதுப்பயன் தொழில்களை அரசுத் துறையின்மூலம் நடத்துவதில் ஏராளமான குறைபாடுகள் உள்ளனவென்பது புலனாகிறது.

**பொதுக் கூட்டுரு (Public Corporation):**

அரசின் தலையீடின்றித் தன்னிச்சையாக இயங்குவதும், ஆனால், தனியார் துறை நிறுவனங்களைப் போன்றே எல்லாவித உரிமைகளையும் பெற்று இயங்குவதும் பொதுக்கூட்டுருவாகும். இக் கூட்டுரு சிறப்பாக இயற்றப்பட்ட சட்டத்தின் மூலம் உருவாக்கப்படுகிறது. பொதுக்கூட்டுரு இயங்க வேண்டிய முறைகள்பற்றியும், அவற்றிற்கான வாணிகக் கோட்பாடுகள் பற்றியும், இச் சிறப்புச் சட்டங்களே தெளிவாக எடுத்துரைக்கும். இவ்வாறு இயற்றப்பட்ட கூட்டுருவை நிருவகிப்பதற்கென ஓர் இயக்குநரவை (Board of Directors) அமைக்கப்படும். இந்த அவையின் இயக்குநர்களை, மத்திய அரசின் அமைச்சரவையைச் சார்ந்த அமைச்சர் ஒருவர் நியமிப்பார். இக் கூட்டுருக்கள் தன்னிச்சைப்படி இயங்கக் கூடியவை. நிதிநிலையைக்கூட தானே சரிசெய்து அமைத்துக் கொள்ளும் தன்மை படைத்தவையாக இருப்பினும், வருட முடிவில் நட்டம் ஏற்படும்போது, அரசின் உதவியை நாடிச் செல்வதுமுண்டு. அரசுத்துறையின்மூலம் நடைபெறும் பொதுப் பயன் தொழில்களுக்கும், பொதுக் கூட்டுருமூலம் நடைபெறும் தொழில்களுக்கும், மற்றொரு வேறுபாடு உண்டு. அதாவது, முன்னதைப் போலன்றிப் பொதுக்கூட்டுரு பாராளுமன்றத்தின் நேரடிக் கண்காணிப்பிற்கு இலக்காவதில்லை. மேலும், பொதுக் கூட்டுரு முறையில் நடத்தப்படும் நிறுவனம் ஒன்றில் பணிபுரியும் அலுவலர், அதிகாரிகள் ஆகிய அனைவரும் தனியான முறையில் தேர்ந்தெடுக்கப்பட்டுச் சிறப்பான பயிற்சி அளிக்கப்படுகிறார்கள். இப் பயிற்சி முடிந்தாலும், ஒப்பந்த முறையில் குறிப்பிட்ட காலத்திற்கு அவர்கள் நியமிக்கப்படுகின்றார்கள். இக் கூட்டுருக்களின்

நிருவாகத்தை இயக்குநரவை ஏற்றுக்கொண்டபோதிலும், 'மேனேஜர்' (மேலாளர்) ஒருவர் நியமிக்கப்படுகின்றார். பொதுப் பயன் தொழில் நிறுவனத்தின் அன்றாட நிருவாகத்தைக் கவனிப்பது இவருடைய பொறுப்பாகும்.

பொதுக் கூட்டுருக்களின் வாணிகக் கொள்கைகளை மட்டும் அத் துறையினைச் சார்ந்த மத்திய அமைச்சர் வகுத்துக் கொடுக்கிறார். ஏனைய, அன்றாட இயக்கத்திற்கான கொள்கைகளையும், விதிமுறைகளையும் இந் நிறுவனங்களே வகுத்துக்கொள்கின்றன. இருந்தபோதிலும், இக் கூட்டுருக்கள் தவறான கொள்கையைக் கடைப்பிடிக்கும்போது அல்லது சரியான விதிமுறைகளை இயற்றாது செயற்படும்போது, மத்திய அமைச்சர்கள் தலையிடுவது உண்டு. அடுத்து, பாராளுமன்றத்தின் நேரடிக் கண்காணிப்பிற்கு இப் பொதுக் கூட்டுருக்கள் உள்ளாகவில்லை என்றாலும், இவற்றிற்கான மத்திய அமைச்சர், பாராளுமன்றத்தின், தமது கருத்துக்களைத் தெரிவிக்கும் உரிமை படைத்தவராயிருக்கின்றார். மேலும், இக் கூட்டுருக்களின், உண்மையான நிலையை அறிந்துகொள்ள, பொதுமக்களின் பிரதிநிதிகளான பாராளுமன்ற உறுப்பினர்கள் விரும்பினால், அவர்களுக்குத் தேவையான குறிப்புகளைச் சேகரித்துத் தரும் பொறுப்பினை இக் கூட்டுருக்களின் அமைச்சர் ஏற்றுக் கொள்கின்றார்.

இவ்வாறு பொதுப்பயன் தொழில்களைப் 'பொதுக் கூட்டுருக்கள்' என்ற அமைப்பிலும் நடத்த இயலும். இம் முறையில் அரசின் தலையீடின்மை, தன்னிச்சை இயக்கம் என்னும் இரண்டு நன்மைகளும் கிடைப்பதால் இம் முறை பெரிதும் விரும்பப்படுகின்றது. அமெரிக்க நாட்டின் டென்னசி பள்ளத்தாக்குக் கார்ப்பரேஷனையும், இந்தியாவில் அக்ரிகல்சுரல் ரிபைனன்ஸ் கார்ப்பரேஷன் (Agricultural Re-finance Corporation), ஆயுள் இன்சூரஸ் கார்ப்பரேஷன் (L. I. C.), தாமோதர் பள்ளத்தாக்குக் கார்ப்பரேஷன் (D.A.V. Corporation), நெய்வேலி லிக்னைட் கார்ப்பரேஷன் (N.L.C.), இந்தியன் ஏர்லைன்ஸ் கார்ப்பரேஷன் (I.A C.), ஸ்டேட் டிரேடிங் கார்ப்பரேஷன் (S.T.C.) ஆகியவற்றையும் சான்றாகக் கூறலாம்.

**நகராட்சி மன்றங்களின்மூலம் நிருவாகம் (Management by Municipalities)**

பொதுப்பயன் தொழில்கள் பல வகைப்படும். இந் நிறுவனங்கள் மக்களுக்கு வேண்டிய, அன்றாட வாழ்விற்குத் தேவையான இன்றியமையாப் பொருள்களை அளிப்பவை. சான்றாகக் குடிநீர், மின்திறன் போன்ற பொருள்கள் ஒரு நாளைக்குக் கிடைக்காது

போனாலும், மக்கள் படுகின்ற அல்லல் சொல்லமுடியாது. இத்தகைய துன்பநிலை ஏற்படும்போது அதற்கான மாற்று வழிகள் கடைப்பிடிக்கப்பட்டு, மக்களுக்கு வேண்டிய பொருள்கள் உடனடியாக அளிக்கப்படவேண்டும். துன்பப்படுகின்ற பொதுமக்கள், அப் பொதுப்பயன் தொழில்களின் அதிகாரிகளை உடனடியாகச் சந்தித்து ஆவன செய்யுமாறு கேட்டுக்கொள்வதும் இயல்பு. இந் நிலையில், பொதுமக்களின் வேண்டுகோளுக்கு நிறுவனத்தின் அதிகாரிகள் செவிசாய்ப்பார்களா என்ற ஐயம் எழலாம். அரசுத்துறையின் மூலமாகவோ, பொதுக்கூட்டுரு மூலமாகவோ, இந் நிறுவனங்கள் நிருவகிக்கப்பட்டால், பொதுமக்களின் வேண்டுகோள் உடனடியாகக் கவனிக்கப்படுமென்று சொல்வதற்கில்லை. அதிகாரிகளின் அலட்சியப்போக்கும் பொதுமக்களுக்கு அவர்கள் விடையளிக்கவேண்டிய நிலையிலில்லை என்பதும் இதற்கான காரணமாக அமையும். ஆனால், பொதுப்பயன் தொழில்களை, ஒவ்வொரு ஊரிலும் உள்ள நகராட்சி மன்றங்கள் ஏற்று நடத்துமேயானால், நகராட்சியை அமைக்கின்ற பொதுமக்களின் பிரதிநிதிகள் (கவுன்சிலர்கள்) அலட்சியப் போக்குடன் நடந்து கொள்ள முடியாது. மேலும், அந் நகரிலேயே வாழும் அதிகாரிகளோடு உடனுக்குடன் தொடர்புகொண்டு, நிறுவனத்தைப் பற்றிய குறைகளைத் தெரிவிக்க முடியும். இந் நிறுவனங்களின் வரவு-செலவுக் கணக்குகளை நகராட்சி மன்றத்தின் கூட்டங்களில், பொதுமக்களின் பிரதிநிதிகளின் முன்னே வைத்து அதன்மீது விவாதங்கள் நடத்தப்படும். எனவே, நேரடித் தொடர்புடையதும், அதிகாரிகளின் பொறுப்பினை அதிகப்படுத்துவதுமான, நகராட்சி மன்ற அமைப்பு முறையே பொதுமக்கள் தொழில்களுக்கு ஏற்றது என்பது பொதுவான கருத்து.

**சில சிறப்புச் சிக்கல்கள் (Some Special Problems)**

பொதுப்பயன் தொழில்கள் பொதுநல ஈடுபாட்டுடன் இயங்க வேண்டுமென்பதையும் அவற்றை அரசுத்துறை பொதுக் கூட்டுரு, அல்லது நகராட்சி மன்றங்களின் வாயிலாக நடத்த முடியுமென்பதையும் கண்டறிந்தோம். ஏட்டளவில், இந் நிறுவனங்களின் செயல்முறைகள் இப்படித்தான் இருக்கவேண்டுமென்று கூறினாலும், செயலளவில் இது நிறைவேற்ற முடியாததாகவே இருக்கின்றது. ஏனெனில், பொதுப்பயன் தொழில்களுக்கென்றே சில சிறப்புச் சிக்கல்கள் உள்ளன. சான்றாக, சுமுகமான தொழிலாளர் உறவினை ஏற்படுத்தலும், நடைமுறைச் செலவுகளைச் சமாளிக்கத் தேவையான முதலீட்டினை ஏற்படுத்துதலும் நடைமுறையில் அவ்வளவு எளிதாகக் கைகூடுவதில்லை. அவற்றைப்பற்றி சிறிதளவு ஆராய்வது நலம் பயக்கும்.

**தொழிலாளர் உறவு**

பொதுப்பயன் தொழில்களில் ஏராளமான தொழிலாளர்கள் பணிபுரிகின்றனர். அவர்கள் தாங்கள் பெறும் ஊதியத்திற்கேற்ற கடமையைத் தவறாது செய்யலாம். இருப்பினும், பொதுப்பயன் தொழில்களில் பணிபுரிவோர் இக் கடமை உணர்விற்கு மேலும் ஓரளவு தொண்டு மனப்பான்மையுடன் செயலாற்றும் நிலை ஏற்படவேண்டும். இத் தொண்டு மனப்பான்மையை எவ்வாறு ஏற்படுத்துவது? தொழிலாளர்களுக்குத் தேவையான மருத்துவ வசதி, அவர்களின் குழந்தைகளுக்கு வேண்டிய கல்வி வசதி, தங்கியிருக்க வீட்டுவசதி போன்றவற்றைத் தவறாது அளிக்கவேண்டும். மேலும், இத் தொழிலாளர்கள் நிறுவனத்தின் நிருவாகத்தில் பங்குடையவர்கள் என்பதும், நிறுவனத்தின் உயர்வு, தாழ்வுகள் இவர்களைச் சார்ந்ததென்பதுமான கருத்துகள் ஏற்படுத்தப்படவேண்டும். பொதுப்பயன் தொழில்கள் மக்களுடைய அன்றாட வாழ்வோடு இணைந்துள்ளதென்பதால், இவற்றில் பணிபுரியும் தொழிலாளர்களுக்கும் சமுதாய நலனில் பங்கு உண்டு என்ற எண்ணத்தை ஏற்படுத்த வேண்டும். இத்தகைய கருத்துகளின்மூலம் தொழிலாளர்-நிருவாகத்தினர் உறவு இனிமையானதாக ஏற்பட வாய்ப்புள்ளது.

**மூலதனம்**

பொதுப்பயன் தொழில்களுக்கான நடைமுறைச் செலவுகள் மிகப் பெருமளவில் ஏற்படும். அவற்றைச் சமாளிப்பதற்காக தேவைப்படும் மூலதனத்தின் அளவும் பெருமளவிலேயே இருக்கும். சில நேரங்களில் நிதிப் பற்றாக்குறை ஏற்படவும் நேரிடலாம். அவ்வாறு ஏற்படும்போது இத் தொழில்களின் இயக்கநிலை பாதிக்கப்படலாம். இந் நிதிப் பற்றாக்குறை நிலையைச் சமாளிப்பதற்கான வழிமுறைகள் ஏற்கெனவே, ஆராயப்பட்டுத் தயாராக வைத்திருக்கப்படவேண்டும். ஆனால், பொதுவான ஒரு கருத்தையும் மனத்திற் கொள்ளவேண்டும். அதாவது, அதிக மூலதனம் வேண்டுமென்பதற்காகக் கடன் முதலை அதிகம் ஏற்படுத்துதல் அறவே கூடாது.

இவ்வாறு, பொதுப்பயன் தொழில்களின் அமைப்புப் பலவகையாகவும் ஒவ்வொரு வகைக்கேற்றவாறு நன்மை, தீமைகளும் ஏற்படுகின்றன. எவ்வகைத் தொழில்களுக்கு எம்முறை சிறந்ததென ஆராய்ந்து, அவ்வாறே அமைப்பது பொருத்தமான செயலாகும்.

## கருத்துக்கோப்பு

விலைகளையும் கட்டணத்தையும் முறைப்படுத்துதல் — கணக்குகளைப் பரிசீலனை செய்தல் — அளிக்கப்படும் பணிகளை முறைப்படுத்துதல் — அரசுடைமையாக்கல் — அரசுடைமையாக்கப்படும் நிறுவனங்களின் நிருவாக அமைப்பு — பொதுக்கூட்டுறவுகள் — நகராட்சி மன்றங்களின்மூலம் நிருவாகம் — சில றப்புச் சிக்கல்கள் — மூலதனம்,

# 16. பொதுப்பயன் தொழில்களும், பொதுத்துறைத் தொழில்களும்

## (Public Utilities and Public Sector Enterprises)

*"அரசு எனப்படுவது மக்களால், மக்களுக்காகவே, மக்களைக் கொண்டதாகவே ஏற்படுத்தப்பட்ட ஒரு நிருவாக அமைப்பு ......"*

—ஆபிரகாம் லிங்கன்

மக்களின் நன்மைக்காகத் தனது முழுத்திறனையும் பயன்படுத்திப் பல்வகை வசதிகளை ஏற்படுத்தித் தரவேண்டிய பொறுப்பு ஒவ்வொரு அரசிற்கும் உண்டு. அன்றாட வாழ்வில் மக்கள் பயன்படுத்துகின்ற அனைத்துப் பொருள்களையும் தயாரித்து அளிக்கப் பல தனியார் துறை வணிகர்கள் தயாராக இருக்கலாம். இருப்பினும், இலாப நோக்கு ஒன்றினையே குறிக்கோளாகக் கொண்டு செயல்புரியும் வணிகரிடம் நாட்டின் தொழில் துறையை ஒப்படைப்பது ஏற்புடைய செயலாகாது. எனவே, சிலவகைத் தொழில்களை அரசே ஏற்று நடத்துவதுதான் பொருத்தமுடையதாகும் என்று அறிஞர்கள் பலரும் ஒருமித்த கருத்தினைத் தெரிவிக்கின்றனர். இக் கருத்தின்படி, போக்குவரத்துத்துறை, அஞ்சல் துறை, தொலைப்பேசித் துறை, குடிநீர், மின்திறன் போன்றவற்றை வழங்கும் துறைகள், பாதுகாப்புக் கருவிகளைத் தயாரிக்கும் துறை, நாட்டின் கனிவளங்களை வெளிக்கொணரும் துறை, விமானம் மற்றும் கப்பல் போன்றவற்றை உருவாக்கும் துறை போன்ற இன்றியமையாத துறைகளைச் சார்ந்த நிறுவனங்களை அரசே ஏற்று நடத்துவது முறையான செயலாகும். இவற்றுள் சிலவகைத் தொழில்களை மத்திய அரசும், மற்றும் சிலவற்றை மாநில அரசும், பிறவற்றை நகராட்சி மன்றங்களும் ஏற்று நடத்துவதென்றும் தீர்மானிக்கப்பட்டு அவ்வாறே நடைபெற்றும் வருகின்றது. மத்திய அல்லது மாநில அரசுகள் நடத்தும் தொழில்கள், அரசுத் துறையின் மூலமும் (Through Government

Departments) மற்றும் சில கூட்டுருக்கள் (Corporations) மூலமும் இயக்கப்பட்டு வருகின்றன. சான்றாக, நம் நாட்டு இரயில் போக்குவரத்துத் துறை, அரசுத்துறையின் மூலமும், விமானப் போக்குவரத்து, பொதுக் கார்ப்பரேஷன் மூலமாகவும் நடை பெற்று வருகின்றன. மற்றும் எச்.எம்.டி., (H.M.T,) என்னும் ஹிந்துஸ்தான் மெஷின் டூல்ஸ், எச். எஸ். எல். (H.S.L.) என்னும் ஹிந்துஸ்தான் ஸ்டீல்ஸ் லிமிடெட், ஹிந்துஸ்தான் ஏரோனடிக்ஸ் லிமிடெட் (H.A.L.) போன்றவை தனியார் துறை நிறுவனங்களைப் போலவே இயங்கி வருகின்றன. இவ்வாறு பொதுமக்களுக்கு நன்மை செய்யவெண்டுமென்ற 'பொதுநல நோக்குடன்' பணி புரிகின்ற எல்லா நிறுவனங்களும் மத்திய, மாநில மற்றும் வட்டார அரசுகளால், (Central, State and Local Govts.,) தொடங்கப்பட்டு இயங்கி வருகின்றன. "பொதுநல ஈடுபாடு" கொண்டமையால் இவையனைத்தையும், "பொதுப்பயன் தொழில்கள்' என்று கூறுவதோ 'அரசினால் தொடங் கப்பட்டு நடைபெறுவதால் 'அரசுத்துறை' அல்லது 'பொதுத் துறைத் தொழில் நிறுவனங்கள்' என்று கூறுவதோ முறை யாகாது. ஏனெனில், மக்களுக்கு நன்மை செய்யவேண்டும், என்ற அடிப்படையில் இவை இரண்டும் தொடங்கப்பட்டாலும், பொதுப்பயன் தொழில் நிறுவனங்களும், பொதுத்துறை தொழில் நிறுவனங்களும் ஒன்றுக்கொன்று மாறுபடுகின்றன. அவற்றைப் பற்றி இங்குக் காண்போம்.

**ஒற்றுமைகள்**

(1) இரண்டு வகை நிறுவனங்களும் அரசின் ஆதரவுடன் தொடங்கப்படுகின்றன.

(2) தனிநபர் இலாபப் பெருக்கத்தினைத் தவிர்ப்பது இவற்றின் பொதுவான குறிக்கோள்.

(3) தனியார் துறை தொழில்களின் முறையற்ற போக் கிற்கு எதிராக இவை தோற்றுவிக்கப்படுகின்றன.

(4) இரண்டு நிறுவனங்களின் இயக்கமும் செயல்முறையும், பொதுமக்களின் கண்காணிப்புக்கு உட்பட்டவை.

(5) இவ்விரண்டிற்கும் சில சிறப்புச் சலுகைகள் வழங்கப் படுகின்றன.

(6) இவ்விரண்டு வகை நிறுவனங்களின் மூலதன அமைப்பு மிகவும் பெரிய அளவில் அமைந்துள்ளது. இரண்டிற்கும் பெருமளவில் முதலீட்டுத் தொகை தேவைப்படுகின்றது.

(7) இவ்விரண்டு தொழில்களின் செயல்முறைச் செலவுகள் ஏறக்குறைய ஒன்றாக அமைகின்றன.

**வேறுபாடுகள்**

மேற்காணும் ஒற்றுமைகளை எளிதாகக் கூறிவிட்டபோதிலும், வேறுபாடுகள் கணிசமாகவே உள்ளன.

1. முதலாவதாக, பொதுத்துறைத் தொழில் நிறுவனங்கள் பெரும்பாலும் அரசுத்துறை நிறுவனங்களாகவோ பொதுக் கூட்டுருக்கள் மூலமாகவோதான் தோற்றுவிக்கப்படுகின்றன. ஆனால், பொதுப்பயன் தொழில் நிறுவனங்களைப் பொறுத்த மட்டில், அவற்றை நகராட்சி மன்றங்களின் மூலமாக நடத்துவது தான் சிறந்ததாகக் கருதப்படுகின்றது.

2. ஒவ்வொரு பொதுத்துறை அல்லது அரசுத்துறை நிறுவனமும், பொதுக்கணக்கிடலுக்குத் தணிக்கை (Public Accountability) உட்பட்டது. பாராளுமன்ற அங்கத்தினர்கள், இத் துறைக்குத் தலைமை தாங்கும் அமைச்சர்கள் ஆகியோரும் இன்னும் சிலரும் இதற்கென ஏற்படுத்தப்படும் குழுவின் உறுப்பினர்களாவர். பொதுப்பயன் தொழில்களும், அரசின் கண்காணிப்பிற்கு உட்பட்டவையே என்றாலும், இத்தகைய கடுமையான கண்காணிப்பிற்கு உட்பட்டவையல்ல.

3. பொதுத்துறை நிறுவனங்கள், நாட்டின் பொருளாதாரக் கொள்கையின் ஓர் அம்சமாகவே விளங்குகின்றன. ஆனால், பொதுப்பயன் தொழில்களோ சந்தையின் தன்நிலை உரிமையைப் பெறுவதற்காகவே தோற்றுவிக்கப்படுகின்றன.

4. பொதுத்துறை நிறுவனங்களால் உருவாக்கப்படும் பொருள்கள் ஏனைய தொழில் நிறுவனங்களின் பொருள்களைப் போலத்தான் விற்கவோ வாங்கவோபடுகின்றன. ஆனால், பொதுப்பயன் தொழில்கள் அளிக்கக்கூடிய பொருள்களும், பணிகளும் இருபத்து நான்கு மணி நேரமும் பொதுமக்களால் வேண்டப்படுகின்றன.

5. பொதுத்துறை நிறுவனங்களில் தொழிலாளர் தகராறு போன்ற ஏதேனும் ஏற்பட்டால் நாள்கணக்கில், நிறுவனத்தை மூடி வைக்கமுடியும். ஆனால், பொதுப்பயன் தொழிலை அவ்வாறு மூட இயலாது. மேலும், இத் தொழில் நிறுவனங்கள் பொருள்களும், பணிகளும் எப்போதும் அளிக்கப்பட்டுக்கொண்டே இருக்க வேண்டும்.

6. மேற்காணும் கருத்துக்கேற்ப, பொதுத்துறை நிறுவனங்களில், நிலையான சொத்துகள் அதிக அளவில் வைக்கப் பட்டிருக்கவேண்டும் என்பதில்லை. ஆனால், பொதுப்பயன் தொழில் நிறுவனங்களின் மூலதனம் பெரும்பாலும் நிலையான சொத்துகளில் முடக்கப்பட்டிருக்கும். தயாரான நிலையில் உற்பத்தியை எப்போதும் தொடங்கக்கூடிய நிலையில், இவற்றின் இயந்திரங்கள் போதுமானதாகவும், இயங்கக்கூடியதாகவும் இருக்கவேண்டும்.

7. இவையனைத்தையும்விட, இவ்விரண்டு வகை நிறுவனங்களின் விலைக் கொள்கையுமே வேறுபாடுடையதாக இருக்கின்றது. பொதுப்பயன் தொழில்களின் நோக்கம். 'பொதுநல ஈடுபாடு' என்ற ஒன்றேயாகும். ஆனால், பொதுத்துறை நிறுவனங்கள் சிறிதளவு 'இலாப நோக்குடனும்' பணிபுரிகின்றன.

8. இவ்விரண்டு வகை நிறுவனங்களின் வருவாய்க் கொள்கையும் வெவ்வேறானதாக இருக்கின்றது. பொதுப்பயன் தொழில்களைப் பொறுத்தமட்டில் அவற்றின், செயல்முறைச் செலவுகள் என்னவோ அதனை மட்டுமே ஈடுகட்டும் வகையில், ஒரு நிறுவனத்தின் வருவாய் அமையவேண்டும் என்று கருதப் படுகிறது. ஆனால், அரசுத்துறை நிறுவனங்கள், செயல்முறைச் செலவுகளோடு சிறிதளவு இலாபத்தினையும் ஈட்ட விரும்புகின்றன. 'இலாபமோ நட்டமோ இல்லாத கொள்கை' (No profit or no loss policy) 'இறுதிநிலைச் செலவினைச் சரிக்கட்டும் கொள்கை' (Marginal Cost Price Policy) போன்றவை நடைமுறைக்கு ஏற்றதாக இருக்கமுடியாதெனக் கைவிடப்பட்டுவிட்டன. இவற்றைக் காட்டிலும் 'நுகர்வோரின் தாங்கும் சக்திக் கொள்கைப்படி' (What the traffic will bear policy) கட்டணத்தை விதிப்பதும் சிறந்ததாகவே தென்படுகின்றது. இருப்பினும், தற்சமயம் அரசுத்துறையின்மூலம் நடைபெறும் நிறுவனங்கள் தங்களது உற்பத்திச் செலவோடு சிறிதளவு இலாபத்தினையும் சேர்த்துக்கொண்டு செயற்படுகின்றன.

9. பொதுப்பயன் தொழில்களை நாட்டுடைமையாக்கத் தான் வேண்டுமென்ற கட்டாயமில்லை. ஆனால், அரசுத்துறை நிறுவனங்களில் ஏறக்குறைய அனைத்துமே நாட்டுடைமையாக்கப் படுகின்றன. இத்தகைய ஒற்றுமை, வேற்றுமைகளைப் பொதுப் பயன் தொழிலுக்கும் பொதுத்துறைத் தொழிலுக்குமிடையே கூறலாம். இவற்றைப்பற்றி நன்றாகத் தெரிந்துகொள்ள வேண்டுமானால், பொதுத்துறைத் தொழில்களைப்பற்றியும் நாம் நன்றாக அறிந்திருக்கவேண்டும். பொதுத்துறை தொழில்களின் நோக்கம்,

இரண்டாவது உலகப் போருக்குப் பின்னர் ஏறக்குறைய எல்லாப் பொருள்களின் விலையும் உயர்ந்துகொண்டே போனதை அனைவரும் அறிவோம். தொழில் நிறுவனங்களைத் தொடர்ந்து நடத்துவதோ புதிய தொழில்களைத் துவங்குவதோ, இயலாத செயலாயிற்று. கச்சாப் பொருள்களின் விலை உயர்ந்தது மட்டுமின்றி அவை பல நேரங்களில் கிடைப்பதற்கரியதாயும் காணப்பட்டது. விலை உயர்வின் காரணமாக, அன்றாட வாழ்க்கையே பெரிதும் பாதிக்கப்பட்டதால், உயர்ந்த அளவு ஊதியம் கோரி, தொழிலாளர்கள் போராட்டம் தொடங்கினர். தொடங்கப்பட்ட மின்சக்தி நிலையங்கள், போரினால் அழிக்கப்பட்டோ, முற்றுப் பெறாத நிலையிலோ இருந்தன. இதன் விளைவாகத் தொழில் நிறுவனங்களுக்கு வேண்டிய மின்சக்தியை அளிப்பதும் இயலாததாயிற்று. போக்குவரத்துக் கட்டணமும் உயர்ந்ததால், உற்பத்திச் செய்யப்பட்ட பொருள்களைச் சந்தைக்கு அனுப்புவதற்கு அதிக அளவுக் கட்டணத்தைக் கொடுக்க நேரிட்டது. சுருங்கக்கூறின் தொழில் நிறுவனங்களை நடத்துவதே மிகக் கடினமான செயலாக ஆகிவிட்டது. இதனைச் சரிக்கட்ட, ஏறக்குறைய எல்லாத் தொழில் நிறுவனங்களும் தங்களுடைய பொருள்களின் விலையை மிகப் பெருமளவில் உயர்த்திவிட்டன. இதனால், பொதுமக்கள் பெரிதும் அல்லலுற நேரிட்டது. தவிரவும், அதிகரித்துவிட்ட உற்பத்திச் செலவின் காரணமாக, பல துறைகளில் முதலீடு செய்யத் தொழிலதிபர்கள் முன்வரத் தயங்கினர்.

இதனால் நாட்டின் தொழில்துறையில் பெரிய அளவில் ஏற்றத் தாழ்வு காணப்பட்டது. இந்நிலை நாட்டின் முன்னேற்றத்திற்கு ஊறு விளைவிப்பதாகும். இதனைச் சரிசெய்யும் பொறுப்பினை அரசே ஏற்றுக்கொள்வதுடன், தொழில்துறையிலும், அரசு நிறுவனங்கள் துவக்கப்பட்டன. குறிப்பாக, இங்கிலாந்து நாட்டில் இரண்டாவது உலகப் போருக்குப்பின்னர் கணிசமான அளவில் அரசுத்துறை நிறுவனங்கள் தோன்றியதைக் குறிப்பிடலாம். புதிதாகத் துவக்கப்பட்ட நிறுவனங்கள் மட்டுமின்றி, ஏற்கனவே இயங்கிவந்த நிறுவனங்களையும் அரசு, தனியார் துறையிலிருந்து ஏற்றுக்கொண்டு நடத்துமேயானால், அவையும் பொதுத்துறை நிறுவனங்கள் என்றே அழைக்கப்பட்டன. சான்றாக, இரயில்வே நிறுவனங்கள், நிலக்கரி, இரும்பு மற்றும் எஃகு தொழில் நிறுவனங்கள் போன்றவற்றை இங்கிலாந்து நாட்டின் "தொழிற்கட்சி அரசு" (Labour Government) நாட்டுடைமையாக்கியது. நாட்டின் தொழில்துறையை சீரமைக்கவும், தனியார் துறையினரால் பங்கேற்கப்படாத தொழில்களில் அரசு தனது பங்கினை ஏற்று நடத்தவும் இத்தகைய பொதுத் துறை நிறுவனங்கள் தோற்றுவிக்கப்பட்டன,

**பொதுத்துறைத் தொழில்களின் இன்றியமையாமையும், வளர்ச்சியும்**

பொருளாதாரவல்லுநரான கார்ல் மார்க்ஸ் அவர்களின் கருத்துப்படி, "சமுதாயத்தில் நிலவுகின்ற ஏற்றத் தாழ்வுகளை நீக்க பொதுத்துறை தொழில்கள் தோற்றுவிக்கப்படுவது இன்றியமையாததாகும்". ஏனெனில், தனியார் துறையில் இயங்கி வரும் நிறுவனங்கள் இலாபம் ஈட்டுவது ஒன்றையே குறிக்கோளாகக் கொண்டுள்ளமையால், மக்களின் வாங்கும் சக்தி அனைத்தும் சுரண்டப்பட்டுவிடும். செல்வர் மேலும் செல்வராவதும், வறியவர் மேலும் வறியவராவதும் இதன் விளைவாக ஏற்படும். மேலும், தனியார் நிறுவனங்களில் பணிபுரியும் தொழிலாளர்கள் தங்களது உழைப்பிற்கேற்ற ஊதியத்தைப் பெறுவதில்லை. அவர்களது உழைப்பின் விளைவால் கிடைக்கும் இலாபத் தொகை முழுவதுமே தொழிலதிபரால் எடுத்துக் கொள்ளப்படுவதால், உழைக்கும் கரங்களுக்கு உரிய ஊதியம் கிடைப்பதில்லை என்றும் இதன் விளைவாகச் சமுதாயத்தில் இருப்போர், இல்லாதோர் என்ற வகுப்புப் போராட்டம் ஏற்பட வாய்ப்புள்ளது என்றும், கார்ல்மார்க்ஸ் கூறியுள்ளார். இப் பொருளாதாரச் சீர்குலைவைச் சரிசெய்யப் பொதுத்துறையில் தொழில் நிறுவனங்கள் நடத்தப் படவேண்டுமென்றும், அவ்வாறு செய்வதன்மூலம் கிடைக்கும் இலாபத்தொகை அனைத்தும் அரசிற்கே சொந்தமாகும் என்றும், அரசு என்பது மக்களுக்காகவே இயங்குவதால், சமுதாய வளர்ச்சிக்குத் தீங்கு ஏதும் நேரிடுவதில்லை, என்றும் கூறப்படுகிறது. தொழில் நிறுவனங்களை நடத்தும் கருத்து நாள்தோறும் வலிமை பெற்றதாகிறது என்பதில் ஐயமில்லை.

நம் நாட்டைப் பொறுத்தவரை, நாம் விடுதலை பெறுவதற்கு முன்பே பொதுத்துறைத் தொழிலில் ஈடுபாடு இருந்து வந்துள்ளது. இருப்பினும், சுதந்திர இந்தியாவில் "பொருளாதாரச் சமுதாயத்தை" உருவாக்கும் பொருட்டுத் தீட்டப்பட்ட ஐந்தாண்டுத் திட்டங்களில் பொதுத்துறைத் தொழில்கள் பெரிதும் இடம்பெற்றன. நான்கு, ஐந்தாண்டுத் திட்டங்களுக்குப் பின்னர் இன்றைய தினம் சுமார் 125 நிறுவனங்கள் அரசால் நடத்தப்படுகின்றன என்பது குறிப்பிடத்தக்கது.

**நன்மைகள்**

பொதுத் துறைத்தொழில்களை நடத்துவதன்மூலம் கிடைக்கக் கூடிய நன்மைகள் பல. அவற்றுள் குறிப்பிடத்தக்க சில நன்மைகள் கீழே தரப்பட்டுள்ளன ;

(1) வளர்ச்சியுருத பகுதிகளிலும் தொழில் நிறுவனங்கள் தொடங்கப்படுவதால், நாட்டின் தொழில் முன்னேற்றம் பாதிக்கப்படுவதில்லை. இதனல், 'வளருகின்ற பகுதிகள்' என்றும் 'தேய்கின்ற பகுதிகள்' என்றும் ஏதும் ஏற்படுவதில்லை.

(2) பெருமளவு முதலீட்டில் நிறுவப்படுகின்ற இத் தொழில்களில் பணிபுரிய ஏராளமானேர் தேவைப்படுகின்றனர். இதனல், நாட்டின் வேலையில்லாத் திண்டாட்டத்தினை ஓரளவு குறைக்க முடிகின்றது.

(3) பயிற்சி பெற்ற, திறமை வாய்ந்த உயர் அதிகாரிகளால் இந் நிறுவனங்கள் இயக்கப்படுவதால், இவற்றின் இயக்கம் தடைப்படுவதில்லை.

(4) பாராளுமன்றத்தின் நேரடிக் கண்காணிப்பில் இவை இயங்குவதால் இந் நிறுவனங்களின் குறைபாடுகள் அவ்வப்போது சரிசெய்யப்படலாம்.

(5) "போர் மூளுதல்" போன்ற நாட்டின் அவசர நிலைமைகளில் (State of Emergency) பொதுத்துறைத் தொழில்களின் மூலம் நாட்டின் பாதுகாப்பை மேலும் தீவிரப்படுத்த முடியும். சான்ருக, போர்க் கருவிகள் மற்றும் படைக்கலன்களைத் தயாரிக்கும் நிறுவனங்களும், இருப்புப் பாதை மற்றும் விமானவழிப் போக்குவரத்து நிறுவனங்களும் அரசின் நிருவாகத்தில் இருக்குமேயானல், அவசர நிலைமையைச் சமாளிக்க, போர் வீரர்களையும், மற்றும் உணவு, உடை போன்றவற்றையும் ஓரிடத்திலிருந்து மற்ருேரிடத்திற்கு எளிதாக எடுத்துச் செல்லமுடியும்.

(6) ஒரு நாட்டின் இயற்கைக் கனிவளங்கள் எப்போதும் பாதுகாக்கப்படவேண்டும். தனியார்துறை நிறுவனங்கள் பெருமளவில் நிறைந்திருக்குமேயானல், இவ்வியற்கைக் கனிவளங்கள் உடனடியாகத் தீர்க்கப்படுவதோடு, அவை சமுதாயத்திற்கு எதிராகவும் பயன்படுத்தப்படலாம். ஆனல், பொதுத்துறை நிறுவனங்கள் பெருமளவில் தோற்றுவிக்கப்பட்டால் இக் கனிவளங்கள் சமுதாயத்தின் மேம்பாட்டிற்காகப் பயன்படுத்தப் பெறலாம்.

இவை மட்டுமின்றி, மேலும் பல கருத்துகளைப் பொதுத்துறை நிறுவனங்களுக்கு ஆதரவாகக் கூறிக்கொண்டே போகலாம்.

எனினும், இவற்றின் குறைபாடுகளையும் கூறவேண்டியிருப்பதால் அவற்றையும் நோக்குவோம்.

**குறைபாடுகள்**

(1) அரசுத் துறை தொழில்கள் பொதுமக்களின் பணத்தைக்கொண்டு நடைபெறுவதால் நட்டம் ஏற்பட்டாலும், பொது மக்களே ஏற்றுக் கொள்ள வேண்டியிருக்கின்றது. அதாவது, வரிகளை உயர்த்துவதன்மூலமும், புதியவரிகளை அறிமுகப்படுத்து வதன் மூலமும், அரசு இந் நட்டத்தினைச் சரிக்கட்ட முடியும்.

(2) தனியார் நிறுவனங்களில் உள்ளதைப்போன்று இலாபமீட்ட வேண்டுமென்ற மன எழுச்சியும், ஆர்வமும் அரசுத் துறை நிறுவனங்களை நடத்துவோரிடம் இருப்பதில்லை.

(3) இந் நிறுவனங்களை நிருவகிக்கின்ற அதிகாரிகள் பெரும்பாலும் I. A. S. தகுதி பெற்றவர்களாகவும் எல்லாத் துறைகளுக்கும் பொதுவான பயிற்சியைப் பெற்றவர்களாகவும் இருப்பது உண்மைதான். எனினும், தொழில்துறைக்கு வேண்டிய வர்த்தக உலகின் நெளிவுசுளிவுகளைப் புரிந்து கொள்ளக் கூடிய, பயிற்சியும் திறமையும் இவர்களிடம் பெரும் பாலும் இருப்பதில்லை.

(4) பொதுத்துறை நிறுவனங்களை இயக்கும் அதிகாரிகள் அரசின் அலுவலர்கள். எந்நேரமும் அவர்கள் மற்றொரு தொழில் நிறுவனத்திற்கோ வேறோரு இடத்திற்கோ மாற்றப்படலாம். இதன் காரணமாகத் தாங்கள் செல்லும் எந்த இடத்திலும் முழுமனதுடன் இந்த அதிகாரிகள் பணிபுரிய முற்படுவதில்லை.

(5) அடுத்து, அரசுத் துறையைச் சார்ந்த எந்த ஒரு நிறுவனத்திலும், உடனுக்குடன் முடிவுகள் எடுக்கப்படுவதில்லை. தொழில் துறை பற்றிய சிக்கல்களுக்கு உடனுக்குடன் முடிவு காணப்படாவிட்டால் தொழில் நசித்துவிடும். ஆனால், அரசுத் துறையில் 'காலதாமதம்' (Red-tapism) என்பது இயல்பானதாகி விட்டது.

மேற்காணும் குறைபாடுகளையும் மற்றும் சிலவற்றையும் குறிப்பிட்டுக் கொண்டே போகலாம். இருப்பினும், இவற்றால், ஏற்படும் நன்மைகளைச் சீர்தூக்கிப் பார்க்கும்போது, பொதுத் துறைத் தொழில் நிறுவனங்கள் பெரும் வரவேற்பினைப் பெறத் தகுதியுடையனவாக இருக்கின்றன.

**இன்றைய நிலை**

விடுதலைப் பாதையில் இருபத்தேழு ஆண்டுகளைக் கடந்து வந்துள்ள நாம், எவ்வளவு தூரம் தொழில் முன்னேற்றத்தைப் பெருக்கியுள்ளோம் என்பதை அறிந்து கொள்ள வேண்டும்.

நம் நாட்டிலுள்ள பொதுத்துறைத் தொழில்கள் (1) அரசுத் துறை மூலமாகவும் (2) பொதுக் கூட்டுருக்கள் மூலமாகவும், (3) கூட்டுப்பாங்குக் கம்பெனி (Joint Stock Company) முறையிலும் நடைபெறுகின்றன. தபால்-தந்தித் துறை, தொலைபேசி நிறுவனங்கள், ஒலிபரப்புத் (Broadcasting) துறை போன்றவையும் சித்தரஞ்சன் லோகோமோடிவ்ஸ், இன்டக்ரல் கோச்பாக்டரி (I. C. F) போன்றவையும் அரசுத்துறையில் நடைபெறுகின்றன. இங்கிலாந்தில் இருப்பது போன்று இந்தியாவிலும் "பொதுக் கார்ப்பரேஷன் முறை" பெரும் வரவேற்பினைப் பெற்றுள்ளது. சான்றாக, தாமோதரர் பள்ளத்தாக்குக் கார்ப்பரேஷன்களையும், (D.V.C), இந்தியன் ஏர்லைன்ஸ் கார்ப்பரேஷன், எண்ணெய் மற்றும் இயற்கை வாயுக் கமிஷன் (Oil and Natural Gas Commission) போன்றவற்றைக் குறிப்பிடலாம். தனியார் நிறுவனங்களைப் போன்றே நடத்தப் பெற்றால், சீரான இயக்கத்தைப் பெற்று இந் நிறுவனங்கள் செயற்பட முடியும் என்ற கருத்தும் ஏற்றுக் கொள்ளப்பட்டது. அதன் விளைவாக, அரசின் நேரடிக் கண்காணிப்பில் இயங்கி வந்த சில நிறுவனங்கள் தனித்து இயங்க ஆரம்பித்தன. ஆனால், இவற்றின் செயல் முறைகள், கணக்குப் பதிவியல் முறைகள், இலாப நட்ட விளைவுகள், வாணிகக் கோட்பாடுகள் போன்றவை அரசின் பரிசீலனைக்குட்பட்டதாகவே கருதப்பட்டன. சான்றாக, ஹிந்துஸ்தான் மெஷின் டூல்ஸ், ஹிந்துஸ்தான் ஸ்டீல்ஸ், பாரத் ஹெவி எலெக்ட்ரிக்கல்ஸ் போன்றவற்றைக் கூறலாம். இவை தவிர, தனியார் துறையில் இயங்கிவந்த சில நிறுவனங்கள் நாட்டுடைமையாக்கப்பட்டு, அரசால் நடத்தப்பட்டு வருகின்றன. சான்றாக, ஆயுள்காப்பீட்டுக் கூட்டுரு (Life Insurance Corporation) என்ற ஒன்றினை ஏற்படுத்தியதையும் அண்மையில் பதினான்கு வங்கிகளை அரசுடைமையாக்கியதையும் குறிப்பிடலாம்.

இவ்வாறு சமுதாயத்தின் பொருளாதாரச் சீர்குலைவைச் சரி செய்யும் பொருட்டும், நாட்டில் தொழில் துறை முன்னேற்றத்தினை ஏற்படுத்தவும் பொதுத்துறைத் தொழில்கள் ஏற்படுத்தப் படுகின்றன. அதுபோன்றே, அன்றாட வாழ்வில் மக்களின் இன்றியமையாத தேவைகளை நிறைவேற்றும் வண்ணம் பொதுப் பயன் தொழில் நிறுவனங்கள் தோற்றுவிக்கப்படுகின்றன இவ்விருவகைத் தொழில் நிறுவனங்களும், மக்களின் நன்மைக்

காகவே சமுதாய மற்றும் பொதுநல ஈடுபாட்டுடன் தொடங்கப் படுகின்றன.

## கருத்துக் கோப்பு

பொதுப்பயன் தொழில்களுக்கும் மற்றும் பொதுத்துறைத் தொழில்களுக்கும் இடையேயுள்ள ஒற்றுமைகளும், வேற்றுமைகளும் பொதுத்துறைத் தொழில்களின் விலைக் கொள்கை—சமுதாயத்தில் பொதுத்துறைத் தொழில்களின் இன்றியமையாமை-அரசுத் துறைத் தொழில்களின் நன்மைகளும், குறைபாடுகளும்-இன்றைய நிலை.

# 17. தொழில்திறன் முன்னேற்றமும், வருங்காலமும்

"மனிதனுடைய சிந்தை என்னும் சிறு பொறியிலிருந்து விஞ்ஞான முன்னேற்றம் என்னும் பெரும் நெருப்பு உண்டாகின்றது. ஆண்டவனின் படைப்பினைப் போலவே மனிதனும் படைப்புத் தொழிலை மேற்கொள்ளும் நாள் தொலைவிலில்லை......"

விஞ்ஞானி சி. வி. இராமன்.

பொதுப்பயன் தொழில்களென்றால் என்னவென்றும், அவை எத்தனை வகைப்படும் என்றும், அவை எவ்வாறு இயங்குகின்றன என்பது பற்றியும் நாம் விரிவாக ஆராய்ந்தோம். அன்றாடத் தொழில் இயக்கத்தில் நிறைய சிக்கல்கள் ஏற்பட்டபோதிலும் அவற்றைத் திறம்படத் தீர்க்கும் விதம்பற்றியும் கண்டோம். இருப்பினும், இவையனைத்தையும்விடச் சிறப்பு வாய்ந்ததான, இத்தொழில்களில் அன்றாடம் ஏற்படும் முன்னேற்றம் பற்றிச் சிறிதேனும் கூறாது இருப்பின் நமது பணி நிறைவு பெறாது. எனவே, பொதுப்பயன் தொழில்களின் எதிர்காலம், இவ்வகைத்தொழில் திறன் முன்னேற்றத்தினால் எவ்வாறு அமையக்கூடும் என்பதைப் பற்றிச் சற்று ஆராய முற்படுவோம்.

இயந்திரங்களின் தானியக்க முறையின் காரணமாக (automation) கணக்குப்பதிவியல் முறைகள், அளவெடுக்கும் முறைகள், அளவினைக் குறிக்கும் பணிகள், இயந்திரங்களை இயக்குதல், இயங்குகின்ற இயந்திரத்தினை நிறுத்துதல், வரவு-செலவுத் தொகையினைத் தனித்தனியே பதிவு செய்தல், தொழிலாளர் பற்றிய குறிப்புகளைத் தனி அட்டையில் பதிவு செய்தல் போன்ற பல பணிகள் எளிதாகவும், விரைவாகவும் நடைபெறுகின்றன. இவற்றைப்பற்றி, விரிவாக ஆராய முடியாவிடினும், குறிப்பாகச் சில பொதுப்பயன் தொழில்களில் இவை எவ்வாறு பயன்படுகின்றன என்பதை மட்டும் இங்குக் காண்போம்.

**மின்திறன் நிறுவனங்கள் :**

மின்திறன் நிறுவனங்களில் நெடுநாள்களாகவே இருந்துவந்த இரண்டு குறைபாடுகள் தொழில் முன்னேற்றத்தின் விளைவால் களையப்பட்டுள்ளன. முதலாவதாக, மிகத் தொலைவிலுள்ள இடங்களுக்கு மின்திறனை மாற்றி அனுப்பும்போது, வீணாகிக்கொண்டே வந்த மின்சக்தியின் அளவு வெகுவாகக் குறைக்கப்பட்டுவிட்டது. இரண்டாவதாக, மின்சார உற்பத்திப் பணியில் இதுநாள்வரை பயன்படுத்தி வந்த எரிபொருளை இன்னும் சிறந்த முறையில் பயன்படுத்துவதற்கும் வழி காணப்பட்டது. அடுத்து, உற்பத்தி செய்யப்பட்ட மின்சாரத்தை நுகர்வோரின் இருப்பிடங்களுக்கு மாற்றி அனுப்பும்போது ஓர் அழுத்தத்துடன் (Voltage) அனுப்புதல் வேண்டும். இவ்வழுத்தம் இதுநாள்வரை மிகச் சொற்பமான அளவில் இருந்தது. தற்சமயம் கூடுதலான உயர் அழுத்த முறையில் (Extra High Voltagc - E. H. V.) மின்சாரம் மாற்றம் செய்யப்படுகின்றது. மேலும், நிலக்கரியைப் பயன்படுத்தி மின்சார உற்பத்தி செய்யப்பட்ட முறையிலும், வியக்கத்தக்க வகையில் மாற்றம் ஏற்பட்டுள்ளது. இந்தியாவிலுள்ள நிலக்கரி சுரங்கங்கள் மேலும் அகழப்பட்டு, நிலக்கரி பெருமளவில் கிடைக்குமாறு செய்யப்படுகின்றன. தமிழ்நாட்டில் நெய்வேலி என்னுமிடத்தில் உள்ள நிலக்கரிச் சுரங்கத்தினின்று கிடைக்கும் நிலக்கரி போதுமான அளவு இராததால், அங்கே இரண்டாவது சுரங்கம் ஒன்றும் வெட்டப்பட்டு வருகின்றது.

நிலக்கரியைப் பயன்படுத்தி மின்சார உற்பத்தி செய்யும் முறையிலும் பெரும் மாற்றம் ஏற்பட்டுள்ளது. குறைந்த அளவுச் செலவிலேயே நிறைய அளவு மின்திறனை உற்பத்தி செய்யும் வாய்ப்பு தற்போது கிட்டியுள்ளது. இது மின்சார உற்பத்தியில் ஏற்பட்டுள்ள வரவேற்கத்தக்க மாற்றமாகும். குறிப்பாக, அமெரிக்க நாட்டு மின்திறன் நிறுவனங்கள் இத் துறையில் பெரும் வெற்றியைக் கண்டிருக்கின்றன. அந் நாட்டில் 1947 ஆம் ஆண்டில் 1 கிலோ வாட் மின்திறனை உற்பத்தி செய்ய 1-28 பவுண்டு எடையுள்ள நிலக்கரி தேவைப்பட்டது. இதன் பின்னர் குறைவான உற்பத்திச் செலவில் பெருமளவு மின்திறனைப் பெறும் முறைகள் கண்டுபிடிக்கப்பட்டன. மின்திறனின் உற்பத்திக்கு 0·863 எடையுள்ள நிலக்கரியே தேவைப்பட்டது. நீராவியை உற்பத்தி செய்யும் கருவிகள், புதிய முறையில் கண்டுபிடிக்கப்பட்டமையால் குறைவான நிலக்கரியே செலவழிக்கப்பட்டது.

பாதுகாப்பான முறையில் மின்சாரம் உற்பத்தி செய்யப்படவேண்டியது மிகவும் அவசியமாகும். மின்சாரக் கருவிகள், மின்

திறனை எடுத்துச் செல்லும் கம்பிகள் போன்றவற்றை நன்கு காப்பு செய்து (insulation) வைக்க வேண்டும். இல்லையெனில் மின்சக்தி கசிவு ஏற்பட்டு மனிதர்களின் உயிருக்கே பெரும் ஆபத்துகள் ஏற்படலாம். எனவே, இக் கருவிகளைக் காப்பு செய்வதில் நவீன முறைகள் தற்போது கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. அடுத்து, இது நாள்வரை மனிதர்களின் உதவியால் இயங்கிவந்த மின் உற்பத்தி நிலையங்கள், தற்சமயம் மனிதர்களின் உதவியின்றித் தானே இயங்கும் அளவிற்குத் தொழில் முன்னேற்றம் ஏற்பட்டுள்ளது. மின்கம்பிகளை தாங்கிச் செல்லும் கோபுரங்கள் (Towers) தற்சமயம் புதிய வடிவிலும், புதிய அமைப்பிலும் உருவாக்கப் பட்டுள்ளதையும் புதியதொரு மாற்றமாகக் குறிப்பிடலாம். இவற்றைத் தவிர நுகர்வோரின் இல்லங்களில் மின் திறன் வழங்கப்படுவதற்காக, இணைப்புகள் ஏற்படுத்தப்படும்போது, நிலத்திற்கடியில் மின்கம்பிகள் செல்லுமாறு அமைக்கப்படுகின்றன. இத்தகைய முன்னேற்றங்கள் மின் துறையில் ஏற்பட்டுள்ளதை ஒரு சாதனையாகவே குறிப்பிடலாம்.

**மின் உற்பத்தி முறையில் மாற்றங்கள்**

மின் திறன் உற்பத்தி முறையில் ஏற்பட்டுள்ள புதிய மாற்றங்களைப் பற்றியும் அறிந்து கொள்ளுதல் நன்மை பயக்கும். பெரும்பாலும், இன்றைய தினம் "டர்பைன்-ஜெனரேட்ட"ரைப் (Turbine-Generator) பயன்படுத்தியே மின் உற்பத்தி செய்யப்படுகின்றது, இம் முறையை ஒழித்து, ஐந்து புதிய முறைகளில் மின் உற்பத்தி செய்யமுடியும் என்று விஞ்ஞானிகள் கண்டுபிடித்துள்ளார்கள். இவற்றுள், முதலாவது முறை " ஃபூயல் செல் முறை" (Fuel cell Method) எனப்படும் பேட்டரி முறையில் மின்சக்தி தயாரிக்கப்படும்போது ஏற்படும் குறைகள் இம் முறையில் தோன்றுவதில்லை.

இரண்டாவது முறையின்படி, மிக உயர்ந்த அழுத்தம் கொண்ட மின்திறனைப் பெருமளவில் தயாரிக்க முடியும் எனக் காணப்பட்டது. தெர்மா கப்புள் (Therma Couple) முறைகளைக் கையாண்டு, மின்சார உற்பத்தி செய்யமுடியும் என்று கண்டறிந்த பின்னர், அம் முறையே பெரிதும் பின்பற்றப்பட்டுவந்தது. இவ் வகையில் உற்பத்தி செய்யப்பட்ட மின்சக்தி, "தெர்மோ எலெக்டிரிசிடி" (Thermo Electricity) எனப் பெயர் பெற்றது. குறைந்தது 6% செயல்திறன் கொண்ட 500 முதல் 1000 வர்ட் வரை உள்ள ஜெனரேட்டர்கள் தற்போது பயன்படுத்தப்படுகின்றன. இரண்டாவது முறையைப் பின்பற்றி மூன்றாவதுமுறை அமைகின்றது. இது "தெர்மியானிக் ஜெனரேஷன்" (Thermionic Generation) என் ஆங்கிலத்தில் அழைக்கப்படுகிறது. நான்காவதாக, "மாக்னதோ ஹைட்ரோ டைனமிக் உற்பத்தி முறை"

(Magnetho hydro dynamic generation) கண்டுபிடிக்கப்பட்டது. இறுதியாக, விண்வெளியிலுள்ள கிரகங்களைக் பயன்படுத்தி மின் திறன் உண்டாக்க முடியும் என்பதை, "சோலார் முறை" (Solar generation) கூறுகின்றது. இவ்வாறு, பழைய உற்பத்திமுறைகள் கைவிடப்பட்டுப் புதிய ஐந்து முறைகள் கையாளப்பட்டு மின் திறன் உற்பத்தி செய்யப்படுகிறது.

மின்திறன் நுகர்ச்சியில் ஏற்படுகின்ற மாற்றங்களையும், இங்கே குறிப்பிடுதல் அவசியமாகிறது. தொழில் துறைகள் விரிவடைய, விரிவடைய அவற்றிற்கான மின்திறன் அளவும் மிகவும் அதிகரித்துக் கொண்டே போகுமல்லவா? இவ்வாறு நுகர்வோரால் நுகரப்படும் மின்திறன் அளவு கூடுதலாகும்போது, இம்மின் திறனை வழங்கும் நிறுவனங்கள் வளர்ச்சியுறுகின்றன. மேலும், நவீனக் கருவிகளையும் இயந்திரச்சாதனங்களையும் பயன்படுத்திப் பெருமளவு உற்பத்தியைச் செய்ய அவை எண்ணுகின்றன, அமெரிக்க நாட்டு அறிஞர் சாம் எச். ஸ்கர் (Sam H. Schurr) என்பவரின் கருத்துப்படி, அவரது நாட்டில் 1955 முதல் 1975ஆம் வருடத்திற்குள் நுகரப்படும் மின்திறன் அளவு 211 மடங்காக உயர்ந்திருக்கும் என்று தெரிய வருகின்றது. இவ்வாறு, மின்திறன் நுகர்ச்சி அளவிலும் மின்திறன் உற்பத்தி முறையிலும் ஏனைய பிற பணிகளிலும் வியக்கத்தக்க மாறுதல்கள் ஏற்பட்டுள்ளன என்ற கருத்து விளக்குகின்றது.

**வாயு நிறுவனங்கள்**

விஞ்ஞான அறிவின் வளர்ச்சியில் ஏறக்குறைய எல்லாப் பொதுப்பயன் தொழில்களிலுமே பெரும்மாற்றம் காணப்படுகிறது. நுகர்வோரின் இல்லங்களுக்குக் குழாய்கள்மூலம் எடுத்துச் செல்லப்படும் எரிவாயு தற்போது நிலத்திற்கடியில் அதிகச் சுற்றளவினைக் கொண்ட குழாய்களின்மூலம் எடுத்துச் செல்லப்படுகிறது. இதனால், எரிவாயு வீணாகக் கசிவது தவிர்க்கப்படுகின்றது. அடுத்து. எரிப்பதற்கு மட்டுமே பயன்படுத்தப்பட்டு வந்த எரிவாயு தற்போது வேறு சில பணிகளுக்கும் பயன்படுத்தப்படும் நிலை, ஏற்பட்டது. சான்றாக, குளிர்பதன வசதியினை ஏற்படுத்தவும், விளம்பரப் பணிகளுக்கான குழல் விளக்குகளை எரிய விடவும் இன்னும் இவைபோன்ற செயல்களுக்கும் இவ்வாயு பயன்படுத்தப்படுகின்றது.

**தொலைபேசி நிறுவனங்கள்**

உள்ளூர் அழைப்புகளில் மட்டுமே மாற்றங்கள் ஏற்பட்டது போக, தொலைதூர அழைப்புகளிலும் புதிய மாற்றங்கள் ஏற்பட்

டுள்ளன. "தொலைதூர நேரடித் தொடர்பு" (Distance direct dialling) என்ற முறை தற்போதும் வழக்கில் உள்ளது. டெலக்ஸ் துறை தந்திகளும், தொலைபேசி அழைப்புகளும், மக்களால் பயன்படுத்தப்படுகின்றன.

மேற்காணும், தொழில்களில் மட்டுமே புதிய கண்டுபிடிப்புகள் ஏற்பட்டுள்ளன என்று எண்ணலாகாது. உண்மையில், எல்லாவகைப் பொதுப்பயன் தொழில்களிலும், விஞ்ஞானத்தின் உதவியால் தொழில் திறனில் முன்னேற்றம் ஏற்பட்டு வருகின்றது. இம் முன்னேற்றத்தின் காரணமாகப் பொருள்களைக் குறைந்த செலவில் உற்பத்தி செய்து நுகர்வோருக்கு அளிக்க முடியும். எனவே, பொதுப்பயன் தொழில்களின் எதிர்காலம் மேம்பட்டதாக இருக்குமென்பதில் ஐயமேதுமில்லை.

## கருத்துக்கோப்பு

விஞ்ஞான அறிவு முன்னேற்றம்- பொதுப்பயன் தொழில்களில் விஞ்ஞான அறிவின் விளைவு-மின்சாரம், வாயு மற்றும் தொலைபேசி நிறுவனங்களில் தோன்றியுள்ள மாறுதல்கள்.

# 18. பொதுப் பயன் தொழில்களும் பொதுத் தொடர்பும்

"ஒரு தொழிலில் போடப்படுகின்ற மூலதனம் எவ்வளவு இன்றி யமையாததாகக் கருதப்படுகின்றதோ, அவ்வளவு இன்றியமையாததாக, அத் தொழிலின் பொதுத் தொடர்பும் கருதப்படுகின்றது......"

—மார்டின் டி. பாரிஸ் (Farris)

"பொதுத் தொடர்பு" என்ற சொல் பல்வேறு வகைகளில் பொருள் கொள்ளுமாறு அமைந்துள்ள ஒன்றாகும். "வேடிக்கை யாகக் குறிப்பிட வேண்டுமானால், பொதுமக்களைத் தனது சுற்றத் தாரை நடத்துவதுபோன்று நடத்தாமல் வேறு வகையில் தொடர்பு கொள்ளும் வழிக்குப் பொதுத் தொடர்பு எனப் பெயரி டலாம்" என்று மார்டின் டி. பாரிஸ் என்பவர் "பொதுப் பயன் தொழில்கள்" என்னும் தமது நூலில் குறிப்பிடுகின்றார். உண்மை யில் "பொதுத் தொடர்பு" என்னும் சொல் "தொழில் நற்பெய ரினைப் பெறுதல்" என்றும் "சமுதாயத்தின் மதிப்பினைப்பெறுதல்" என்றும் பல பொருள்களைக் கொண்டதாகும். இன்னும் குறிப் பாகச் சொல்ல வேண்டுமானால், "ஒரு தொழிலோ ஒரு தொழிலைச் சார்ந்த நிறுவனமோ, சமுதாயத்துடன் தொடர்பு கொள்ளும் பொருட்டு அதற்கேற்ற வழிகளையும், முறைகளையும் கையாளுவதன்மூலம், பொதுமக்களின் ஆதரவினைப் பெறும் முயற்சியினைப் பொதுத் தொடர்பு" என்று குறிப்பிடலாம்.

பொதுத் தொடர்பு என்று சொல்லப்பட்டது இன்றைய விஞ்ஞான உலகில் பலதரப்பட்ட சிறப்பு நிறுவனங்களால், அவற்றிற்கே உரிய முறையில் ஏற்படுத்தப்படலாம். இத் தொடர்பினை வாணிக நிறுவனங்கள் எவ்வாறு ஏற்படுத்திக் கொள்ள வேண்டுமென்று ஆலோசனை கூறவும், அதற்கான வழிகளை வகுத்துத் தரவும், இன்று பல்வேறு நிறுவனங்கள் உள்ளன. எனினும், இப் பொதுத் தொடர்பினை ஏற்படுத்தும்

முறை, ஏற்படுத்துகின்ற கலை, சரித்திரம் பிறந்த நாள் முதலே உள்ளது என்பார். மார்டின் டி. பாரிஸ்*. அவரது கூற்றின்படி சரித்திரக் கதாநாயகன் ஜூலியஸ்சீசர், அவன்பின் வந்த அந்தோணி ஆகியோருடன் கட்டழகி கிளியோபாத்ரா கொண்டதும் பொதுத்தொடர்பாகும். இதுபோன்றே அறிவிற்சிறந்த மன்னன் சாலமனுடன் அழகி ஷீபா அரசி கொண்டதும் பொதுத் தொடர்பாகும். இவற்றைக் குறிப்பிடுவதன்மூலம், எல்லாத் தனி நபர்களும், தனி நிறுவனங்களும் தாங்கள் விரும்பினாலும், விரும்பா விடினும், பிறர்மீது தங்களைப் பற்றிய ஓர் எண்ணத்தினை, கருத்தினை உருவாக்குகின்றனர் என்பது புலனாகின்றதல்லவா? மேலும், தன்னைப் பற்றிய இத்தகைய எண்ணத்தினை அல்லது கருத்தினைப் பிறர் ஏற்படுத்திக் கொள்வதைத் தடை செய்யும் உரிமையும் இத் தனி நபர்களுக்கும் நிறுவனங்களுக்கும் இல்லை என்பதும் குறிப்பிடப்பட வேண்டும். எனவே, தங்களைப் பற்றிய எண்ணத்தினைப் பிறர் எவ்வழியில் ஏற்படுத்திக் கொள்ள வேண்டும். என்பதனையும், அஃது எவ்வாறு அமைய வேண்டும் என்பதனையும் ஆராயமட்டுமே வாணிக நிறுவனங்களுக்கு உரிமை உண்டு.

வாணிக நிறுவனங்கள் இத்தகைய "பொதுக் கருத்தினை"ப் பொதுத் தொடர்பின்மூலம் உருவாக்க முயலும்போது சில நடைமுறைச் சிக்கல்கள் உருவாகலாம். எடுத்துக்காட்டாக, பொதுத் தொடர்பு என்ற சொல், விளம்பரம் (Advertising) பறைசாற்றுதல் (Publicity or Propaganda) என்று பொருள் கொள்ளுமாறு தோன்றுகின்றது. ஆனால், இவையனைத்தும் வெவ்வேறானவையே என்பதை முதலில் நாம் அறிந்துகொள்ள வேண்டும். குறிப்பிட்ட ஒரு செயலைச் செய்யுமாறு தூண்டுவதற்காக இடத்தையும், காலத்தையும் விலைக்கு வாங்குவதே 'விளம்பரம்' எனப்படுகின்றது. பறைசாற்றுதல் எனப்படுவது குறிப்பிட்ட ஒரு செயல் அல்லது பொருள் பற்றிய செய்திகளை, இடம், காலம் இவற்றினை விலைக்கு வாங்காமலே பிறருக்குத் தெரிவிப்பதாகும். பொதுத் தொடர்பு எனப்படுவது இவையனைத்தையும் குறிப்பிடுவதோடு திட்டமிட்ட, முறையான வழிகளில் இவற்றைச் செயலாக்குவதைக் குறிப்பிடுவதாகும்.

### நல்லதோர் பொதுத் தொடர்பின் இன்றியமையாமை

குறிப்பிட்ட ஒரு சந்தையில், குறிப்பிட்ட ஒரு பொருளினை விற்கும் உரிமையினைப் பொதுப் பயன் நிறுவனங்கள் பெறுகின்

* மார்டின் டி. பாரிஸ்—Martin T. Farris, 'Public Utilities' Chapter 15.

றன. எனவே, முற்றுரிமை பெற்ற நிறுவனங்கள் எனவும் இவற்றினைக் குறிப்பிடலாம். முற்றுரிமை பெறுவதால் இந் நிறுவனங்களுக்குக் கிடைக்கின்ற வசதிகளையும், வாய்ப்புகளையும், பெயரினையும், பெருமையினையும்விட, எதிர்நிலைக் கருத்துகளும், காழ்ப்புணர்ச்சியுமே அதிகமாகத் தோன்றுவது இயற்கை ஏனெனில், முற்றுரிமைபெற்ற நிறுவனங்கள் வாங்குநரைப்பற்றிச் சிறிதேனும் கவலைப்படாமல் "விருப்புடையோர் வாங்கலாம். இன்றேல் விட்டுச் செல்லலாம்" (Take it or leave it) என்ற முறையில் செயற்படுகின்றன என்பது பொதுவான கருத்து. எனவே, பிற நிறுவனங்களைக் காட்டிலும், பொதுப்பயன்தொழில் நிறுவனங்கள் தங்களுக்கு எதிரான இக் கருத்தினை மாற்றி அமைப்பதுடன், நல்லதோர் தொடர்பினைப் பொதுமக்களுடன் ஏற்படுத்திக்கொள்ளும் பணியினைச் சிரமேற்கொள்ள வேண்டிய சூழ்நிலை இஃது என்பது தெளிவாகின்றது.

இன்றைய வாணிகச் சூழ்நிலையில், பிற வாணிக நிறுவனங்களைப் போலவே, தனியார் மற்றும் பொதுத் துறைகளில் இயங்கி வருகின்ற பொதுப்பயன் தொழில்களும் நல்லதோர் பொதுத் தொடர்பினை ஏற்படுத்திக் கொள்வதன் இன்றியமையாமையை உணர்ந்துள்ளன. தொழில் நிறுவனங்கள் நல்ல பொருள்களை உற்பத்திசெய்வதுமட்டுமோ நல்ல பணிகளைச்செய்வது மட்டுமோ போதா. இந் நிறுவனங்கள், தாங்கள் செய்துள்ள நற்பணிகளை மக்களிடம் எடுத்துச் சொல்ல வேண்டும். பொதுவாகவே நற்பணியினைச் செய்யும் எந்த ஒரு நிறுவனமும், இயற்கையாகவே நற்பெயரினையும் புகழினையும் பெறுவதில்லை. இந் நிறுவனத்தின் தகுதி, மாட்சி இவைபற்றி அந் நிறுவனமோ பிறரோ பொதுமக்களுக்குப் பறைசாற்றுவதன்மூலமாகத்தான் வாணிக நற்பெயர் ஏற்படுகின்றது. நாள்தோறும் வாணிகக் கொள்கைகள் மாறி வருகின்றன என்பதனை அனைவரும் அறிவர். தனியார் நிறுவனம் வேண்டுமா அன்றி, ஒழுங்காற்றல்பெற்ற பொதுத்துறை நிறுவனம் வேண்டுமா என்ற விவாதம் அடிக்கடி எழும் இந் நாளில் தன் பணியினைச் செய்து வருவதால் மட்டுமே பொதுப்பயன் தொழில்கள் நற்பெயரினை ஈட்ட முடியாது. போட்டி நிறைந்த வாணிக உலகில் நிலைபெற்று நின்றிட வேண்டுமானால் பொதுப்பயன் நிறுவனங்களும் "பொதுத் தொடர்பினை" ஏற்படுத்திக் கொள்ளுதல் வேண்டும் என்ற கருத்தினை அனைவரும் ஏற்றுக் கொள்வர்.

**பொதுத் தொடர்பினை ஏற்படுத்திக் கொள்ளும் வழிகளும் முறைகளும்**

"பொதுத் தொடர்பினை" ஏற்படுத்த விழையும்போது அதற்கென ஒரு செயல் நிரல் (Programme) ஒன்றினைத் தயாரித்திட

வேண்டும். இவ்வாறு தயாரிக்கப்பட்ட செயல் நிரல், கோட்பாடு, கொள்கை, செய்திறன், பொதுமக்கள், திட்டமிடுதல், பறை சாற்றுதல் என்னும் ஆறுவகைக் கருத்துகளையும் அடிப்படையாகக் கொண்டதாக இருக்க வேண்டும். இதனை ஆங்கிலத்தில் " The Six P's of Public Relations" என்பர். அவை முறையே Philosophy, Policy, Performance, Public, Planning and Publicity எனப்படும். அவற்றினைச் சற்று ஆராய்தல் நலம் பயக்கும்.

### கோட்பாடு, கொள்கை மற்றும்செயல்திறன் (Philosophy, Policy and Preformance)

ஒரு வாணிக நிறுவனத்தின் நிருவாக அமைப்புச் சிறப்புற அமைவது இன்றியமையாதது. அதுபோன்றே, அந் நிறுவனத்தின் வாணிகக் கோட்பாடும் இன்றியமையாதது. "பொதுமக்களைப் புறக்கணிக்கும் கொள்கை" (Public be damned Policy) விடை பெற்றுச் சென்று பன்னாட்கள் ஆகிவிட்டன. இன்றைய சமுதாயத்தின் கண்ணோட்டத்தின்படி, வாணிக நிறுவனங்கள், திறமை வாய்ந்த உற்பத்தியாளர்களாகவும் "வாணிக நற்குடி மக்களாகவும்" பணிபுரிய வேண்டியுள்ளன. வாணிக நற்குடி மக்கள் (Good Business Citizens) என்போர் தகவுடைமை, செயல்திறன், செம்மையான மற்றும் நேர்மையான போக்கு இவற்றுடன், பொதுமக்களுக்குத் தொண்டாற்றும் மனப்பான்மை இவற்றையும் கொண்டவராக இருத்தல்வேண்டும். குறிப்பாக, ஒரு நிறுவனத்தின் மேலாண்மையராகத் திகழ்வோர் தங்களது நிறுவனத்தினைச் சார்ந்த பங்குதாரர்களையும் மற்றும் நிறுவனத்துடன் தொடர்பு கொண்ட நுகர்வோர், நிறுவனத்தின் பொருள்களை வழங்குநர், பணியாள்கள் சமுதாயத்தினைச் சார்ந்த பங்குதாரர்கள் மற்றும் சமுதாயத்திலுள்ள அனைவருடனும் நல்லதோர் தொடர்பினை ஏற்படுத்திக்கொள்ளவேண்டும். இதற்கான வழிமுறைகளையும், கோட்பாடுகளையும் தயாரிக்கவேண்டும். இக் கோட்பாடுகள் நடைமுறையில் செயற்படுத்தப்படாவிடில் பல னேதுமில்லை. எனவே, இத்தகைய கோட்பாடுகள் பலனளிக்க வேண்டுமெனில் அவற்றைச் செயற்படுத்தவேண்டும். இதற்குத் தேவை நல்லதோர் வாணிகக் கொள்கை. இக் கொள்கையை உருவாக்குவதோடு, அவற்றை அன்றைய சமுதாயத் தேவைக் கேற்றவாறு மாற்றி அமைத்துத்தரும் பணியினை மேலாண்மையர் ஏற்றுக்கொள்ளவேண்டும். எனவே, மேலாண்மையர், தங்களது நிறுவனத்தின்மூலம் மக்களுக்கு என்னென்ன சொல்ல, தெளிவு படுத்த விழைகின்றனரோ அவற்றைக் 'கோட்பாடுகள்' என்ற மூலப்பொருளெடுத்து, 'கொள்கை' என்னும் உயிர் கொடுத்து,

'செயல்முறை' என்னும் உருக்கொடுக்கவேண்டும் என்பது தெளிவாகின்றது.

**பொதுமக்களும் பொதுத்தொடர்பும்**

பொதுத்தொடர்பினை ஏற்படுத்திக்கொள்ள விழையும் எந்த ஒரு வாணிக நிறுவனமும் முதலில் தான் யாருடன் இத் தொடர்பினை ஏற்படுத்திக்கொள்ள விழைகின்றோம் என்பதைத் தீர்மானித்துக்கொள்ளவேண்டும். அநேகமாக எல்லா நிறுவனங்களும் பொதுமக்களுடன் தொடர்புகொள்ளவே விரும்புகின்றன. அப்படியானால், 'பொதுமக்கள்' என்பவர் யார்? சமுதாயத்தினுள்ள நுகர்வோர் மட்டுமே பொதுமக்கள் ஆவதில்லை. ஏனெனில், இவர்களுடைய ஒத்துழைப்பினைப் பெறுவதால் மட்டுமே வாணிக நிறுவனம் நிலைபெற்று விடுவதில்லை. மேன் மேலும் இந் நிறுவனம் வளர்ந்து தழைத்தோங்க வேண்டுமானால், இந் நிறுவனத்தின் மேம்பாட்டிற்கெனத் தங்களது உழைப்பினை நாள்தோறும் நல்கும் பணியாளர் மனம் மகிழ்வுறவேண்டும். "நிறுவனத்தின் வளர்ச்சி நமது வளர்ச்சியின் முதற்படி. எனவே, அதற்கென உழைப்பது நமது கடமை" என்று அவர்கள் எண்ணத் தலைப்படவேண்டும். இத்தகைய எண்ணம் கைகூட வேண்டுமாயின், பணியாளர்களின் ஒத்துழைப்பினைப் பெறவும் இந் நிறுவனம் நல்லதோர் 'பொதுத்தொடர்பினை' ஏற்படுத்திக் கொள்ளவேண்டும். மேலும், நிறுவனத்தின் தோற்றத்திலும், அதன் வளர்ச்சியிலும் அக்கறையும், ஆர்வமும் காட்டுகின்ற பங்குதாரர்களின் நன்மதிப்பினையும்பெறுதல் வேண்டும். இவரோடு, குறிப்பிட்ட நிறுவனத்தின் அலுவலகத்தில் பணிபுரிகின்ற அலுவலரின் அயரா உழைப்பும், நிறுவனத்தின் மேம்பாட்டிற்கு வழி வகுக்குமாகையால், அவர்களுடனும் இப் பொதுத்தொடர்பு நன்முறையில் அமையவேண்டும். அவ்வாறாயின், 'பொதுமக்கள்' என்னும் தலைப்பினுள், ஒரு நிறுவனத்துடன் நேரிடைத் தொடர்பு கொண்டுள்ள பணியாளர், அலுவலர் மற்றும் அதன் பங்குதாரர் ஆகியோரும் அடங்குவர் என்பது தெளிவாகின்றது.

அடுத்து, ஒரு நிறுவனம் நாள்தோறும் தனது வாணிகத்தை நடத்த வேண்டுமாயின், தனது மேலாண்மையர் குழு அல்லது இயக்குநரவையையும் மாறும் தனது பொருள்களின் தரத்தையும், விற்பனையளவையும் மட்டுமின்றித் தனது வாழ்வையும் தீர்மானிக்கின்ற நுகர்வோர் ஆகியோரையும், நிதிப் பற்றுக்குறை ஏற்படும்போது கடனுதவி வழங்குகின்ற நிதியுடையோர் ஆகியோரையும் தன்வயப்படுத்தி வைத்திருக்கவேண்டும். மேலும், ஒரு நிறுவனம் போட்டியின் காரணமாகத்தான், போட்டியின்

நடுவில்தான், தனது திறமையினையும் ஆற்றலையும் வளர்த்துக் கொள்வதன்மூலம் வளர முடியுமாதலால், தன்னோடு போட்டியிடுகின்ற ஏனைய நிறுவனங்கள் ஆகியோருடனும் பொதுத் தொடர்பினை ஏற்படுத்திக் கொள்ளவேண்டும்.

மூன்றாவதாக, இவ் வாணிக நிறுவனத்துடன் தொடர்பு கொண்டுள்ள அரசு, சமுதாயம், மற்றுமுள்ள வாணிகக் குழுக்கள் போன்றவற்றுடனும் பொதுத்தொடர்பு ஏற்படுத்திக்கொள்ளப் படவேண்டும். இம் மூவகைக் கருத்துகளையும் ஆராயும்போது, ஒரு நிறுவனம் எவரெவருடன் பொதுத்தொடர்பினை ஏற்படுத்திக் கொள்ள வேண்டுமென்ற வினவிற்கு உள்ளங்கை நெல்லிக்கனியென விடை கிடைக்கின்றது. அதாவது, எந்த ஒரு நிறுவனமாயினும், அதனுடைய பொதுத்தொடர்பு மூன்று வகைப் பிரிவினருடன் ஏற்படவேண்டும் என்பதாகும். அப் பிரிவினர் பின்வருவோராவர்:

(1) அகப் பிரிவினர் (Internal Group)

(2) இணைப் பிரிவினர் (Associate Group)

(3) புறப் பிரிவினர் (External Group)

இவர்களுள் மேற்கூறியபடி, ஒரு நிறுவனத்தின் மேலாண்மை அதிகாரிகள், பணியாளர்கள், அலுவலர் மற்றும் பங்குதாரர்கள் ஆகியோர் அகப் பிரிவினையும், கச்சாப் பொருள்கள், கருவிக் கலன்கள் போன்ற பொருள்களை வழங்குநர் (Suppliers), கடனீந்தோர், வாடகையர், போட்டி நிறுவனத்தார் ஆகியோர் இணைப் பிரிவினையும், அரசு, சமுதாயம் மற்றும் வாணிகக் குழுக்கள் ஆகியவை புறப் பிரிவினையும் சார்ந்தவராக எண்ணப் படுவர்.

பொதுத்தொடர்பு என்பது ஒரு மெல்லிய நூல் போன்றது. அதனை வலுப்படுத்த வேண்டிய முயற்சிகள் அனைத்தும் ஒரு வாணிக நிறுவனத்தாரால் எடுக்கப் பெறவேண்டும். மூவகைப் பிரிவினைச் சார்ந்த எவரேனும் ஒருவரையும் சற்றும் புறக்கணித்தலாகாது. பொருள்களை வாங்கிடும் நுகர்வோர் முதல், பொருளுதவி செய்யும் பங்குதாரர் வரை அனைவரையும், அவரவர்க்கு உரிய முறையில் அணுகுவதன்மூலம் பொதுத்தொடர்பு ஏற்படுத்தப்படவேண்டும்.

**திட்டமிடுதலும், பறைசாற்றுதலும் (Planning and Publicity)**

தீவிரமான ஆலோசனை, வெற்றிகரமான பொதுத்தொடர்பிற்கு வழிகோலும். பொருள்களை உற்பத்தி செய்தல், அவற்றை வழங்குதல், அவற்றை விற்பனை செய்தல் ஆகியவற்றிற்குத் திட்ட

மிடுவதுபோன்று, பொதுத்தொடர்பினை ஏற்படுத்துவதற்கும் சரியான திட்டம் தீட்டப்பெறவேண்டும். நல்லதோர் செயலையும், கருத்தினையும் நெடுநாள் நினைவில் வைக்காமல், தீய செயலையும், கருத்துகளையுமே பசுமை குன்றாது நினைவில் தக்கவைத்துக் கொள்வது மக்களின் இயல்பு. ஆதலால், அரைகுறையாகத் தீட்டப்பெற்ற திட்டத்தினால், பொதுத்தொடர்பு நன்முறையில் ஏற்படுவதைக் காட்டிலும், மாறான விளைவுகளே ஏற்பட்டுவிடலாம். எனவேதான், பொதுத்தொடர்பினை ஏற்படுத்த விழையும் எந்த ஒரு நிறுவனமும், தன்னுடைய கருத்து என்ன, தான் எதனைச் சொல்ல விழைகின்றது என்பவற்றை நன்கு சிந்தித்து, ஆராய்ந்த பின்னரே அவற்றைச் செயற்படுத்தவேண்டும்.

நன்றாகத் திட்டமிட்ட பின்னர், எவ்வகையில் பொதுத் தொடர்பினை ஏற்படுத்தப் போகிறோம் என்ற வினாவிற்கு விடை காணவேண்டும். அதாவது, பொதுத்தொடர்பிற்கான கருவியாக நாம் எதனைக் கையாளப் போகின்றோம் என்பதனைத் தீர்மானித்துக்கொள்ளவேண்டும். எழுத்துகள் மூலமாகவோ, ஒலிபெருக்கி மூலமாகவோ இவை இரண்டின் மூலமாகவோ பொது மக்களைத் தொடர்புகொள்ளமுடியும். சின்னஞ்சிறு தாள்களில் அச்சடித்த விளம்பரங்கள், சுவற்றில் ஒட்டக்கூடிய விளம்பரங்கள், 'பானர்' என்று சொல்லக்கூடிய பெரிய அளவு விளம்பரப் பலகைகள், துணிகளில் வண்ணத்தால் வரையப்பெற்றோ, அச்சடிக்கப்பட்டோ செய்யப்பட்ட விளம்பரங்கள், நாளிதழ் வார இதழ், மாதமிருமுறை வெளிவரும் இதழ், மாத இதழ் போன்ற பத்திரிகைகள் போன்றவற்றின் மூலமாகவும், திரையரங்குகள் மூலமாகவும், வாணிகத் திரைப்படங்கள் மூலமாகவும், பொருட்காட்சிகளில் அரங்கங்களை அமைப்பதன் மூலமாகவும், மாதிரிப் பொருள்களை (Samples) நுகர்வோரிடையே வழங்குவதன் மூலமாகவும் ஒரு நிறுவனம் பொதுமக்களுடன் தொடர்புகொள்ளமுடியும். இவை மட்டுமின்றி, தற்போது பல நிறுவனங்கள் "வினா-விடைப் புதிர்"களையும், "கண்டுபிடியுங்கள் பார்க்கலாம்" போட்டிகளையும் ஏற்படுத்துவதன்மூலம் தங்களது பொருள்களைப்பற்றிய விளம்பரத்தினைச் செய்து வருகின்றன. பலவிதப் பொருள்களை தங்களது அன்றாட வாழ்வில் வாங்கி மகிழும் நுகர்வோரும் பேரார்வத்துடன் இப் போட்டிகளில் பங்கு கொள்வதைக் காண்கிறோம். இத்தகைய போட்டிகள் நமது நாட்டில் நல்லதொரு விளம்பரச் சாதனமாக விளங்குகின்றன.

சான்றாக, போர்ஹான்ஸ் (Forhans) பற்பசைக் கம்பெனியார் ஏற்படுத்திய போட்டிகளில், மாநிலங்கள் வாரியாகப் பங்கு கொண்டவர்களைப்பற்றிய குறிப்பு ஒன்றினைக் காண்போம்;

| மாநிலத்தின் பெயர் | 10,000 நபர்களுக்குப் பங்கு கொண்டவர்களின் விழுக்காடு |
|---|---|
| டில்லி (யூனியன் எல்லை) | 7·25% |
| கோவா ( ,, ) | 2·90% |
| மேற்கு வங்காளம் | 2·43% |
| மகாராட்டிரம் | 2·09% |
| கேரளம் | 1·84% |
| தமிழ்நாடு | 1·46% |
| குஜராத் | 1·41% |
| கர்நாடகம் | 0·84% |
| ஆந்திரம் | 0·61% |
| ம. பி. | 0·50% |
| ஒரிசா | 0·35% |
| பீஹார் | 0·32% |
| பஞ்சாப் | 0·26% |
| இமாசலம் | 0·20% |
| ஜம்மு-காஷ்மீர் | 0·20% |

[ஆதாரம்: The Economic Times, dated 4 August 1974]

இத்தகைய போட்டிகளில் பெண்களைவிட ஆண்களே அதிகம் பங்கு கொள்வதும் தெரியவருகின்றது. அதாவது, நூற்றிற்கு 69 6% ஆண்களும், 30·4% பெண்களும் இவற்றில் பங்கு கொள்கின்றனர். மேலும், 21 முதல் 35 வயதுக்குட்பட்டவர்களே பெரும்பான்மையில் பங்கு கொள்வதும் புலப்படுகின்றது. இப்போட்டிகளின்மூலம், நல்லதொரு விளம்பரத்தினை மட்டும் பெற்றிடாது படித்தோர், பாமரர், செல்வர், வறியர் இந் நிறுவனத்தின் பொருள்களை நுகர்வோர்—இதனை ஒருபோதும் நுகர்ந்திடாதோர் ஆகிய அனைவருமே, இந் நிறுவனத்தைப்பற்றியும், இந் நிறுவனம் தயாரித்தளிக்கின்ற பொருள்களைப்பற்றியும் அறிய முன்வருகின்றனர். இதுவே, பொதுத்தொடர்பின் முதற்படி அல்லது, பொதுத்தொடர்பினை ஏற்படுத்த எடுக்கப்பட்ட முயற்சியின் முதல் வெற்றி எனக் கொள்ளலாம். இதன் விளைவாக, அதிக அளவில் பொருள்களுக்கான தேவை அதிகரித்து. அதன்

பலகை விற்பனை அதிகரிக்குமேயானால், அஃது இரண்டாவது வெற்றியாகும். இவ்வாறு படிப்படியாகத் பொதுத்தொடர்பினை ஏற்படுத்திக்கொள்ளும் நிறுவனமே திறமை வாய்ந்த நிறுவன மாகக் கருதப்படுகின்றது.

**பொதுத்தொடர்பும் ஒழுங்காற்றுக் குழுக்களும்** (Public Relations and Regulatary Commissions)

பொதுப்பயன் தொழில்கள் நல்ல முறையில் இயங்கி வரு கின்றனவா என்பதைக் கண்காணிக்கவும், அவற்றின் கட்டண விகிதங்களை ஒழுங்குபடுத்தவும், அவை எவ்விதத் தடையும், மற்றும் வேறுபாடுமின்றிப் பொதுமக்களுக்குத் தொண்டுபுரி கின்றனவா என்பதைக் கண்காணிக்கவும், தேவைப்படும்போது இப் பொதுப்பயன் தொழில்களுக்கு வேண்டிய ஆய்வுரை களையும், அறிவுரைகளையும் வழங்கவும், 'ஒழுங்காற்றுக் குழுக்கள்' அரசினரால் அமைக்கப்படுகின்றன. இக் குழுக்கள் பெரும் பாலும், அமெரிக்க ஐக்கிய நாட்டில் (U.S.A.) தோன்றி, தழைத் தோங்கியுள்ளன. நம் நாட்டினைப் பொறுத்தமட்டில் அரசினரே பற்பல வாரியங்களை (Boards) அமைத்து, இப் பொதுப்பயன் தொழில் நிறுவனங்களை மேற்பார்வையிட்டு வருகின்றனர்.

இனி, பொதுத்தொடர்பினை ஏற்படுத்திக்கொள்ள விழை யும் ஒரு நிறுவனம், இவ்வொழுங்காற்றுக் குழுக்களிடமோ அரசினிடமோ எந்த முறையில் அல்லது எந்த வகையில் நடந்து கொள்ளவேண்டுமென்று பார்ப்போம். பொதுப்பயன் நிறுவனம் ஒன்று விதிக்கக்கூடிய கட்டணம் சிறிது அதிகமாக இருக் கின்றது என்று பொதுமக்களாலோ அரசினாலோ கருதப்பட் டால், அரசு இதற்கு ஆவன செய்யக் கடமைப்பட்டுள்ளது. பொதுநல ஈடுபாட்டுடன் (Public Interest) விளங்கவேண்டிய இந் நிறுவனம் பொதுமக்களின் எண்ணத்தில் எதிர்நிலைக் கருத் தினை உண்டாக்குமேயானால் அது நன்மை தாராது. எனவே, அரசும் நேரிடையாகவோ ஒழுங்காற்றுக் குழுக்களின் மூலமா கவோ தக்க நடவடிக்கை எடுக்க முயலும். சான்றாக, உயர்த்தப் பட்ட அல்லது அதிகமானது என்று கருதப்பட்ட கட்டணம் சிறிது குறைக்கப்படலாம். உண்மையில், இக் கட்டணத்தைப் பொது மக்களிடமிருந்து வசூலிப்பதன்மூலம் செயல்முறைச் செலவு களைச் சரிக்கட்ட இயலாமலும், பொதுப்பயன் நிறுவனம் ஒன்று அவதியுறலாம். இருப்பினும், அரசும் எடுத்துள்ள நடவடிக் கைக்கு எதிரான நடவடிக்கைகளில் இறங்குவதோ வெளிப் படையாகத் தனது மனநிறைவின்மையைத் தெரிவிப்பதோ கூடாது. இதுபோன்றே, ஒரு நிறுவனத்திற்கு அளிக்கப்பட்ட

சில சிறப்புச் சலுகைகள் பொதுமக்களுக்கு எதிராகப் பயன் படுத்தப்படுகின்றன என்று அரசும் எண்ணத் தலைப்படுமே யானால், அவ்வகைச் சிறப்புரிமைகளையும், சிறப்புச் சலுகைகளை யும் மாற்றி அமைத்திடவும் அன்றி, ஒரு சில சலுகைகளை நீக்கிட வும் அரசிற்கு முழு உரிமையும் அதிகாரமும் உண்டு.

மேற்கூறிய அரசின் அல்லது ஒழுங்காற்றுக் குழுக்களின் நடவடிக்கைகள், சில நேரங்களில் பொதுப்பயன் தொழில் நிறு வனங்களின் தொழிலமைப்பினையும், இலாபமீட்டும் தன்மை யினையும் பெருமளவில் பாதிக்கலாம். இருப்பினும், பாதிக்கப் பட்ட நிறுவனம், இத்தகைய தீர்ப்புகளை எதிர்க்கும் வகையில், நீதிமன்றத்தில் அரசு அல்லது ஒழுங்காற்றுக் குழுவுக்கு எதி ராகவோ வழக்குத் தொடரலாகாது. வழக்காட முனையும் எந்த ஒரு நிறுவனமும், தனது மதிப்பினைச் சமுதாயத்திலும், அரசினி டத்திலும் இழந்துகொண்டே போகுமென்பதில் ஐயமேதுமில்லை. அந் நிலையில், ஏற்கெனவே, நாட்டில் வாணிக நற்பெயரும் கெடுவ தோடு, பல புதிய தொல்லைகளும் உருவாகலாம். எனவே, பொதுத்தொடர்பினை ஏற்படுத்திக்கொள்ள விழையும் எந்த ஒரு நிறுவனமும், இத்தகைய எதிர் நடவடிக்கைகளில் இறங்குதல் கூடாது என்பது விளங்குகின்றதல்லவா ?

இனி, அரசுடன் பொதுத்தொடர்பினை ஏற்படுத்திக்கொள் ளும்போது கடைப்பிடிக்கவேண்டிய மற்றொரு நடைமுறை விதி யினையும் இங்கு ஆராய்வோம். மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பதிலாள்களே, அரசின் அமைக்கும் பணியினையும், அரசு என்னும் ஓர் அமைப்பின்மூலம் நாட்டினை ஆளுகின்ற உரிமை யினையும் ஏற்றுள்ளனர். எனவே, அரசின் உட்பிரிவுகளான உள்ளூராட்சி மன்றங்கள், சட்டமன்றங்கள் மற்றும் பாராளு மன்றங்கள் இவற்றினைச் சார்ந்த மக்கள் பிரதிநிதிகளைத் தம் வயப்படுத்திக்கொண்டால் அரசின் ஆதரவினை எளிதாகப் பெற்றுவிடலாம் என்ற கருத்தினைத் தனியார் துறையில் இயங்கு கின்ற பொதுப்பயன் தொழில் நிறுவனங்கள் ஏற்கலாம். இதனைச் செயலாற்றும் பொருட்டு, சட்டமன்ற மற்றும் பாராளு மன்ற உறுப்பினர்களின் "மகிழ்ச்சியினையும்", "அன்பினையும்", "மனநிறைவினையும்" பெறும்பொருட்டு, கையூட்டு (இலஞ்சம்) கொடுத்தல் போன்ற முறையற்ற செயல்களில் இறங்கத் தலைப்பட லாம். இது சட்ட விரோதமான செயல் என்பது சொல்லாமலே விளங்கும். அது மட்டுமின்றி, இத்தகைய செயல்களில் இறங்கத் தலைப்பட்ட பொதுப்பயன் தொழில் நிறுவனம் ஒன்றினைப்பற்றிய 'கருத்தும்' மிகவும் மோசமானதாகவே அமையும் என்பதில்

எள்ளளவும் ஐயமில்லை. மேலும், ஒருமுறை இத்தகைய செயலில் ஈடுபட்டு, தற்செயலாக வெற்றியும் கண்டுவிட்ட நிறுவனம், பாலுண்ட பூனையின் ருசி கொண்டு, பின்னாளில் மீண்டும் மீண்டும் இதுபோன்ற முயற்சிகளில் ஈடுபட முனையும். இது நிறுவனத்தின் பெயரினைக் கெடுப்பதோடு மட்டுமின்றி, அதனது வாழ்நாளிற்கும் உலைவைக்கக்கூடியதாகும். எனவே, அரசுடன் பொதுத்தொடர்பினை ஏற்படுத்திக்கொள்ள விரும்பும் பொதுப்பயன் தொழில்கள், அவை தனியார் துறையினைச் சார்ந்ததாயினும் சரி அன்றி, அரசுத்துறையினைச் சார்ந்ததாயினும் சரி, மிகவும் எச்சரிக்கையுடனும், முறையற்ற செயல்களில் இறங்காத வகையிலும் செயற்படவேண்டும்.

**பொதுத்தொடர்பினை ஏற்படுத்துதலும், அதனை நிருவகிக்கும் அமைப்பும்**

தொழில் நிறுவனங்களனைத்தும், குறிப்பாக, பொதுப்பயன் தொழில் நிறுவனங்களனைத்தும், தங்களது வாடிக்கையர், தங்களிடம் பணிபுரிவோர், சமுதாயத்திலுள்ள பிற வகையினர், தங்களுக்குக் கடனுதவி வழங்கும் வங்கியர் போன்றோருடனும், அரசுடனும் நல்லதொரு பொதுத்தொடர்பினை ஏற்படுத்திக் கொள்ளவேண்டும் என்றும், அத் தொடர்பு எவ்வழிகளில் ஏற்படுத்தப்படலாமென்றும் கண்டறிந்தோம். இனி, இத்தகைய பொதுத்தொடர்பினை ஏற்படுத்தும் பொறுப்புத் தொழில் நிறுவனங்களில் எவரிடம், எவ்வாறு ஒப்படைக்கப்படுகின்றது என்பதை ஆராய்வோம்.

தொழில் நிறுவனம் ஒன்றில் பணிபுரியும் இயக்குநர்கள் பலருக்கும் பலவித அலுவல்கள் பிரித்துத் தரப்பட்டிருக்கலாம். சில நேரங்களில், ஓர் இயக்குநரிடம் பலவித அலுவல்களும் தரப்படலாம். எனவே, ஆள்களை நியமித்தல், பணியாள்சார் அலுவல்களைக் கவனித்தல், நிறுவனத்தின் பொருள்களைச்சந்தையிலிடுதல், விற்பனையை அதிகரிக்க ஆவன செய்தல், பொருள்களுக்கான விளம்பரம் செய்தல் ஆகிய பலவித அலுவல்களோடு 'பொதுத் தொடர்பினை' ஏற்படுத்தும் பணியும் ஒரே ஓர் இயக்குநரிடமே தரப்படலாம். பெரும்பாலும் இத்தகைய ஏற்பாடே பலவித நிறுவனங்ளிலும் காணப்படுகின்றது. எனினும், சில நிறுவனங்களில், பொதுத்தொடர்பினை ஏற்படுவதன் இன்றியமையாமையை உணர்ந்து, இதற்கெனத் தனியாகவே ஓர் இயக்குநரை அமர்த்தியிருப்பதையும் காணலாம். ஒரு நிறுவனத்தின் பணிநிலை, அந் நிறுவனத்தின் அமைப்பு, அதன் இயங்கும் இடம், உற்பத்தி செய்கின்ற பொருள், அந் நிறுவனத்தை நிருவகிப்போரின் திறமை

போன்ற பல்வேறு செய்திகள், மற்றொரு நிறுவனத்தை ஒத்திருக்கலாம். அல்லாமல் மாறுபட்டுமிருக்கலாம். எனவே, பொதுத்தொடர்பினை ஏற்படுத்தும் பொறுப்பு, நிறுவனத்திற்கு நிறுவனம் மாறுபடுகின்றது என்று தெரியவருகின்றது.

**பொதுத்தொடர்பினை அமைக்கும் பணியாளர்**

ஒரு நிறுவனத்தின் மேல்மட்டத்திலுள்ள 'பொறுப்புவாய்ந்த அதிகாரிகளே, பொதுத்தொடர்பினை ஏற்படுத்தும் (அல்லது அமைக்கும்) பணியினை ஏற்றுக்கொள்ளவேண்டும். ஏனெனில், இவர்களுக்கெனப்பலவிதமான அதிகாரங்கள் வழங்கப்பட்டிருக்குமாகையால், அவற்றைப் பயன்படுத்தி, 'பொதுத்தொடர்பு' என்னும் உறவினை வெற்றிகரமாக ஏற்படுத்தமுடியும். பொதுவாகவே, பொதுத்தொடர்பினை ஏற்படுத்தும் அதிகாரிகளிடம் முதலில் ஒருவரோடொருவர் நல்லதோர் தொடர்பு காணப்படவேண்டும். சான்றாக, பின்வரும் அமைப்பினைக் காண்போம்:




இவ்வமைப்பில், நிறுவனத்தின் பொதுத்தொடர்பு எத்தகையதாக இருக்கவேண்டும், அதற்கான வழிமுறைகள் என்னென்ன என்பனபோன்ற பலவிதக் கருத்துகளைத் தங்களுக்குள் கலந்தாலோசித்து, சில வகைத் திட்டங்களைத் தீட்டும் பணியினை நிருவாக மேலாண்மையர் ஏற்றுக்கொள்கின்றனர். பின்னர், இவர்களிடமிருந்து வருகின்ற திட்டங்களுக்கு உருக்கொடுத்து, உயிர்க்கொடுத்து, அதனை நிறைவேற்றும் பொறுப்பினைப் பொதுத்தொடர்பு அதிகாரிகள் ஏற்றுக்கொள்கின்றனர். இந்த அதிகாரிகள், தங்களுக்குக் கீழே பணிபுரிகின்ற மேலாளர்களின் உதவிபெற்று இப் பொதுத்தொடர்பினை ஏற்படுத்தும் பணியினைச் செயலாற்றுகின்றனர். இதுவே, ஒரு நிறுவனத்தின் பொதுத்தொடர்பினை ஏற்படுத்துவதற்காக அமைக்கப்பெற்ற 'நிருவாக அமைப்பாகும்.'

மேற்கூறும் கருத்துகளை ஒழுங்குநோக்கின் பொதுத் தொடர்பு என்பது வாணிக நிறுவனங்களுக்குத் தேவையான, இன்றியமையாத ஒரு கருவி என்பதும், இக் கருவியினைக் கையாளுவதன் மூலம்தான், ஒரு நிறுவனம், வாடிக்கையாளர் மற்றும் சமுதாயத்திடையே அறிமுகமாவதும், ஏற்கெனவே அறிமுகமான நிறுவனங்கள் நிலைபெற்று நிற்பதும் இயல்பாகின்றது என்ற உண்மை விளங்கும். வாணிகம் தழைக்கவேண்டுமாயின், இப் பொதுத் தொடர்பு என்ற உறவு தழைத்தோங்க வேண்டும். ஒரு நிறுவனத்திலுள்ள அனைத்துப் பணியாளர்களும் அதிகாரிகளும் மற்றும் உரிமையாளர்களும் இதற்கெனப் பாடுபடக் கடமைப்பட்டுள்ளனர்.

## கருத்துக்கோப்பு

பொதுத்தொடர்பு – சொல்லின் இலக்கணம் — இன்றியமையாமை— ஏற்படுத்தும் விதம் — நிருவாக அமைப்பு.

# திறனாய்வுப் பகுதி

**திறனாய்வு செய்யப்பட்ட பொதுப்பயன் தொழில் நிறுவனங்கள்**

ஏட்டிலே படிக்கும் கருத்து எதுவாயினும், அதனைச் செயல் முறையில் பார்க்கும்போதுதான், உண்மைநிலை வெளிப்படு கின்றது. பொதுப்பயன் தொழில்கள் பலவற்றின் அமைப்புப் பற்றியும், அவற்றைத் தோற்றுவிக்கும் முறை பற்றியும், இத் தொழில்களின் கட்டண அடிப்படை, கட்டண வீதம், வருவாய் வீதம் ஆகியவற்றைப் பற்றியும் விரிவாக ஆராய்ந்தபின், இந் நிறுவனங்களின் விலைக் கொள்கைபற்றியும் ஆராயப்பட்டது. பொதுநல ஈடுபாட்டுடன் பணிபுரிகின்ற இப் பொதுப்பயன் தொழில்கள் இன்று நமது சமுதாயத்தில் பல தோன்றிவிட்டன. போக்குவரத்து வசதியினை அளிக்கவும், ஒருவர் மற்றொருவருடன் தொடர்புகொள்ளும் வசதியினை அளிக்கவும், இல்லங்களும், சாலை களும், மாடமாளிகைகளும், வணிக நிறுவனங்களும் ஒளிமயமாய்த் திகழவும், தொழிற்கூடங்களில் இயந்திரங்களை இயங்கச் செய்ய, மின் திறனை அளிக்கவும், பல நிறுவனங்கள் தோன்றியுள்ளன. அவையனைத்தைப் பற்றியும் விரிவாக அறிந்துகொள்வதென்பது இயலாத செயலாகும். எனவே, ஒவ்வொரு பொதுப்பயன் தொழில் வகையிலும் குறிப்பிட்ட ஒரு நிறுவனத்தை மட்டும், சான்றாக எடுத்துக்கொண்டு, அதனுடைய இயக்கநிலைப்பற்றி ஆராய்தல் நன்மை பயக்கும். இதனையே திறனாய்வு செய்யப் பட்ட நிறுவனம் என்று குறிப்பிடுகின்றோம். அவ்வகையில், இதோ சில நிறுவனங்கள் ;

## சென்னை தொலைபேசி நிறுவனம்
## (Madras Telephones)

இன்றையதினம் தொலைபேசிக் கருவிகளின் உதவியின்றி அன்றாட வாழ்க்கையை நடத்த இயலாதென்ற உண்மையை நாம் அனைவரும் ஒப்புக்கொள்கிறோம். வாணிக வளர்ச்சிக்கும்,

வர்த்தக உறவிற்கும், தோழமை நெருக்கத்திற்கும், கலாசார வளர்ச்சிக்கும், அபாய அழைப்பிற்கும், இன்னபிறவற்றிற்கும் தொலைபேசி என்ற உற்ற நண்பனின் துணையை நாடவேண்டியுள்ளது. தொலைபேசிமூலம் ஒருவர் மற்றொருவருடன் தொடர்பு கொள்ளும் இவ் வசதியை ஏற்படுத்தித் தர நாடெங்கிலும் ஏராளமான தொலைபேசி நிறுவனங்கள் இயங்கி வருகின்றன. தொலைபேசி வசதிகளை நன்முறையில் அளிப்பதற்காக நாட்டின் பல பகுதிகள் தொலைபேசி வட்டாரங்களாகப் (Telephone Zones) பிரிக்கப்பட்டுள்ளன. அவற்றுள், சென்னை வட்டாரத்திலுள்ள எல்லாத் தொலைபேசி நிறுவனங்களும் பல்வகையான வசதிகளை அளிக்கின்றன. அவைபற்றி விரிவாக இங்கு ஆராய்வோம்:

**தொலைபேசி இணைப்பு**

இக் கருவியின் இன்றியமையாமை நாளுக்குநாள் அதிக அளவில் உணரப்பட்டு வருகின்றதென்பதற்குச் சான்றாக, இதற்காக விண்ணபித்துள்ள நபர்களின் எண்ணிக்கையே விளங்குகின்றது. விண்ணப்பிக்கும் அனைவருக்கும் தொலைபேசி வசதியினை அளிப்பதற்குத் தடை ஏதுமில்லை என்றாலும், அனைவருக்கும் வெகு விரைவில் இணைப்புகளை ஏற்படுத்தித் தர இயலாது. ஏனெனில், தொலைபேசிக் கம்பிகள் செல்லும் கம்பங்களை நிறுவுதற்கும், இக் கம்பங்களிலிருந்து வாடிக்கையாளர்களின் இருப்பிடங்களுக்கு இணைப்புகளை ஏற்படுத்தித் தருவதற்கும் அதிக காலம் பிடிக்கும். எனவே, ஒரு வருடத்திற்குக் குறிப்பிட்ட எண்ணிக்கை அளவுக்குமட்டுமே இணைப்புகள் வழங்கப்படுமென்ற கொள்கை நிலவி வருகின்றது. இருப்பினும், தொலைபேசி இணைப்பு வேண்டுமென்று விண்ணப்பிப்போரின் தேவையின் இன்றியமையாமையை உணர்ந்து அதற்கேற்ப விரைவில் இணைப்பு ஏற்படுத்திக் கொடுக்கப்படும். எடுத்துக்காட்டாக,

1. மருத்துவர்கள்
2. சமுதாயத்தில் முக்கியப் பங்கு வகிப்போர்
3. பொது நிறுவனங்கள்
4. செய்தி நிறுவனங்கள்
5. சிறுதொழில் நிறுவனங்கள்
6. விவசாயப் பண்ணைகள்

போன்றோர் முதன்மைப் பிரிவினராகக் கருதப்படுவர். ஏனையோர் 'பொதுப் பிரிவினரைச்' சார்ந்தவராகக் கருதப்படுவர்.

**நிரந்தர இணைப்பு**

நிரந்தரமான இணைப்பு வேண்டுமென்போர் இதற்கான விண்ணப்பப் பாரத்தினை கேஷ் கவுண்டர், தொலைபேசி நிறுவனம் (Telephone House) சென்னை - 1 என்ற முகவரியிலிருந்து பெற்று, அதனைப் பூர்த்தி செய்து அனுப்பவேண்டும். நிரந்தரமான இணைப்பு முறையில் வழங்கப்படும் தொலைபேசிகள் O.Y.T. (Own Your Telephones) தொலைபேசிகள் எனப்படும். இவற்றைப் பெறுவதற்கு ரூ. 3000 காப்புத்தொகையாகவும், மூன்று திங்களுக்கு ஒருமுறை கட்டவேண்டிய வாடகைக் கட்டணத்தில் ரூ. 36 குறைவாகவும், கட்டவேண்டும். இருபது வருட காலத்திற்கு இத் தொகை சரிசெய்யப்படும்.

**தற்காலிக இணைப்பு**

தற்காலிக இணைப்புகள் மிகக் குறைந்த காலத்திற்கு அளிக்கப்படும். இவை இருவகைப்படும்.

(1) உடல்நலம் சரியில்லாதோர் ஒரு குடும்பத்தில் இருந்தால் உடனடியாக மருத்துவ உதவித் தேவைப்படலாம். இதற்கெனத் தொலைபேசி இணைப்புத் தேவைப்பட்டால் தற்காலிக இணைப்பு வழங்கப்படும்.

(2) இவற்றைத் தவிர, சமுதாய, மத சம்பந்தப்பட்ட நிகழ்ச்சிகளுக்கும், திருமண நிகழ்ச்சிகளுக்கும், கண்காட்சி நடைபெறும் இடங்களுக்கும் 60 நாள்களுக்கு மிகாத காலத்திற்குத் தற்காலிக இணைப்பு வழங்கப்படும்.

**கட்டணங்கள்**

தொலைபேசி இணைப்புகளை அளித்த பின்னர், அதற்கான துவக்க வைப்புத் தொகை (Initial Deposits), இணைப்புகளை நிறுவுவதற்காகும் செலவு (Installation charges), மாதந்தோறும் கட்டவேண்டிய வாடகை போன்றவை இணைப்புகளுக்கேற்ற மாறுபடும். அவற்றைப்பற்றி விரிவாகக் கீழே காண்போம்;

**நேரடித் தொடர்பு வழிகள்**

| இணைப்புவகை | காப்புத்தொகை | நிறுவுதற்செலவு | காலாண்டுக்கான வாடகை | ஒவ்வொரு அழைப்பிற்கான கட்டணம் | காலாண்டுக்கான இலவச அழைப்புகள் |
|---|---|---|---|---|---|
| O. Y. T. (நடப்பு) | 3,000 | 50 | 64 | 20 | 250 |
| சிறப்பு மற்றும் பொதுவகை | 400 | 50 | 100 | 20 | 250 |
| தற்காலிக இணைப்புகள் | 100 | 50 | 200 | 20 | 250 |
| இயல்பான (Casual) இணைப்புகள் | | | | | |
| 1—10 நாள்கள் | 100 | 30 | 60 | 20 | 50 |
| 11—30 நாள்கள் | 30 | 30 | 120 | 20 | 50 |
| 31—60 நாள்கள் | 30 | 30 | 180 | 20 | 100 |

இதனைத் தவிர, அலுவலரால் இயக்கப்படுவதும், தானியக்க முறையில் இயங்குவதுமான தொடர்பு முறைகளுக்கெனத் தனிக் கட்டணங்கள் வசூலிக்கப்படுகின்றன. ஏற்கெனவே, குறிப்பிட்டபடி, நிலத்திற்கடியில் செல்லுகின்ற இணைப்புக் கம்பிகளின் (cables) பற்றாக்குறையின் காரணமாகவும், அவை கிடைக்கும் போது அவற்றை நிறுவுதலில் ஆகக்கூடிய காலதாமதத்தின் காரணமாகவும் உடனுக்குடன் பல விண்ணப்பதாரர்களுக்குத் தொலைபேசி இணைப்புகளை வழங்க இயலவில்லை. இவர்கள் 'காத்திருப்போர் பட்டியலில்' (Waiting List) சேர்க்கப்பட்டு, முறைப்படி இணைப்பு வழங்கப்படுவர். 1974ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் 28ஆம் நாள் வரை, சென்னையைச் சார்ந்த 19 தொலைபேசி வட்டாரங்களின் இணைப்புத் தகுதி 63,500 ஆக இருந்தது. ஆனால், 56,199 இணைப்புகளே இந் நாள்வரை அளிக்கப்பட்டிருந்தன. எனவே, எஞ்சியுள்ளவை O.Y.T. பிரிவில் 92 விண்ணப்பங்களும், O.Y.T. அல்லாத விசேடப் பிரிவில் 125 விண்ணப்பங்களும், பொதுப் பிரிவில் 11,758 விண்ணங்களும், 'காத்திருப்போர் பட்டியலில்' வைக்கப்பட்டிருந்தன.

**தனியார் மற்றும் பொதுத் தொலைபேசி அலுவலகங்கள்**
(Private & Public call offices)

இவை ஆங்கிலத்தில் சுருக்கமாக P.P.C.O. எனக் குறிக்கப் படும்.

**தொலைபேசிக் கருவியின்மீதான உரிமை மாற்றம்**

குறிப்பிட்ட ஒரு நபரின் பெயரால் அளிக்கப்பட்ட தொலை பேசிக் கருவி, அந்த நபரால் மட்டுமே பயன்படுத்தப்பட வேண்டும். இவரைத் தவிர, அனுமதிக்கப்படாத எவராலும் இதற்கான உரிமையை நிலைநாட்ட முடியாது. இருப்பினும், சில நேரங்களில், ஒருவர் பெயரிலுள்ள தொலைபேசி இணைப்பு மற்றொருவர் பெயருக்கு மாற்றித் தரப்படும். இதற்கான கட்டண மாக ரூ. 50 மட்டுமே வசூலிக்கப்படும்.

**கட்டணப் பட்டியல்கள்**

தொலைபேசி வசதி அளிக்கப்படுவதற்குக் கட்டணமாகக் குறிப்பிட்ட தொகை வசூலிக்கப்படுமென்று ஏற்கெனவே கூறப் பட்டது. இவ்வாறு ஒரு வாடிக்கையாளர் தொலைபேசி நிறு வனத்திற்குக் கட்டவேண்டிய கட்டணத் தொகை ஒரு பட்டியல் முறையில் மூன்று மாதத்திற்கு ஒருமுறை தயார் செய்து அனுப் பப்படும். இக் கட்டணப் பட்டியல் கிடைத்ததும், தாமதமேது மின்றி, வாடிக்கையாளர் தாம் கட்டவேண்டிய கட்டணத் தொகை முழுவதையும், இதற்கென அங்கீகரிக்கப்பட்ட அலுவல கங்களில் கட்டவேண்டும். குறிப்பிட்ட நாள் கடந்த பின்னர், தாமதமாகக் கட்டுவோர் உடனடியாகத் தொலை நிறுவனத்துடன் தொடர்பு கொண்டு, இவ்விவரத்தைத் தெரிவிக்கவேண்டும். அவ்வாறு தெரிவிக்காவிட்டால் கட்டணம் செலுத்தப்படவில்லை என்று எண்ணிக்கொண்டு தொலைபேசி இணைப்பைத் துண்டித்து விடும்படியான நிலை உருவாகும்.

**பல்வகைச் சிறப்பு வசதிகள்**

சென்னைத் தொலைபேசி நிறுவனத்தால் பொதுமக்களுக்கு அளிக்கப்படும் பல்வகைச் சிறப்பு வசதிகளை ஈண்டுப் பார்ப்போம்.

(1) உள்ளூர் உதவிகள் : குறிப்பிட்ட ஓர் எண்ணுடன் வெகு நேரமாக இணைப்பு கிடைக்கவில்லையென்றாலும், (2) அவசர உதவி தேவைப்பட்டாலும் 'உள்ளூர் உதவியைப்' பெற்றுக் கொள்ளலாம். இதற்காகத் தொலைபேசி 199 என்ற எண்ணுக்குத் தெரிவிக்கவேண்டும்.

**பழுதுபார்க்கும் வசதிகள்**

நாம் கையாளுகின்ற தொலைபேசிக் கருவி பழுதுபட்டால் உடனே 198 என்ற எண்ணுக்குத் தெரிவிக்கவேண்டும். தகவல் பெற்றவுடன் தொலைபேசி அலுவலகத்திலிருந்து தொழில் நுட்பக்கலைஞர் விரைந்துவந்து சரிசெய்வர்.

**வைகறைத் துயிலெழுப்பல்**

பொழுது புலர்ந்ததும், ஒருவர் போகவேண்டிய இடங்கள் பலவும், செய்யவேண்டிய செயல்கள் பலவும் இருக்கலாம். ஆனால், வைகறைப் பொழுதோடு எழுந்தால்தான் இச் செயல்களைச் செவ்வனே செய்யமுடியும். உறக்கத்திலிருந்து இந் நபரை எழுப்ப உற்ற நண்பனாக தொலைபேசி நிறுவனம் உதவுகின்றது. குறிப்பிட்ட ஓர் எண்ணுக்கு (173) எப்போது எழுப்பவேண்டும் என்றோ, எப்போது நமக்கு நமது செயலை நினைவூட்ட வேண்டும் (Reminder) என்றோ, முன்கூட்டியே தெரிவித்தால், வினாடிகூடப் பிசகாமல் நமக்குத் தொலைபேசி நிறுவனத்திடமிருந்து அழைப்பு வரும். இவ்வழைப்பைப் பெற்றதும் மீண்டும் நினைவுபெற்றவராக, நாம் நமது கடமையைச் செவ்வனே தொடரலாம். இவ்வழைப்பைப் பெறவேண்டுமாயின் சில விதிகள் கடைப்பிடிக்கப்படவேண்டும். முதலாவதாக, தொலைபேசி சொந்தமாக வைத்திருப்போரிடமிருந்துதான் இதற்கான வேண்கோள்கள் பதிவு செய்யப்படும். இரண்டாவதாக, தொலைபேசி இருக்குமிடத்திற்குத்தான் இவ்வழைப்புகள் விடுக்கப்படும். மூன்றாவதாக, இவ்வாறு விடுக்கப்படும் ஒவ்வொரு அழைப்பிற்கும் சாதாரண அழைப்பிற்கு விதிக்கப்படும் கட்டணத்தைப்போல் இரண்டு மடங்கு விதிக்கப்படும். இறுதியாக, இந்த அழைப்பினைப் பெற விரும்பும் நாள் ஏழு நாள்களுக்குட்பட்டே இருக்க வேண்டும்.

**காலம் அறிவிப்போன்**

ஒருவர் நேரம் என்னவென்பதை அறிய விரும்பினால் தொலைபேசி நிறுவனத்தை வினவ, அவர்கள் 174 என்ற எண்ணிலிருந்து ஆங்கிலத்திலும், 175 என்ற எண்ணிலிருந்து தமிழிலும் நேரம் என்னவாகின்றதென துல்லியமாகத் தெரிவிப்பார்கள். இவ்வாறு காலம் காட்டுவோனாக விளங்கும் தொலைபேசி நிறுவனத்தின் சேவை மிகவும் போற்றற்குரியது!

**சிறப்புக் குறிப்புகள்**

சென்னைத் தொலைபேசி நிறுவனத்தின் 176 என்ற எண்ணிற்குத் தொடர்புகொண்டால், கீழ்க்காணும் சிறப்புக் குறிப்புகள் தரப்படும் :

(1) என்னென்ன திரைப்படங்கள் எந்தெந்தத் திரையரங்கில் நடைபெறுகின்றன.

(2) நடக்க இருக்கின்ற அல்லது நடைபெற்றுக்கொண்டிருக்கின்ற விளையாட்டுப் போட்டிகள்.

(3) வெளிவந்துள்ள தேர்வு முடிவுகள்.

(4) தபால், தந்திக் கட்டணங்கள்.

(5) எந்தெந்த உல்லாச இடங்கள் காணத்தக்கவை.

(6) புறப்படவிருக்கின்ற புகைவண்டி, ஆகாய விமானம், கப்பல் போன்றவற்றின் நேரம் பற்றியும் இன்னும் இவை போன்ற பல சிறப்புச் செய்திகளும் அறிவிக்கப்படுகின்றன.

இவற்றைத் தவிர, 30081 என்ற எண்ணுடன் தொடர்பு கொண்டால், தமிழ்நாடு அரசின் பரிசுச் சீட்டு முடிவுகளைப் பற்றியும், தேர்தல் முடிவுகள் பற்றியும் அறிந்து கொள்ளலாம். இதற்காகக் குறிப்பிட்ட கட்டணமும் வசூலிக்கப்படும்.

தந்திகளைத் தொலைபேசி மூலமாக அளிக்கக்கூடிய வசதியும் வாடிக்கையாளருக்குக் கிடைக்கிறது. சில நேரங்களில், தொலைபேசி மூலம் வாடிக்கையாளரிடம், "வேடிக்கைப் பேச்சும், குறும்புத்தனமும்" செய்ய நினைக்கும் அறிமுகமில்லா நண்பரைகையும் களவுமாகப் பிடிப்பதற்கு இப்போது ஏற்பாடுகள் நடைபெற்று வருகின்றன.

**வாழ்த்தொலி**

நண்பர்கள், உற்றார், உறவினர்கள் இவர்கள் ஒருவர் மற்றொருவருக்குத் தங்களது வாழ்த்துக்களைத் தெரிவிக்க சென்னை தொலைபேசி நிறுவனம் உதவிபுரிகின்றது. பண்டிகை, திருவிழா காலங்களுக்கேற்பவும், தேர்வில் வெற்றி பெற்றதற்காகவும், வெளிநாட்டுப் பயணம் நன்கு அமையவும் வாழ்த்துகளைத் தெரிவிக்கும் வண்ணம் தனித்தனியே 27 வாழ்த்துகள் தயாரிக்கப்பட்டுள்ளன. இவற்றின் வரிசை எண்ணை மட்டும் குறிப்பிட்டால் குறிப்பிட்ட வாழ்த்து அனுப்பப்படும். முன்கூட்டியே வாழ்த்துகளைப் பதிவுசெய்து, பின்னர் அனுப்பும் வசதியும் இப்போது நடைமுறையில் உள்ளது.

**வெளியூர் அழைப்புகள் (Trunk Calls)**

இதுவரை உள்ளூர் அழைப்பு இணைப்புகளைப்பற்றி மட்டும் விரிவாக ஆராய்ந்த நாம், இனி வெளியூர் அழைப்புகளைப்பற்றி

யும் சிறிது பார்ப்போம். பொதுவாக வெளியூர் அழைப்புகள் அவை அனுப்பவேண்டிய துரிதத்தினைப் பொறுத்து மூன்று வகையாகப் பிரிக்கலாம்.

(1) இயல்பானவை: இவற்றிற்குச் சாதாரண கட்டணம் விதிக்கப்படும்.

(2) துரிதமானவை: இவற்றிற்குச் சாதாரண கட்டணத்தைவிட இரண்டு மடங்குக் கட்டணம் விதிக்கப்படும்.

(3) மின்னல் வேகம்

செய்திகளை உடனடியாகத் தெரிவிக்கவேண்டிய நிலை ஏற்படும்போது, மின்னல் வேக அழைப்புகள் விடுவிக்கப்படும். இதற்கு வழக்கமான அழைப்புக்கான கட்டணத்தைக் காட்டிலும் எட்டு மடங்குக் கட்டணம் விதிக்கப்படும்.

**சந்தாதாரரின் நேரடி அழைப்புகள் (Subscriber Trunk Dialing) (S.T.D.)**

ஒரு நகரத்திலிருந்து மற்றொரு நகருக்குத் தொலைபேசி அழைப்பை விடுக்கும்போது, பொதுவாகத் தொலைபேசி நிறுவனத்திற்குத் தெரிவித்து, சிறிது காலம் காத்திருந்து, சில சமயங்களில் மணிக்கணக்கில் இதற்கெனப் பொறுமையுடன் காத்திருந்த பின்னரே தொடர்புகொள்ள வேண்டிருக்கும். இதனால், ஒரு நபருடைய பொன்னான நேரம் மிகவும் வீணாகக் கூடுமல்லவா? இதைத் தவிர்ப்பதற்காகவே "சந்தாதாரரின் நேரடி அழைப்பு முறை" ஏற்பட்டது. இம் முறையின்படி, ஒவ்வொரு நகரத்திற்குரிய ஓர் எண் தரப்பட்டிருக்கும். ஒரு நகரத்திற்குத் தொலைபேசி மூலம் இணைப்பு வேண்டுமாயின், முதலில் அந் நகரத்தின் எண்ணைச் சுழற்றிவிட்டு, அதன் பின்னர் சுழற்றினால், உடனடியாகத் தொலை தூரத்தில் இருந்தாலும், நாம் விரும்பிய நபரின் தொலைபேசியின் இணைப்புக் கிடைத்துவிடும். இம் முறையில் காலதாமதம் என்ற கவலைக்கே இடமில்லை. மேலும், பொதுத் தொலைபேசியில் உள்ளது போன்று அவ்வப்போது நேரம் அறிவிப்பது இல்லை. ஆனால், இம்முறை குறிப்பிட்ட ஒரு சில நகரங்களில் மட்டுமே இப்போது அமுலாக்கப்பட்டுள்ளது. சென்னையிலிருந்து பெங்களூர், பம்பாய், கோவை, செங்கை, காஞ்சி, மதுரை, செகந்திராபாத், திருச்சி ஆகிய இடங்களுக்கு மட்டுமே சந்தாதாரர் நேரடி அழைப்புமுறைமூலம் இணைப்புப் பெறலாம்,

மேற்கூறியவை தவிர, "கப்பல்-கரை அழைப்பு" (Ship Shore Calls) என்ற அழைப்பு ஒன்று உண்டு. அதன்படி கப்பல்கள், படகுகள் மற்றும் கட்டுமரங்கள் ஏதேனும் கடலில் சிக்கித் தவிக்குமேயானால், உதவிகோரி கரைக்குச் செய்தி அனுப்பக்கூடும். இச் செய்தியினை வாங்கி உரியவருக்கு அனுப்பத் தொலைபேசி நிறுவனம் ஏற்பாடு செய்யும். இதனைத் தவிர "S.O.S" (Save Our Souls) என்ற அழைப்புகளையும் உடனுக்குடன் வாங்கி ஆபத்திலுள்ளவர்க்கு உடனுக்குடன் நிவாரண உதவி அளிக்க ஏற்பாடு செய்யும்.




வரைப்படம்-5

**நிருவாக அமைப்பு**

சென்னைவாழ் மக்களது வாழ்க்கையை வளப்படுத்தும் வகையில் தனது பணியினை அயராது செய்கின்ற சென்னைத் தொலைபேசி

நிறுவனத்தின் சாதனை போற்றற்குரியது. இன்னும் பல பணிகளைச் சிறப்புறச் செய்யவேண்டுமென அவா கொண்டவர்களே இதனுடைய நிருவாகத்தினை ஏற்றுள்ளனர் என்பது குறிப்பிடத் தக்கதாகும். அன்றாட நிருவாகத்தினை நடத்தும் குழுவிற்கு "தொலைபேசி ஆலோசனைக்குழு" (Telephone Advisory Committee) என்று பெயர். இக் குழுவில் தலைவர், செயலர் ஆகியோரைத் தவிர, பொதுமக்களில் பல தரப்பிலிருந்து ஒவ்வொரு நபர் இடம் பெறுவர். இதுவரை நல்ல முறையில் செயல் புரிந்து வந்த சென்னைத் தொலைபேசி நிறுவனம், மேன்மேலும் சிறப்பான பணியினைச் செய்து வருவதாகுக!

## தமிழ்நாடு மின்சாரவாரியம்பற்றிய சில குறிப்புகள்

நுண்கலைகளின் தேர்ச்சியோ, கல்வித்துறையின் வளர்ச்சியோ, ஆன்மீக முன்னேற்றமோ எதுவாயினும் தமிழ்நாட்டில் காணமுடியும். இவையனைத்தையும்விட தமிழ்நாட்டின் தொழில் வளர்ச்சி மிகவும் போற்றற்குரியது. இங்கே சிறிய மற்றும் பெரிய தொழில் நிறுவனங்கள் எண்ணற்று நிறைந்திருப்பதற்குக் காரணமாக தமிழ்நாட்டு மக்களின் தொழிலறிவு, தமிழ்நாடு அரசின் பொருளாதாரக் கொள்கை போன்றவற்றைக் கூறலாம். இருப்பினும், இவையனைத்தையும்விட, விவசாயம் மற்றும் தொழில் முன்னேற்றம் இவற்றிற்குக் காரணமாகத் தமிழ்நாடு மின்சாரவாரியத்தின் அயராத பணியைக் கூறலாம். தமிழ்நாடு அரசின் குறிப்பு ஒன்றின்படி, 1974ஆம் ஆண்டின் இறுதிக்குள் மின்னொளி புகாத கிராமங்களே இம் மாநிலத்தில் இருக்கப் போவதில்லை. ஏனைய மாநிலங்களில் மின்வெட்டு மிகவும் அதிகமாக அமுலாக்கப்பட்டிருக்கும்போது, தமிழ்நாட்டில் மின் வெட்டுக் கணிசமாகக் குறைக்கப்பட்டிருப்பது, இம் மாநிலத்தின் மின்சாரவாரியத்தின் மகத்தான சாதனையைக் குறிப்பதாகும். எனவே, தமிழ்நாடு மின்சாரவாரியத்தின் செயல்முறைபற்றிச் சிறிதளவாவது அறிந்துகொள்வது மிகவும் பெருமை தரும் செயலாகும்.

முதலில், இம் மின்சாரவாரியத்தின் மின்சார உற்பத்தி, அதனை மாற்றுதல் பின்னர் நுகர்வோருடைய மின்சக்தியைப் பங்கீடுசெய்தல் போன்ற பணிகள் எவ்வாறு நடைபெறுகின்றன என்று பார்ப்போம்.

உற்பத்திமுறை: இம் மின்சாரவாரியம் பங்கீட்டுக்கு வேண்டிய மின்சக்தியை இரண்டு வழிகளில் உற்பத்தி செய்கின்றது. அவை (1) ஹைட்ரோ எலக்டிரிக் முறை, (2) தெர்மல் முறை என்பனவாம்.

இவ்விரண்டு முறைகளிலும் உற்பத்திச் செய்யப்பட்ட மின் திறனை 'ஹைட்ரோ எலக்டிரிக் பவர்' என்றும் 'தெர்மல் பவர்' என்றும் குறிப்பிடுவர்.

எண்ணூர் அனல்மின்நிலையம், கல்பாக்கம் அணுமின்சக்தி நிலையம், இவையுடன், நெய்வேலி பழுப்பு நிலக்கரியை உபயோகித்தும், மின்சக்தி உற்பத்தி செய்யப்படுகிறது. கல்பாக்கம் அணுமின்சக்தி நிறுவனம் செங்கை மாவட்டத்தில், மகாபலிபுரம் அருகே அண்மையில் வெற்றிகரமாகச் செயற்படத் துவங்கியுள்ளது.

**மாற்றி அனுப்புதல்** (Transmission)

உற்பத்தி செய்யப்பட்ட மின்சக்தி வெவ்வேறு அழுத்த நிலைகளில் மாற்றம் செய்யப்பட்டு அனுப்பப்படும். ஏனெனில், உற்பத்தி செய்யப்பட்ட மின்சக்தி மாற்றம் ஏதுமின்றி அப்படியே அனுப்பப்பட்டால், அதனால் ஏற்படுகின்ற பேராபத்தைச் சொல்லஇயலாது. இக் காரணத்தால், தமிழ்நாடு மின்சார வாரியம், தான் உற்பத்தி செய்கின்ற மின்சக்தியைப் பின்வரும் அழுத்தங்களில் (Tension) மாற்றம் செய்கின்றது.

**கூடுதலான உயர் அழுத்தம்** (Extra High Tension) = KV

இது, 230 KV, 110 KV, 66 KV என மூன்று வகைப்படும்.

**பங்கீட்டுமுறை**

மேற்கண்டவாறு உற்பத்தி செய்த மின்சாரத்தினை இரண்டு வழிகளில் அழுத்தமாற்றம் செய்தபின்னர், நுகர்வோருக்கு அளிக்கப்படுகிறது. மின் திறனை உபயோகிக்கும் வாடிக்கையாளர்களில் சிலர் தங்களது குடியிருப்புகளில் விளக்குகள் ஒளிரச்செய்யவும், மின் அடுப்புப்போன்ற பெரிய மின்கருவிகளைப் பயன்படுத்தவும் எண்ணலாம். இவர்களுக்கு அளிக்கப்படும் மின்சக்தி அதிகத் திறன் வாய்ந்ததாக இருக்கவேண்டுமென்பதில்லை. மேலும், அதிக அபாயத்தை விளைவிக்காதவண்ணம் இம் மின்சக்தி இருப்பதும் இன்றியமையாததாகிறது. ஆனால், தொழிற்சாலைகளில் மாபெரும் இயந்திரங்களை இயக்கப் பயன் படுத்தும் மின்சக்தியின் திறன் அதிக அளவில் இருக்கவேண்டும். எனவே, தொழிற்சாலைகளுக்கு அளிக்கப்படும் மின்சக்தி 400 வோல்ட்டாகவும், இதர இல்லங்களின் நோக்கங்களுக்காகப் பயன்படுத்தப்படும் மின்சக்தி 230 வோல்ட்டாகவும் இருக்கின்றது.

**நிருவாக அமைப்பு**

மின்சாரவாரியத்தின் நிருவாக அமைப்பு இருவிதமாக அமைந்துள்ளது. அலுவலக வேலைகளைக் கவனிக்கவும், வாரியத்தின் வாணிகக் கோட்பாடுகளைத் தீர்மானிக்கவும் (1) தலைவர், தொழில் வல்லுநராகிய உறுப்பினர், (3) கணக்குப் பதிவியல் வல்லுநர் ஆகிய மூவர் நியமிக்கப்பட்டுள்ளனர். இவர்களுக்கு உதவியாக, ஒரு செயலரும், உதவிச் செயலர்களும் உள்ளனர்.

**தலைமைப் பொறியியல் வல்லுநர்கள்**

வாரியத்தின் மின்சார உற்பத்தி, அழுத்தமாற்றம் மற்றும் பங்கீட்டு முறைகளை முறைப்படுத்தவும், தொழில்நுட்பக் கருத்துகளை அளிக்கவும், நிருவாகக் குழுவினருக்கு உதவியாகவும் பின்வரும் தலைமைப் பொறியியல் வல்லுநர்கள் நியமிக்கப்பட்டுள்ளனர்:

1. செயல்முறைத் தலைமைப் பொறியியல் வல்லுநர்கள்
2. பங்கீட்டுமுறை வல்லுநர்கள்
3. நிருவாகமுறை வல்லுநர்கள்
4. கொள்முதல் வல்லுநர்கள்
5. தொழில்நுணுக்க வல்லுநர்கள்

(Chief Engineers for Operation, Distribution, Administration, Purchase and Tcchnical)

**மேற்பார்வை பொறியியல் வல்லுநர்கள்** (Superintending Engineers)

மின்சாரவாரியத்தின் பலவித இயக்க முறைகள் (Systems) நடைபெறக்கூடிய இடங்களில் அம்முறைகளின் இயக்கத்தையும், செயற்படும் விதத்தையும் கண்காணிக்கும்பொருட்டு சூப்பரின்டெண்டிங் என்ஜினீயர்கள் எனப்படுவோர் நியமிக்கப்பட்டுள்ளனர். இவர்கள், மேற்காணும் இயக்க முறைகளின் தலைமை அலுலலகங்களிலும் (Headquarters), கிளைநிலையங்களில் வட்டார மற்றும் துணைப் பொறியாளர்களும் (Divisional and Assistant Engineers) பணிபுரிகின்றனர்.

**தலைமைக் கணக்காளர்கள்** (Chief Accountants)

மின்சாரவாரியத்தின் நிருவாகப் பிரிவில் அடுத்தபடியாக தலைமைக் கணக்காளர்களின் பணி மிகவும் இன்றியமையாத

தாகக் கருதப்படுகிறது. இத் தலைமைக் கணக்காளர்கள், சூப்பரின் டெண்டிங் என்ஜினியர்களின்கீழ் பணிபுரிவர். இவர்கள் வாரியத்தின் பட்ஜெட், நிதிநிலை, வரவு, செலவு, கட்டணப் பட்டியல்களைத் தயாரித்து அளித்தல், அவற்றிற்கான வருவாயை வசூலித்தல் போன்றவற்றிற்குப் பொறுப்பாக இருப்பார்கள்.

**துணைத் தலைமைக் கணக்காளர்கள்** (Deputy Chief Accountants)

இவர்கள் நகர்ப்புறங்களிலும், மற்றும் மின்சாரப் பங்கீட்டு நிலையங்கள் உள்ள இடங்களிலும் இருப்பர். இவர்களது முக்கியப் பணி நுகர்வோருக்கு அளிக்கப்படும் மின்சக்தியின் அளவுக்கேற்பக் கட்டணத்தை விதித்து, அதற்கான கட்டணப் பட்டியலைத் தயாரித்துப் பின்னர் அப் பட்டியலில் கண்டுள்ள தொகை வசூலிக்கப்பட்டுள்ளதா என்று சரிபார்த்தல் போன்றவையாகும்.

**வட்டாரப் பொறியாளர்கள்** (Divisional Engineers)

கூடுதலான உயர்அழுத்தம் என்றும் உயர்அழுத்தம் (Extra High Tension and High Tension) என்றும் இரு வகை மின் சக்தியை மாற்றியனுப்பும் நிலையங்களைச் சரிவர இயக்குவதற்காக வட்டாரப் பொறியாளர்கள் நியமிக்கப்படுகின்றார்கள். இவர்களின்கீழ், உதவிப் பொறியாளர்கள், இளநிலைப் பொறியாளர்கள், பிரிவுகளின் அதிகாரிகள் (Section Officers) ஆகியோரும் மின்சார லைன்களின் லைன் இன்ஸ்பெக்டர்கள், ஒயர்மென், ஆகியோரும் பணிபுரிகின்றனர்.

**கணக்குப் பிரிவு** (Accounts Wing)

வாரியத்தின் நிதிநிலைக் கணக்குகளைக் கவனிக்கும்பொருட்டுக் கணக்குப் பிரிவு என்ற இப் பகுதி இயங்குகின்றது. இதனுடைய தலைமைப் பிரிவு மின்வாரியத்தின் தலைமை அலுவலகத்தில் அமைந்துள்ளது. பதிவுபெற்ற அதிகாரிகளின் (Gazetted Officers) ஊதியம், மற்றும் பிற அலுவலர்களின் ஓய்வுத் தொகை, இத் தொகைக்கான கணக்குக் குறிப்புகள் ஆகியவற்றைக் கணக்குப் பிரிவு கவனித்துக்கொள்கின்றது.

**நிதிக்கட்டுப்பாட்டு அதிகாரி** (Financial Controller)

மின்சாரவாரியத்தின் பட்ஜெட்டைத் தயாரித்தல், நிதி ஏற்பாடு செய்தல், கணக்குப் பதிவுகளைக் கண்காணித்தல், வருவாய் மற்றும் செலவுகளை முறைப்படுத்துதல்போன்றவற்றை நிதிக்கட்டுப்பாட்டு அதிகாரி கவனித்துக்கொள்ளுகின்றார்.

மேற்கூறப்பட்ட அனைத்துச் செய்திகளையும் அட்டவணைப்படி தயாரித்துப் பின்பக்கம் தரப்பட்டுள்ளன.


மின்சாரவாரியத்தின் நிருவாக அமைப்பு
1
2
மின்சாரவாரியம் (Electricity Board)
தலைமைப் பொறியாளர் (Chief Engineer)
கணக்குப் பிரிவினர் (Accounts Wing)
நிதிக்கட்டுப் பாட்டு அதிகாரி (Financial Controller)
உறுப்பினரவை
1. தலைவர்
2. தொழிலறிவு உறுப்பினர்
3. கணக்கியல் உறுப்பினர்
அலுவலகம்
1. செயலர்
2, துணைச் செயலர்கள்
சூப்பரின்டென்டெண்டு என்ஜீனிர் (Superintendent Engineer)
தலைமைக் கணக்காளர் (Chief Accountant)
துணைத் தலைமைக் கணக்காளர் (Deputy Chief Accountant)
வட்டாரப் பொறியாளர்கள் (Divisional Engineers)

இனி மின்சாரம் நுகர்ச்சிக்கான கட்டண வீதத்தைப்பற்றிப் பார்ப்போம். மின்சக்திக்கான கட்டணத்தை வசூலிப்பதற்கென வாடிக்கையாளர்கள் இரு வகையாகப் பிரிக்கப்படுகின்ருர்கள் :




உறைவிடப் பயன்களுக்காக (Domestic uses) மின்திறன் பயன்படுத்தப்பட்டால் 1 யூனிட்முதல் 50 யூனிட்வரை 40 பைசா வசூலிக்கப்படுகின்றது. அதிக அளவாக ரூ. 4-00 வரை இக் கட்டணம் விதிக்கப்படும். 50 யூனிட்டுகளுக்குமேல் ஒவ்வொரு யூனிட்டிற்கும் 35 பைசாவீதம் வசூலிக்கப்படும்.

வாணிகப் பயன்களுக்காகப் (Commercial uses) பயன் படுத்தப்படும் மின்திறனுக்கு, ஒவ்வொரு மாதமும் முதல் 500 யூனிட்வரை 0·45 பைசாவீதம் விதிக்கப்படும். அதிக அளவுக் கட்டணமாக ரூ. 5-00 வரை வசூலிக்கப்படும். இதற்கு மேற்பட்டு ஒவ்வொரு யூனிட்டிற்கும் 0·40 பைசாவீதம் வசூலிக்கப்படும்.

இவ்விரு வகையினரிடமும் மீட்டர் வாடகையாக ரூ. 1-00 வசூலிக்கப்படும். மேற்காணும் கட்டணங்கள் சிங்கிள் ஃபேஸ் (Single Phase) மீட்டர்களுக்கானவை. பாலிஃபேஸ் (Poly phase) மீட்டர்களுக்கான வாடகையாக ரூ. 2–50 வசூலிக்கப்படும். இவற்றைத்தவிர, உபரிக் கட்டணமாக (Surcharge) 30% கட்டணம் விதிக்கப்படும்.

மேற்காணும் கட்டண விகிதங்களைத் தவிர, 1974ஆம் ஆண்டு முதல் கீழ்க்காணும் கட்டணங்களும் விதிக்கப்படுகின்றன :

(1) குறைந்த அழுத்த மின்சாரத்தினை உபயோகிப்போரின் ஒரு மாதத்தின் மின்சார அளவிற்கு ஒவ்வொரு யூனிட்டிற்கும் 18 பைசா வீதம் வசூலிக்கப்படும்.

(2) உபரி அழுத்த மின்சாரத்தினை உபயோகிப்போரிடமிருந்து மாதம் ஒன்றிற்குக் குறைந்த கட்டணமாக ரூ. 5 வசூலிக்கப்படும்.

(3) பாலிஃபேஸ் (Polyphase) மீட்டர்களுக்கான வாடகையாக ஏற்கெனவே விதிக்கப்பட்ட தொகையுடன் ரூ. 1-50 சேர்த்து வசூலிக்கப்படும்.

(4) உபரிக் கட்டணமாக (Sur-charge) 30% தனியாகக் கணக்கிடப்பட்டுப் பட்டியலில் காண்பிக்கப்பட வேண்டும்.

(5) வெல்டிங் செட்டுகளுக்காக (பற்றவைப்பு)த் தனியே 20% அதிகக் கட்டணம் வசூலிக்கப்படும்.

இவையனைத்தும், "Tariff IV A (Industrial Service) From April, 1974" படி விதிக்கப்படுகின்றன.

மின் சக்திக்கான கட்டணத்தை மின்சார வாரியத்தின் கிளை அலுவலகங்களிலோ வாரியத்தால் அங்கீகரிக்கப்பட்ட வங்கிகளிலோ செலுத்தலாம்.

நாடெங்கிலும், மின்வெட்டு ஏற்படுத்தப்பட்டுள்ளபோது நமது மாநிலத்தில் மின்சார நிலைமை மிகவும் திருப்திதரும் வகையில் அமையக் காரணம் நமது மாநிலத்தின் மின்சார வாரியத்தின் சீரிய பணியேயாகும் என்பதில் வியப்பேதுமில்லை.

இதனைத் தொடர்ந்து நமது மாநிலத்தில் தனியார் துறையில் இயங்கி, அண்மையில் அரசுடைமையாக்கப்பட்ட மின்சக்தி வழங்கும் நிறுவனத்தைப் பற்றிக் காண்போம்.

**தென் சென்னை மின்திறன் வழங்கும் கார்ப்பொரேஷன் (South Madras Electric Supply Corporation Ltd.,) S.M.E.S.C.**

இந் நிறுவனம் 1940ஆம் ஆண்டு சென்னையில் தோற்றுவிக்கப்பட்டது. இதனது நிருவாக இயக்குநர்கள் பின்வருவோராவர் :

தலைவர் : திரு. கி. ஆ. பெ. விசுவநாதம்.

V. K. சேஷசாயி, N. C. சுப்ரமணியம், K. S. வேணு, டாக்டர் T. K. ரங்கநாதன், S.M.A.N. அருணாசலம் செட்டியார், C. இராமநாதன், M.A., B.L. R. வேணுகோபால் ரெட்டியார், H. K. இராமசாமி (மேலாண்மை இயக்குநர்), டாக்டர் N. C. சுப்ரமணியம் B.H., M.B.B.S. S. விசுவநாதன், B.A., B.L. ஆகியோர்.

தலைமை அலுவலக முகவரி : (மின்) சக்தி இல்லம், தென்னூர், திருச்சி - 17.

முதல் தணிக்கையாளர்கள் : திரு. M. S. ஜெகந்நாதன், திரு. N. கிருட்டிணசாமி ஆகியோரும், P. S. சுப்ரமணிய ஐயர் & கம்பெனி இதன் முதலாவது தணிக்கையாளர்களாக நியமிக்கப்பட்டனர்.

**நிதிநிலை அனுமதிக்கப்பட்ட முதலீடு** (ரூபாய் 1,00,00,000)

ரூபாய் ஒரு கோடி. இது கீழ்க்காணும் விகிதத்தில் பிரிக்கப்பட்டிருந்தது.

7,00,000 ordinary shares of Rs. 10 each = 70,00,000.
2,20,000 cumulative Prof. shares of Rs. 10 each = 22,00,000.
80,000 51 tax free cumulative Prof. shares of Rs. 10 each. = 8,00,000

**செலுத்தப்பட்ட முதலீடு** (ரூபாய் 1,00,00,000)

மேற்குறிப்பிட்ட அனைத்துப் பங்குகளுக்கான தொகை உடனடியாகச் செலுத்தப்பட்டுவிட்டது. 1971ஆம் ஆண்டு ஜூன் 19ஆம் நாள் எடுக்கப்பட்ட விசேடத் தீர்மானத்தின்படி முதலீட்டுத் தொகையினைக் குறைக்க (நீதிமன்றத்தின் அனுமதியுடன்) வழி செய்யப்பட்டது. இதனைச் செயலாக்கும் பொருட்டு, முதலாவது முன்னுரிமைப் பங்குதாரர்களுக்கெனத் தொகையினைத் திருப்பித் தருதல்வேண்டும். இந் நிறுவனம் தனது சொத்துக்களின்பேரில் சென்னை மாநில அரசினிடமிருந்து (31-3-70-ல் உள்ளபடி) வாங்கிய கடன் தொகை ரூ. 17,90,524.

**பதிவுக் கட்டணம்** (ஏதுமில்லை)

கணக்குகளின் நாள்—ஒவ்வொரு வருடமும் மார்ச் 31ஆம் நாள் அன்று முடிவடையும் ஓராண்டிற்குக் கணக்குகள் தயாரிக்கப்படுகின்றன.

**நிறுவனத்தின் தோற்றத்திற்கான நோக்கமும், செயற்படும் விதமும்**

இந் நிறுவனம், ஏற்கெனவே செயற்பட்டுக்கொண்டிருந்த வேறு மூன்று நிறுவனங்களையும் ஒன்றுசேர்த்து (amalgamation) ஒரே நிறுவனமாகப் பணியாற்றும் குறிக்கோளுடன் ஏற்பட்டது. அதாவது, திருச்சிராப்பள்ளி - ஸ்ரீரங்கம் மின்சக்தி வழங்கும் நிறுவனம், கிழக்குத் தஞ்சை மின்சக்தி (வழங்கும்) நிறுவனம், மற்றும் கிழக்கு இராமநாதபுரம் மின்சக்தி (வழங்கும்) நிறுவனம் ஆகிய மூன்று நிறுவனங்களையும் ஒன்றாக இணைத்து, அவ்விணைப்பின் விளைவாகத் தென் சென்னை மின்சக்தி வழங்கும் நிறுவனம் என்னும் பெயர் சூட்டப்பட்டது. இந் நிறுவனம் அண்மையில் (1973ஆம் ஆண்டு) அரசு உடைமையாக்கப்பட்டது.

**இந் நிறுவனத்தின் இணைப்புகள்**

இந் நிறுவனம் கீழ்க்கண்ட எண்ணிக்கையுள்ள இணைப்புகளுக்கு மின் திறனை வழங்கி வந்துள்ளது.

31-3-70-ல் உள்ளவாறு :

| | |
|---|---|
| வீட்டு இணைப்புகள் | 58,851 |
| தொழிற்சாலை இணைப்புகள் | 4,951 |
| விவசாய இணைப்புகள் | 7,309 |
| | 71,111 |

## பல்லவன் போக்குவரத்துக் கழகம்

விண்ணை எட்டுகின்ற மாடிக் கட்டடங்கள் நிறைந்த சென்னை மாநகரின் வீதிகளிலே அன்றாடம் ஆயிரக்கணக்கானோரைப் பல்வேறு இடங்களுக்குச் சுமந்து செல்லும் கடமையை அயராது செய்கின்ற பல்லவன் போக்குவரத்துக் கழகப் பேருந்துகள் உண்மையில் பாராட்டுக்குரியவை. திக்கெட்டும் புகழ் பரப்பும் வெற்றி வீரர்களைப்பற்றிக் காவியங்களிலே புகழாரம் சூட்டியுள்ளோம். இன்று நடந்தே சென்று அடையவேண்டிய நல்ல குக்கிராமங்களையும் தொட்டு வரும் போக்குவரத்துப் பேருந்துகளைப்பற்றிச் சொல்லவும் வேண்டுமோ? நஞ்சுபோல் பெட்ரோலின் விலை உயர்ந்துகொண்டே போவதன் காரணமாகச் சமுதாயத்தின் மேல்தளத்தில் உள்ள கார், ஸ்கூட்டர் போன்ற வாகனங்களின் உரிமையாளர்களுக்கும்கூட, அடைக்கலம் அளிக்கின்ற பெருமை இப் பேருந்துகளுக்கு உண்டு.

இத்துணைச் சிறப்பு வாய்ந்த பல்லவன் போக்குவரத்துக் கழகத்தினைப்பற்றிய ஆய்வுரையை இனி நோக்குவோம்.

**தோற்றம்**

தமிழ்நாடு அரசின் போக்குவரத்துத்துறையினரால் நிருவகிக்கப்பட்டு வந்த சென்னை - செங்கற்பட்டு மாவட்டத்தின் போக்குவரத்து முறையினை ஒழுங்குபடுத்தும் நோக்கத்துடனும், அதனை வரையறுக்கப்பட்ட ஒரு பொதுக் கம்பெனி (Public Ltd., Co.,)யாகத் துவக்கும் எண்ணத்துடனும் பல்லவன் போக்குவரத்துக் கழகம் துவக்கப்பட்டது. இந் நிறுவனம் 10-12-1971 அன்று தோன்றினாலும் 1-1-1972 அன்று முதல்தான் இயங்கத் துவங்கியது.

*1-1-1972*ஆம் நாளுக்கு முன்புவரை சென்னை - செங்கல் பட்டு மாவட்டத்தின் போக்குவரத்து அமைப்பிற்குச் சேர்ந்த சொத்துகள், குறிப்பிட்ட தேதிமுதல் பல்லவன் போக்குவரத்துக் கழகத்திற்குச் சேர்ந்ததாயின. இச் சொத்துகள் தமிழ்நாடு அரசின் போக்குவரத்துத் துறையின் சார்பில், அதனுடைய இயக்குநரும் பல்லவன் போக்குவரத்துக் கழகமெனும் கம்பெனி யின் சார்பில் அதனுடைய மேலாண்மை இயக்குநரும் முறைப்படி ஏற்றுக்கொண்டு அதுபற்றிய விபரங்களைத் தமிழ்நாடு மாநில அரசிடம் அளித்துள்ளனர்.

*1-1-1972*ஆம் தேதியன்று அரசுடைமையாக்கப்பட்ட இந் நிறுவனத்தின் நிகர மதிப்பு ரூ. 5,62,05,165·25 ஆகும். அதுபற்றிய புள்ளி விவரங்கள் பின்வருவனவாம்:

| | | |
|---|---|---|
| தமிழ்நாடு அரசின் 21-10-72ஆம் நாளிட்ட ஆணை எண் 821-ன்படி அங்கீகரிக்கப்பட்டது. | | 6,14,813,129·25 |
| கழி : (i) 23-10-72ஆம் நாளிட்ட அரசு ஆணை எண் 828-ன்படி சேமிப்புகள்: | | |
| விரிவாக்க நிதி | = 11,55,868–00 | |
| பணியாளர்களின் வீட்டு வசதி நிதி | = 8,77,266–00 | |
| பயணியர் வசதி நிதி | = 74,410–00 | |
| (ii) 21-10-72ஆம் நாளிட்ட 812-ன் எண்ணுள்ள அரசின் ஆணைப்படி | = 31,70,420–00 | 52,77,964–00 |
| | | 5,62,05,165–25 |

**நிருவாகத்துறை**

இப் போக்குவரத்துக் கழகம் பொதுநல ஈடுபாட்டுடன் இயங்கிவருவதால், நன்முறையில் இதனுடைய நிருவாகம் நடைபெறவேண்டுமென்று தீர்மானிக்கப்பட்டது. தேர்ந்தெடுக்கப் பட்ட இயக்குநரவை, இக் கழகத்தின் அனைத்து அலுவல்களையும், மக்களாட்சி முறைப்படி (Democratic way) செவ்வனே செய்து வருகின்றது. இப் பல்லவன் போக்குவரத்துக் கழகத்தின் பங்குதாரர்களின் முதலாவது வருடாந்திரப் பொதுக்கூட்டம் 1973ஆம் ஆண்டு ஜூன் மாதம் 7ஆம் நாள் அதனுடைய பதிவு

செய்யப்பட்ட அலுவலகமான "போக்குவரத்து இல்லம்" அண்ணா சாலை, சென்னை-2 என்ற இடத்தில் மாலை 4 மணிக்குக் கூடியது.

**முதற்கூட்டமான அன்றையதினம்**

(1) இயக்குநரவையின் அறிக்கையை அங்கீகாரம் செய்யவும். தணிக்கை செய்யப்பட்ட மார்ச்சு 31, 1973ஆம் ஆண்டுடன் முடிவடைந்த காலத்திற்குரிய இலாப நட்டக் கணக்கு மற்றும் இருப்புநிலைக் குறிப்பு ஆகியவற்றைப் பரிசீலனை செய்யவும்,

(2) இந்தியக் கம்பெனிகள் சட்டத்தின் (1956) விதிகளின் படி, பதவியிலிருந்து விலகுகின்ற இயக்குநர்களுக்குப்பதிலாக மற்றொருவரைத் (அன்றி மீண்டும் அவரையோ) தேர்ந்தெடுக்கவும், பங்குதாரர்களின் கூட்டம் கூடியதாக அறிவிக்கப்பட்டது. அதன்படி, பின்வருவோர் தேர்ந்தெடுக்கப்பட்டனர்:

**நிருவாகக்குழு**

இயக்குநரவை

(1) உயர்திரு M. S. இராம், I.A.S.
தலைவர்

(2) உயர்திரு K.J.M. ஷெட்டி, I.A.S.
மேலாண்மை இயக்குநர் (22-12-72) வரை

(3) உயர்திரு R. தில்லைநாயகம், B.E.B.L., F.I.E.
மேலாண்மை இயக்குநர் (22-12-72 முதல்)

(4) உயர்திரு S. வெங்கட்டராமன், I.A.S.
இயக்குநர்

(5) உயர்திரு C. G. இரங்கபாஷ்யம், I.A.S.
இயக்குநர்

(6) உயர்திரு P. C. சிரியாக், I.A.S.
இயக்குநர்

(7) உயர்திரு P. சிவலிங்கம், B.E..Hons.);M.S. Calif. F.I.E. (India)
இயக்குநர்

(8) உயர்திரு H. M. சிங், I.A.S,
இயக்குநர்

ஆகியோரைக் கொண்டதாக அமைந்துள்ளது.

வங்கியர்கள் (1) இந்தியன் ஓவர்ஸீஸ் பாங்க், சென்னை-6.
(2) இந்தியன் பாங்க், சென்னை–1.

தணிக்கையாளர்கள் :

(1) M/s. கௌரிகாந்தன் அண்ட் கம்பெனி
சார்ட்டட் அக்கௌண்டன்டஸ்
6, இராமச்சந்திர ஐயர் ரோடு,
சென்னை-17

(2) M/s. சுவாமி அண்ட் வாசன்
சார்ட்டட் அக்கௌண்டன்ட்ஸ்
193, அண்ணாசாலை
சென்னை-2

பதிவுசெய்யப்பட்ட அலுவலகம்

இதனுடைய பதிவுசெய்யப்பட்ட அலுவலகம் "போக்குவரத்து இல்லம்", அண்ணாசாலை, சென்னை-2 என்ற முகவரியில் அமைந்துள்ளது:

பணிமனைகள்

இப் போக்குவரத்தின் பணிமனைகள் (Depots) கீழ்க்காணுமிடங்களில் அமைக்கப்பட்டுள்ளன.

சென்னை :

(1) அடையாறு, (2) ஐயனாவரம், (3) கலைஞர் கருணாநிதி நகர், (4) அம்பத்தூர், (5) அண்ணாநகர், (6) மாதவரம், (7) மந்தைவெளி, (8) தி. நகர், (9) வடபழனி, (10) வியாசர்பாடி, (11) தண்டையார்ப்பேட்டை, (12) மத்திய (வடக்கு) பணிமனை (13) சைதாப்பேட்டை, (14) திருத்தணி.

செங்கற்பட்டு மாவட்டம் :

(1) செங்கல்பட்டு, (2) காஞ்சிபுரம்

மத்தியப் பணிமனை ;

சென்னையை அடுத்துள்ள குரோம்பேட்டையிலுள்ளது.

மறுபடிச் செப்பனிடும் இடம் (Reconditioning Workshop):

பட்டுல்லாஸ் ரோடு, சென்னை-2 என்னும் முகவரியில் அமைந்துள்ளது.

**நிதிநிலைமை**

இப் போக்குவரத்துக் கழகம் துவக்கப்பட்ட நாளான *10-12-1971* முதல் *31-3-1973* முடிய இடைப்பட்ட *15* மாத காலத்தினை முதலாவது நிதிவருடமாக (Financial Year) வைத்துக் கொள்ள, கம்பெனிகள் பதிவாளரின் (Registrar of Companies) *6088*/LC/*72* என்ற எண்ணுள்ள, *31-10-'72*ஆம் நாளிட்ட ஆணையொன்று அனுமதி வழங்குகின்றது. இந்த ஆணையையொட்டி தயாரிக்கப்பட்ட முதலாவது நிதியாண்டிற்கான விவரங்கள் பின்வருவனவாம் :

| வரிசை எண் | விவரம் | ரூபாய் இலட்சத்தில் |
|---|---|---|
| 1. | மொத்த வரவு | 1,379·47 |
| 2. | மொத்தச் செலவு<br>தேய்மானம், விரிவாக்கம் நீங்கலாக<br>தள்ளுபடி 126·73<br>வட்டி 19·65 | 1,326·78 |
| 3. | வட்டி, தேய்மானம் இவற்றிற்கு வகை செய்வதற்குமுன் மொத்த இலாபம் | 52·69 |
| 4. | தேய்மானத்திற்கு வகைசெய்தபின்னர் மொத்த நட்டம் | 74·04 |
| 5. | வட்டிக்கு வகைசெய்ததுபோக நட்டம் | 93·69 |
| 6. | வருமானவட்டியின்பொருட்டுக் கோரப்பட்ட தேய்மானங்கள் | 140·02 |
| 7. | பணப்புழக்கம் (Cash generated) | 33·04 |

இவ்வாறு முதல் *15* மாத காலத்திற்குள் தேய்மானம் மற்றும், வட்டிபோன்றவற்றிற்கு வகைசெய்த பின்னர், நட்டம் *93·69* இலட்ச ரூபாயாக இருந்தது. இஃது அடுத்த வருடத்திற்கு அப்படியே கொண்டுசெல்லப்பட்டது. இருப்பினும், குரோம் பேட்டையிலுள்ள மத்திய பாடிகட்டும் தொழிலகத்தின் (Central Body Building Woskshop) மூலமாக, இக் கால வரையறைக்குள், *8.28* இலட்ச ரூபாய் இலாபம் கிடைத்தது என்பதையும் இங்குக் குறிப்பிடலாம்.

இனி, சென்னைபோன்ற மாநகரங்களில் இயங்கக்கூடிய போக்குவரத்து நிறுவனங்களுள் இந் நிறுவனம் முதல் 15 மாத காலத்திற்குள், 33·04 இலட்ச ரூபாயை ஈட்டியுள்ளது பாராட்டத் தக்கது என இயக்குநரவை கருதுகின்றது. இதைத் தவிர எக்ஸைஸ் வரிகள் என்றும், இறக்குமதி வரிகள் என்றும் ஒரு வருடத்திற்கு ரூ. 160 இலட்சம் இக் கழகத்தால் மத்திய அரசுக்குச் செலுத்தப்படுகிறது. இதுபோன்றே, மோட்டார் வண்டிகள்மீதான வரி என்றும், விற்பனை வரி என்றும் ரூ. 20 இலட்சம் ஆண்டுதோறும் மாநில அரசுக்குச் செலுத்தப்பட்டு வருகிறது.

**நிதிநிலை**

நிறுவனத்தின் வாயிலாகவே திரட்டப்பட்ட தொகையினைக் கொண்டு (33·04) இதனுடைய மூலதனச் செலவுகளும் (Capital Expenditure) வருவாய்ச் செலவுகளும் (Revenue Expenditure) செய்யப்படுகின்றன. எஞ்சியுள்ள உபரித் தொகை தமிழ்நாடு தொழில் முன்னேற்ற கார்ப்பரேஷனின் குறுகியகாலக்காப்பு நிதிகளில் போடப்பட்டுள்ளது. இத் தொகையினைக் குறுகிய கால அறிவிப்பின்மூலம் பெறமுடியும். நிதி பற்றுக்குறை ஏற்படும் போது வங்கிகளிடமிருந்து உயர்ந்த அளவாக 25 இலட்சம் வரையிலும் மேல்வரைப்பற்று (overdraft) பெறக்கூடிய சலுகையும், அனுமதியும் கிடைத்துள்ளன.

**சரக்குமதிப்பு**

இந் நிறுவனம் 1—1—72 அன்று எடுத்துக்கொள்ளப்பட்ட போது இருந்த சரக்கு மதிப்பே குறிப்பிட்ட தேதியன்றும் இருந்தது. இந் நிறுவனத்திலுள்ள. பேருந்து பாகங்கள்போன்ற சரக்குகளின் மதிப்புச் சுமார் 80 இலட்சமாக மதிப்பீடு செய்யப் பட்டது.

**தொழில் முன்னேற்றம்**

1—1—72ஆம் ஆண்டு இந் நிறுவனம் தொடங்கப்பட்டபோது 1,298 பஸ்களே இருந்தன. இவற்றுள், 957 லேலண்ட் பஸ்களும் இருந்தன. 341 பென்ஸ் பஸ்களும் இருந்தன. இவ் விரண்டு வகைப் பஸ்களுள், சுமார் 709-க்கும் மேற்பட்டவை சுமார் நான்கு

ஆண்டினைக் கடந்தவையாக இருந்தன. 1973ஆம் ஆண்டு பஸ்களின் எண்ணிக்கை 1371 ஆக உயர்ந்தது; இவற்றிற்கு ஆகக்கூடிய பழுதுபார்க்கும் செலவு, பராமரிப்புச் செலவுபோன்ற செலவு களின் உயர்வினைத் தடுக்கும்பொருட்டுக் கழகத்தின் 108 பஸ்களை அறவே நீக்கிவிட முடிவு செய்யப்பட்டது. இதனுடன் 92 புதிய பஸ்களையும் சேர்த்து, மொத்தம் 200 புதிய லேலண்ட் பஸ்கள் வாங்கப்பட்டன.

இயங்கத் தொடங்கியபோது, சொந்தமாக எட்டுப் பணி மனைகள் இருந்தன. அவை, அடையாறு, வடபழனி, அயனாவரம், அம்பத்தூர், மாதவரம், தண்டையார்ப்பேட்டை, சென்ட்ரல், பட்டுல்லாஸ் சாலை என்ற இடங்களிலும், மத்தியப் பணிமனை குரோம்பேட்டையிலும் அமைந்திருந்தன. 31—3—1973-ல் கலைஞர் கருணாநிதிநகர், வியாசர்பாடி, அண்ணாநகர் என்னும் நகர்களின் மூன்று இடங்களில் புதிய பணிமனைகள் திறக்கப் பட்டன.

பணிமனைகளின் நிருவாகத்தைச் சரிவரவும் திறம்படவும் நடத்துவதற்கென ஒவ்வொரு பணிமனையிலும், ஒரு கிளை நிருவாகர் (Branch Manager) நியமிக்கப்பட்டார். ஒரு பணி மனையைப்பொறுத்த எல்லாச் செய்திகளுக்கும் பொருத்தமானவர் இவரேயாதலால், அதனைச் சரிவரநடத்த இயன்றதைச் செய்ய வேண்டிய கடமையும், பொறுப்பும் இவருக்கு ஏற்படுத்தப் பட்டது. இவ்வாறு 1-4-1973 முதல் எல்லாப் பணிமனைகளும் கிளை நிருவாகரின் பொறுப்பில் உள்ளன. இவற்றைத் தவிர, மந்தைவெளி, தியாகராயநகர், காஞ்சிபுரம் என்னுமிடங்களில் இயங்கிவந்த துணைப் பணிமனைகள், முழு அளவுப் பணிமனை களாக ஆக்கப்பட்டன.

**இயக்கத்திறன்**

பல்லவன் போக்குவரத்துக் கழகம் நாள்தோறும் தனது இயக்கத் திறனை (operating strength) வளர்த்துக்கொண்டே வந்துள்ளதென்பதைக் கீழ்க்காணும் புள்ளிவிவரங்களைக்கொண்டு விளக்கலாம். 1—1—72-ல் 1,136ஆக இருந்த பேருந்துகளின் எண்ணிக்கை 31—3—75-ல் 1,182ஆக உயர்ந்து, இன்று சுமார் 1500-ஐ எட்டியுள்ளது.

## ஓட்டமுறைகளின் விவரம்

| வரிசை எண் | பணிகளின் வகை | தடத்தின் எண்ணிக்கை | ஓட்ட முறையின் எண்ணிக்கை | தடத்தின் மொத்த தூரம் கி.மீட்டர் | ஒற்றை ஓட்டங்களின் எண்ணிக்கை | பஸ் ஓட்டத்தின் தூரம் | சராசரி ஒரு பஸ் கடக்கும் தூரம் | காரேஜ் தூரம் (ஒரு நாளிற்கு) |
|---|---|---|---|---|---|---|---|---|
| 1. | நகர எல்லை | 99 | 667 | 1,185·0 | 12·527 | 1,42,386·4 | 213·4 | 2,961.2 |
| 2. | ஷட்டில் | — | 2 | — | 26 | 299·4 | 149·7 | 4·8 |
| 3. | டவுன் | 75 | 341 | 1,331·0 | 5·225 | 80,599·5 | 236·3 | 2,747·8 |
| 4. | மாவட்டம் | 137 | 275 | 9,559·5 | 1,598 | 92,371·0 | 335·9 | 1,967·4 |
| | | 310 | 1,285 | 12,075·5 | 19,374 | 3,15,656·3 | | 7,681·2 |

| | தடங்கள் | | பேருந்துகளின் எண்ணிக்கை | |
|---|---|---|---|---|
| | 1-1-72-ல் | 31-3-73-ல் | 1-1-73-ல் | 31-3-73-ல் |
| நகர சர்வீஸ்கள் | 116 | 120 | 646 | 698 |
| டவுன் சர்வீஸ்கள் | 60 | 61 | 246 | 251 |
| செங்கை மாவட்ட சர்வீஸ்கள் | 118 | 118 | 244 | 233 |
| | 294 | 299 | 1,136 | 1,182 |

சென்னை நகர எல்லைக்குள் ஓடிக்கொண்டிருக்கும் பேருந்துகளின் எண்ணிக்கை (9—10—74-ல் உள்ளபடி) 1000-த்தினை எட்டி இவ்வாறு பேருந்துகளின் எண்ணிக்கையை உயர்த்திக்கொண்டு விட்ட நிறுவனம், தனது செயல்முறையில் சில சிக்கல்களையும் சந்திக்க நேரிட்டது. அவற்றைச் செயல்முறை என்னும் தலைப்பில் ஆராய்வோம்.

அரசு 1973ஆம் ஆண்டு 10% அளவிற்கு உயர்த்திய உபரிக் கட்டணத்தின் (surcharge) விளைவாக, நிறுவனத்தின் செயல் முறைச் செலவு வெகுவாக உயர்ந்துவிட்டது. மேலும், இந் நிறுவனம் செலுத்தவேண்டிய வரித் தொகை உயர்ந்துவிட்டதும் இதற்கான காரணமாகக் கொள்ளலாம். இதனுடைய சராசரி வருவாய் ஜனவரி 1972-ல் 2·57 இலட்சமாக இருந்தது; மார்ச்சு 1973-ல் 2·85 இலட்சமாக உயர்ந்தது. ஒரு கிலோமீட்டர் தூரத்திற்கு கிடைத்த சராசரி வருமானம் 1·16 ரூபாயாக இருந்த திலிருந்து 1·28 ரூபாயாக உயர்ந்தது. இது 14·3 விழுக்காட்டிற்குச் சமமானது. இவ் வருவாய் உயர்வுக்குக் காரணமாக, நிறுவனத்தின் சிறப்பான நிருவாகத்தையும், முழு அளவிற்குப் பேருந்துகள் பயன்படுத்தப்பட்டதையும், நட்டத்தில் ஓடிக் கொண்டிருக்கும் பஸ்களின் தடங்களை மாற்றி அமைத்ததையும் காரணமாகக் கூறலாம்.

இப் போக்குவரத்துக் கழகம் தனது பணியினைத் துவக்கிய போது, பேருந்துகளின் டயர்களுக்கு மிகவும் தட்டுப்பாடு இருந்தது. பெரும்பாலான டயர்கள், பாதுகாப்புப் பணிக்காக

அனுப்பப்பட்டதும் இவற்றை உற்பத்திச் செய்கின்ற தொழிற் சாலைகள் வேலைநிறுத்தம் காரணமாக மூடப்பட்டதும், இக் கட்டுப்பாட்டிற்கான காரணங்களாக அமைந்தது. இதன் பயனாக, சாலையில் ஓடிக்கொண்டிருக்கும் பேருந்துகளின் எண்ணிக்கை குறைந்து போனாலும், நிறுவனத்தின் முயற்சியால் சுமார் 86% அளவிற்குப் போக்குவரத்து ஏற்பாடு செய்யப்பட்டது. மேலும், ஓட்டுநர்களை ஊக்குவிப்பதற்காக, ஏற்கெனவே அளிக்கப்பட்ட பஞ்சப்படியைவிட 60 காசுகள் அதிகமாக அளிக்கப்பட்டது. இதனால், பேருந்துகளின் ஓட்ட எண்ணிக்கையில் (Trips) ஏற்படும் நட்டம் குறையத் தொடங்கியது.

பல்லவன் போக்குவரத்துக் கழகத்தின் அன்றாட ஓட்டத் தூரம் 31-3-73-ல் உள்ளவாறு மொத்தம் 2,77,721 கிலோ மீட்டராக இருந்தது. தினந்தோறும் ஏற்றிச் செல்லப்படும் பயணியரின் எண்ணிக்கை சுமார் 13 இலட்சமென கணக்கிடப்பட்டது. தினந்தோறும் வசூலாகும் தொகை ரூ. 2·75 இலட்சமாக இருக்குமென்று கணக்கிடப்பட்டது. ஆனால், உண்மையில் ரூ. 2·78 இலட்ச ரூபாய் வசூல் செய்யப்படுகின்றது. இவ் வருவாயை மேலும், 10% அளவிற்கு பெருக்க வேண்டுமென்பதற்காக 'அன்றாட வசூலில் ஊக்க போனஸ்' என்ற திட்டம் ஒன்று முதன் முதலில் வடபழனி, வியாசர்பாடி என்னும் இரண்டு பணிமனையில் மட்டும் தொடங்கப்பட்டது. எதிர்பார்த்ததைவிட அதிக அளவு வருவாயைத் தந்ததால், இத் திட்டம் வெற்றிகரமாக, மற்றப் பணிமனைகளுக்கும் விரிவாக்கப்பட்டது. மேலும், 1973 மே முதல் தேதி முதல் சென்னை, சைதாப்பேட்டை பகுதியில் ரேடியல் முறையும் (Radial System), ஃபீடர் திட்டமும் (Feeder System) அறிமுகப் படுத்தப்பட்டன.

**உதவிப் பணத்திட்டங்கள் (Stipendiary Schemes)**

வேலையில்லாத் திண்டாட்டத்தைப் போக்கும் முயற்சியில் இந்திய அரசினாலும் தமிழ்நாடு அரசின் தொழில் மற்றும் வணிக இயக்குநராலும், அறிமுகப்படுத்தப்பட்ட உதவிப் பணத் திட்டத்தினால், சுமார் 63 பட்டதாரிகளும், 420 டிப்ளமாதாரர்களும், 368, I.I.T. தொழிற்கல்வி பெற்றவர்களும் வேலை பெற்றனர்.

**விபத்துகள்**

1973—74ஆம் ஆண்டுக் காலத்தில் சுமார் 3,271 விபத்துகள், இக் கழகத்தின் பேருந்துகளால் ஏற்பட்டதென்பதைக் குறிப்பிடுதல் அவசியமாகிறது. 31-3-73 வரை, விபத்தில் காயமடைந்தோர், ஊனமுற்றோர், உயிரிழந்தோர் இவர்களுக்கான ஆறுதல் தொகையாக ரூ. 41,110 அளிக்கப்பட்டது.

**இயக்குநர்கள்**

இயக்குநரவையில் கீழ்க்காணும் மாறுதல்கள் தற்போது செய்யப்பட்டுள்ளன. 28-1-1972 முதல் திரு. H. M. சிங், I.A.S. அவர்கள் இணை இயக்குநராகப் பதவியேற்றார். திரு. K. J. M. ஷெட்டி, I.A.S. அவர்கள் பதவி விலகியதால், திரு. R. தில்லை நாயகம் அவர்கள் நிருவாக இயக்குநராக அமர்த்தப்பட்டார்.

**தணிக்கை**

Messers J. கௌரிகாந்தன் கம்பெனியும் M/S சுவாமி அண்ட் வாசன் கம்பெனியும் தணிக்கைக்காக நியமிக்கப்பட்டன.

**பல்லவன் போக்குவரத்துக் கழகத்தின் சிறப்புப் பணிகளில் சில**

பொதுநல ஈடுபாட்டுடன் இந் நிறுவனம் பணிபுரிகின்ற தென்பதனைக் கீழ்க்காணும் சிறப்புப் பணிகளைக்கொண்டு அறியலாம்.

(1) 'மகளிர் மட்டும்', 'சிறுவர் மட்டும்' என்ற சிறப்புப் பேருந்துகள் விடப்பட்டுள்ளன.

(2) தொழிலாளர்கள் குறைந்த செலவில் பயணம் செய்வதற்கென 60 பயணங்களுக்கான கட்டணமாக 45 பயணங்களுக்கான கட்டணத்தைப் பெற்றுக் கொண்டு அனுமதிக்கின்றது.

(3) மாணவர்களின் நன்மையை உத்தேசித்து ரூ. 15 அளிக்கும், மாணவர், எப்போதும், எந்தத் தடத்திலும், எந்த நேரத்திலும் பயணம் செய்யலாமென்ற சலுகை.

(4) வெளிநாட்டவர் மட்டுமின்றி, நம் நாட்டவரும் பல ஊர்களை நன்றாகக் காணும் வண்ணம் அவர்களை அழைத்துச் செல்ல, சொகுசுப் பேருந்துகளும் விடப்பட்டுள்ளன.

(5) நகர எல்லைக்குள் குறிப்பிட்ட கட்டணத்தைச் செலுத்தி எங்கு வேண்டுமானாலும், எத்தனை முறை முறை வேண்டுமானாலும் பயணம் செய்யலாம் என்ற சலுகை வழங்கப்படுகின்றது.

(6) வாடகைக் காரோட்டிகளின் தொல்லைகளிலிருந்து நம் நாட்டிற்கு வரும் வெளிநாட்டினர் விடுபடும் வகையில் அவர்களுக்குப் பேருந்து வசதி ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது.

(7) கேரள அரசின் ஒத்துழைப்புடன் இப்போது நீண்ட தூரப் பேருந்துகள் விடப்படுகின்றன.

மேற்காணும் சிறப்புத் தன்மைகள் பல்லவன் போக்குவரத்தின் பெருமையை அதிகரிக்கின்றன என்றே கூறலாம்.

**வருவாய்ப் பகிர்வு** (Distribution of Earnings)

இந் நிறுவனத்தால் குறிப்பிட்ட காலத்தில் ஈட்டப்படும் வருவாய், டயர்கள் வாங்கவும், பராமரிப்புச் செய்யவும், வரிகள் அளிக்கவும் போன்ற பலவிதங்களில் செலவழிக்கப்படுகின்றது.




1 FUEL 18·4 %
2 REPAIRS 21·5 %
3 TYRES 3·8 %

1 CASH SURPLUS 2·3 %
2 INTEREST 1·6 %
3 TAXES 14·1 %

1 MISC. EXPENSES 1·5 %
2 SALARIES, WAGES & FRINGE BENEFITS 36·8 %

வரைபடம்-6

ஒவ்வொரு வழியிலும் எவ்வளவு தொகை செலவழிக்கின்றது என்பதைக் குறிக்கும் வரைபடத்தினை நாம் மேலே காண்போம்;

## பல்லவன் போக்குவரத்துக் கழகத்தின்

இலாப நட்டக் கணக்கு (31—3—73 ஆண்டுடன் முடிவடைந்த காலத்திற்கு)

| | | | ரூ. | பை. |
|---|---|---|---|---|
| எரிபொருள் ... ... ... | | | 2,54,30,457 | 26 |
| ஸ்டோர்ஸ், துணைப்பொருள்கள், பராமரிப்புச் செலவுகள் | | | 2,96,43,073 | 59 |
| டயர், ட்யூப்கள் ... ... ... | | | 52,18,013 | 70 |
| சம்பளம், கூலி, போனஸ் | | | | |
| கிராஜுவ்டி | 4,70,19,846 | 30 | | |
| வருங்கால நிதியமைப்புக்கு அளித்தது | 18,45,557 | 84 | | |
| ஊழியர்நலச் செலவுகள் | 18,29,248 | 04 | | |
| நிருவாக இயக்குநரின் ஊதியம் | 37,448 | 55 | | |
| | | | 5,07,32,100 | 73 |
| பவர் மின்விளக்கு ... ... ... | | | 4,57,050 | 97 |
| கட்டடங்களைப் பழுதுபார்த்தல், புதுப்பித்தல் போன்றவை | | | 1,67,235 | 21 |
| வாடகை, வரி, கட்டணங்கள் ... ... | | | 2,21,137 | 14 |
| மோட்டார் வண்டி வரிகள்போன்றவை ... | | | 1,93,69,490 | 95 |
| வட்டிகள் ... ... ... | | | 19,62,650 | 83 |
| தணிக்கைக் கட்டணம் ... ... ... | | | 15,000 | 00 |
| அபராதங்கள், கோரிக்கைகள் ... ... | | | 43,865 | 00 |
| தேய்மானங்கள் ... ... ... | | | 25,75,032 | 82 |
| இதரச் செலவினங்கள் ... ... | | | 11,10,656 | 28 |
| வளர்ச்சிக்கான ஒதுக்கீடு ... ... | | | 7,000 | 00 |
| தொடக்கநிலைச் செலவுகள் (எடுத்துவிடப்பட்டது) | | | 7,750 | 00 |
| | | | 14,69,60,514 | 48 |

| | ரூ. | பை. |
|---|---|---|
| பயணியர் கட்டணம் | 13,20,76,256 | 66 |
| பல்வகை வருமானங்கள் | 45,82,853 | 88 |
| முதலீடுகளின்மீதான வட்டிகள் | 1,03,413 | 93 |
| பணிமனை இலாபம் | 8,28,480 | 17 |
| நிகர நட்டம் | 93,69,509 | 84 |
| | 14,69,60,514 | 48 |

பொதுமக்களின் வாழ்க்கையோடு ஒன்றிப் பொதுநல ஈடு பாட்டுடன் இயங்கிவரும் இந் நிறுவனம் இவ்வளவு அதிகமான தொகையை நிகர நட்டமாகப் பெற்றிருப்பதன் காரணங்களுள்:

(1) விரிவாக்கப் பணிகளுக்கான செலவுகள்.

(2) சமுதாயத்தில் ஏற்படும் கொந்தளிப்பால் பேருந்து களுக்கு விளைவிக்கப்படும் சேதம் போன்றவற்றைக் குறிப்பிடலாம்.

'என் கடன் பணிசெய்து கிடப்பதே' என்று தன் பணியினை அயராது செய்து வருகின்ற இப் பல்லவன் போக்குவரத்துக் கழகம் பாராட்டுக்குரியது.

**பிற நிறுவனங்கள்**

தமிழ்நாட்டிலுள்ள தனியார் நிறுவனங்கள் பலவற்றை அரசுடைமையாக்கிக் கீழ்க்காணும் நிறுவனங்கள் உருவாக்கப் பட்டுள்ளன:

(1) சேரன் போக்குவரத்துக் கழகம், கோவை.

(2) சோழன் போக்குவரத்துக் கழகம், குடந்தை.

(3) பாண்டியன் போக்குவரத்துக் கழகம், மதுரை.

(4) அண்ணா போக்குவரத்துக் கழகம், சேலம்.

மேற்காணும், ஐந்து நிறுவனங்களும், தமிழக அரசின் ஐந்து சாதனைகளாகவே உருவாக்கப்பட்டுள்ளன. இதன்மூலம் நல்ல பணியை நாட்டு மக்களுக்கு அவை ஆற்றுமென்று எதிர்ப்பார்ப் பது தவறாகாது.

## நீர்வழிப் போக்குவரத்து

"திரை கடலோடியும் திரவியம் தேடு" என்பது பழமொழி. இப் பழமொழிக்கேற்ப, திரவியம், அதாவது, செல்வம் தேடுவதற் கென்று மட்டுமின்றி, கல்வி வளர்ச்சிக்காகவும், வாணிகப் பொருள்களைப் பிற நாடுகளிலிருந்து இறக்குமதி செய்வதற்காக வும், சுற்றுலா செல்லும் பொருட்டும் இன்னும் இவைபோன்று பிற நாடுகளுடன் தொடர்புக்கொள்ளும் செயல்களுக்காகவும், நீர்வழிப் போக்குவரத்து இன்றியமையாது விளங்குகிறது. இருப்புப்பாதைப் போக்குவரத்து எளிதானதாகவும், குறைந்த செலவுள்ளதாகவும் உள்ளது. ஆனால், துரிதப் பயணத்திற்கு

ஏற்றதாக இல்லாமலும் மிகப் பெருமளவில் சரக்குகளை ஏற்றிச் செல்ல இயலாததாயும் அஃது உள்ளது. வான்வழிப் போக்குவரத்து மிகத் துரிதமானதாக உள்ளது. இருப்பினும், மிகவும் அதிக அளவுக் கட்டணத்தை வசூலிப்பதாகவும், பளுவான பொருள்களை ஏற்றிச் செல்ல இயலாததாகவும் உள்ளது. இவை இரண்டையும்விட, நீர்வழிப் போக்குவரத்து மிகச் சிறந்ததென்று கூற இயலாவிட்டாலும், மிகப் பளுவான பொருள்களை நீர்வழிப் போக்குவரத்தின்மூலம் பல இடங்களுக்கு அனுப்பமுடியும். மேலும், புகைவண்டிப் போக்குவரத்தில் விதிக்கப்படும் கட்டணத்தைவிட, நீர்வழிப் போக்குவரத்தின் கட்டணங்கள் மிகக் குறைவானதாகவே உள்ளன. ஆனால், இவ்வகைப் போக்குவரத்தில் மிகவும் காலதாமதம் ஏற்படவும் வாய்ப்புண்டு. இருப்பினும், நீர்வழிப் போக்குவரத்தும் இன்றையதினம், மக்களின் பயணத்திற்காகவும், சரக்குகளின் இடமாற்றத்திற்காகவும் பெரிதும் பயன்படுத்தப்படுகின்றது என்பதை நாம் நினைவிற்கொண்டு, நீர்வழிப் போக்குவரத்தை அளிக்கும் நிறுவனங்கள் எத்தகையவை, அவை எவ்வகைகளில் மக்களுக்குப் பணிபுரிகின்றன என்பதுபற்றி ஈண்டு நோக்குவோம்.

நீர்வழிப் போக்குவரத்து எனப்படுவது உள்நாட்டு நீர் வழிகள், வெளிநாட்டு நீர்வழிகள் என இருவகைப்படும். உள்நாட்டு நீர்வழிகள் எனப்படுவது ஒரு நாட்டிலுள்ள ஆறுகள். கால்வாய்கள் இவற்றைப் பயன்படுத்தி அளிக்கப்படும் போக்குவரத்து வசதியைக் குறிக்கும். இந்தியாவில் சுமார் 14,000 கிலோ மீட்டர் தொலைவுள்ள போக்குவரத்திற்கான நீர்வழிகள் உள்ளன. சில வகைக் கால்வாய்கள், பெரிய கப்பல்கள் வந்து போகும் அளவிற்குக்கூட பெரியவையாகவும், ஆழம் மிகுந்தவையாகவும் இருக்கின்றன. எடுத்துக்காட்டாக, சூயஸ் கால்வாய், பனமாக் கால்வாய் போன்றவற்றைக் கூறலாம்.

### ஆற்றுவழிப் போக்குவரத்து (River Transport)

இந்தியாவிலுள்ள பல ஆறுகள் போக்குவரத்திற்கு ஏற்றவையாக இருக்கின்றன என்பது உண்மை எனினும், இவை வருடம் முழுவதும் போக்குவரத்திற்குத் தகுதி உடையனவாயிருக்கின்றனவா என்பது ஐயத்திற்குரியதே. மேலும், நாட்டின் சில பகுதிகளிலுள்ள ஆறுகள் ஆழமானதாகவும், போக்குவரத்திற்கேற்றதாகவும் இருந்தபோதிலும், வேறு சில பகுதிகளில் அவை பயனற்று இருக்கின்றன. எவ்வாறாயினும், மிகப் பளுவான பொருள்களை ஏற்றிச் செல்ல ஆற்றுவழிப் போக்குவரத்துப் பெரிதும் பயன்படுகிறது என்பது உண்மை.

**கால்வாய்வழிப் போக்குவரத்து**

ஆற்றுவழிப் போக்குவரத்தைப் போலவே, எளிதானதாகவும், குறைந்த செலவினை உடையதாகவும், கால்வாய்வழிப் போக்குவரத்து விளங்குகின்றது. நிலக்கரி, மரங்கள், செங்கற்கள், உப்பு, மிளகு மூட்டைகள் போன்றவற்றை ஏற்றிச் செல்ல இம்முறை பெரிதும் பயன்படுகின்றது. சில சமயங்களில் பொருள்களை ஏற்றுமதி செய்வோரின் கிடங்குகள் நீர்நிலைக்கருகே இருக்குமேயாயின், படகுகளை அவ்விடங்களுக்கே கொண்டு சென்று, உடனுக்குடன் பொருள்களை ஏற்றிச் செல்லமுடியும். அடுத்து, அதிர்ச்சியால் நொறுங்கக்கூடிய பொருள்களைப் பத்திரமாகக் கால்வாய் வழியே எடுத்துச் செல்லமுடியும். இந் நன்மைகள் அனைத்தும் நமக்குக் கிடைக்குமென்றாலும், கால்வாய்ப் போக்குவரத்தில் உள்ள சில குறைபாடுகளையும் ஆராயவேண்டும். முதலாவதாக, கால்வாய்ப் பாதைகள் சீரான ஆழத்தை உடையதாக இருப்பதில்லை. இதனைச் சரிசெய்வதற்காக லாக்ஸ் (Locks) முறைகள் ஏற்படுத்தப்படவேண்டும். இதனால், அதிக செலவு ஏற்படும்.

**கடல்வழிப் போக்குவரத்து**

இயற்கை அன்னையின் எழில் கொஞ்சும் கடல்களைப் பயன்படுத்தி, போக்குவரத்து வசதியைப் பெருக்கிக் கொள்வது இன்றையதினம் அரிதான செயலன்று. ஒவ்வொரு நாட்டினுடைய பொருளாதாரமும், அதனுடைய கடல்வழிப் போக்குவரத்தோடு இணைந்துள்ளது. ஒரு நாடு அந்நிய நாடுகளுடன் தொடர்பு கொள்ளவும், பொருள்களை ஏற்றுமதி, இறக்குமதி செய்யவும், கடல்வழிப் போக்குவரத்தினைப் பெரிதும் எதிர்நோக்கியுள்ளது. இத்தகைய இன்றியமையாமை படைத்த கடல்வழிப் போக்குவரத்திற்கு நான்கு வகைச் சாதனங்கள் பயன்படுத்தப்படுகின்றன. அவை,

(1) கரையோரப் படகுகள் (Coastwise Service).

(2) பயணக் கப்பல்கள் (Liner Service)

(3) சரக்குக் கப்பல்கள் (Tramp).

(4) பயணியர் மற்றும் சரக்குக் கப்பல்கள் (Cargo Liner Service)

என்பவையாகும்.

**கரையோரப் படகுகள்**

ஒரு நாட்டின் கடற்கரையோரங்களிலுள்ள எல்லாத் துறைமுகங்களுக்கு மட்டுமின்றி, கரையோரத்திலுள்ள நகரங்களுக்கும்

இப் படகுகள் சென்று வரும். பொருள்களை ஓரிடத்திலிருந்து மற்றொரு பகுதிக்கு எடுத்துச் செல்ல இவை பயன்படுத்தப்படும். இவற்றிற்கென முறையான ஒரு பாதை, குறிப்பிட்ட கால அட்டவணைப் போன்றவை ஏதுமில்லை. சரக்குக் கப்பல்கள் கண்டு பிடிக்காத காலங்களில் இவையே பெரிதும் பயன்படுத்தப்பட்டு வந்தன.

**பயணக் கப்பல்கள்**

இவை முறையான வரையறுக்கப்பட்ட பாதையில் குறிப் பிடப்பட்ட நாள்களில், ஓரிடத்திலிருந்து புறப்பட்டு மற்றோரிடத் திற்குப் பயணியரை ஏற்றிச் செல்பவையாகும். தனியார் கப்பல் நிறுவனங்கள் பல இப் பணியில் ஈடுபட்டுள்ளன. பெரும்பாலும் மக்களை ஏற்றிச் செல்லவே இவை பயன்படுத்தப்பட்டாலும், சில நேரங்களில் சரக்குகளையும் ஏற்றிச் செல்லப் பயன்படுகின்றன.

**சரக்குக் கப்பல்கள்**

இவை சரக்குகளை ஏற்றிச் செல்லப் பயன்படுத்தப்படுகின் றன. கப்பல் நிறைய ஏற்றிச் செல்லச் சரக்குகள் கிடைக்காத போது இவை சிறிது தாமதமாகவும் புறப்பட்டுப் போகலாம். அவ்வாறன்றி, உரிய நேரத்தில் புறப்பட்டுப் போகக்கூடிய சரக் குக் கப்பல்கள் வெற்றிடத்துடன் போக நேரிட்டால், கப்பல் கம்பெனிக்குச் சிறிது நட்ட ஈட்டுத்தொகை கொடுக்கப்படும்.

**பயணம் மற்றும் சரக்குக் கப்பல்கள்**

இவை சில நேரங்களில் சரக்குகளையும், சில நேரங்களில் பயணியரையும் மற்றும் சில நேரங்களில் இரண்டினையும் ஏற்றிச் செல்லுபவையாயிருக்கின்றன. எண்ணெய் போன்றவற்றை ஏற்றிச் செல்லத் தொட்டி (Tank) வசதி பெற்ற சரக்குக் கப்பல் களும் உணவுப் பொருள்களை ஏற்றிச் செல்ல, 'குளிர்பதன' வசதி படைத்த உணவுக் கப்பல்களும் பயன்படுத்தப்படுகின்றன.

**"கூட்டாலோசனை முறை" (The Conference System)**

குறிப்பிட்ட ஒரு கால அட்டவணைப்படி, வரையறுக்கப்பட்ட ஒரு பாதையில் சென்று வரக்கூடிய பலவிதக் கப்பல்களின் நிறு வனங்களுக்குள், கடுமையான போட்டி ஏற்படலாம். இப் போட்டியின் காரணமாகப் பல தீமைகள் விளையலாம். எனவே, கப்பல் நிறுவனங்கள் தங்களுக்குள் ஏற்படுகின்ற போட்டியினைத் தீர்ப்பதற்காக, அவ்வப்போது ஒன்றுகூடிச் சந்தித்து தங்களுக் குள் ஏற்படுகின்ற கருத்து வேற்றுமைகளைப் பரிமாறிக்கொள்வ துடன், தாங்கள் கடைப்பிடிக்கவேண்டிய முறைகளைப்பற்றியும்

ஆலோசிக்கின்றன. இவ்வாறு ஒன்றுகூடிக் கலந்தாலோசித்த பின்னர் எடுக்கப்பட்ட முடிவுகள் அனைவராலும் ஏற்றுக் கொள்ளப்படுபவையாகும். இம் முறைக்குக் 'கூட்டாலோசனை முறை' என்று பெயர். இதன்மூலம் தேவையற்ற மற்றும் வீணை போட்டியினைத் தவிர்க்கும் நன்மை ஏற்படுகின்றது.

**கட்டணத் தள்ளுபடி முறை (Defended Rebate System)**

இம் முறையில் கப்பல் கம்பெனிக்கும் பொருள்களின் ஏற்றுமதி செய்யும் தரகருக்கும் இடையே ஓர் ஒப்பந்தம் ஏற்படுகின்றது. பெரும்பாலான நேரங்களில் கப்பல் நிறைய ஏற்றிச்செல்லப் போதுமான அளவு சரக்குக் கிடைக்காவிட்டால், கப்பலின் பயணம் இலாபகரமானதாக இருக்காது. இச் சமயத்தில் ஏற்படும் நட்டத்தினைச் சரக்குகள் அதிகமாகக் கிடைக்கும் காலத்தில் சரிக்கட்டவேண்டும். ஆனால், ஏற்றுமதிக்கான பொருள்களை ஏற்பாடு செய்துதரும் தரகுக் கம்பெனிகள் தொடர்ந்து ஒரே கப்பலுக்குப் பொருள்களை ஏற்றுமாறு செய்வார்களென எதிர்பார்க்க முடியாது. அவ்வாறு, அவர்கள் தொடர்ந்து ஒரே கப்பலில் பொருள்களை ஏற்றுமதி செய்யவேண்டுமானால், அதனால் அத்தரகுக் கம்பெனிகளுக்குப் பயன் ஏதுமிருக்கவேண்டும். கப்பலின் வாடகையைக் குறைத்துக்கொண்டு பொருள்களை ஏற்றிச் செல்ல இசைவதன்மூலம்தான் தரகுக் கம்பெனியாரின் நட்பினையும் வாடிக்கையையும் பெறமுடியும். இவ்வாறு கட்டணத்தைக் குறைவாக விதிப்பதன்மூலம் தொடர்ந்த 'வாடிக்கையைப் பெறும் முறைக்கு' 'கட்டணத் தள்ளுபடி முறை' (Defended Rebate System) என்று பெயர்.

**உடன்படிக்கை முறை (The Agreement System)**

உறுதியளிக்கப்பட்ட தள்ளுபடியிலிருந்து சற்று மாறுபட்ட முறை இது. இதன்படி பொருள்களை ஏற்றுமதி செய்யும் வியாபாரி ஒருவர் தமது பொருள்கள் அனைத்தையும் எப்போதும் ஒரு குறிப்பிட்ட கப்பலின் மூலமாக மட்டுமே ஏற்றுமதி செய்வதாக உறுதியளிப்பார். இதற்குக் கைம்மாருக, அக் கப்பலின் உரிமையாளர், குறைந்த கட்டணத்தைப் பெற்றுக்கொண்டு தொடர்ந்த போக்குவரத்தினை அளிப்பதாக உறுதியளிப்பார். பிற வாடிக்கையாளரிடமிருந்து வசூலிக்கப்படும் கட்டணத்தைவிட, தொடர்ந்து ஏற்றுமதி செய்கின்ற இவ் வியாபாரியிடமிருந்து வசூலிக்கப்படும் கட்டணம் குறைவாக இருத்தலே நியாயமானது. இம்முறை வியாபார நடவடிக்கைகள் அதிகமாகவே இருக்கும் பகுதியில் வழக்கத்திலுள்ளது.

**இந்தியக் கடல் போக்குவரத்து முறை**

இந்தியாவிலுள்ள கடல் போக்குவரத்து முறையைப்பற்றி ஆராயும் பொருட்டு, இரண்டாவது உலகப் போருக்குப் பின்னர், இந்திய அரசின் திட்டத்துறையின் சார்பில், 'கடல் போக்கு வரத்துக் கொள்கைக் கமிட்டி' என்ற ஒன்று ஏற்படுத்தப் பட்டது. தனது அறிக்கையை 1947-ல் வெளியிட்ட இக் கமிட்டி யின் கருத்துப்படி, ஆழ்கடலில் செல்லத் தக்க கப்பல்களின் எண்ணிக்கை இந்தியாவில் மிகவும் வருந்தத்தக்க நிலையிலுள்ளது. எனவே, இச் சூழ்நிலையை உடனடியாகச் சரிசெய்யும் வண்ணம், தக்க நடவடிக்கைகளை எடுக்குமாறு அரசிற்கு ஆலோசனை வழங் கப்பட்டது. மேலும், நம் நாட்டிற்குச் சொந்தமான கப்பல்கள் 20 இலட்சம் டன் GRT எடைக்கொள்ளளவு உள்ளவாறு அமைய வேண்டும் என்றும் கூறப்பட்டது. இந்தியக் கடற்கரையோரங் களிலிருந்து நடைபெறும் கடல் வாணிகம் முழுவதும் இந்தியக் கப்பல்களின் மூலமாகவே செய்யப்படவேண்டும் என்ற கொள்கை பெரிதும் வலியுறுத்தப்பட்டு வந்தது. இதன் விளைவாக, 1951 ஜனவரி முதல்நாள் முதல், இந்தியக் கடற்கரையோர வாணிகக் கொள்கை வரையறுக்கப்பட்டு அமலுக்கு வந்துள்ளது. இதைத் தவிர, 1947ஆம் ஆண்டு தீர்மானிக்கப்பட்ட இந்தியக் கப்பல்களின், 'போக்குவரத்துக் கொள்கை'ப்படி கடற்கரை வாணிகத்தில் இந்தியக் கப்பல்களுக்கு முதலிடம் அளிக்கப்பட வேண்டும் என்ற கருத்து ஏற்றுக்கொள்ளப்பட்டது. எவை எவை இந்தியக் கப்பல்களாகக் கருதப்படவேண்டுமென்பதற்குக் கீழ்க்காணும் குறிப்புகள் பெரிதும் உதவும்.

இந்தியக் கப்பல்கள் என்று சொல்லப்பட்டவை,

(1) இந்தியத் துறைமுகம் ஏதாவது ஒன்றில் பதிவுசெய் யப்பட்டிருக்கவேண்டும்.

(2) இந்தியக் கப்பல் கம்பெனிகளின் மொத்தப் பங்கு களிலும் கடன் பத்திரங்களிலும் குறைந்தது 75% பங்குகள் இந்தியர்கள் பெற்றிருக்கவேண்டும்.

(3) இக் கப்பல் கம்பெனிகளின் இயக்குநர்கள் அனைவரும் இந்தியர்களாகவே இருத்தல்வேண்டும்.

(4) இக் கம்பெனியை நிருவகிக்கும் பொருட்டு, 'நிருவாகப் பதிலாள்' (Managing Agent) எவரேனும் நியமிக் கப்பட்டிருந்தால், அவர் இந்தியராகவே இருக்க வேண்டும். ஆனால், தற்போது நிருவாகப் பதிலாள் முறை அறவே ஒழிக்கப்பட்டுவிட்டது என்பதும்

குறிப்பிடத்தக்கது. மேற்காணும், குறிப்புகளைக் கொண்டு ஒரு கப்பல் நிறுவனம் இந்திய நிறுவனமா அல்லது வெளிநாட்டு நிறுவனமா என்று தீர்மானித்துவிடலாம். இந்திய நிறுவனமென்றால், அந் நிறுவனத்திற்குச் சிறப்புச் சலுகைகள் பல அளிக்கப்படுவதுடன், அயல்நாட்டு வியாபாரத்திலும் முதன்மை அளிக்கப்படும். இச் செய்திகளிலிருந்து இந்தியக் கப்பல் போக்குவரத்து மிகவும் அண்மைக் காலத்தில்தான் தோன்றி, வளர்ந்துள்ளது என்பது விளங்கும். குறிப்பாகச் சொல்லப்போனால், 1948ஆம் ஆண்டில்தான் முதன்முதலாக, வெளிநாட்டு வாணிகத்தில் இந்தியக் கப்பல்கள் ஈடுபட்டன எனலாம். 'இண்டியா' (India) நிறுவனத்தாரால் இயக்கப் பட்டுவந்த 'விசாகப்பட்டினம் கப்பல்தளம்' 1952ஆம் ஆண்டு மார்ச்சுத் திங்களில், அரசினரால் ஏற்றுக்கொள்ளப்பட்டது. இதன் பின்னர், இந் நிறுவனம், 'ஹிந்துஸ்தான் ஷிப்பிங் லிமிடெட்' (H.S.L.) என்ற பெயருடன் இயங்கி வருகின்றது.

இந்தியக் கப்பல் துறையில் தற்போது ஏற்பட்டுள்ள மாற்றங்கள் பின்வருவனவாம்:

(1) 'ஷிப்பிங் கார்ப்பொரேஷன் ஆப் இந்தியா' (Shipping Corporation of India) என்ற அமைப்பு ஏற்படுத்தப்பட்டுள்ளது.

(2) இந்தியக் கப்பல்களின் கொள்ளளவும், அவற்றின் நிறையும் அதிகரிக்கப்பட்டு வெளிநாட்டுப் பயணத் திற்கேற்றவாறு ஆக்கப்பட்டுள்ளது.

(3) பொதுத்துறையில் (அரசினர் துறை) கப்பல் போக்கு வரத்தினை ஏற்று நடத்துவதென்ற முடிவு.

**சாதனைகள்**

இந்தியக் கப்பல் துறையின் சாதனைகளில் கீழ்க்கண்டவற்றைக் குறிப்பிடலாம்: 1962ஆம் ஆண்டு, ஒரு டன் மில்லியன் எடையளவை இந்தியக் கப்பல்கள் மிஞ்சிவிட்டன.

1963ஆம் ஆண்டு இந்தியக் கப்பல் கம்பெனிகளுக்குச் சொந்தமான கப்பல்களின் எண்ணிக்கை 30 ஆக இருந்தது. 1964ஆம் ஆண்டு ஜனவரி முதல் நாளன்று 208 ஆக உயர்ந்தது. 1966-ல் இது 231 ஆக மேலும் உயர்ந்தது.

கப்பல் கட்டணமென்ற முறையில் இந் நிறுவனங்களால் வசூலிக்கப்பட்ட தொகை ஆண்டொன்றுக்கு 100 கோடி ரூபாயைத் தாண்டிவிட்டது. இதன்மூலம் சுமார் கோடி ரூபாய் வெளி நாட்டுச் செலாவணியாகக் கிடைத்தது.

மேற்காணும் செய்திகள் உற்சாகமளிப்பவையாக இருந்த போதிலும், இந்தியாவின் அயல்நாட்டு வாணிகத்திற்கு வெளி நாட்டுக் கப்பல்களையே பெரிதும் (சுமார் 86%) நம்பியிருக்க வேண்டியுள்ளது. 'தி ஈஸ்டர்ன் ஷிப்பிங் கார்ப்பொரேஷன்' என்றும், 'தி வெஸ்டர்ன் ஷிப்பிங் கார்ப்பொரேஷன்' என்றும் இரு பெயர்களில் இயங்கி வந்த நிறுவனங்கள் 1961ஆம் ஆண்டு அக்டோபர்த் திங்கள் 2ஆம் நாள் முதல் (அண்ணல் காந்தி பிறந்த நாள்) ஒருங்கிணைந்து 'ஷிப்பிங் கார்ப்பொரேஷன் ஆப் இந்தியா' என்ற பெயரில் ஒன்றாக இயங்க ஆரம்பித்தன. தற்போது இந்தியக் கப்பல்கள் இந்தியா—ஆஸ்திரேலியா, இந்தியா—தூரக் கிழக்கு நாடுகள், ஜப்பான், இந்தியா—கருங்கடல், இந்திய மேற்குக் கடற்கரை—மேற்குப் பாகிஸ்தான்—ஜப்பான், இந்தியா — பாகிஸ்தான் — யு. கே., இந்தியா — போலண்ட், இந்தியா—ஐக்கிய நாடுகள், இந்தியா—ஐக்கிய அமெரிக்க நாடுகள் என்னும் ஒன்பது வழித்தடங்களில் சென்று வருகின்றன. இவற்றைத் தவிர,

"இண்டியா ஸ்டீம் நேவிகேஷன் கம்பெனி"
"ஜயந்தி ஷிப்பிங் கம்பெனி'
"இண்டியன் ஸ்டீம் ஷிப்பிங் கம்பெனி"
"கிரேட் ஈஸ்டர்ன் ஷிப்பிங் கம்பெனி"
"ரத்னு நகர் ஷிப்பிங் கம்பெனி"
"சௌகூல் ஸ்டீம் ஷிப்பிங் கம்பெனி"
"ஏ.பி.ஜே. லைன்ஸ்"
"சௌத் இண்டியா ஷிப்பிங் கார்ப்பொரேஷன்"

மற்றும் 'டெம்போ ஸ்டீம் ஷிப் கம்பெனி' போன்ற நிறுவனங்கள் இயங்கி வருகின்றன. இவற்றுள், ஜயந்தி ஷிப்பிங் கம்பெனியை அரசே ஏற்று நடத்தத் தொடங்கியுள்ளது. எனவே, தற்போது தனியார் துறையிலும், அரசினர் துறையிலும் மொத்தம் 37 நிறுவனங்கள் இயங்கி வருகின்றன.

**கப்பல் நிறுவனங்களை நாட்டுடைமையாக்கல்**

கடல் போக்குவரத்து, மற்றும் இருப்புப்பாதைப் போக்குவரத்து நிறுவனங்களை நாட்டுடைமையாக்கியதுபோலவே, கப்பல்

வழிப் போக்குவரத்தில் ஈடுபட்டுள்ள நிறுவனங்களையும் நாட்டுடைமையாக்க வேண்டுமென்ற கருத்துத் தற்போது வலியுறுத்தப்பட்டு வருகின்றது. உலகெங்கிலுமுள்ள பல்வேறு கப்பல் கம்பெனிகளிடமிருந்தும் கடுமையான போட்டியினை ஏற்றுச் சமாளிக்க, இந்தியக் கப்பல் கம்பெனிகளால் இயலாதென்றும், இதனை வலிமைபடைத்த அரசே ஏற்று நடத்த வேண்டுமென்றும் வேண்டப்பட்டது. ஆனால், தனியார் துறையில் இருப்பது போன்ற திறமையும் தேர்ச்சியும் அரசுடைமையாக்கப்பட்ட நிறுவனங்களில் காணப்படுமா என்பது ஐயத்திற்குரியதே. எனவே, தனியார்துறை நிறுவனங்களை அதிக அளவில் முறைப்படுத்துவதன் மூலமாக வெற்றிகரமாக நடத்தலாம் என்று உணரப்படுகின்றது.

1958ஆம் ஆண்டு இயற்றப்பட்ட 'தி மெர்ச்சன்ட் ஷிப்பிங் சட்ட'த்தின்படி (The Merchant Shipping Act) 'தேசியக் கப்பல் அவை' (National Shipping Board) என்ற ஓர் அமைப்பு ஏற்படுத்தப்பட்டது. இந்த அவையில் உள்ள அங்கத்தினர்களில் அறுவர் பாராளுமன்றத்தால் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களாயும், மற்றவர்கள் (16-க்கு மேற்படாத எண்ணிக்கையில்) மத்திய அரசாலும், கப்பல் உரிமையாளர்களாலும் தேர்ந்தெடுக்கப்படுவார்கள். அவைத் தலைவர் (Chairman) மத்திய அரசால் நியமிக்கப்படுவார். இந்த அவையின் இன்றியமையாத பணிகளுள், அரசிற்கு ஆலோசனை கூறும் பணி மிகவும் குறிப்பிடத்தக்கதாகக் கருதப்படுகிறது. மேலும், இச் சட்டத்தில் 'டைரக்டர் ஜெனரல் ஆஃப் ஷிப்பிங்' என்னும் அதிகாரியை நியமிப்பதுபற்றியும், இந்தியக் கப்பல்களைப் பதிவுசெய்யும் முறைகள் பற்றியும் விரிவாகக் கூறப்பட்டுள்ளது.

தரை வழியிலும் விண்வெளியிலும் உள்ள போக்குவரத்து முறைகளைக் கண்டுபிடித்த மனிதன், கடல்வழிப் பயணத்தையே முதன்முதலாகக் கொண்டிருந்தான் என்பது குறிப்பிடத்தக்கது. இத்துணைப் பழமைவாய்ந்த கடல்வழிப் போக்குவரத்து உலக நாடுகள் அனைத்திலும் வளர்ச்சியடைந்திருப்பினும், இந்தியாவைப் பொறுத்தவரையில் 'இந்தியக் கப்பல்துறை' இன்னும் வளர வேண்டிய நிலையில்தான் உள்ளது என்பதையும் நாம் நினைவிற் கொள்ளவேண்டும்.

## மருத்துவ மனைகள்

நரையும் திரையும் பெற்று, உடல் நலிவுற்றுப்போகும் நிலையில், மருத்துவரின் மகத்தான உதவியை நாடிச் செல்லுதல்

அனைவர்க்கும் இயல்பு. பொருள்வசதி படைத்தோர், தமக்கென ஒரு மருத்துவரைத் தனியே அமர்த்திக்கொண்டு சிகிச்சை பெறலாம். ஆனால், உடல் நலம் மட்டுமின்றி பொருள் நலமும் இழந்து வாழுகின்ற பெரும்பாலான மக்களால் இத்தகைய சிறப்பான மருத்துவ உதவியைப் பெற முடியாது. இவர்களுக்குத் தேவையான மருத்துவ உதவியை அளிக்க, அரசே முன்வரவேண்டும். உண்ண உணவு, உடுக்க உடை, இருக்க இடம் இவை மூன்றும் அனைவருக்கும் மிகக் குறைந்த அளவிலாவது கிடைக்கும்படி செய்கின்ற அரசின் பணி 'நலமுடைச் சமுதாயத்தை' உருவாக்க வல்லது. எனினும், உடல்நலம் குன்றிவருவோரின் துயரினைப் போக்கவும் அரசு ஆவன செய்ய வேண்டும். தனியார் தொழிற்சாலைகளில் பணி புரிகின்றோருக்கு, மருத்துவ-உதவி-ஈட்டுத் தொகை அளிக்கப்படுகின்றது. அரசுக்குச் சொந்தமான தொழில் நிலையங்களில் பணி புரிவோருக்கென அரசு மருத்துவ மனைகள் (E. S. I.) தனியே துவக்கப்பட்டுள்ளன. இவ்வாறு செல்வந்தர், தொழிலாளர் என்ற இரு வகையினருக்கும் மருத்துவ வசதிகள் அளிக்கப்பட்டுவிட்டாலும் இவர்களை விடுத்து எஞ்சியுள்ள, பொதுமக்களின் உடல்நலம் பேணுதற்காக என்னென்ன வசதிகள் செய்யப்பட்டுள்ளன என்று ஈண்டு ஆராய்வோம்.

நமது ஆராய்ச்சியை மேற்கொண்டு தொடரும் முன்னர், மருத்துவ மனைகளைத் தேர்ந்தெடுத்து அவற்றை நடத்துவதை எவ்வாறு பொதுப்பயன் தொழில்களுக்கு ஒப்பானதாகக் கருத முடியும் என்ற வினா ஒருவருக்கு எழலாம். இதுகாறும் பலமுறை விளக்கமுறக் கூறப்பட்டதுபோன்று, 'பொதுநல ஈடுபாட்டுடன்' எந்தத் தொழில் செய்யப்படுகின்றதோ, அதற்குப் பொதுப்பயன் தொழில் என்ற பெயரினைத் தயக்கமின்றி வழங்கலாம். எனவே, பொதுமக்களின் நன்மைக்காக தான் ஆற்றவேண்டிய கடமையை உணர்ந்து, அரசு மருத்துவமனைகளைத் தோற்றுவித்து நடத்துமேயானால், அவையும் பொதுப்பயன் தொழில்களாகவே கருதப்படும் என்பதில் ஐயமில்லை.

பிறவகைப் பொதுப்பயன் தொழில்களுக்கும், மருத்துவ மனை வசதிகளுக்கும் ஒரு வேறுபாடு உண்டு. அதாவது, குடிநீர், மின்திறன், போக்குவரத்துபோன்ற வசதிகளை அளிக்கின்ற நிறுவனங்கள் தாங்கள் அளிக்கின்ற பொருள்களுக்காகவும் வசதிகளுக்காகவும், குறிப்பிட்ட நியாயமான ஒரு கட்டணத்தைப் பெற்றுக்கொள்கின்றன. இதன்மூலம், அத் தொழில்களின் நடைமுறைச் செலவுகளையும் உற்பத்திச் செலவுகளையும் ஒருவாறு சரிக்கட்ட முடிகின்றது. ஆனால், அரசுத் தரப்பில் நடத்தப்படும் மருத்துவ மனைகளில் இலவசமாகவே மருத்துவ வசதிகள் அளிக்

கப்படுவதால் அதற்கான செலவினை அரசே ஏற்றுக்கொள்கின்றது. மேலும் அரசு மருத்துவ மனைகளில் உதவி பெறவரும் பொது மக்கள் மூன்று வகையாகப் பிரிக்கப்பட்டு, அதற்கேற்றாற்போல், கட்டணம் வசூலிக்கப்படுகிறது. மிகக் குறைந்த வருவாய் உடைய வரும் வருவாயற்றவர்களும், முதற் பிரிவினைச் சார்ந்தோராவர். இவர்களுக்கு அளிக்கப்படும் மருந்து வகைகளுக்கும், மருத்துவ வசதிகளுக்கும் மற்றும் உணவு, உறையுள் இவற்றிற்குமே கட்டணம் ஏதும் வசூலிக்கப்படாமல் இவை இலவசமாக அளிக்கப்படுகின்றன. அரசின் பதிவு பெறாத அதிகாரிகளுக்கும் (N.G.O.) இத்தகைய சலுகைகள் உண்டு. அரசின் பதிவுபெற்ற அதிகாரிகள் இரண்டாவது வகையினராகக் கருதப்படுவர். இவர்களுக்கு அளிக்கப்படும் உணவு, உறையுள் இவற்றிற்குமட்டும் கட்டணம் வசூலிக்கப்படும். இவர்களைத் தவிர, செல்வந்தர் என்ற முறையில் தனிக் கவனம் பெற விழைவோரிடமிருந்து, அதிக அளவுக் கட்டணம் வசூலிக்கப்படுகின்றது. இவர்கள் மூன்றாவது பிரிவினைச் சார்ந்தவராவர்.

நமது நாட்டிலுள்ள மருத்துவ மனைகளின் எண்ணிக்கை மிகவும் சொற்பமென்றே கூறிவிடலாம். மத்திய அரசும், மாநில அரசுகளும் மருத்துவத் துறைக்கென ஆண்டுதோறும் ஒதுக்கீடு செய்யும் தொகை அதிகரித்துக்கொண்டேபோகிறதென்றாலும், மருத்துவரின் எண்ணிக்கையோ, மருத்துவமனைகளில் படுக்கைகளின் எண்ணிக்கையோ, கணிசமான அளவில் உயர்ந்த பாடில்லை. அடுத்து, பொதுமக்களின் கருத்து, அரசினர் மருத்துவ மனைகளைப்பற்றி நிறைவான முறையில் இருப்பதில்லை. இம் மருத்துவ மனைகளில் பணிபுரியும் மருத்துவர், செவிலியர் மற்றும் பணியாளர்களின் அலட்சியமான போக்கே இதற்குக் காரணமென்று கூறலாம். கட்டணமின்றி மருத்துவ உதவியைப் பெறும்போது உரிமையுடன் சில வினாக்களை எழுப்ப இயலாது போகின்றது. எனவே, சிறந்த மருத்துவ உதவியைப் பெறுவதற்கெனச் சிறிது அதிகமான கட்டணம் செலுத்தியேனும் தனியார் மருத்துவ மனைகளில் தங்கலாம் என்ற எண்ணம் பொதுவாக நிலவுகின்றது. இதனைப் போக்குவதற்கான முயற்சிகளை அவ்வப்போது அரசு எடுக்கவேண்டும்.

இலாப நோக்குடன் நடத்தப்பெறாவிடினும், கட்டண அடிப்படை, வருவாய்க் கொள்கைபோன்ற, சிக்கலான செய்திகளை விரிவாகக் கொண்டிராவிடினும் அரசின் சார்பில் நடத்தப்படுகின்ற மருத்துவமனைகளைப் 'பொதுப்பயன் தொழில்கள்' என்று அழைப்பதில் தவறேதுமில்லை.

# மேற்கோள் நூற்பட்டியல்
# (BIBLIOGRAPHY)


1. William A. Robson, 'Welfare State'.
2 Hall M. Penelope, 'The Social Services of Modern England'.
3 Joseph Mayer, 'Social Science Principles in the light of Scientific Method'.
4. Martin G. Glaser, 'Outlines of Public Utility Economics'.
5. R. C. Agarwal, 'State Enterprises in India'.
6 Thompson & Smith, 'Public Utility Economics'.
7. John R. Commons, 'Legal Foundations of Capitalism.'
8. Russel E. West Meyer, 'Economics of Transportation'.
9. Paul J. Garfield and George W. Chatchar, 'A Rubber Rail-road in Ohio'.
10. Prof. Bruce Wyman, 'Lectures on the Spirit of Common Law'.
11. Dean Pound, 'The Laws of Public Utilities'.
12 J. S. Mill, 'Principles of Political Philosophy'.
13. Prof. L. R. Nash, 'The Economics of Public Utility'.
14. New York 20th Century Fund, 'How profitable is big business?
15. Eli. W. Clements, 'Economics and Public Utilities'.
16. Emery Troxel, 'Economics of Public Utilities'.
17. Clair Wilcox, 'Public Policies toward Business'.
18. Francis X. Welch, 'Cases and Text on Public Utility Regulation'.
19. Francis J. Walsh Jr., 'Inflation and Corporate Accounting'.

20. Howard L. Timms, 'The Production Function in Business'.

21. William E. Mosher and Finlaw G. Graford, 'Public Utility Regulation'.

22. Elliot Jones and Trueman, 'Principles of Public Utility'.

23. John Bauer, 'Transforming Public Utility Regulation'.

24. J. Rhoads Foster and Bernard S. Rodey Jr., 'Public Utility Accounting'.

25. Samuel M. Koenigsbry, 'Acquisition Adjustments in Rate Cases'.

26. P. S. Mathur, 'Public Enterprising'.

27. Arora, 'Public Utility Concept'.

28. R. Rose, 'Cost of Capital in Public Utility Rate Regulation', pp. 1088-89.

29. Prof. George Stigler, 'The Theory of Price'.

30. Prof. G. Glaser, 'Public Utilities in American Capitalism', p. 424.

31. G. P. Lalkins, 'Electrical Rates', p. 191.

32. Prof. James C. Bonbright, 'Principles of Public Utility Rates'.

33. Prof. Harold and Hotelling, 'The General Welfare in Relation to Problems of Taxation and of Railway and Utility Rates'.

34 Charles Schatter, 'Cost Accounting'.

35. H. E. Eisen Menger, 'Central Station Rates in Theory and Practice'.

36. Louis R. Hawson, "Fifty Years' Experience with Water Utility Cost and Revenues".

37. W. E. Louis, 'Theory and Economic Growth'.

38. Bye and Heweth, 'Applied Economics' (Chapter V).

39. Gemvill and Blodget, 'Economic Principles and Problems' (Chapter 48).

40. Thompson, 'Economics of Public Utility' (Chapters V and VI).

41. Sleeman, 'British Public Utilities' (Chapters I, II and III).

42. A. C. Pigou, 'Economics of Welfare' (Part II, Chapter 22).

43. W. A. Robson, 'Nationalised Industry and Public Ownership', Pages 113-118; 292-297; 318-324; 447-451.

44. V. V. Ramanadham, 'The Structure of Public Enterprise in India' (Chapters I and II).

45. Davis, 'Economic Analysis of Public Enterprises'.

46. Doss Nabagopal, 'The Public Sector in India'.

47. S. S. Kheera, 'Government and Business'.

**Journals**

48. Prof. Horace M. Grey and Wallace F. Lovejoy (in) 'The Journal of Land and Public Utility Economics'.

49. Mortin G. Glaser 'The Journal of Land and Public Utility Economics.'

50. Senator S. L. Holland, 'Public Utilities', Fortnightly, p. 101.

51. Excerpts from, 'Land Economics', Fortnightly (1955), p. 229.

52. Excerpts from 'Electrical World'.

53. Excerpts from 'Wall Street Journal.'

54. Draft on 'Third Five Year Plan', Chapter XVI.

55. F. Warren Brooks—(A Talk on) 'Accelerated Depreciation.'

56. An Article by Horace and Grey on 'The Passing of the Public Utility Concept'.

57. An Article on 'Accounting and Rate Case Treatment of Political Advertising Expenses'—Published in the 'Public Utilities', Fortnightly.

58. An Article on 'A New Depreciation Policy' by L. R. Nash published in 'Public Utilities', Fortnightly, 1942.

59. An Article on 'The Two Radically Different Concepts of Depreciation' by H. E. Riggs,

60. An Article in 'Public Utilities', Fortnightly, 1959.

61. An Article from 'The American Economic Review' 1959 by Joseph R. Rose and David Durand.

62. An Essay on 'The Effect of a Capital Structure on the Cost of Capital' by Alexander Burges.

63. An Essay on 'A test of Cost of Capital Proposition' by J. Fred. Weston.

64. An Essay on 'The Cost of Capital Corporation Finance and The Theory of Investment' by Franco Modigliani and Mestern H. Miller.

65. An Article on 'A Reconsideration of Cost of Capital and a Reasonable Rate of Return' by Fred. P. Morrissey.

66. A Paper on 'Cost of Money as the determinant of Public Utility Rates' by H. M. Somers.

67. An Article on 'The Impact of Cost Allocation on Gas Pricing' by Henry Herz.

68. An Article on 'A Statistical Analysis of Water Works Data for 1955' by H. F. Seidel and E. R. Baumann published in the 'American Water Works Association's Journal'.

**Reports**

69. National Association of Rail-road and Utilities Commissioners; Report of the Committee of Depreciation 1943.

70. Tenth Annual Report of Securities and Exchange Commission, 1944.

71. Report of the Committee on Depreciation 1943, Washington.

72. Report of the Committee of Inquiry into the Electricity Supply Industry—Her Majesty's Stationery Office, London.

73. Report of The Rate Committee (New York) 1950.

74. A Talk by 'Ralph M. Bessee' (Former President of National Association of Railroad and Utilities Commission, U.S.A.).

# கலைச்சொற்கள்

A

Acceptance — ஏற்பு
Acceptance by post — அஞ்சல்மூலம் ஏற்பு
Acceptance, implied — உட்கிடை ஏற்பு
Accelerated depreciation — அதிகரிக்கப்பட்ட தேய்மானம், கூடுதலாக்கப்பட்ட தேய்மானம்
Accounting principles — கணக்குப் பதிவியல் கோட்பாடுகள்
Accounting section — கணக்கியல் பிரிவு
Actual cost — உண்மைச் செலவு
Actual total loss — மெய்மொத்த நட்டம்
Acquittance — செல்லெழுத்து
Adjournment — ஒத்திவைப்பு
Administrative expenses — நிர்வாகச் செலவு
Administrative phase — நிர்வாகத் துணைக்காலம்
Advalorem duty — மதிப்புமீது வரி
Advertisement copy — விளம்பர நகல்
Advertisement budget — விளம்பர பட்ஜெட்
Advertising media — விளம்பரச் சாதனங்கள்
Advisory committee — ஆலோசனைக் குழு
Affected with public interest — பொதுநல ஈடுபாட்டுடைமை
Agency — முகமை
Agency by implication — உட்கிடை முகமை
Agglomerative factors — ஒன்றுசேர் காரணிகள், குவியும் காரணிகள்
Agreement system — உடன்படிக்கை முறை
Aggregation — திரட்சி, மொத்தம்
Allied combination — தொடர்பு தொகுப்பு
Amalgamation — கலப்பு, ஒன்றிணைப்பு
Amortization — கடன் தீர் ஏற்பாடு
Amortization fund — கடன் தீர்க்கும் நிதி
Ambiguous instrument — பொருள் மயக்குறுமுறி

| | | |
|---|---|---|
| Annual financial statement | — | ஆண்டு நிதிநிலைப் பட்டி |
| Appraisal process | — | மதிப்பீட்டு முறை |
| Arbitrator | — | இசைவுத் தீர்ப்பாளர் |
| Arbitration clause | — | இசைவுத் தீர்ப்புச் சரத்து |
| Artificial demand | — | செயற்கைத் தேவை |
| Assets, circulating | — | சுழல் சொத்துகள் |
| Assets, contingent | — | நிகழ்வடைவுச் சொத்துகள் |
| Assets, ficticious | — | புனைவுச் சொத்துகள் |
| Association of employers | — | தொழிலாண்மையர் கூட்டு |
| Authorised capital | — | அங்கீகரிக்கப்பட்ட மூலதனம், ஆணை உரிமைப்பட்ட மூலதனம் |
| Authority | — | அதிகாரம் |
| Authority and responsibility | — | அதிகாரமும் பொறுப்பும் |
| Automatic built-in-system | — | தானியங்கு அமைப்பு முறை |
| Automation | — | தானியக்கம், தன்னியக்கம் |
| Automatic type-writer | — | தானியங்கும் தட்டெழுத்துப் பொறி |
| Average cost method | — | சராசரிச் செலவு முறை |
| Avoidable cost | — | தவிர்தகு செலவு |

B

| | | |
|---|---|---|
| Bearer debenture | — | கொணர்வோர் கடனீட்டுப் பத்திரம் |
| Block capital | — | நிலைமுதல் |
| Block rates | — | நிலையான கட்டணங்கள் |
| Block system metre ratio | — | கட்டணமுறை மீட்டர் விகிதம் |
| Book value | — | ஏட்டு மதிப்பு |
| Board of directors | — | இயக்குநரவை |
| Bonds and debentures | — | கடன்முறிகளும் கடனீட்டுப் பத்திரங்களும் |
| Bonus shares | — | மேலூதியப் பங்குகள் |
| Bonded goods | — | பிணையமீந்த பண்டகச் சரக்குகள் |
| Bonded warehouse | — | பிணையமீந்த பண்டகம் |
| Bonus | — | மேலூதியம் |

C

| | | |
|---|---|---|
| Call | — | அழைப்பு (பங்கு) |
| Call of share | — | பங்கழைப்பு |
| Calls in arrears | — | பங்கழைப்பு நிலுவை |

Capacity cost — திறனளவு அடக்கம்
Capital expenditures — மூலதனச் செலவுகள்
Capitalisation — முதலாக்கம்
Capitalisation cost — முதலாக்கச் செலவு
Capital structure — மூலதன அமைப்பு
Capital turn-over ratio — மூலதன-விற்பனை ஓட்டவிகிதம்
Carriers, private — தனிச் சரக்கேற்றி
Catalogue — விலைவிவர ஏடு
Certificate of incorporation — கூட்டுறுவாக்கச் சான்றிதழ்
Certificate of public convenience and necessity — இன்றியமையாத மற்றும் பொதுவசதிச் சான்றிதழ்
Champerty — பங்குவிழை வழக்குதவி
Charter party — தனிஅமர்த்துக் கப்பல்முறி
Charitable contribution — கொடையளிப்பு
Clearing house — தீர்வகம்
Clearance sale — அகற்றீட்டு விற்பனை
Company — நிறுமம்
Company, holding — பிடிப்பு நிறுமம்
Company, private — தனி நிறுமம்
Company, public — பொது நிறுமம்
Competition — போட்டி
Competitive bidding — போட்டிவிலை கோரல்
Compound interest — கூட்டு வட்டி
Communication — செய்தித் தொடர்பு, தொடர்பு வசதி
Common law — பொதுச் சட்டம்
Common carrier — பொதுச் சரக்கேற்றி
Common stock — பொதுப்பங்குத் தொகுப்பு
Company promoters — நிறுமத் தோற்றுவிப்பாண்மையர்
Composition scheme — கடன்தீர்ப்பு உடன்பாடு
Confiscation — பறிமுதல்
Construction cost value — கட்டுமானச் செலவு மதிப்பு
Consolidation — ஐக்கியம்
Consumption — நுகர்ச்சி
Consumer's sovereignity — நுகர்வோர் அதிகாரம்
Cost — செலவு, அடக்கம்
Cost, basis — அடிப்படைச் செலவு
Cost, capital — மூலதனச் செலவு
Cost, depreciation — தேய்மானச் செலவு

Cost, method — முறைசார் செலவு
Cost, service — பணிசார் செலவு
Cost, concept of — செலவுக் கோட்பாடு
Cost, constant — நிலையான செலவு
Cost, variable — மாறுபடும் செலவு
Cost of debt—capital — கடன்மீதான செலவு
Cost of preferred stock capital — முன்னுரிமைப் பங்குமுதல் மீதான செலவு·
Cost of equity capital — பொதுப்பங்கு முதல்மீதான செலவு
Cost of floating new capital — புதுமுதல் ஏற்படுத்தும் செலவு
Credit squeeze — கடன் ஒடுக்கம்
Cum-dividend — பங்காதாயம் உள்ளிட்ட
Current value — வழங்கும் மதிப்பு, தற்போதைய மதிப்பு, நடப்பு மதிப்பு

## D

Debenture — கடனீட்டுப் பத்திரம்
Debt — கடன்
Debt capital — கடன் முதல்
Debt ratio — கடன் விகிதம்
Deferred rate system — உறுதியளிக்கப்பட்ட கட்டண முறை
Del-credere agent — பிணை முகவர்
Depreciation — தேய்மானம்
Depreciation fund method — தேய்மான நிதிமுறை
Depreciation fund account — தேய்மான நிதிக் கணக்கு
Depreciation investment account — தேய்மான நிதி முதலீட்டுக் கணக்கு
Depreciation reserve — தேய்மான ஒதுக்கீடு
Depletion unit method — இழந்துசெல் மதிப்பீட்டுமுறை
Deposit money — வைப்புத் தொகை
Discriminating tax policy — வேறுபாட்டு வரிக்கொள்கை, வேறுபாட்டுடை வரிக் கொள்கை
Differential pricing policy — வேறுபாட்டு விலைக்கொள்கை
Diminishing balance method — குறைந்துசெல் மீதமுறை
Direct legislation method — நேரடிச் சட்டமுறை
Direct regulation — நேரடி ஒழுங்காற்றல்
Dividend — பங்காதாயம்

Dividend pay-out ratio — பங்காதாய அளிப்பு விகிதம்
Dividend equalisation fund — பங்காதாயச் சமன்பாட்டு நிதி

## E

Earning price ratio — வருவாய்த்திறன் விலைவிகிதம்
Economic depreciation — பொருளாதாரத் தேய்மானம்
Elasticity — நெகிழ்ச்சி
Elasticity, price — விலை நெகிழ்ச்சி
Elasticity, demand — தேவை நெகிழ்ச்சி
Electricity board — மின்சார வாரியம்
Electric power — மின் திறன்
Electric energy — மின்சக்தி
End-result doctrine — இறுதி-முடிவுக் கொள்கை
Energy cost — சக்திக் கட்டணம்
Evaluation — மதிப்பாய்வு
Excise duty — (உள்நாட்டுச்) சுங்கத் தீர்வை
Exchange value — மாற்று மதிப்பு
Excess capacity — அதிகத் திறன், உபரித் திறன்
Express carrier — விரைவுச் சரக்கேற்றி
Extra high tension — கூடுதல் உயர் அழுத்தம்

## F

Factory system — ஆலைமுறை, ஆக்கும முறை
Fair value — நியாயமான மதிப்பு
Feeder system — ஃபீடர் முறை
Field method — ஃபீல்டு முறை
Financial controller — நிதிக் கட்டுப்பாட்டு அதிகாரி
Financial year — நிதி ஆண்டு
Fire insurance — தீக் காப்பீடு
Flat-rate schedule — ஒரேநிலைக் கட்டணப் பட்டியல்
Floating charge — இழைவுறு பொருட் பிணைப்பு
Forfeiture — ஒறுப்பிழப்பு
Freehold property — முழுஉரிமைச் சொத்து
Future dealing — எதிர்காலத்திய பேரம்

## G

Garnishee order — பற்றுகைப் பொருள்கள் ஆணை
Goodwill — தொழில் நன்மதிப்பு, வாணிக நற்பெயர்
Government bonds — அரசுக்கடன் பிணைமுறி

Going concern value — நிறுவன இயங்குநிலை மதிப்பு
Gross operating revenue — மொத்த நடைமுறை வருவாய்
Group rate — குழுக் கட்டணம்

H

High geared capital — உயர்விகிதச் சொந்தக் கடன்
High tension — உயர்அழுத்தம்
High tension, extra — மிகை உயர் அழுத்தம்
Historical cost — கடந்த காலச் செலவு
Hypothecation — அசைச் சொத்து அடைமானம்

I

Income-tax — வருமான வரி
Index number — குறியீட்டு எண்
Inflation — பணவீக்கம்
Information bureau — தகவல் நிலையம், தகவல் நிறுவனம்
Initial deposit — தொடக்க வைப்புத் தொகை
Insurance-policy method — காப்பீட்டுத் திட்ட ஆவண முறை
Installation charges — நிறுவுதற் செலவு
Interim dividend — இடைக்காலப் பங்காதாயம்
Investors — முதலீடு செய்வோர்

J

Joint cost — கூட்டுச் செலவு
Judicial regulation — நீதிமன்ற ஒழுங்காற்றல்
Judicial-phase — நீதிமன்றத் துணைக்காலம்

L

Laissez-faire policy — (அரசின்)தலையிடாக்கொள்கை
Laws of contract — ஒப்பந்த விதிகள்
Lease-hold property — குத்தகைச் சொத்து
Level of surplus — எச்சப்பாட்டு நிலை
Life period — உழைப்புக் காலம்
Limited-term-franchise — குறிப்பிட்டகாலச் சலுகைகள்
Liner service — முறைவழிக் கப்பல்கள்
Local calls — உள்ளூர் அழைப்புகள்

M

Machine-hour-method — இயந்திரநேர முறை
Market value — சந்தை மதிப்பு

Market research centre — சந்தை ஆராய்ச்சி நிலையம்
Mercantile laws — வாணிகச் சட்டங்கள்
Mercantalists — வர்த்தகச் சமூகம்
Mixed economy — கலப்புப் பொருளாதாரம்
Monopoly — முற்றுரிமை, தனி உரிமை
Money market — பணச்சந்தை
Multi purpose project — பன்னோக்குத் திட்டங்கள்
Municipality — நகராட்சி மன்றம்

N

Natural monopoly — இயற்கையான முற்றுரிமை
Nationalisation — நாட்டுடைமை ஆக்கல் (அல்லது) அரசுடைமை ஆக்கல்

O

Obsolete — காலத்திற்கு ஒவ்வாமை, பழைமை அடைதல்
Octroi — மாநில வரி
Office method — அலுவலக முறை
(Official) gazette — அரசிதழ்
Operating ratio — செயல்முறை (செலவு) விகிதம்
Operating costs ratio — செயல்முறைச் செலவு விகிதம்
Operating revenue reduction — செயல்முறை வருவாய்த் தள்ளுபடி
Original cost — முதனிலைச் செலவு
Overhead construction cost — கட்டுமான மேற்செலவுகள்

P

Pay-out ratio — செலுத்துதல் விகிதம்
Pension (cost) — ஓய்வுத் தொகை (செலவு)
Percent condition — நூற்றியநிலை, விழுக்காட்டுநிலை
Perfect competition — செம்மைப் போட்டி
Perpetual franchise — நீடித்த சலுகைகள்
Plant register — இயந்திரங்களின் குறிப்பேடு
Preferred stock — முன்னுரிமைப் பங்குத் தொகுப்பு
Price — விலை
Price-war — விலைப்போர்
Pricing policy — விலைநிர்ணயக் கோட்பாடு
Property valuation — சொத்து மதிப்பீடு

Property ledger — சொத்துகளின் பேரேடு
Prudent investment — (உண்மையான அல்லது ஆய்ந்த அல்லது) அறிவாய்ந்த முதலீடு
Public corporation — பொதுக் கூட்டுறு
Public sector — பொதுத்துறை, அரசுத்துறை
Public sector enterprises — பொதுத்துறைத் தொழில் முயற்சி
Public interest — பொதுநல ஈடுபாடு
Public interest status — பொதுநல ஈடுபாட்டுத் தன்மை
Purchasing power — கொள்முதல் திறன் அல்லது வாங்கும் திறன்
Purchase value — கொள்முதல் மதிப்பு

## R

Range of rates — கட்டண எல்லை
Rate base — கட்டண அடிப்படை
Rate of return — வருவாய் வீதம்
Rate schedule — கட்டணப் பட்டியல்
Rate tribunal — கட்டணக் குழு
Rationalisation of industries — தொழில்களின் சீரமைப்பு
Red-tapism — கால தாமதம்
Reducing instalment — குறையும் தவணை
Regulatory commission — ஒழுங்காற்றுக் குழு
Re-production cost — மறு உற்பத்திச் செலவு
Re-production cost, new, less depreciation — மறு உற்பத்திச் செலவில் தேய்மானம் நீக்கியமுறை
R. C. N. D. Method — ம. செ. தே. நீ. முறை
Replacement cost — பதிலாக்கச் செலவு, பதிலமர்த்தீட்டுச் செலவு
Reserve fund — காப்பு நிதி
Revaluation — மறு மதிப்பீடு

## S

Sales tax — விற்பனை வரி
Salvage value — மீட்டு மதிப்பு
Social security value — சமுதாயப் பாதுகாப்பு மதிப்பு
Split value — வேறுபடுத்தப்பட்ட மதிப்பு
Standard cost — உத்தமத் தர அடக்கம்
Standardising — தரநிலைப்பாடு செய்தல்

| | | |
|---|---|---|
| Straight-line meter schedule | — | நேரடி மீட்டர்-கட்டணப் பட்டியல் |
| Straight-line method | — | நேர்க்கோட்டு முறை |
| Subsidy | — | உதவித் தொகை, உதவிக் கொடை |
| Surcharge | — | உபரி வரி, கூட்டு வரி |
| Surplus profit | — | இலாப எச்சப்பாடு |

**T**

| | | |
|---|---|---|
| Taxation value | — | வரி அளிப்பு மதிப்பு |
| Tender | — | ஒப்பந்தப் புள்ளி |
| Test year | — | சோதனை ஆண்டு |
| Trade association | — | வாணிக மன்றம் |
| Trade cycle | — | வாணிகச் சுழல், வாணிகச் சகடம் |
| Tramps | — | வழி நிர்ணயமற்ற கப்பல்கள் (சரக்குக் கப்பல்கள்) |
| Transmission | — | மாற்றியனுப்புதல் |
| Trended original cost method | — | நிலவர உண்மை மதிப்புமுறை |
| Trunk calls | — | வெளியூர் (தொலைபேசி) அழைப்புகள், நெடுந்தூர (தொலைபேசி) அழைப்புகள் |
| Turn over | — | சரக்கோட்டம், விற்பனையோட்டம் |

**U**

| | | |
|---|---|---|
| Ultra vires | — | வரம்பிகந்த |
| Unit cost calculation | — | தனிமதிப்பினைக் கணக்கிடுதல் |
| Utility | — | பயன்பாடு |
| Utility, public | — | பொதுப் பயன்பாடு |
| Under-capitalisation | — | குறைமுதல் படுத்துகை |
| Under-cutting | — | விலை வெட்டுகை |
| Unpaid seller | — | செலுத்தப்பெறு விற்குநர் |

**V**

| | | |
|---|---|---|
| Valuation methods | — | மதிப்பீட்டு முறைகள் |
| Value of service | — | பணி மதிப்பு |
| Volition and compulsion | — | தன்னிச்சையும் வற்புறுத்தலும் |

**W**

| | | |
|---|---|---|
| Workmen's compensation | — | தொழிலாளர் நட்டஈடு |
| Write-off | — | எடுத்துவிடுதல், நீக்கிவிடுதல் |

**Z**

| | | |
|---|---|---|
| Zonal division | — | வட்டாரப் பிரிவு |